உ

# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை





கவிராஜ பண்டிதர்

ஜெகவீர பாண்டியனார்

# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை

ஒன்பதாவது தொகுதி


ஆசிரியர்

**ஜெகவீர பாண்டியனார்**





மதுரை

மதராஸ் சி. வரதராஜுலு நாயுடு பிரசில்

பதிப்பிக்கப் பெற்றது

**1950**

# முகவுரை

இது கம்பன் கலை நிலையுள் ஒன்பதாவது தொகுதி. இராம தூதனான அநுமான் இலங்கை புகுந்து சீதையைக் கண்டபின் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் இதில் தொடர்ந்து அமைந்திருக்கின்றன. இராவணன் மகனை அட்சனை வென்று வெற்றி வீறோடு ஆஞ்சநேயன் ஆங்கு நின்றதும், இந்திரசித்து வந்ததும், போர் மூண்டதும், முடிவில் அவனுடைய நாகபாசத்தால் கட்டுண்டு இராவணன் எதிரே போய் இவன் வீரப்பிரமமாய் அமர்ந்ததும், அவன் சினந்து சீறி விரைந்து வினவியதும், இவன் அதி விநயமாய்ப் பதில் மொழிந்து அறிவுநலங்கள் கூறி இராமபிரானுடைய பெருமகிமைகளை உணர்த்திச் சீதையை விட்டுவிடும்படி போதித்ததும்; அவன் யாதும் இசையாமல் மோதி முனிந்து இவனை வாலைச் சுட்டுவிடுமாறு கட்டளையிட்டதும், அரக்கர் பற்றி அவ்வாறே செய்ததும், தன் வாலில் வைத்த தீயை இலங்கையில் வைத்து எரித்துவிட்டு மீண்டுவந்து இராமனைக் கண்டு தேவியின் கற்பு நிலையை உரைத்ததும், அவ்வுரைகளைக் கேட்டு அவ்வீரன் உள்ளம் மகிழ்ந்து உடனே சுக்கிரீவனோடு சூழ்ந்து படையெழுச்சி செய்து தென்கடல் அடைந்து எழுபது வெள்ளம் வானரங்கள் புடைசூழத் தங்கியிருந்ததும், அங்கே இராவணன் மந்திராலோசனைகள் செய்ததும், மந்திரிகள் பேசிய பின் கும்பகருணனும் இந்திரசித்தும் குலவீரத்தோடு அறிவுரைகள் ஆடியதும், முடிவில் விபீடணன் எழுந்து அரிய பல உறுதி நலங்களைக் கூறி இரணியன் வரலாற்றை எடுத்துக் காட்டி நீதி தவறி நடந்தவர் அடியோடு அழிந்துபடுவர் எனத் தெளிந்து உய்யும்படி புத்தி போதித்ததும், அவன் சித்தம் கன்று சினந்து மொழிந்ததும் ஆகிய சரித விளைவுகள் இதில் முறையே காணலாம்.

காவியக் காட்சிகளைக் கருதி யுணர்ந்து உறுதி நலங்களை ஓர்ந்து வரின் உயிர்க்கு ஊதியங்களை அவை உதவி வரும்.

திருவள்ளுவர் நிலையம்,
மதுரை.

ஜெகவீரபாண்டியன்

# சிறப்புப்பாயிரம்

வண்டிசை மிழற்று நறுமலர்த் தாரான்
வையகம் வணங்கிய புகழான்,
பண்டைவழ் நெடுவேற் கொற்றவன் கட்ட
பொம்முவின் குலத்தினி லுதித்தோன்,
தண்டமிழ் மரபு நிலைதெரி பெரியோன்,
தமிழ்க்கரு வூலநே ருளத்தோன்,
பண்டைய கவிஞர் அடிச்சுவ டுணர்ந்தோன்,
பசுந்தமிழ் நடம்பயில் நாவோன் (1)

தேனினு மினிய கம்பனைச் சுவைத்தோன்,
செகமெலாங் களிப்பவஃ தளித்தோன்,
வானுயர் புலவன் அறத்தியல் ஓர்ந்தோன்,
மற்றவை வேள்செவிக் கீந்தோன்,
ஊனெலாம் உருகச் சொன்மழை பொழிவோன்,
ஒளிதரு கவிக்கலை வளர்ப்போன்,
பாணினைந் தூட்டும் தாய்ப்பரி வுடையோன்,
பவளவண் ணனையுளத் தமைத்தோன். (2)

ஒழுக்கமே விழுப்ப மெனக்கொளும் சான்றோன்,
ஒப்புயர் விலாத்தனிக் குணத்தோன்,
பழுத்தொளிர் தரும தீபமேற் றிடுவோன்,
பைந்தமிழ் அன்னையின் புகழே
வழுத்துநற் புலவன் சீர் செகவீர
பாண்டியன் வண்டமிழ்க் குரிசில்,
முழுப்புகழ்க் குரியோன், அருஞ்செயல் புரிவோன்
மூதறி வாளர்கள் தலைவன் (3)

வம்புசால் மலரோன் படைத்த இவ்வுலகில்
மாயமும் கொடுமையும் துயரும்
பம்பியோங் குதல்கண் டவையெலாம் நீங்கிப்
பயில்தொறும் இனிமையே பயக்கும்
செம்பொரு ளாய தமிழ்க்குழைத் துலவாத்
தெய்வத இன்பமே கூட்டி
உம்பரும் வியந்து போற்றிடப் புலவர்
உலகினைப் படைத்தனன் மன்னோ (4)

வித்துவான், N சுப்பு ரெட்டியார் BA, BSc., L T

அம்புகளை வாரி வீசினன், மாருதி ஒல்லையில பாய்ந்து தேர்த்தட்டில் நினற அவனுடைய வில்லை வலது கையால பற்றிக கொணடான; கொள்ளவே அவன இரண்டு கையாலும பற்றி இழுததான, அது இறறு விழுநதது, விலலின துண்டம தரையில விழுமுன உடை வாளை உருவி அவன ஓஙகி வெட்டினன அநத வெட்டை இநத வீரன விரைநது தட்டினன, வாள அயலே ஓடவே அவன வெகுணடு சீறி மேலே பாயநது இவனுடைய தோளகளைக கெட்டியாகப பிடிததுப பறறிககொணடான வில்லும வாளும் கொணடு பொருதவன முடிவில மலவலியால வெலல விருமபி மாருதியை இறுகப பிணிதது மலலாடினன; அவனது மன வலியையும அடலாணமையையும வியநது தன வாலால உடல முழுவதையும வரிநது கட்டி முகததில ஓஙகிக குததினன குததவே அவனுடைய பலலுகள உடைநது விழுநதன, மூககிலிருநது இரததம பெருகியது இடிபோல வீழநத அடியால உடல சோரநது உதிரம பாயநதாலும பிடிதத பிடியை விடாமல நினறான ஆகலால அவனை எடுதது தரையிலடிதது இரு கையாலும பணணேறி அழுகதி மாருதி விரைநது தேயததான மாரபில பணடியிறுக கழுததில கையை மடுததுத தரையில அழுததித தேயககவே உடல சிதைநது தசை குருதியாயச சாயநது கிடநதது

நீக்காய ஒடின உதிரம பெருநதி நீர்ககச சிலை பாராக
போயநநாழ செறிதகை அரிசிநதிரைமடி பொஙகப பொருப உயிர
[போககு முன
பீதகாநிமிரசுடாவ பிரமகைகொடுமபிடிய விணணெடுமணகாணத
தேயததான ஊழியின உலகுவாழ தேயினும ஒருதன புகழ இறை
[தேயநதான

மூணடு போருககு வநத அட்சகுமாரன அனுமான கையில சிககி அஙகே மாணடு மடிநதிருககும நிலையை யாணடு நேரே கண்டு நாம நெஞசம இரஙகுகினறோம வீர பராககிரமஙகளை ஆரவாரமாயக கூறிச சேனைத தலைவனுயத தோன்றிச சீரோடு வநத இராவணன மகனை இராம தூதன இபபடி ரண வேட்டையாடியிருககிறுன குரஙகு எனற பூணடே இலலாமல யாணடும கருவறுபபேன என்று கடுதது வநதவன அடுதத ஒரு நாழிகைககுள் உருவழிநது பரிதாபமாய் மாணடான.

மற்றச் சேனைத் தலைவர்களைக் கொன்று தொலைத்ததை விட இந்த அட்சகுமாரனை அனுமான சித்திரவதை செய்து சிதைத்து அழித்திருக்கிறான். தன் ஆண்டவனுக்கு அவமானத்தை விளைத்துள்ள பகைவனுடைய மகன் என்ற படு கோபத்தால் இந்த அடு கொலை நிகழ்ந்திருக்கிறது என்று தெரிகின்றது.

விண்ணோடு மண்காணத் தேயத்தான் என்றதனால் விண்ணுலகமும் மண்ணுலகமும் அனுமான் ஆற்றிய அடலாண்மையை வியந்து கண்டு புகழ்ந்து நின்றமை விளங்கி நின்றது.

தேயத்தவன் யார்? என்று அறிய விரும்புவார்க்கு நேரே பேரைச் சொல்லாமல் வேறொரு வழியில் சீரைச் சொல்லிக் கவி விளக்கியிருக்கும் வித்தகம் வியப்பு மிக வுடையது.

உலகு ஏழ தேயினும் தன்புகழ் இறை தேயாதான்.

ஊழி காலத்தில் உலகங்கள் எல்லாம் உருமாய்ந்து அழிந்தாலும் தன் புகழ் அணு அளவும் அழியாதான் என அனுமானை விழுமிய நிலையில் இங்ஙனம் விளக்கி யிருக்கிறார்.

தேயாதான் தேயத்தான் என உலாச வினோதமாச் சொல்லி யிருப்பது உவகைச் சுவையாய்த் துள்ளி யுளது. என்றும் அழியாத கீர்த்தி யுடையவன் ஒரு வென்றி வீரனை இங்கே கொன்று தொலைத்தான். கொலை செய்தவன் பழிக்கப் படுவான்; ஈண்டு நடந்த கொலை அதற்கு நேர் மாறாய நிலை திரிந்து நின்றது.

தருமத்தைத் தழுவி நின்று இந்தக் கரும வீரன் பாவிகளை அழித்து வருதலால் ஊழியும் தேயாத உயர் புகழ் உடையனாய் ஒளி மிகப் பெற்றான்.

## பரிந்து போனது.

மன்னன் மகன் இறந்து படவே பின்னே நின்றவர் அனைவரும் பரிந்து இரிந்து பதறி ஓடினார். முன்னம் நிகழ்ந்ததை விட அச்சமும் திகிலும் யாவர் நெஞ்சிலும் உச்ச நிலையில் ஓங்கி நின்றன. "நமக்கு அழிவு காலம் மூண்டுள்ளது" என்று தமக்குள்ளேயே அரக்கர்கள் புலம்பிப் போயினர். இது குரங்கு அன்று; இலங்கையையும் அரக்கரையும் அடியோடு நாசம் செய்ய ஈசனே இந்த வடிவம் எடுத்து இப்படி வந்துள்ளான்" என்று எல்லாரும் கலங்கிவிரைந்து அனுமானது கண்ணில் படாதபடி ஒடுங்கிமறைந்தார்.

அசோக வனத்தின் அயல் எங்கும் படுகளமாய்ப் பிணக் குவியல்களும் நிணச் சேறுகளும் இரத்தப் பெருக்குகளும் நிறைந்து நின்றன.

### மன்னன் மருண்டது

பருவதத் தேவர்கள் ஓடிப்போய் இராவணனைத் தொழுது அழுத கண்ணராய் வெருவி நின்றனர். அவரது நிலைமையைக் கண்டதும் தன் மகன் கொலையுண்டு போனான் என அவன் குலை துடித்தான்.

### மண்டோதரி மறுகியது

அந்தப்புரத்திலிருந்த மண்டோதரி அலறிவந்து தன் நாயகன் அடியில் வீழ்ந்து கதறி அழுதாள். பெற்ற தாய் ஆதலால் பிள்ளைப் பாசத்தால் உள்ளம் உருகி அழுவே எல்லாரும் ஓலமிட்டு அழுதார். யாண்டும் இன்ப நிலைகளான மங்கல ஒலிகளே மருவி நின்ற அரண்மனையில் அன்று துன்ப அழுகைகள் தோன்றியது அதிசய புதுமையாய் விதிசெய்து நின்றது. அழுதவர்களை யாண்டும் கண்டறியாமையால் அழுகை இன்னது என்று அதுவரையும் யாதும் தெரியாதிருந்த மண்டோதரி அன்று அழுது துடித்தது பரிதாபமாய் இருந்தது.

கயல்மகிழ் கண்ணியர் கலுழ்ந்து காந்துறப்
புயல்மறி புரிகுழல் பொடி அளாவுற
அயன்மகன் மகன்மகன் அடியில் வீழ்ந்தனள்
மயன்மகள் வயிறலைந்து அலறி மாழ்கினாள். (1)

நாவரும் திருநகர் நகை மயிலார் முதல்
ஏவரும் இடைவீழ்ந்து இரங்கி ஏங்கினார்,
காவலன் காலமிசை விழுந்து காவல்மாத்
தேவரும் அழுதனர் களிக்கும் சிந்தையார். (2)

தன் மகன் இறந்துபட்டதை அறிந்ததும் மண்டோதரி மறுகித் துடித்துக் கண்ணீர் பெருகி ஓடக் கூந்தல் குலைந்து சோர வயிற்றில் அடித்துக் கொண்டு கணவன் எதிரே விழுந்து அழுதிருக்கும் காட்சி அவளது துயரநிலையை வெளிப்படுத்தியுள்ளது.

**அயன் மகன் மகன் மகன்** என்றது இராவணனை. பிரமாவின் புத்திரர் புலஸ்தியர், அவருடைய மகன் பிள்ளை பேரன்

என்க. தன் மகனை இழந்திருக்கும் இராவணனை இங்ஙனம் தன் முறையால் சுட்டியுரைத்தது, அவனுடைய வழிமுறை அழிய நேர்ந்துள்ள நிலைமையை விழிதெரிய.

மயன் மகள்—மண்டோதரி. தன்மகனைச் சாகக் கொடுத்திருக்கும் தாயையும் தந்தையையும் மகள், மகன் என நயமாகக் குறித்தது, அவரது உயர்குல நிலைகளையும் சுக போகங்களையும் உணர்ந்து கொள்ள வந்தது. நல்ல சுகசீவிகளாய் வாழ்ந்து வந்தவர் பிள்ளையைப் பறிகொடுத்து விட்டு உள்ளம் பதைத்து அல்லலுழந்து அழுது துடிக்கின்றனர்.

தேவரும் அழுதனர்.'

சக்கரவர்த்தி மகன் இறந்ததும் நகரம் முழுவதும் துயரம் பரந்தது. தலைமையாளர் பலரும் வந்து எதிரே அழுது நின்றனர். குல விரோதிகளான தேவர்களும் அங்கே ஒப்புக்கு அழுதனர்.

காவலன் காலினை விழுந்து காவலமாத
தேவரும் அழுதனர் களிக்கும் சிந்தையார்.

இராவணனிடம் ஏவல் செய்து நிற்கும் தேவர்கள் அழுதுள்ள நிலையை இது அழகாகக் காட்டியுள்ளது. உள்ளே மகிழ்ந்து சிரிக்கிறவர்களும் வெளியே கலுழ்ந்து அழுதார் என்னும் காட்சியைக் கண்டு நாம் வியந்து நிற்கிறோம்.

தங்கள் இனத்தைத் தலையெடுக்க ஒட்டாமல் அடக்கி ஒடுக்கி இராவணன் அதிகாரம் செய்துவருதலால் தேவர்கள் அவனிடம் அன்பின்றி அகம் திரிந்துள்ளனர். குலப்பகைவர் ஆதலால் அவனுடைய அழிவு நிலையில் களிமிக்க கொண்டனர். உள்ளம் களித்திருந்தாலும் வெளியே அவனுக்கு உரிமையாளர் போல கண்ணீர் சொரிந்து அழுது நின்றனர்; அந்தக் கள்ள அழுகையை நம் கவி இங்ஙனம் உலகம் காணக் காட்டியருளினார்.

"இவன் குடியும் குலமும் அழிந்து அடியோடு நாசமாய்ப் போக மாட்டானா" என்று நாளும் நசனை நினைந்து முறையிட்டு வரும் தேவர்களும் இங்கே பாசாங்கு செய்து அழுதிருப்பது, இராவணனுடைய அதிகார ஆற்றலை வெளிப்படுத்தி நின்றது. உள்ளம் கன்றுனும் வெளியே யாதும் செய்ய இயலாதவராய் அமரர் அடிமை வாழ்வில் ஆழ்ந்துள்ளனர் ஆதலால் அழையாய்

வாய்த்தபோது பகைமை புணர்ச்சியோடு கண்டு அவர் உவகை கூர நோக்கினர். அகங்கள் மகிழ முகங்கள் அழுதன.

அன்பினால் அன்றி அச்சத்தினால் எவரும் உள்ளம் கனிந்து உரிமை பாராட்ட மாட்டார் என்னும் உண்மை ஈண்டு உணர வந்தது.

## இந்திரசித்து நொந்தது

தம்பி இறந்து பட்டான் என்று அறிந்ததும் இந்திரசித்து பரிந்து வருந்தினான். நொந்த நிகழ்ச்சியை நினைந்து நெஞ்சம் கன்றினான். தன் தந்தையை நேரே காண விரைந்து தனது அரண்மனையை விட்டு எழுந்தான். உள்ளம் கொதித்து நின்று உக்கிர வீரனாய் அவன் உருத்து எழுந்தபோது எல்லாரும் அஞ்சி அலமந்து அயல் ஒதுங்கினர்.

அருங்கடை வேலை யொத்து அனுமனை இருந்த சேனை
உருங்கடல் எரியுயிர்த்து ஒருவனை ஒங்கினன்
புரங்கட வரிசிலைப் பொருப்பு வாங்கிய
பரஞ்சுடர் ஒருவனைப் பொருவும் பான்மையான்.

உடன் பிறந்த தம்பி மாண்டான் என்று உள்ளம் கன்று இந்திரசித்து அன்று மூண்டு எழுந்த நிலையை ஈண்டு இது காட்டியுள்ளது. மேருமலையை வில்லாக வளைத்து திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் போல் ஒரு சினம் மடுத்து அத்தலைமகன் எழுந்தான் என்றது அவனது நிலைமையை நினைந்து கொள்ள வந்தது.

பரஞ்சுடர் ஒருவனைப் பொருவும் பான்மையான் என்றது எவ்வளவு மேன்மைகளை விளக்கி நிற்கின்றது! உவமைக் காட்சி உன்னத மாட்சியாய் ஒளி வீசி யருள்கின்றது. இந்திரசித்தினுடைய அதிசய பராக்கிரமங்களையும், அற்புத ஆற்றல்களையும் நாம் சிந்தனை செய்து கொள்ளும்படி இந்த வாசகம் ஈங்கு வந்துள்ளது. சர்வசங்கார கர்த்தாவாகிய உருத்திர மூர்த்தியை ஒத்தவன் என்றதனால் இவனது உக்கிர வீர பராக்கிரம நிலைகளை உணர்ந்து கொள்ளுகிறோம்.

“சிவனை நான்முகனைத் திருமாலாம் அவனை அல்லது வேறு எவ்வுயிர்களுக்கும் நிகர் இல்லாதவன்” என அனுமான் இவனை முன்னம் எண்ணியுள்ளதை ஈண்டு எண்ணி உணர வேண்டும்.

## தேவர் அஞ்சியது.

அதிசய வீரனான இந்திரசித்து தனது சுந்தரத் தேரில் ஏறிய பொழுது அந்நகர வாசிகள் யாவரும் அஞ்சி அலமந்தனர். இந்திரன் கலங்கினான். கந்தருவரும் நடுங்கினர். யாது நேருமோ என்று தேவதேவரான மூவரும் திகைத்தனர்.

சீர்த்தது போரும் என்னாத் தேவர்க்கும் தேவராய
மூர்த்திகள் தாமும் தத்தம் யோகத்தின் முயற்சி விட்டார்.

திரிமூர்த்திகளும் இவ்வாறு மறுகி யிருத்தலால் இந்திரசித்தினுடைய அரிய பேராற்றலும் அதிசய நிலைகளும் அறிய வந்தன. அமரருலகைப் படுநாசம் செய்த கொடிய போர் வீரன் ஆதலால் உள்ளம் கன்று உருத்து நெடிய தேரில் ஏறியபோது யாருக்குக் குடிகெடுமோ? என்று கடுத்துத் திக்கலங்கடந்து வானவர் முதல் யாவரும் மறுகி மருண்டு வெருவி வெருண்டு பிரிவு கொண்டு நின்றனர்.

## தேர் ஏறி வந்தது.

விண்ணுலகம் இவ்வாறு வெருவி மறுக மண்ணுலகில் இவன் வில்லும் கையுமாய் இரதத்தில் எழுந்தான். தனது அரண்மனையிலிருந்து புறப்பட்டு நகரங் கடந்து அரணைப் போர்க்கு வந்தான். வரும்போது இவன் உள்ளம் கவன்று தன்னுள்ளேயே உளைந்து மொழிந்த மொழிகள் எவரும் விழைந்து காண நேர்ந்தன.

தம்பியை வென்று நோற்பார் தாரணி தப்புப் கண்டேன்,
வெம்பியம் சில்லை கோதண்டம் பாடித்து உருக்கத்தக்கான்,
கொம்பியல் மாயம் புகழ்க்குப் பங்கிலர் குரங்கர் அறமில்
எம்பியோ சேயர் நான் என்னைக் காக்க அன்றோ நேயத்து என்றான்.

இந்தக் கவிப் படத்தைக் கருதிக் காணுகின்றவர் எவரும் இந்திரசித்தின் உருவத் தோற்றத்தையும், உள்ளத் தவிப்பையும், உணர்ச்சி நிலையையும், உரைக் குறிப்பையும் நேரே கண்டு நெஞ்சம் இரங்கி நிலைமைகளைத் தெளிந்து குலமானங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுவர்.

ஒரு வீரனுடைய மனக் கவலைகளை, மான உணர்ச்சிகளை இங்கே நன்றாய் நோக்கி நாம் உருகி நிற்கிறோம். மறுகிய சோகத்தோடு சகோதர வாஞ்சை பெருகியுள்ளமையைக் கருதியுணர்ந்து பரிவு கூர்கின்றோம். அவல நிலை அழுங்க ஆயது.

**தம்பியை உன்னுந் தோறும் தாரைநீா ததும்பும் கண்ணன்.**

இது எவ்வளவு அனபு நிலையை வெளிபபடுததி யுளளது! யாணடும கலஙகாத நெஞசனுடைய கணகளிலிருநது அழுகை நீா பெருகியுளளது உடன பிறநத தமபி ஆதலால அவன இறநதுபோனதை நினைநது நினைநது இவன நெஞசம உருகியிருக கிறான தாரை = கண விழிகளிலிருநது நேரே வழிநதோடுவது தாரைநீா என வநதது எனறும அழாத கண் இனறு அழுது நினறது. யாதும அஞசாத போா வீரன அழுதது நோநத சோகததின நிலைமையை விளககியது

நீா ததும்பும கண்ணன என இநதிரசிகதை இஙகே இஙஙன வரைநது காடடியது எஙகும போா ததுமபும கணணனுடைய பொஙகி வாழநது வநதுளளமை புலன கொள வநதது. போரில் யாணடும நெருபபுக தமபி வநத கணகளை இன்று நீா ததுமபி நினறன இபபடிக கணணீா சொரிநது அழுதவன அடுதத நிமி டம சிரிததிருககிறான.

வமபியல சிலையை நோககி வாயமடிதது உருதது நககான.

தன கையில பிடிததிருநத விலலைப பாாததுக கொணடு உதடடை மடிததுக கடிதது அவன உருததுச சிரிததிருககும காடசியை இது காடடி யுளளது முதலில அழுத படியை விழி தெரிய விளககி, உடனே சிரிதத நிலையை இஙஙனம சிததிரிததுக காடடியது கவியின விசிததிர சிததிரைய விளககி நிறகிறது.

இநத வெறறி வில என கையில இருககவும என தமபி செததானே! எனறு இகழசசிக குறிபபோடு உளளம நொநது சிரிததிருககிறான இது வீரசசெருககால விளைநது வநத கோபச சிரிபபு

வயது முதிாநத கிழவன வலது கையில ஊனறிக கொளளு கினற கொமபு போல வமபாக என இடது கையில நினறதே யன்றி அமபு எயது வெலலும விரவிலலா இலலையே! எனறு தன சிலையை அவன தலை சாயதது நோககி இகழநது நினற நிலை யைநது காணவநதது வீரக காடசி வியநதகு மாடசியாய் விளஙகி யுளளது

விணணுலகத்தை வெனறு இநதிரனைச சிறை பிடிதது வநத அநத வெனறி வில இநதக கையில இபபடி இருகக என தமபி

எப்படிச் செத்தான்? என்று வெப்போடு வெகுண்டு கேட்பது போல் அவன சிலையைப பாாததப பாாவை வெளியே நிலையைக் காட்டி நின்றது.

அன்று தோமேல் அவன விலலை நோககிய பல்லைக் கடிதது நின்ற வீரக காடசியை உலகம் இன்றும் நோக்கி வென்றி வீறு கலை வியநது கொணடாடி வருகின்றது

தமபியை நினைநது அழுகிறான, தன சிலையை நோககிச் சிரிககிறான. அந நிலைகளை நோககி நாம் நிறகின்றோம். சோக மும் கோபமும் அவன உளளததில வேகமாய வேலை செயதுள ளமையை இவை விளககி நிறகின்றன

அறபப பிராணியாகிய ஒரு குரஙகினால அதிசய ஆறறலு டைய என தமபி சாக நோநதானே! என்று சோக மீதூாநது வெமபி வெதுமபி யிருககிறான

கோம்பு இயல மாய வாழககைக குரஙகு

என அனுமானை இவவளவு அலட்சியமாக எணணிப பேசி யுளளான மரக கிளைகளில ஒதுஙகி வாழவது, சபலமும கப டமும உடையது எனக குரஙகின இயலபினை இகழநதுகூறினான. வானவரும அஞசி வணஙகி ஏவல செயயக கணடுகளிததுளள வன ஆதலால தன குடிககு ஒரு வானர நதால நோநதஇழிவைக கருதித துடிககினறான

குரஙகா ஆறறல என்றது யாணடும தளராத பெருவலி யுடையவன எனத தன தமபியின பேராறறலை நினைநது இரஙகி னான குரஙகல—தளாதல, தாழதல

"கோனதபா நிகள மூழகிக கோடடததுக குரஙக"

"இலைப பொழில குரஙகின" (சிநதாமணி, 262, 657)

"பனமரம எலலாம பணிநதன குரஙக." (பெருஙகதை)

இவறறுள குரஙகல உணாததி நிறறல காண்க.

குரங்கினால குரஙகா என்றது அலஙகார வாசகமாய வந் தது. இஙஙனம வருவது முரண தொடை எனபபடும

"மொழியினும பொருளினும முரணுதல முரணே"

என ஆசிரியா தொலகாபபியனாா இவவாறு விதி கூறியுள்ளாா.

யாராலும் வெல்ல முடியாத பேராற்றலுடைய தனது வீரத் தம்பியை ஒரு புல்லிய குரங்கு கொன்று தொலைத்ததே! என்று இவன் உள்ளம் கொதித்து உருத்து நிற்றலை உரைகள் ஒளித்து நிற்கின்றன.

எம்பியோ தேய்ந்தான்? எந்தை புகழ் அன்றே தேய்ந்தது.

இந்த வாக்கியத்தை நாம் சிந்தனை செய்து இவனுடைய சிந்தனையைத் தெளிந்து கொள்ளுகிறோம். தன் தந்தையினுடைய கீர்த்தி பிரதாபத்தில் இம் மைந்தன் கொண்டுள்ள மதிப்பும் விருப்பும் ஈண்டு வெளிப்பட்டு நின்றன.

தேவர்கள் ஏவல் செய்ய மூவுலகங்களையும் ஏக போகமாய் ஆளுகின்ற மகா வீரனை இலங்கேசனுடைய அருமை மகனை ஒரு குரங்கு கொன்றது என்ற இந்தப் பழி எங்கும் யாண்டும் விரிந்து பரந்து ஊழியும் மங்காது நிற்குமே! என்று நெஞ்சம் கவன்று நெடிது மறுகி யிருக்கிறான்.

தம்பி செத்த துக்கத்தினும் தந்தையின் புகழ் பொன்றியதே! என்று கன்றி இருத்தலால் இவன் வென்றி வீரமும் குலமானமும் குடும்ப பாசமும் புகழ் விருப்பமும் புலனாய் நின்றன.

முதலில் சோகத்தால் துடித்தான், அடுத்து வீரத்தால் நகைத்தான், இறுதியில் மானத்தால் புழுங்கினான். அரிய பல மாட்சிகள் மருவி நெடிய சீர்த்திகளில் வாழ்ந்து வந்த பெரிய போர் வீரன் ஆதலால் குடும்பத்தில் கொடிய பழி நேர்ந்ததே என்று குலை துடித்துப் பலபல நினைந்து பதைத்து நின்றான்.

இக்குலமகனுடைய மன நிலைகளையும் மான வீரங்களையும் வாய் மொழிகள் தெளிவாக வெளி யறியச் செய்தன.

## தந்தையைக் கண்டு அழுதது

சோகத்தோடு கண்ணீரும் கம்பலையுமாய்க் கடுகி வந்தவன் தேரை விட்டு இறங்கி அரண்மனையுள் புகுந்து தந்தை அடியில் வீழ்ந்து அலறி அழுதான். அவன் தழுவி எடுத்து அருகில் இருத்தி மறுகி ஓயாது மௌனமா யிருந்தான். உருகிய அன்போடு அவனை நோக்கி இக் குமரன் அறிவுரைகளாடினான்.

தாளிணை விழுந்தான் தம்பிக்கு இரங்கினன் தறுகணாளன்
தோளிணை பற்றி ஏந்தித் தழுவினன் அழுது சோர்ந்தான்
வாளிணை நெடுங்கண் மாதர் வயிறலைத்து அலறி மாழ்க
மீளிபோல் மொய்ம்பினானும் விலக்கினன் விளம்பலுற்றான் (1)

ஒன்றும்நீ உறுதி ஓராய் உற்றிருந்துளைய கிற்றி
வன்திறற் குரங்கின் ஆற்றல் மரபுளி யுணர்ந்து மன்னோ!
சென்றுநீ பொருதி என்று திறத்திறம் செலுத்தித் தேய்க்க
கொன்றனை நீயே அன்றே அரக்கர்தம் குழுவை என்றான். (2)

கிங்கரர் சம்பு மாலி கேடிலா ஐவர் என்றிப்
பைங்கழல் அரக்கரோடும் உடன்சென்ற பகுதிச் சேனை
இங்கொருவரும் மீண்டார்தாம் இல்லையேல் குரங்கத்து எந்தாய்!
சங்கரன் அயன்மால் என்பார் தாமெனும் தகையர்தாமே (3)

திக்கய வலியும் மேனாள் திரிபுரம் தீயச் செற்ற
முக்கணன் கயிலையோடும் உலகொரு மூன்றும் வென்றாய்
அக்கனைக் கொன்று நின்ற குரங்கினை ஆற்றல் காண்டி
புக்கினி வென்றும் என்றல் புலம்பன்றிப் புலமைத் தாமோ?

ஆயினும் ஐய நொய்தின் ஆண்தொழில் குரங்கை யானே
ஏயெனும் அளவில் பற்றித் தருகுவென் இடரென்றொன்றும்
நீயினி யுழக்கற் பாலை யல்லைநீ டிருத்தி என்னுப்
போயினன் அமரர் கோவைப் புகழொடு கொண்டு போந்தான்
(பாசப் படலம், 8-12)

தந்தையின் அடியில் விழுந்து தொழுது அழுத கண்ணனாய இந்திரசித்து இங்கே பேசியிருப்பது அவனது அறிவாற்றல்களைத் தெளிவுறுத்தி யுள்ளன. வணக்கம் மரியாதை உணர்ச்சி ஊக்கங்கள் இவனிடம் ஒளிபெற்று நிற்கின்றன. அழுது மறுகுகிற தாய் முதலானவர்களை அயலே போகும்படி பணித்து விட்டுத் தந்தையிடம் பரிவோடு உரையாடி யிருக்கிறான்.

"அந்தமில்லாத மகிமைகள் வாய்ந்துள்ள எந்தையே! நீங்கள் சிறிது சிந்தனைசெய்து பாராமல் பெரிய நிந்தனைகளை விளைத்து விட்டீர்கள். முதலில் போருக்கு மூண்டு போன படைகள் மாண்டு பட்டன என்று தெரிந்தவுடனே மீண்டும் சேனைகளை அனுப்பியிருக்கக் கூடாது; என்னை அழைத்திருக்க வேண்டும்; உங்கள் தலைமகனிடம் நிலைமையைச் சொல்லிவிட்டு நீங்கள் அமைதியாய் இருந்திருக்கலாம்; அவ்வாறு செய்திருந்தால் இவ்

வாறு கேடுகள் விளைந்திரா. சம்புமாலி முதலிய சிறந்த தளபதிகளையும் பலவகையான படைகளையும் அடுத்து அடுத்து அனுப்பிப் பாழாகக் கெடுத்திருக்கிறீர்கள்! போன சேனைகள் யாதும் மீளவில்லை என்று தெரிந்தும் எப்படி மனம் துணிந்து இளங்குமரனை அனுப்பினீர்கள்? என் அருமைத் தம்பியை இனி என்று காண்பேன்? அந்தோ! தந்தையே! தனது இளைய மகனை இழந்து என் தாய் அழுது தவிப்பதை மூத்த மகனான நான் நேரே பார்த்திருக்க நேர்ந்ததே! துன்பம் இன்னது என்று தெரியாத அன்புத் தாய் துடித்து அழுவதைக் கண்டும் நான் பிடித்த வில்லோடு அடுத்து நிற்கிறேனே! என் நிலைதான் என்னே? எமனும் வர அஞ்சுகிற இந்த வீரமாபுரியில் ஒரு குரங்கு புகுந்து அசோக வனத்தை அழித்து ஆயிரக்கணக்கான அரக்கர்களை எளிதே கொன்று தொலைத்து வென்றி வீறோடு நின்றுள்ளது என்றால் அது குரங்கா? சங்கரன், அயன், மால் என்னும் அந்த மூவரே வானர வுருவம் தாங்கி இந்தவாறு ஈண்டு வந்து இடர் செய்ய நேர்ந்துள்ளனர் என்று நாம் ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். திரிபுரங்களைச் சிரித்து எரித்த ஈசனுடைய கைலையைப் பறித்து எடுத்துத் திக்கு யானைகளை வென்று தேவர்கள் ஊழியம் புரிய மூவுலகங்களையும் ஒருங்கே ஆளுகின்ற உங்களுடைய அருமை மகனைக் கொன்ற அந்தக் கொடிய குரங்கைக் கடிய நூறி வானர குலத்தையே அடியோடு நான் அழித்து ஒழித்தாலும் என் குடிக்கு நேர்ந்த இப் பழி ஒழியுமா? இலங்கேசனுடைய மகனை ஒரு குரங்கு கொன்றது எனின், ஆ! அது எவ்வளவு பழி! இவ்வளவு இழிவு நேர்ந்ததே! இனிமேல் பேசி என்ன பயன்? விரைந்து போய் அந்தக் குரங்கை நானே பிடித்துக் கொண்டு வருகிறேன்; நீங்கள் யாதும் வருந்தி உளைய வேண்டாம்; ஈண்டு இருந்தருளுங்கள்" என இங்ஙனம் தந்தையை மொழிந்து தேற்றி இந்திரசித்து, வெளியே வந்து தேர்மீதேறி யுத்த சன்னத்தனாய்ப் போர் மேல் போனான்.

**போயினன் அமரர் கோவைப் புகழோடு கொண்டு போந்தான்.**

அனுமானோடு அமராடப் போகின்ற இந்திரசித்தனைக் கவி இந்தவாறு நம் சிந்தை காண வரைந்து காட்டியிருக்கிறார்.

இப்பொழுது ஒரு வானரத்தோடு போர் செய்யப் போகிறவன் யார் தெரியுமா? முன்னம் வானவர் உலகத்தை வென்று வானவர் கோனை இந்திரனைச் சிறை பிடித்து வந்தவன் என இவனது அதிசய ஆற்றலை இங்ஙனம் மதி தெளிய உரைத்தார்.

போயினன் போர்த்தானை என்றது இவனுடைய பழைய வரவும், புதிய போக்கும் ஒருங்கே நோக்க வந்தது. போனான் என்னும் வினைக்கு எழுவாயாகப் பெயரை இசைத்திருக்கும் அழகு உவகைக் காட்சியாய் உணர்வு சுரந்துள்ளது.

## போர் மேல் எழுந்தது

போர்க் கோலம் பூண்டு இந்திரசித்து தேர் மேல் ஏறியவுடனே சேனைத் திரள்கள் அடர்ந்து சூழ்ந்தன. யானை தேர் முதலிய நால்வகைப் படைகளும் புடை சூழ்ந்து திரண்டு வர இந்திரசித்து போர்க்களம் நோக்கிச் சென்றான். சிறிது தூரம் போனவுடன் போரில் இறந்துபட்ட பிணக் காடுகளையும் நிணச் சேறுகளையும் நேரே கண்டான். படைகள் பாழ்பட்டிருக்கும் நிலைகளை நினைந்து நெஞ்சம் கவன்றான். ஒரு குரங்கினால் இவ்வளவு நாசங்கள் நேர்ந்துள்ளனவே! என்று நெடுந்துயர் கூர்ந்தான். அடுந்திறலாளர், கொடும் போர் வீரர் என நெடும் போர் பெற்றுள்ள அரக்கர் திரள்கள் சில காலமாக அழிந்து வருவதை எண்ணி அவலம் அடைந்து கவலை கூர்ந்து மானத்தால் உளைந்து மறுகி நொந்தான்.

கானிடை அத்தை உற்ற குற்றமும் கரன் பாடும்
யானுடை எம்பி வீந்த இடுக்கணும் பிறவும் எல்லாம்
மானுடர் இருவ ராலும் வானரம் ஒன்றி னாலும்
ஆனிடத்து உளவென் வீரம் அழகிற்றே அம்ம! என்றான்

இந்திரசித்து சிந்தனை செய்து நொந்திருக்கும் நிலைகளை இதனால் அறிந்து கொள்ளுகிறோம். சக்கரவர்த்தியின் தலைமகன் ஆதலால் தன் குலத்திற்கு நேர்ந்திருக்கும் கேடுகளையும் பழிகளையும் கருதி மறுகினான். மானமும் நாணமும் மனத்தை வாட்டியிருக்கின்றன. வனத்தில் சூர்ப்பநகை மூக்கு அறுபட்டது முத[illegible] நினைப்பில் நீண்டு நெடுந்துயர் மூண்டுள்ளது.

அத்தைக்கு உற்ற குற்றம் எனச் சூர்ப்பநகைக்கு நேர்ந்த அவமானத்தை முன்னதாக எண்ணினான். தன் தந்தையோடு

உடன் பிறந்தவள் ஆதலால் அத்தை என்று உறவுரிமையுடன் உரைத்தான்.

அத்தையை மூக்கு அறுத்தவன் இலக்குவன்
கரனைப் படைகளோடு அழித்தவன் இராகவன்
தம்பியைக் கொன்று கொலைத்தவன் அனுமான்

தன் குடிக்கு அவமானத்தை விளைத்துக், தம்பியைக் கொன்று, தனது குலத்தவரை அழித்துள்ள பகையாளிகளைத் தொகையாக எண்ணி நகையாடி நின்றான்.

மானிடர் இருவர், வானரம் ஒன்று ஆகிய இந்த மூன்று சிறிய பிராணிகள் மூவுலகங்களையும் ஆளுகின்ற பெரிய அரச குடிக்குப் பிழை செய்து மேலோங்கி நின்றன என்றால் நான் ஒரு வீரன் என்று இனி நீண்டு நிற்க வேண்டுமோ? என்று தன்னை இகழ்ந்து கூறி உளைந்திருக்கின்றான். உள்ளப் பண்புகள் உணர்வுகளில் ஒளிர்கின்றன. எள்ளல் இளிப்புகள் இடையிடை ஒளிர்கின்றன.

உயர்ந்த சுத்த வீரன் ஆதலால் உற்ற அவமானங்களை நினைந்து உள்ளம் துடித்து இவ்வாறு உரையாட நேர்ந்தான்.

குடிப்ப மதிப்பும் குலமானமும் இந்தக் கலைப்பசனிடத்தே நிலையோங்கி யுள்ளமையை நேரே தெரிந்து கொள்ளுகிறோம். இங்ஙனம் எண்ணி நொந்தவன் பின்னும் சிதுகாரம் வந்தான் அட்ச குமாரன் மாண்டு கிடந்த இடத்தை அடைந்தான் தேரில் இருந்தபடியே கீழே பார்த்தான் தம்பி அழிந்து சிதைந்து கிடப்பதைக் கண்டதும் அழுது தவித்தான்.

வெப்புண்ட உயிர் வாங்கி நெருப்புண்ட நிறத்தில் தோன்றி
ஏப்புண்ட கரிய வாய பிணக்குவடு இடறச் செல்வான்
தேயப்புண்ட தம்பி யாக்கை சிவப்புண்ட கண்கள் தீயில்
காயப்புண்ட செம்பில் தோன்றக் கறுப்புண்ட மனத்தன் கண்டான்.

தார்ந்தன குருதி யன்றிக் குருதியில் தனிமார் சியம்
கூருகிர் கிளைத்த கொற்றக் கனகன்மெய்க் குழம்பில் தோன்றத்
தேருக்கக் கையின் வீரச் சிலையுக வயிரச் செங்கண்
நீருக்கக் குருதி சிந்த நெருப்புக வயிர்த்து நின்றான். (2)

வெவ்விலை அயில்வேல் உந்தை வெம்மையைக் கருதி நோக்கி
வெவ்வுதல் கூற்றும் ஆற்றான், மாற்று மாறு அலகின வரழ்வார்

தது" என முன்னம் இந்திரசித்தின் வாய்மொழியாகவும் இதனை வலியுறுத்தினர்.

ஓர் இடத்தில் நிகழ்ந்ததை யாரிடத்தும் விளைந்து வரச் செய்து எவ்வழியும் செவ்வையாக விளக்கி வருவது கவியின் நினைவாற்றலை இனிது துலக்கி வருகிறது.

சிறந்த போர் வீரன் தம்பி இறந்த சோகத்தால் உள்ளம் கலங்கி உணர்வு மயங்கி அயர்ந்தான், உடனே சினந்து சீறித் தேறி எழுந்தான். மூண்ட சோகத்திலிருந்து அதி வேகமாய் மீண்டு வெகுண்டு நீண்டு நிற்கும் நிலை வியந்து சிந்திக்கத்தக்கது.

தோற்றிய துன்ப நோயைச் சீற்றம் துரந்தது.

உடன் பிறந்த துணை இறந்து போனதை நினைந்து பரிந்து துயருழந்த நெஞ்சம் விரைந்து மாறிச் சீறி நின்றதை இது விளக்கியுள்ளது. சோகமும் வீரமும் மானமும் கோபமும் ஈண்டு ஏகமாய்ப் போராடியிருக்கின்றன.

செத்ததை எண்ணி அழுதபடியே அயர்ந்து போகாமல் விரைந்து மீண்டு வெகுண்டு மூண்டது சுத்த வீரத்தின் நிலையாய் நீண்டது. சிறந்த வீரத்திறல் வியந்த காட்சியாய் வெளி வர நேர்ந்தது.

ஏற்றம்சால் ஆணி ஆணி எதிர் செலக் கடாயது என்ன.

தோற்றிய துயரத்தை உள்ளே தள்ளிச் சீற்றம் பொங்கி எழுந்த நிலைக்கு இது உவமையாய் வந்தது. சுவரில் முன்னதாக அடித்த ஓர் ஆணியின்மீது பின்னே ஒரு ஆணியை அடிக்கதால் முந்தியதை உள்ளே புதைத்துத் தள்ளி பிந்தியது மேலே கதித்து நிற்கும், அதுபோல் முன்னே நெஞ்சில் மூண்ட சோகத்தை மறைத்துப் பின்னே நீண்ட கோபம் பெருகி நின்றது எனக.

இறந்த துக்கம் மறைந்து போகப் பிறந்த சீற்றம் நிறைந்து ஒருந்தது. தம்பி செத்தான் என்று அழுது நிற்பதா! சீ! இது என்ன! இந்தக் கொடிய கொலையைச் செய்த அந்த நெடிய குரங்கை அடியோடு நீறுக்கி அழிக்க வேண்டும் என்று அவ் வீரன் உள்ளத்தில் சினம் கடிது பொங்கியது ஆதலால் அக் கோபத்தை இங்ஙனம் குறித்துக் காட்டினர்.

சோக ரசமும், கோப ரசமும் இங்கே ஏக ரசங்களாய் இணைந்து வந்தன. ரச பாகங்களைக் கவி சுவைத்துக் காட்டி உவகையை யூட்டியருளுகிறார். ஒரு வீரனுடைய உள்ளுணர்ச்சியை எல்லாரும் அறிய விளக்கியருளுவது வித்தக மேதையாய் விளங்கியுள்ளது.

## அனுமான் யூகித்தது

தம்பியின் பிரிவாகிய சோகத்தில் வீழ்ந்து தவித்தவன் வேகமாய் மீண்டு கோபத்தில் மூண்டு கொதித்தான். எதிரியைக் கொன்று தொலைப்பதாகக் கன்றிக் கறுத்து இந்திரசித்து சேனைக் கடல் புடை சூழத் தேர்மேல் ஆரவாரமாய் வருவதை அனுமான் நேரே பார்த்தான்; நிலைகளை நிறை தூக்கி நெஞ்சில் ஆராய்ந்து நோக்கினன். பான்சமாக இவ் வீரன் தீர்மானித்து நின்ற நிலை சிறந்த மதி யூகமாய் விளைந்து வந்தது.

வென்றேன் இதன்முன் சில வீரரை என்னும் வெம்மை
அன்றே முடிவிர ஈதெய்த அழைக்க நாமா!
ஒன்றோ இனி வெல்வது நல் தொழப்பது அடுத்ததுள்ளது
இன்றே சமையும் இவன் இந்திரசித்து என்பான் (1)

கட்டேறு நடுங்கமழ் கண்ணி இகக்காளை என்னைப்
பட்டால் அது வெய்து அவ் இராவணன் பாடும் ஆதும்,
கெட்டோம் எம் எண்ணி அக் கேட்டுங் கறபிறவை
விட்டேதும், அதன்றி அரக்கரும் வெம்மை தீர்வார் (2)

ஒன்றோ இதனை வரும் ஊதியம் உண்மையாளர்
கொன்றேன் எனின் இந்திரனும் துயர்க்கோளும் நீங்கும்
இன்றே கடிகொட்டது அரக்கர் இலங்கை, யாரே
வென்றேன் அவ் இராவணன் தன்னையும் வேரொடென்றான்

அனுமான் சிந்தித்திருக்கும் சிந்தனைகளை இவை விழி தெரிய விளக்கியுள்ளன. கண் மேல் போருக்கு மூண்டு நெடிய படைகளோடு தேர்மேல் வருகிறவன் இந்திரசித்து என்று தெரிந்து கொண்டான். கொள்ளவே, உள்ளத்தில் ஆலோசனைகள் துலங்கி எழுந்தன. "பல்லாயிரம் அரக்கர்களை நான் கொன்று தொலைத்த கொலையே இவனை இப்பொழுது இப்படி இங்கே கொண்டு வருகிறது; இவன் பெரிய போர் வீரன், அரிய மாயாவி, இந்திரனை வென்று அந்த வீரப் பெயரோடு இந்திரசித்து என்று விளங்கி

யுள்ளான். இதற்கு முன் நான் பலரோடு பொருது வந்ததும் போர் வென்று நின்றதும் பெரிது அன்று; உறுதியான போர் உற்றது மூண்டது; வெற்றியோ, அல்லது தோல்வியோ, இதில் முற்றும் தெரியும், இவன் என் கையில் இறந்துபட்டான் ஆனல் அதுவே இராவணன் இறந்தபடியாம்; இந்தச் சுத்த வீரன் ஒருவன் இங்கே செத்து விழுந்தால் அந்த இராவணனுக்கு அங்கே புத்தி வந்துவிடும், பிராட்டியை உடனே சிறையிலிருந்து நீக்கி வெளியே விட்டுவிடுவான்; அரக்கர் குலமும் அழிந்து படாமல் தப்பியது, இலங்கையும் பிழைத்தது; இந்திரனும் துயரம் நீங்கி மகிழ்வான், அமரரும் கவலை இன்றி உவகையாளராய் இனிது வாழ்வார், எம் பெருமான் படைகளோடு கடல் கடந்து ஈண்டு வரவேண்டாம், நானே இராவணனை அடியோடு வென்ற வெற்றி வீரனாய் விளங்கி நிற்பேன்" என இவ்வாறு அனுமான் இங்கு எண்ணியிருக்கிறான்.

இந்திரசித்தைக் குறித்து இந்த மதிமான் கருதியிருக்கும் உறுதி நிலைகளை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிறோம்.

இந்தத் தலைமகனுடைய துணைவலியைக் கொண்டே இராவணன் யாண்டும் தருக்கி நிலை குலையாமல் நீண்டு நிற்கிறான், அவனுடைய ஆட்சி நிலை இவனது மாட்சியால் மதிப்படைந்து வருகிறது, என இம் மதியூகி மதித்திருத்தலால் இந்திரசித்தினுடைய அருந்திறல் ஆண்மைகளும் அதிசய ஆற்றல்களும் அறியவந்தன.

இவனை இன் துணை உடையபோர் இராவணன் என்னே
புவனம் மூன்றையும் வென்றது ஓர் பொருள் எனப் புகறல்?

முதல் நாள் இரவு உறங்கும் பொழுது இந்திரசித்தைப் பார்த்த அனுமான் இங்ஙனம் வியந்து புகழ்ந்தது இங்கு நினைந்து கொள்ளவுரியது. முன்னம் மதித்த மதிப்பு ஈண்டு இன்னவாறு கதித்து வந்துள்ளது.

இக்காளை என்கைப்பட்டால் அதுவே இராவணன் பாடும் ஆகும்

என மாருதி இப்படி உறுதி செய்தது போர்மேல் மூண்டு வருகிற ஆண்டகையின் பெருமித நிலையை உலகறியச் செய்தது. இலங்கேசன் யாண்டும் கலங்காத கண்டனாய் நிலைபெற்று வரு

வது இந்திரசித்தினலேயாம் என்பதை யாவரும் தெளிவாக அறிந்துகொள்ள இது வெளியாகி யுள்ளது. இந்த ஒரு இந்திரசித்தை வென்ருல் தான் வந்த காரியமெல்லாம் பூர்த்தியாயின என்று சிந்தை மகிழ்ந்து கொண்டாலும் அவனை வெலலுவது அரிது என்னும சந்தேகமும அனுமானிடம மூண்டு நினறது.

## போராட்டம் புகுந்தது

இவவீரன இவவாறு கருதி நிற்குமபோது படைகள் அடலோடு புகுநதன. நாலவகைச் சேனைகளும கால் வகுதது மூண்டன. நன்கு பயிறசி பெறற சிறநத போர்வீராகள் எவவழியும எச்சரிக்கையாய ஏறிபு போருதனா. வாள வேல முதலிய படைககலங்களை அடுதது எறிநது தொடுதது மடுததுக் கடுதது அமராடினர். தன் மேல் வநது பாயநத கொலைக் கருவிகள் எல்லாம் கொல்லன் சம்மடடியால் சிதறி ஓடுகிற நெருப்புப பொறிகள போல் நிலை குலைநது மாயநதன. முதலில் குதிரைப படைகள் ஏறிப்பொருதன. அவை முழுதும அரை நாழிகையுள நாசம ஆயின யானைச் சேனைகளும அவவாறே அழிநதொழிநதன திரண்டு வநத தோ வீராகளும போரமேல் மூளவும புரண்டு வீழ்நது பொன்றி மாண்டனா.

தேரும யானையும புரவியும அரககரும சிநதிப
பாரின வீழதலும தானஒரு தனிநினற பணைததோள
வீர வீரனும முறுவலும வெகுளியும வீஙக
வாரும வாருமஎனறு அழைககினற அனுமனமேல வநதான

உடன வநத படைத திரள்கள விரைந்து அழிநது படுவதை இந்திரசிதது வியநது திகைததான. மாருதி போராடுகிற மருமங்களைக் கூாநது பாாததான யாவும அதிசயஙகளாயத தோன்றின. எநதபபோரிலும வெறறியே கண்டு வநத கொறறக் குரிசிலான அவன இவவானர வீரனுடைய அடலாணமைகளைக் கருதி நோக்கி உளளம கடுததுத தோமேல அடுதது வநதான. வாரும் வாரும் எனறு அனுமான் நேரே விழைந தழைததுவிரைநது போராட நேர்நதான.

இவனது உலலாச நிலையையும உள்ளச் செருக்கையும் உணர்ந்து எள்ளலுடன் சிரிதது தனது வில்லை நாண் எற்றி

அவன் வீரத்தொனி செய்தான். சிறந்த வில்லாளியான இந்திரசித்து சிலையின் வலியை அவ்வாறு நிலைதெரியச் செய்யவே அனுமான் தனது தோளைத் தட்டி வீர கர்ச்சனை செய்தான்.

தான் செய்த வில்லின் ஒலிக்கு எதிராக வீரவாதமாய்த் தோள் புடைத்துப் போராட மூண்டு நேரே மாருதி நிற்கும் நிலையை நோக்கி உள்ளம் உருத்து உறுவதை அவன் ஒளியாமல் சொல்ல நேர்ந்தான்.

## இந்திரசித்து இசைத்தது

நல்லை! நல்லை! இஞ்ஞாலத்துள் நின் ஒக்க நல்லார்
இல்லை இல்லையால் எற்றுழவலிக்கு யாரொடும் இகல
வல்லை வல்லை இன்று ஆக்கமீ படைத்துள் வாழ்நாட்கு
எல்லை எல்லை என்று இந்திர சித்தும் இசைத்தான்

புயங்களைத் தட்டிக் கொண்டு தன்னோடு போருக்கு ஆயத்தமாய் நேரே நிற்கிற அனுமானைப் பார்த்து இந்திரசித்து இவ்வாறு கூறியிருக்கிறான். தன் வாழ்நாளில் எந்தப் போர்முனையிலும் இந்தவாறு எவனும் அடலாண்மையோடு தனது எதிரே நின்றது இல்லை. ஆதலால் இவனுடைய நிலையைக் கண்டதும் அவனுக்குப் பெரிய அதிசயமாயது.

நல்லை, நல்லை என்றது வீரத்திறலில் நீ நல்ல சமர்த்தன் என இகழ்ச்சிக் குறிப்போடு மெச்சிச் சொல்லியபடியாம். தன் மரபினருள் பலவாயிரம் பேர்களைக் கொன்று தொலைத்துள்ள பொல்லாத எதிரியைப் பார்த்து நின் ஒக்க நல்லார் இல்லை; இல்லை என்று சொல்லி யிருப்பது உள்ளி யுணரவுரியது.

தீயவர்களை அழித்து ஒழித்து உலகத்திற்கு உண்மையாகவே நன்மை செய்ய வந்துள்ளவன். ஆதலால் நல்லவன், வல்லவன் என எதிரி வாயிலிருந்து இவ்வாறான மொழிகள் தெய்வாதீனமாய் வெளிவரலாயின. நன்மையும் வன்மையும் தன்மைதெரிய வந்தன.

நீ யாரோடும் எதிர்த்துப் போராட வல்லவன்; எவ்வகையிலும் உனக்கு நேரான வீரர் எங்கும் இல்லை; இவ்வளவு ஆண்மையும் மேன்மையும் பெற்றிருந்தாலும் உனக்கு இன்றைக்கு முடிவுகாலம் நேர்ந்தது; இதனை உறுதியாக முடிவுசெய்து கொள்

ளுக என்று அவ வீரன கடிது கூறினன நீ இன்று என்கையில் செத்தாய்! என்பதை இபபடி விததக விநோதமாக அவன விளக கிச சொலலினன அடுககுகள உறுதியும தெளிவும உணாததி நின்றன.

நீ படைததுள வாழநாடகு எலலை, எலலை

என்று இந்திரசித்து இஙஙனம சொல்லி முடிககவே அனு மான நேரே பதில சொலலியது அதிகமபீரமாய ஆாதது வநதது.

அனுமான் சொன்னது

நாளுககு எலலையும, நிருதராய உலகததைத நலியும
கோளுககு எலலையும, கொடுநதொழிறகு எலலையும, கொடியீா
வாளுககு எலலையும, வநதவா வகைகொடு வநதேன
தோளுககு எலலையென்று இலலைஎன்றா அநுமனும சொனனன

விலலாட மூண்டு வநதவன முதலில சொலலாடி நின்றதும, அதறகு பலலாட நோநதவன நேரே பதில சொலலி யிருபபதும சுவை சுரநது நிறகின்றன வாயிலிருநது வெளி வநதுளள சொற கள அவாகளுடைய உளளஙகளை வடிததுக காட்டியுளளன.

தமபி இறநதுபடட சோகததோடு சீறிசசினநது வநதாலும அனுமானது சாகசததைக கணடதும இநதிரசிதது வியநது விழைநது நளினமாகப பேசியது, அவனது மன அமைதியையும மதி விரிவையும விளககி நிறகிறது. பெரிய சககரவாததி மகன ஆதலால அரிய பணபாடுகள அடலாணமை களோடு படிநதிருக கின்றன வீரததிறலில வியனிலையில நின்றாலும எதிரியினுடைய நிலைமையைத தகுதியாக அறிநது கொளளுகிறான. முதலில புகழநதுகூறி முடிவில உன ஆயுள முடிநததி என்று அனுமான தெளிந்து கொள்ளுமபடி மொழிநது நின்றான.

எல்லையில்லாத வாழநாளை இயல்பாகப பெறறு என்றும் சிரஞ்சீவியா யுளளவனைப் பாாதது உன வாழ் நாடகு இன்று எல்லை எல்லை என்று இந்திரசித்து இறுமாநது சொன்னது, பிரமசிருட்டியையும் விதி நியமங்களையும் மாறறி அமைக்க வல்ல ஆறறல் தனககு உண்டு என்பதை மனச்செருக்கோடு காட்டி யவாறும். அத்தகைய வீரனையும் எளிதாக எண்ணி விடுகிறான.

தன நாளுக்கு இன்று எல்லை என்று அவ விலவீரன சொல்லவே, அந்தச் சொல்லையே பிடித்துக் கொண்டு இந்தச் சோல் வீரன அடலாண்மையோடு நேரே சுவையாகச் சொல்லாடி யுள்ளமையை உள்ளி யுணர்ந்து உவகை மீதூர்கின்றோம.

"உன வாழுநாளுக்கு முடிவு, அரக்கர் இனங்களுக்கு அடியோடு அழிவு, அமரர் முதலானவரை அலைக்கழித்து வருகிற உங்கள் கொடிய தொழில்களுக்கு இறுதி, வாள வேல முதலிய வலிகள் எவற்றிற்கும் விளிவு, இவவாறு உன குலத்துக்கெல்லாம் பேரிழவுகளை நேரே நான கொண்டு வந்திருக்கிறேன; எந்த வகையிலும யாராலும எனக்கு யாதொரு இடரும செய்ய முடியாது, என தோள வலிக்கு எவவழியும எல்லை இல்லை, இதனை நீ செவவையாகத் தெரிந்து கொளளுக" என மாருதி இவவாறு மறுமொழி கொடுத்து நின்றான.

பேசசுத் திறத்தில இம மதிமானுடைய மாட்சி யாண்டும அதிசயமாயக் காட்சி தருகின்றது நுட்பமும திட்பமும உரைகள தோறும ஊடுருவி நிற்கின்றன

"உன வாழ நாட்கு இன்று எல்லை" என்று இந்திரசித்து சொல்லியிருக்கிறான, இருந்தும, அதனை மறுத்துச சொல்லாமல என தோளுக்கு எல்லை ஒன்று இல்லை என்று தோள வலியை இவவாறு அனுமான சுட்டிச சொல்லியுள்ளான

தன வாழுநாளுக்கு எல்லை இல்லை என்பது எல்லாருக்கும தெரியும; அதனை இங்கே எடுத்துச சொல்லுவதால் பயன் இல்லை என்று கருதித் தோளாற்றலை இங்ஙனம தொடுத்துக் கூறினான.

தான் இறந்து படாமல் என்றும சிரஞசீவியாயச சிறந்து நிற்றல் போல் தனது தோள வலியும யாண்டும மெலியாமல் எவவழியும அடலாண்மையுடன் அமைந்து நிற்கும் என்பதை அமைதியாய கண்டு வெளிப்படுத்தினான்.

## அம்புகள் பெய்தது.

போரில் மூண்ட இருவரும் கைகலக்கு முன்னரே இவ்வாறு வாய் கலந்து கொணடனர். தனனுடைய தோள் வலியை வீரச் செருக்கோடு அனுமான கூறவே இந்திரசித்து சீறிநின்று

கூரிய பாணங்களைக் குறி தவறாமல் எய்தான். கடுத்துத் தொடுத்த கணைகள் அனுமானுடைய நெற்றியிலும் மார்பிலும் மடுத்துப் பாய்ந்தன. உதிரங்கள் பீறிட்டு ஓடின. உடல் முழுதும் இரத்தம் ஒழுகவே உள்ளம் கன்று விசுவரூபம் கொண்டு உக்கிர வீரமாய் இத் தீரன் உருத்து அமராடினன்.

எடுத்த எடுப்பிலேயே தொடுத்த அம்புகள் உடலைத் துளைத்துப் போகவே நெடுஞ்சினம் கொண்டு அடலாண்மையோடு மாருதி நீண்டு நிமிர்ந்தான். வான் உற வளர்ந்த அந்த அரிய நிலையை அயலே காண வருகிறோம்.

குறித்துவான் என்று குறைந்திலன் நெடுஞ்சினம் கொண்டான்
மறியும் வெண்டிரை மாகடல் உலகெலாம் வழங்கிச்
சிறிய தாய் சொன்ன திருமொழி சென்னியிற் சூடி
நெறியில் நின்றதன் நாயகன் புகழென நிமிர்ந்தான்.

பேருருவம் கொண்டு மாருதி நின்ற நெடிய நிலையை உரிய உவமையால் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். சிறிய தாய் சொன்ன மொழியைச் சென்னியில் சூடி அரசுரிமையை அவள் மகனுக்கு உதவிவிட்டுச் சடை முடியும் மரவுரியும் தரித்து வனவாசம் வந்துள்ள இராமனது கீர்த்திபோல் அனுமான் நெடிது ஓங்கி நின்றான் என்றது உவகைக்காட்சியாய் ஒளி மிகுந்துள்ளது.

காவிய நாயகனை உழுவலன்போடு கருதிப் புகழ்ந்து கவி நாயகன் உருகி வருவதைப் பருகி மகிழ்கின்றோம். நேர்ந்த இடங்களில் எல்லாம் ஆர்ந்த அன்புரிமையுடன் நினைவூட்டியருள்கிறார்.

## தேரைச் சிதைத்தது.

போரில் மூண்டு அதி வேகமாய்ப் பொருது வருகிற இந்திரசித்தின் தேரையும் சாரதியையும் சிதைத்து ஒழித்து மாருதி சாரி திரிந்து வீறுடன் விரைந்து பொருதான்.

ஏறிவந்த தேர் அழிந்தவுடனே சேமமாகக் கொண்டுவந்திருந்த வேறு ஒரு தேரில் இந்திரசித்து தாவி நின்று அம்புகளை வாரித் தொடுத்து அனுமான் உடலை உச்சி முதல் உள்ளங் கால் வரை மறைத்து மடுத்தான். தன்மேல் வந்து பாய்கிற பகழிகளை யெல்லாம் விலக்கி உதிர்த்து நேரே தேர்மேல் பாய்ந்து எதிரி கையிலிருந்த வில்லை விரைந்து பறித்து வெளியே தாவி இரண்டு

துண்டங்களாக ஒடித்துக் கீழே எறிந்து விட்டு இவ் வீரன் மேலே லகுபாய்ந்து அயலே குதித்தான்.

முறிந்த வில்லின் ஓசை போய் முடியு முன்னரே வேறு ஒரு வில்லை அவ் வீரன் வெகுண்டு எடுத்துச் சரமாரியாகக் கடுத்துத் தொடுத்தான். மாருதி உடலைப் பாணங்கள் ஊடுருவிப் போயின. இரத்தம் ஒழுகி ஓடியது; சிறிதுபோது அயர்ந்து நின்றான். அந்த நிலையில் இந்திரசித்து சிந்தை மகிழ்ந்தான். குரங்கு தொலைந்தது என்று குதூகலித்துக் கூரிய கணைகளைச் சீறித் தொடுத்தான். பாணங்கள் நெருப்பு வாணங்கள் போல் நேரே பாய்ந்தன. பாயவே ஆயாசத்தால் அயர்ந்து நின்ற அநுமான் பின்பு ஆவேசமாய்க் கொதித்தெழுந்து நெடிய தண்டம் ஒன்றைக் கையில் கொண்டு கடிது பாய்ந்து இந்திரசித்தின் முடியில் அடித்தான். மலைமேல் விழுந்த இடிபோல் தலைமேல் விழுந்த அந்த அடியால் அவன் நிலைகுலைந்தான். இரத்தம் முகத்தில் வழிந்தோட அயாசமடைந்து அலமந்து நின்றான். சிறிது பொழுது கழிந்ததும் மயக்கம் நீங்கித் தெளிச்சி யடைந்தான். அடையவே கொடிய கோபம் நெடிது மூண்டு கடிய பகழிகளைக் கடுத்துத் தொடுத்து அடுத்து அடுத்து வாரி வீசினான்.

அவனது போராடலையும் வில்லின் வேகத்தையும் வித்தகச் செயலையும் மாருதி வியந்து நினைந்து விரைந்து பாய்ந்து தேரை எடுத்து ஆகாயத்தில் வீசி ஆரவாரமாய் ஆர்த்து நின்றான்.

கண்ணின் மீச்சென்ற இமை யிடைக் கலப்பகன் முன்னை
எண்ணின் மீச்சென்ற எறுழ்வலித் திறலுடை இகலோன்
புண்ணின் மீச்சென்று பொழிபுனல் பசும்புலால் பொடிப்ப
விண்ணின் மீச்சென்று தேரொடு பார்மிசை விழுந்தான் (1)

விழுந்து பார் அடையாமுனம் மின்எனும் எயிற்றான்
எழுந்து மாவிசும்பு எய்தினன் இடைஅவன் படையில்
செழுந்தண் மாமணித் தேர்க்குலம் யாவையும் சிதைய
உழுந்து போவதன் முன்நெடு மாருதி உதைத்தான் (2)

எறுதோ இலன், எதிர்நிற்கும் முரண் இலன், எரிபிற
சீறு வெஞ்சினம் திருகுகின்றான் திரி வானும்
வேறு செயல்தோர் வினைபிறிது இன்மையின் விரிஞ்சன்
மாறிலாப் பெரும் படைக்கலம் தொடுப்பதாய் மதித்தான். (3)

போர்க் காட்சிகளையும் போராடல் களையும் போர் வீரர்களுடைய நிலைகளையும் நேரே கண்டு நெடிது வியந்து பெரிதும் மகிழ்கிறோம். வீரத் திறல்கள் வியத்தகு நிலையின.

இந்திரசித்து ஏறியிருந்த தேரைவாரி அனுமான் வானில் வீசினன். அது கண்ணுக்கு எட்டாததூரம் விண்ணில் போய் மீண்டு மண்ணில் வந்து விழுந்தது. தேர் கீழே வீழ்ந்து நொறுங்கு முன்னரே அதிலிருந்து விரைந்து வெளியேறி மேலேதாவி இந்திரசித்து அந்தரத்தில் அதிசய விநோதமாய் நின்றிருக்கும் நிலை நமக்கு நெடிய வியப்பை யூட்டி அவனுடைய பெரிய மதிப்பைக் காட்டுகிறது. அரிய வீரனது நிலை அற்புதக் காட்சி ஆயது.

எதிரி வானில் நிற்கும் பொழுது அவனுக்கு அனுகூலங்களாய்க் கீழே நின்ற தேர்களையும் சாரதிகளையும் குதிரைகளையும் ஒரு நொடியில் அனுமான் அழித்து ஒழித்தான்.

உழுந்து போவதன்முன் நெடு மாருதி உதைத்தான்.

இந்திரசித்திற்கு உதவியாய்நின்ற சேமத் தேர்களைச் சிதைத்து அழித்திருக்கும் வேகத்தை இது விளக்கி யுள்ளது.

உழுந்து உருளுமுன் என்றது தேர்கள் அழிந்து போயுள்ள கால அளவை அளந்து காண வந்தது. அனுமான் உதைத்ததும் தேர்க்குலங்கள் அழிந்ததும் யாரும் தெரிந்து கொள்ள முடியாத மாய வேலைகளாய் மருவி நின்றன.

எதிரி தேரிலிருந்தால் போரில் அவனுக்குப் பெரும் பலங்கள் பொங்கி யுள்ளன, சுடுகணைகளை வாரிவீசி அடுதுயர்களைக் கடிது செய்து வருகிறான் என நெடிது சிந்தித்தே அவனுடைய வாகன சாதனங்களை யெல்லாம் இவ் வீரன் வேகமாய் மூண்டு அழித்தான். நீண்ட ஆலோசனைகளோடே இந்த ஆண்டகை அமராடல் புரிந்து வருவதை எதிரி தெரிந்து முதிர் சினங் கொண்டு மூண்டு சிந்தித்து வேண்டியதைச் செய்ய விரைந்து நின்றான்.

## பிரம பாசம்.

இந்திரசித்து பிரமாவினிடமிருந்து வரபலமாய்ப் பெற்றுள்ள திவ்விய அஸ்திரத்தை எய்துவிட எண்ணினான். அது அம்பு வடிவமுடையது; மந்திர முறைகள் மருவியது; அதிசய நிலையது.

வில்லில் இருந்து விடு பட்டால் எங்கும் எல்லொளி வீசி விரைந்து பாய்ந்து தோ வடம் போல் நீண்டு எதிரியைப் பிணித்து உருட்டி வீழ்த்த வல்லது. அந்த மாயப் படையை இத் தூயவன் மீது அவன் தொடுக்கத் துணிந்தான். கயிறு போல் நீண்டு பிணித்து எவரையும் மாண்டுபடச் செய்வது ஆதலால் அது பாசம் என வந்தது. அரிய மகிமையுடைய அதனை எவர் மீதும் எளிது விடுவதில்லை. தன் உயிருக்கு ஆபத்து நேர்ந்த போது அதிலிருந்து தப்பி உய்யவும், வெல்ல முடியாத நெடிய பகையை முடிவாக வென்று தொலைக்கவும், சீவ சஞ்சீவியாக மேவியுள்ள அந்த உறுதி நிலையை இறுதியில் அறுதியாக எடுத்து விடுவன.

அத்தகைய அரிய பிரமாத்திரத்தை இப்பொழுது தொடுக்க நேர்ந்தான். ஏறு தோ இலன், எதிர் நிற்கும் முரண இலன் என்றதனால் இந்திரசித்தின் நிலைமை தெரிய நின்றது. அந்தரத்து அமரர் எவரையும் எளிதே வென்று அரிய வெற்றிக் குரிசிலாய் விளங்கி நின்ற அந்த மகா வீரன் அனுமானிடம் முடிசிதற அடிபட்டுப் படைகளையெல்லாம் இழந்து நெடிய அவமானமடைந்து நெஞ்சம் கொதித்து நின்றான் ஆதலால் முடிவில் கொடிய மாய வேலையைக் கடிது செய்ய மூண்டான். விரிஞ்சன் = பிரமன்.

## முடிவில் முடிந்தது.

அயன் அருளிய அந்த வியன் படையை விரைந்து எடுத்து விதி நியமங்களோடு மந்திர முறைகளை உச்சரித்து அந்தரத்தில் மறைந்து நின்று இந்திரசித்து வெந்திறலுடன் வில்லில் பூட்டி ஒல்லையில் விடுத்தான்.

கொண்ட கொற்றவெஞ் சிலைநெடு நாணொடு கூட்டிச்
சண்ட வேகத்த மாருதி தோளொடும் சாரத்தி
மண்டு எங்கிட மாதிரம் துளங்கிட மதிதோய
விண்டு எங்கிட மேருவும் துளங்கிட விட்டான் (1)

தணிப்பரும் பெரும் படைக்கலம் தழலுமிழ் தறுகட்
பணிக்குலங் களுக்கு அரசினது உருவினைப் பற்றித்
துணுக்க முற்றுயர் கலுழனும் நடுக்குறச் சுற்றிப்
பிணித்தது அப்பெரு மாருதி தோளகளைப் பிறங்க. (2)

திண்ணென் வீரகழுகையைத் திசைமுகன் படைசென்று திருக
அண்ணல் மாருதி அன்று தன் பின்சென்ற அறத்தின

கண்ணின் நீரொடும் கனகதோ ரணத்தொடும் கடைநாள்
தண்ணென் மாமதி கோளொடும் சாய்ந்தெனச் சாய்ந்தான்.

சாய்ந்த மாருதி சதுமுகன் படைஎனும் தன்மை
ஆய்ந்து மற்றதன் ஆணையை அவமதித்து அகற்றல்
ஏய்ந்தது அன்றென எண்ணினன் கண்முகிழ்த்து இருந்தான்
ஓய்ந்த தாமிவன் வலியென அரக்கன் வந்துற்றான். (4)

உற்ற காலையின் உயிர்கொடு திசைதொறும் ஒதுங்கி
அற்றம் நோக்கினர் நிற்கின்ற வாளெயிற்று அரக்கர்
சுற்றும் வந்துடல் சுற்றிய தொளைஎயிற்று அரவைப்
பற்றி ஈர்த்தனர் ஆர்த்தனர் தெழித்தனர் பலரால் (5)

குரக்கு நல்வலம் குறைந்ததுஎன்று ஆவலம் கொட்டி
இரைக்கு மாநகர் எறிகடல் ஒத்தது, எம்மருங்கும்
இரைக்கு மாசுணம் வாசுகி ஒத்தது, தேவர்
அரக்கர் ஒத்தனர், மந்தரம் ஒத்தனன் அனுமான் (6)

கறுத்த மாசுணம் கனகமா மேனியைக் கட்ட
அறத்துக்கு ஆங்கொரு தனித்துணை யாகின்ற அநுமன்
மறத்து மாருதம் பொருதநாள் வாளரா அரசு
புறத்துச் சுற்றிய மேருமால் வரையையும் போன்றான் (7)

வந்திரைத்தனர் மைந்தரும் மகளிரும் மழைபோல்
அந்தரத்தினும் விசும்பினும் திசைதொறும் ஆர்ப்பார்
முந்தி யுற்றதோர் உவகைக்கோர் கரையிலை, மொழியின்
இந்திரன் பிணிப் புண்டநாள் ஒத்தது இலங்கை (8)

(பாசப் படலம், 56--63)

இந்தப் பகுதியை ஊன்றி நோக்கி உற்றுள்ள நிலைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும். இந்திரசித்து ஏவிய அரிய பாணம் ஆர்த்து வந்து கரிய பெரிய பாம்பின் வடிவமாய் நீண்டு அனுமானுடைய தோள்களை இறுகப் பிணித்துத் தரையில் சாய்த்துள்ள அவல நிலையைக் கவலையோடு கண்டு பரிவு கூர்ந்து நிற்கிறோம்.

**கறுத்த மாசுணம் கனகமா மேனியைக் கட்ட**

அனுமானை நாக பாசம் பிணித்திருக்கும் பிணிப்பை இது உணர்த்தியுள்ளது. மாசுணம் = பாம்பு. இந்திரசித்து மந்திர முறையோடு ஏவிய பிரமாஸ்திரம் வேகமாய் வந்து நாக வடிவமாய் நீண்டு அனுமானது உடலை வரிந்து சுற்றி வளைந்து இறுக்கவே மயங்கிக் கீழே வீழ்ந்தான்.

அண்ணல் மாருதி அறத்தின் கண்ணின் நீரொடு சாய்ந்தான்.

நாக பாசத்தால் கட்டுண்டு அநுமான் கீழே சாயும் பொழுது தரும தேவதை கண்ணீர் சொரிந்து உரிமையோடு உருகி அழுதிருத்தலை இதில் கண்டு உளமுழுகின்றோம்.

தரும காரியங்களைச் செய்ய வந்த புண்ணிய வீரன் ஆதலால் அவனுக்கு ஆபத்து நேரவே அறம் கண்ணீர் விட்டு அழுதது. பிள்ளை துயருறின் பெற்ற தாய் அழுதல் போல அநுமானது இடரைக் கண்டு தருமம் அழுதிருத்தலால் அவனுடைய நிலைமையும் தலைமையும் நீர்மையும் சீர்மையும் தெரிய வந்தன.

மயங்கி மருண்டு கீழே சாய்ந்த மாருதி சிறிது தெளிந்து தனக்கு நேர்ந்துள்ளதை நினைந்து நோக்கினான். தன் உடலை அடலோடு பிணித்திருப்பது நாகபாசம் என யூகமாயுணர்ந்தான். அயன் அருளிய வியன்படை என்று தெரிந்து கொண்டமையால் விதியின் விதிமுறையை மீறலாகாது என அடங்கியிருந்தான். மேலே நிகழ்வதை எதிர்நோக்கி இராம சிந்தனை செய்து கண்களை மூடிக் கொண்டு மண்மேல் சாய்ந்து கிடந்தான்.

எதிரி அகப்பட்டான் என்று தெரிந்தவுடனே விரைந்து கிட்ட நெருங்கி உற்று நோக்கி இந்திரசித்து உவந்து நின்றான். வெற்றிக் களிப்போடு அவன் வியந்து நிற்குங்கால் அரக்கர் திரள்கள் ஆரவாரங்களைச் செய்து கொண்டு ஓடிவந்து கூடினர். குரங்கு பிடிபட்டது என இலங்கை நகர் முழுவதும் பெருங் களியாட்டமாய்த் திரண்டு எழுந்தது.

## அநுமனை ஈர்த்துச் சென்றது.

இராட்சதர்கள் யாண்டும் திரள் திரளாய் விரைந்து வந்து அநுமானை அதிசய விநோதமாய் விழைந்து பார்த்தார். இருபுறமும் நீண்டுகிடந்த நாக பாசத்தைப் பிடித்துக் கொண்டு அநுமானுக்கு வலமும் இடமுமாய் ஆறாயிரம் அரக்கர்கள் ஆர்த்து ஈர்த்து ஆரவாரித்தனர். மந்தர மலையைச் சுற்றியிருந்த வாசுகி போல் அநுமானை நாகபாசம் பிணித்திருந்தது; அதனை அங்கே இழுத்துக் கடைந்த அமரர்களைப் போல் அரக்கர்கள் இங்கே பாசத்தைப் பற்றி இழுத்து எற்றி அலைத்தனர்.

தங்கள் குலத்துக்கெல்லாம் கொடிய பகையாய் வந்து புகுந்த பொல்லாத குரங்கை மன்னன் மகன் பிடித்து விட்டான் என எங்கும் மகிழ்ந்து புகழ்ந்து அரக்கர் எல்லாரும் களியாட்டம் கொண்டாடினர்.

வந்து இரைத்தனர் மைந்தரும் மகளிரும் என்றதனால் நகரிலுள்ள ஆண் பெண் அடங்கலும் பெருங் களிப்போடு ஒருங்கு திரண்டு வந்து உவந்து நின்ற நிலையை உணர்ந்து கொள்ளலாம். எல்லை மீறிய சந்தோடத்தால் உள்ளம் பூரித்துத் துள்ளி யுலாவினர். ஆனந்த ஆரவாரங்கள் யாண்டும் நீண்டு பரவின.

**இந்திரன் பிணிப்புண்ட நாள் ஒத்தது அவ் இலங்கை.**

அனுமானை இந்திரசித்து நாக பாசத்தால் பிணித்த போது இலங்கை வாசிகள் அடைந்த மகிழ்ச்சிக்கு உவமையாக எடுத்துக் காட்டியுள்ள இக் காட்சியை உவந்து காண்கிறோம்.

தேவராசனான இந்திரனை முன்னம் சிறைப்பிடித்து வந்த பொழுது இராட்சச இராசதானியாகிய இலங்கை மா நகரம் எவ்வாறு களித்துச் செழித்து நின்றதோ அவ்வாறே அனுமானைப் பிடியுண்ட அன்றும் ஆனந்த பரவசத்தில் மூழ்கி யிருந்தது.

எங்கும் வெற்றிக் களிப்புகள் பொங்கி எழுந்தன. இந்திரசித்து கொற்றக் குரிசிலாய்த் தேரில் ஏறி முன் செல்ல இருமருங்கிலும் நாகபாசத்தைப் பற்றிச் சூழ்ந்து எல்லாரும் ஆரவாரமாய் அனுமானை இலங்கைக்குள் ஈர்த்துச் சென்றனர். ஆறாயிரம் கிங்கரர்கள் வீறோடு பாசத்தைப் பற்றி நின்றாலும் ஐம்பதினாயிரம் போர் வீரர்கள் பாதுகாவலாய்ப் புடை சூழ்ந்து வந்தனர்.

**இலங்கை வீதிகளில் சென்றது.**

அழகிய பெரிய நகர வீதிகளின் வழியே அனுமானைக் கொண்டு போகும் பொழுது இருபுறங்களிலும் திரள் திரளாக மாந்தர் விரைந்து குழுமி வியந்து பார்த்தனர். பொல்லாத பகைவன் என்ற உணர்ச்சியில் பலர் நெருங்கி வந்து "இந்தக் குரங்கைக் கொல்லுங்கள்; குடலைப் பிடுங்குங்கள், உடலைத் தின்னுங்கள்; உயிரைக் குடியுங்கள்; ஊருக்கு வெளியே கொண்டுபோய் நீறாக்குங்கள்" என இன்னவாறு ஆரவாரத்தோடு சீறிப் பேசி மாறி ஏசினர். கொலைகளுக்கு அஞ்சாத கொடிய நெஞ்சர். ஆத

கவிப் படங்களைக் கண்ணூன்றிக் கருதிக் காண்பவர்க்கு நிகழ்ச்சிகள் விழிஎதிரே தெளிவாய் விளங்கித் தோன்றுகின்றன.

அரக்கர்களும் அரக்கிகளும் இரக்கமின்றி அனுமானை இகழ்ந்து பேசியிருப்பினும், பலர் புகழ்ந்து கூறியுள்ளனர். சிலர் மறைவாகக் கண்ணீர் சொரிந்து அழுதிருக்கின்றனர். உரிமையோடு அழுதுள்ளவர்கள் அமரர் இனங்கள் என்று தெரிகின்றது. அரக்கர் அறிந்து கொள்ளாதபடி மறைந்து அழுதிருப்பது அவரது வாழ்வின் நிலைமையைத் தெளிவாக்கியுள்ளது.

இராவணனுடைய அதிகாரத்துக்குப் பயந்து தேவரும் அரமகளிரும் ஏவல் செய்து வாழ்தலால் அவர்களுடைய ஆவல் அழுகை அயலறியாவகை நிகழ்ந்தது.

## பொது மக்கள் நிலை.

பொது சனங்களிடமிருந்து பலவகையான மொழிகள் வெளி வந்துள்ளன. தந்தையர், கணவர், மக்கள் முதலாகத் தங்கள் உரிமையாளர்களைப் போரில் இழந்து வருந்தியுள்ளவர்கள் மாருதியை இகழ்ந்து பழிவாங்கும் நோக்கத்தோடு அழிவு நாடினர். மற்றவர் உற்ற நிலைகளை ஓர்ந்து தங்களுக்குத் தோன்றிய வாறெல்லாம் வேறு வேறு விதமாக வியந்து பேசி மேலே விளையும் விளைவுகளை எதிர்நோக்கி விழைந்து நின்றனர்.

"கைலாச வாசனை ஈசனே வானர வடிவம் தாங்கி இந்த இலங்கையை அழிக்க இவ்வாறு இங்கு வந்துள்ளார். திருமால் பிரமன் ஆகிய அந்த இருவரும் இந்த ஒரு உருவமாய் இங்கு வந்துள்ளதாகத் தோன்றுகிறது. இதன் செயல் இயல்களைக் கருதி நோக்கினால் யாவும் அதிசயங்களாகவே தெரிகின்றன. நாக பாசத்தால் பிடிபட்டிருப்பினும் உள்ளத்தில் அஞ்சியிருப்பதாக யாதும் தெரியவில்லை. ஏதோ கபடமாகவே அடங்கி வருகிறது; மடங்கலேறு போல் முகத்தில் வீரப் பொலிவு விளங்கி நிற்கிறது. கையிலகப்பட்டது போல் பாசாங்கு செய்துள்ளது; இதனை ஊருக்குள் கொண்டு வருவது அபாயம்; அரிய ஆற்றல்கள் அமைந்த பெரிய சேனை தளங்களை எளிதில் அழித்து ஒழித்த இதனால் இனி என்ன விளையுமோ தெரியவில்லை! முன்னும் பின்னும் எண்ணி ஆலோசியாமல் மன்னன் எதிரே கொண்டு போவது மதி கேடாம்; இவ் ஊருக்கு என்ன கேடு நேருமோ!" என்

இன்னவாறு நகர மாந்தர் பல பல பேசி இடங்கள் தோறும் திரண்டு அடார்ந்து வேடிக்கை பார்த்து வியந்து நின்றனர்.

## அநுமான் அமைந்து போனது.

பல்லாயிரக் கணக்கான அரக்க வீரர்கள் யாதும் இரக்க மின்றி இரண்டு புறமும் தோ வடம் போல நீண்டிருந்த பாசத் தைப் பற்றியிழுத்துச் சுற்றியலைத்துச் சுடு மொழிகள் ஆடி நெடிய வீதிகள் இடையே கொடுமையாக அநுமானை நடத்திச் சென்றார். கொலைக் கைதியை விலங்கிட்டுத் தூக்கு மேடைக்குக் கொண்டு போவது போல அவர் ஊக்கிப் போனார்.

அவர்களுடைய போக்குகளை யெல்லாம் நோக்கி நகைத்து இவ் வீரன் உள்ளத்துள்ளே எண்ணிச் சென்ற நிலைகளை எண் ணுந்தோறும் நமக்கு வியப்பும் விம்மிதமும் விளைந்து வருகின் றன. அதிசய வீரனுடைய அமைதியும் துணிவும் எவ்வழியும் துதி செய்து தொழும்படி தொடர்ந்து திகழுகின்றன.

எந்தையது அருளினும் இராமன் சேவடி
சிந்தைசெய் நலத்தினும் சீதை வானவர்
தந்துள வரத்தினும் தறுகட் பாசமும்
சிந்துமென் அயர்வுறு சிந்தை சீரிதால் (1)

வளைஎயிற்று அரக்கனை யுற்று மந்திரத்து
அளவுறு முதியரும் அறிய ஆணையால்
விளைவினை விளம்பினால் மிதிலை நாடியை
இளகினன் எனவயின் ஈதல் எய்துமால் (2)

அல்லதூஉம் அவனுடைத் துணைவ ராயினார்க்கு
எல்லையும் தெரிவுறும் எண்ணும் தேறலாம்
வல்லவன் நிலைமையும் மனமும் தேறலாம்
சொல்லுக முகமெனும் தூது சொல்லவே. (3)

வாலிதன் இறுதியும் மரத்துக்கு உற்றதும்
கூலவெஞ் சேனையின் குணிப்பி லாமையும்
மேலவன் காதலன் வலியும் மெய்ம்மையான்
நீலநிறத்து இராவணன் நெஞ்சில் நிற்குமால் (4)

ஆதலான் அரக்கனை எய்தி ஆற்றலும்
நீதியும் மனக்கொள நிறுவி நின்றவும்

பாதியின மேறசெல நூறிப பையபையப
போதலே கருமமெனறு அநுமன போயினன. (5)
(பிணிவீட்டு படலம், 20-24)

அனுமான கருதிப் போயிருப்பதை இவை காட்டியுள்ளன. எண்ணங்கள யாவும கண எதிரே தோனறு கினறன.

"எமபெருமான அருளவலியால இநதப பாசப பிணிப்பை எளிதே உடைதது வெளியேறி விடுவேன, அவவாறு செயவது சரி அனறு. இராவணனை நேரே கணடு நீதி முறைகளை எடுதது கூறி அறிவு நலஙகளை உணாததினால அவன உளளம தெளிநது பிராட்டியை எனனிடம கொடுதது விடவும கூடும், அஙஙனமகூடின அவனது அரசும குலமும அழிவிலிருநது நீஙகி நலல வழியில வாழநத படியாம, அபபடி அவன தெளிநது திருநதாது போனால அவனது மனநிலையும துணைவலியும பிறவும தெளிவாகத தெரிநது மேலே நிகழவுளள வினை விளைவுகளை யெலலாம நினைவுறுததி இயனற அளவு படைகளைக கொனறு தொலைதது ஊரை நிலைகுலைதது என பேரை நிலை நிறுததி மீளலாம, ஆகலால இப பொழுது யாதும மீறாமல அடஙகி ஒடுஙகிப போவதே நலலது" எனறு இவ வீரன நினைநது போயிருககிறான

அலலல நிலையில அகபபட்டிருநதும உளளத துணிவும ஊக கமும தளளரூந திறலோடு பெருகி யிருககினறன.

மிதிலை நாடியை எனவயின ாதல ஏயுமால.

தனது உணாவுரைகளைக கேட்டு மனம இளகி இராவணன சானகியைத தன கையில தநது விடவும கூடும எனறு கருதி யிருததலால பிராட்டியை இராமனிடம கொணடு போயசசோப பதில அனுமானுககுளள ஆவலும ஆததிரமும அறிய வநதன.

மிதிலை நாடி எனச சீதையை இஙகே குறிததிருககிறான.

பூமியின வடகோடியில பிறநதுளள சிறநத இராச குமாரி யைக கொணடு வநது தென கோடியிலிருககிற இலஙகையில சிறைவைததிருககும கொடுமையும நெடுமையும கூாநது சிநதிகக வநதன. சனகனமகளை அனகன அடைய அவாவியுளளான

தனது போதனைகளைக கேட்டு மனம தெளிநது தீமைகள ஒழிநது இராவணன உயயாது போயினும, அநத வெயயவ

னுடைய நிலைமைகளை எல்லாம நேரே தெளிவாகத் தெரிநது கொள்ளலாம் என உள்ளம துணிநது பாசப பிணிப்பில் அடங்கி மடஙகலேறு போல் அனுமான நடநது போயினன.

இராவணன் அறிநது மகிழ்நதது

அதிசய வீரனை மாருதி பிடிபுணடு வருவதைத தஙகள மன்னர்பிரானிடம் சொலல விழைநது முனனதாக நான்கு தூதுவர் விரைநது ஓடிபபோய இராவணனை வணஙகி "இராஜேசுவரா! குரஙகு பிடிபடடது; கோமகன வீர வெறறியோடு கொண்டு வருகிறா" எனப பெரிய குதூகலததுடன தொழுது கூறினா. அவ வுரையைக கேட்டதும இலஙகை வேநதன பேரானநதம அடைநது தன மாாபில அணிநதிருநத அரிய வயிர மணிமாலையைப பரிசிலாக வீசி அநதக குரஙகைக கொனறு விடாதபடி விரைநது இஙகே கொணடு வரச சொல" எனறு தூதுவரிடம் ஓதி விடுததான.

"எலலையில உவகையால இவாநத தோளினன
புலலுற மலாநதகட குமுதப பூவினன
ஒலலையில ஓடிநீா உரைததுளன ஆணையால
கொலலலை தருகெனக கூறு வீா எனறான "

அனுமான் பிடிபடடு வருவதை அறிநததும உள்ளததில் பொஙகி எழுந்த உவகையனாய இராவணன இவவாறு சொல்லி யனுபபியது அவனது அதிசய ஆவலைத தெளிவாககி யுள்ளது.

அடலாண்மைகளுடைய அரககா சேனைகளைத தனியே நின்று கொனறு தொலைதத வெனறி வீறுடையது ஆதலால்அநத அதிசய வானரததை உயிரோடு கண்டு கொளள விரும்பி அஙஙனம் கொண்டு வரச் சொனனான.

குமுத மலாகள் போல் மலாந்த கண்ணினன் என்றது சிவநத விழிகளோடு நிவநதிருககும் அவனது நிலைமை நீர்மைகள தெரிய வநதது. கோபததால மாநதருடைய கணகள சிவந்து தோன்றுவது இயல்பு; இலஙகை வேநதன கண்கள் உவந்திருக்கும் போதும் சிவந்திருக்கும் என்க.

இராமன் கமலக் கண்ணன.

இராவணன் குமுதக் கண்ணன்.

என்றும் உண்மைகளை உணர்ந்து தன்மைகளை ஓர்ந்து தெளிந்து கொள்ளுகிறோம். காணுகின்ற கண்களைக் கொண்டே மனிதர்களுடைய எண்களையும் இயல்புகளையும் இனிது தெளியலாம். முகத்தின் விழிகள் அகத்தின் வழிகள் என்பது பழமொழி.

மலர்ந்து சிவந்த கண்ணனாய் உவந்து வழி நோக்கி அனுமானைக் காண விழைந்து அரியணையில் இராவணன் அரியேறுபோல அமர்ந்திருந்தான். களியேறிய வீரர்கள் அயலே காத்து நின்றனர்.

## சீதை பதைத்தது

அனுமான் இந்திரசித்து கையில் பிடிபட்டான் என்பதைக் கேள்வியுற்றதும் சீதை சிந்தை துடித்தாள். நொந்து தவித்தாள். தனக்கு மீட்சி கிடைத்து விடும் தனது அருமை நாயகனை விரைவில் கண்டு கொள்ளலாம் என்று கருதி மகிழ்ந்து உறுதி பூண்டிருந்த அவ்வுத்தமி உற்ற இடையூற்றை அறிந்ததும் துயரம் மீதூர்ந்து உயிர் மறுகினாள். கொடிய அரக்கர்கள் கையில் சிக்கினமையால் அனுமானை அடியோடு அழித்து விடுவார்களே என்று உள்ளம் துடித்து உளைந்து பரிந்தாள். கடல் கடந்து வந்து அரக்கர்களுடைய படைக் கடல்களை வென்று அடலாண்மை புரிந்து நின்ற அதிசய வீரனுக்கு இடையே கேடு நேர்ந்ததே! என எண்ணி எண்ணித் தவித்து ஏங்கிப் பதைத்தாள்.

ஆழி காட்டினன் ஆருயிர் காட்டினாய்க்கு
ஊழி காட்டுவென் என்றுரைத்தேன், அது
வாழி காட்டுமென் றுண்டென வரைப்புயப்
பாழி காட்டி அரும்பழி காட்டினாய்! (1)

கண்டு போயினை நீள்நெறி காட்டிட
மண்டு போரின் அரக்கனை மாயத்துள்ளனைக்
கொண்டு மன்னவன் போமெனும் கொள்கையைத்
தண்டினாய் எனக்கு ஆயிர் தந்தநீ (2)

ஏயப் பண்ணினள் இன்னன தன்னுயிர்
தேயக் கன்று பிடியுறத் தீங்குறு
தாயைப் போலத் தளர்ந்து மயர்ந்தனள்
தீயைச் சுட்டதோர் கற்பெனும் தீயினாள். (3)

அனுமானுக்கு நேர்ந்துள்ள அபாயத்தை நினைந்து இன்னவாறு பலவும் பன்னிப் பரிதபித்திருத்தலால் பிராட்டியின் பரித

யமான துயர நிலைகளை எவரும் தெளிவாக அறிந்து கொள்ளலாம். உய்தி கிடைத்ததென்று உள்ளம களித்திருந்தவள் அனுமான் பிடியுண்ட செய்தி கிடைததும செய விழுந்து அயர்ந்தாள். துயருழந்து கலுழுந்தாள. "கணையாழியைக் காட்டி எனது இனிய உயிரை மீட்டி உவகை யூட்டியருளிய பேருபகாரியான நீ என்றும் சிரஞ்சீவியாய வாழ வேண்டும் என்று உரிமையோடு நான் உவந்து வாழ்ததினேன்; அவ வாழ்த்து பழுதாயதே; உனது வீரப பிரதாபததைக காட்டத் துணிந்து விபரீதத்தை விளைதது விட்டாயே! இஙகே கண்டு போன நீ இலங்கைக்கு நேரே வழி காட்டுவாய்; எம பெருமான விரைந்து வந்து பகைவனை வென்று எனனைச சிறை மீட்டிக் கொண்டு போவார் என்று உறுதி பூண்டு உவந்திருந்தேன், அந்த உவகை ஒழிந்து போயதே; இனி நான் என்ன செயவேன்? அந்தோ! தெயவமே!" என்று இந்தவாறு சிந்தைகலங்கிச சீதை நொந்து தவிததாள்.

கனறு பிடியுறத தாயைப் போலத தளாநதாள.

இந்த உவமையை ஊன்றி நோககி உளளப பரிவுகளை ஓர்ந்து கொளளுகிறோம. தனது அருமைக கனறை ஒரு கொலைகாரன் பிடிததுக கொண்டு போகத தாயப பசு தனியே நின்று கதறியது போல அனுமானை இநதிரசித்து பற்றிப போவதைஅறிந்த சீதை பதறிப் புலமபினாள். தூயமையான தாய்மை அன்பு துலங்கி நின்றது. கனறு என்றது இளமை நிலை தெரிய பிரமச்சாரியாய் நின்று வரும நீர்மை கூர்மையாகக காண வந்தது.

பிள்ளையும தாயும் என உயர் திணையில் விதந்து கூறுமல கன்றையும் பசுவையும கருதியுணர வைததது அனபின் பெருமையை நுணுகி யுணர. கனறு பிரி கார் ஆ என இராமனைப பிரிந்து நின்ற கோசலையை முனனம் குறிததார். ஆண்டவனுக்கு இட்ட பெயர் அடியவனுக்கும் ஈண்டு ஒட்டி நின்றது பிள்ளைப் பாசம் உளளததை உருக்கத தள்ளருந் துயரோடு வைதேகி உள்ளம் உருகி உயிர் மறுகியுள்ளாள.

தீயைச சுட்டது ஓர் கற்பு எனும் தீயினாள்.

சீதையை இபபடிச சுட்டிக் காட்டியிருக்கிறார்.

தீ பஞ்ச பூதங்களுள் ஒன்று; பரிசுதத முடையது; எதையும் [illegible] வல்லது; தெய்வீக மானது. இவ்விய மகிமை

கள் வாய்ந்துள்ள அந்தத் தீயும் தூய கற்புத் தெய்வம் ஆகிய சீதையைக் கண்டு அஞ்சும் என்றதனால் அவளது புனித நிலை இனிது தெளிய வந்தது. பின்னால் நிகழவுள்ள நிகழ்ச்சிக்கு முன்னால் இங்ஙனம் அரண் கோலி வைத்துள்ளார். வைத்திருக்கும் நுட்பம் உய்த்துணர வுரியது.

அல்லல்கள் எல்லாம் நீங்கித் தனக்கு நல்ல காலம் பிறந்து விட்டது என்று உள்ளம் களித்திருந்த சீதை அனுமான் நிலைமையைக் கேள்வியுற்று உயிர் துடித்து அயர்ந்தது வினைத் துயரின் விசித்திர கதியை விளக்கி நின்றது.

## இராவணன் கொலு நிலை

மகா வீரனை அனுமானைப் பாசத்தால் பிணித்துக் கொண்டு வெற்றிக் களிப்போடு வீர கம்பீரமாய் இந்திரசித்து தந்தையின் அரண்மனையை அணுகினன். இந்திர பவனத்தினும் சுந்தரமிருந்து திகழுகின்ற அரச மண்டபத்தின் நடுவே அழகிய சிம்மாசனத்தில் இராவணன் அதிசய நிலையில் அமர்ந்திருந்தான். பூரண சந்திரனைப் போல் சிறந்த வெண்குடை மேலே விளங்க அரியணையில் இலங்கை வேந்தன் வீற்றிருந்த மாட்சிகளைக் கவி ஆச்சரியமாக வரைந்து காட்டியிருக்கிறார். அக் காட்சிகள் மிக்க வியப்பும் விம்மிதமும் உடையன. சில அயலே காண வருகிறோம்.

தலங்கள் மூன்றிற்கும் பிறிதொரு மதி தழைத்தென்ன
அலங்கல் வெண்குடை தண்ணிழல் அவிரொளி பரப்ப
வலங்கொள் தோளினை மண்ணின்று வானுற எடுத்த
பொலங்கொள் மாமணி வெள்ளியங் குன்றெனப் பொலிய

புள்ளுயர்த் தவன் திகிரியும் புரந்தரன் அயிலும்
தள்ளின் முக்கணான் கணிச்சியும் தாக்கிய தழும்பும்
கள்ளுயிர்க்கு மென் குழலியர் முகிழ்விரற் கதிர்வாள்
வள்ளுகிர்ப் பெருங் குறிகளும் புயங்களின் வயங்க (2)

சிந்து ராகத்தின் செறி துகில் கச்செடு செறியப்
பந்தி வெண் முத்தின் அணிகலன் முழுநிலாப் பரப்ப
இந்து வெண்குடை நீழலில் தாரகை யினம்பூண்டு
அந்தி வானுடுத்தது அல்லுவீற் றிருந்ததாம் என்ன. (3)

வணமைககும திரு மறைகடகும வானினும பெரிய
திணமைககும தனி யுறையுளா முழுமுகம திசையில
கணவைககும தொறும களிறனெடு மாதிரம காககும
எணமாககும மறறை இருவாககும பெருமபயம இயறற (4)

தேவ ரோடிருநது அரசியல ஒருமுகம செலுதத
மூவ ரோடுமா மநதிரம ஒருமுகம முயலப
பாவ காரிதன பாவகம ஒருமுகம பயிலப
பூவை சானகி உருவொடும ஒருமுகம பொருநத, (5)

காநதள மெலவிரல சனகிதன கறபெனும கடலை
நீநதி ஏறுவது எஙஙனஎனறு ஒருமுகம நினையச
சாநத ளாவிய கொஙகைநன மகளிாதற சூழநதாா
ஏநதும ஆடியின ஒருமுகம இயலபுடன இலஙக (6)

பொதுமபா வைகுதேன புககருநதுதறகு அகம புலரும
மதமபெய வணடெனச சனகிமேல மனமசெல மறுகி
வெதுமபு வாாஅகம வெநதழிவாா நகில விழிநீா
ததுமபு வாாவிழித தாரைவேல தோளதொறும தாகக (7)

திஙகள வாணுதல மடநதையா சேயரிக கிடநத
அஙக யநதடந தாமரைககு அலரியோன ஆகி
வெஙகண வானவா தானவா எனறிவா விரியாப
பொஙகு கைககடல தாமரைககு இநதுவே போனறும (8)

இருநத எணதிசைக கிழவனை மாருதி எதிாநதான
கருநதிண நாகததைத நோககிய கலுழனிற கனனருன
திருநது தோளிடை வீககிய பாசததைச சிநதி
உருநதுநஞசுபோலபவனவயினபாயவென எனறுடனருன
(பிணிவீட்டு படலம)

இராவணன சிஙகாசனததில வீறறிருநது ஆட்சி செலுத்தும் மாட்சியை இந்தக கவிப படஙகளில கணடு களிககிரும். உயாநத பீதாமபரம உடுதது அரிய மணியணிகள பூண்டு அரியணையில அமாந்து அமரா திரளகள ஊழியம புரிய இராச கம்பீரமாய அவன விளஙகியிருககும காட்சி உவகை நிலையமாய் ஒளி செயது மிளிாகிறது திருமாலின சககரமும், சிவ பெருமானின் சூலமும, இநதிரனுடைய குலிசமும முனபு தாககிய தழுமபுகள் தோளகளில துலஙகியுளளன எனறது அவனுடைய அதிசய வீர பராககிரமஙகளை அளநதுஅறிந்து கொளள வநதது.

அர்த வீரத்தழும்புகளுக்கு இடையிடையே அழகிய மங்கையர் களுடைய நகக் குறிகளும் மிகப் பொலிந்திருந்தன என்றது அவனது போகபோக்கியங்களின் இன்ப நிலைகளை நன்கு தெரிய.

இராச கம்பீரம, அருந்திறலாண்மை, பெரும் போர் வீரம் பேரின்ப போகம் முதலிய உயர் நலங்கள் எல்லாம் அவனிடம் ஒருங்கே நிறைந்து யாரும் வரம்பு காண முடியாதபடி பெருகி யிருக்கின்றன. அட்ட லட்சுமிகளும் தன் இட்டப்படியே களி நடம் புரிய எழிலொடு பொலிந்து அவன் விழிமலர்ந்திருக்கிறான்.

வண்மைக்கும் திருமறைக்கும் வானினும் பெரிய
திண்மைக்கும் தனி யுறையுள்

பெரிய கொடையாளி, அரிய வேதங்கள் யாவும் வழுவற ஓதி யுணர்ந்தவன், யாவராலும் வெல்ல முடியாத வெற்றி வீரன் என்பதை இந்தத் தொடர்கள் விளக்கி யுள்ளன.

அவன் திருமபி நோக்கிய திசைகளிலுள்ளவர் எவரும் பெரும் பயமுடையராய்க் குலை நடுங்கித் தலை வணங்கி நிலை குலைந்து நிற்பர் என்றதனால் அருந்திறல்களும் நெடுந்திகிலகளும் நேரே தெரிய வந்தன.

வெளியே இவ்வளவு பெருமித நிலையில் விளங்கியிருந்தாலும் உள்ளே அவனுடைய உள்ளம் பொள்ளலாய் எள்ளலடைந்திருந்தது. சீதையையே நினைந்து நினைந்து காதல் மீதூர்ந்து நோதல் உழந்து பேதையாயிழிந்து கிடந்தான்.

காந்தள் மெல்விரல் சனகிதன் கற்பெனும் கடலை
நீந்தி ஏறுவது எங்ஙன?

என எப்பொழுதும் இப்படி வெப்போடு அவன் வெய்து யிர்த்து நின்றான். இயற்கை மணமுடையதாய்ச் சிவந்து மென் மை வாய்ந்து உயர்ந்த நீர்மையோடு ஒளி சிறந்து எழில் மிகுந் திருந்தன ஆதலால் காந்தள் மெல் விரல் எனச் சானகியின் கை விரல்களை ஈங்கு அவன் கருதியுணர்ந்து உருகி யுளைந்திருக்கிறான்.

கற்பைக் கடல் என்றது அதன் அற்புத நிலையை அறிந்து கொள்ள. யாராலும் எல்லைகாண முடியாதது; யாண்டும் நிறைந்தது; எவ்வழியும் கலங்காதது என்னும் நலம் காண வந்தது.

கடலைக் கையால் நீந்த நேர்ந்தவன் மாய்ந்து படுதல் போல் சனகியின் கற்பைக் கடந்து கொள்ள விழைந்தவன் விரைந்து அழிந்து படுவான் என்பது இங்கே விளங்கி நின்றது. மடத்தனமாய்த் தன் உயிருக்கு அழிவை நாடிக் கொண்டு உள்ளம் மறுகி யுள்ளான் என இராவணனது இருப்பின் புலையும் இறப்பின் நிலையும் எதிரறிய வந்தன.

கடல் வண்ணனை இராமனை ஒருவனே அந்தக் கற்பின் கடலில் படிந்து திளைக்க வுரியவன் என்னும் உண்மையை நுண்மையாக வுணர்ந்து கொள்கிறோம். தெய்வக் கற்புடையாளை வெய்யவன் விழைந்தது விளிந்து படவே யாம்.

அரிய தவப் பயனால் பெரிய இராச போகங்கள் புடை சூழ்ந்திருந்தும் கொடிய காம இச்சையால் நெடிய கேட்டில் நிமிர்ந்து அடியோடு முடிய நேர்ந்துள்ளான் ஆதலால் அந்த முடிவு நிலை தெரிய உரைகள் இடையே முடுகி வந்தன.

> பொதும்பர் வைகுதேன் புக்கு அருந்துதற்கு அகம்புலரும்
> மதம்பெய் வண்டெனச் சனகிமேல் மனம்செல மறுகி

அரியாசனத்தில் அரச ஆடம்பரங்களோடு அமரரும் அடி தொழ அமர்ந்திருந்தாலும் இராவணனுடைய உள்ளம் இழிந்து உளைந்து கிடக்கும் நிலையை இது உணர்த்தி யுள்ளது.

உருவக வாசகம் உணர்வுக் காட்சியாய்க் கலைமணம் கமழ்ந்து வந்தது. தான் யாதும் அணுக முடியாத ஒரு புதருள் இருக்கிற செந்தேனை உண்டு களிக்க எண்ணி உழலுகின்ற வண்டு போல் இராவணன் மனம் சீதையையே நாடி ஓடி ஓயாமல் உழன்று திரிந்து அலைந்து குலைந்து அலந்து புலந்து அலமருகின்றது.

மதம் பெய் வண்டு என மனத்தைச் சுட்டியது மதத்துக் கொழுத்துத் திரிகிற அதன் களிப்பையும் கொழுப்பையும் குறித்து உணர. மதம் கொண்டான் அதம் கொண்டான் என்றபடி அவனது அழிவு நிலையின் விதம் கண்டு கொள்ள வந்தது.

பூக்கள் தோறும் வலிந்து புகுந்து தேனை உண்டு வரும் வண்டு போலத் தான் கருதிய மகளிர் எல்லாரையும் கலந்து நுகர்ந்து களித்து வந்தவன் இங்கே யாதும் பலியாமல் அலந்து ஏங்கி அலமந்து நிற்கிறான். அந் நிலையை உலகம் அறிய உணர்த்தி அவனுடைய அவலமான புலையைப் புலப்படுத்தினார்.

அரச திருவில் வரிசை பெறறுள்ள இராவணனது உயர்ந்த நிலையையும் உள்ளததில் புகுநதுள்ள இழிந்த புன்மையையும் ஒருங்கே விளக்கிக கவி உணமையைத துலக்கி வருகிறுா. எவ வழியும செவவி கோடாமல செயல இயல்களைத் தெளிதது வருவது திவவிய காட்சியாயச சிறநது வருகிறது.

தமது அருமைக காவியததிறகு இராமனே கதா நாயகன் ஆயினும அநத மூாததியோடு நேரே எதிாததுளள சரியான எதிரி ஆதலால இராவணனுடைய வீரததிப் பிரதாபங்களையும இடஙகள தோறும நம கவிஞாபிரான வியநது கூறி வருகிறுர்.

இராமாயணம், இராவணுயணம எனறு சொலலுமபடி அவனுடைய மகிமை மாடசிகள அதிக ஆாவததோடு பாடப்பட்டுளளன இநதப் பாததிரம தனியே ஆராய வுரியது எனறு கருதி யிருநதமையால முனனம விரியாது விட நோநதது.

தஙகை சூாபபநகை அஙக பஙகமாய இலஙகை நகருள வரும பொழுது அவன சிஙகாசனததில வீறறிருநத காடசியை இஙகே சிறிது இணைததுப பாாதது மேலே போக வேண்டும.

நிலையிலா உலகினிடை நிறபனவும நடபபனவும நெறியின் ஈநத
மலரினமேலநானமுகறகுமவகுபபரிது நுனிபபதொருவரமபிலாறறல
உலைவிலா வகையுழநத தருமமென நினைநதவெலாம உதவும தசசன்
புலனெலாமதெரிபபதுஒருபுனைமணிமணடபமதனிறபொலியமனனே

பணடலஙகு திசைககளிறறின பணைமருபபின
இணைஒடியப பாாநத பொறறேள
விணடலஙக ஞறவிஙகி ஓஙகுதய
மாலவரையின விளஙக மீதில
குணடலஙகள குலவரையை வலமவருவான
இரவிகொழுங கதிாசூழ கறறை
மணடலஙகள பனனிரணடும நாலைநதாயப
பொலிநதவென வயஙக மனனே (2)

புலியின் அதள உடையானும பொனனுடை புனைநதானும பூவினுனும்
நலியுமவலத தாரலலா தேவரி னிஙகு யாவரினி நாடட லாவாா
மெலியுமிடை தடிககுமுலை வேயிளநதோட சேயரிககண்வெனறிமாதா
வலியநெடும புலவியினும வணஙகாத மகுடநிரை வயஙக மனனே.

மூவகை உலகினும முதலவா முநதையோா
ஓவலா உதவிய பரிசின் ஓஙகலபோல

தேவரும அவுணரும முதலினோர திசை
தூவிய நறுமலரக குபபை துனனவே (4)

இனனபோது இவவழி நோககும எனபதை
உனனலர கரதலம சுமநத உசசியர
மினனவிர மணிமுடி விஞசை வேநதரகள
துனனினர முறைமுறை துறையிற சுறறவே (5)

மஙகையர திறதொரு மாறறம கூறினும
தஙகளை யாமெனத தாழும செனனியர
அஙகையும உளளமும குவிநத ஆககையர
சிஙகவே றெனததிறற சிததர சேரவே (6)

அனனவன அமைசசரை நோககி ஆணடொரு
நனமொழி பகரினும நடுஙகும சிநதையர
எனனைகொல பணியென இறைஞசு கினறனர
கினனரர பெருமபயம கிடநத நெஞசினர (7)

திசையுறு கரிகளைச செறறுத தேவனும
வசையுறக கைலையை மறிதது வானெலாம
அசையுறப புரநதரன அடரதத தோளகளின
இசையினைத தமபுரு இசையின ஏததவே (8)

சேணுயர நெறிமுறை திறமப லினறியே
பாணிகள பணிசெயப பழுதில பணணிடை
வீணையின நரமபிடை விளைதத தேமறை
வாணியின நாரதன செவியின வாககவே. (9)

சூலமே முதலிய துறநது சுறறிய
சேலையால சிறியவாய புதைததுச செஙகையின
தோளுடை நெடுமபணை துவைககும தோறெலாம
காலனவநது இசைககுநாட கடிகை கூறவே (10)

அதிசயம அளிபபதறகு அருள அறிநதுநற
புதிதலா கறபகத தருவும பொயயிலாக்
கதிரெழு மணிகளும கறவை ஆனகளும
நிதிகளும முறைமுறை நினறு நீடடவே (11)

ஊருவில தேரனறிய உயிரபெய ஓவியம
காரினில செருககிய கலாப மஞஞைபோல்
வார்விசிக கருவியோர வகுதத பாணியின
நாரியர அரஙகடம நடிபப நோககியே. (12)

இருநதனன உலகஙகள இரணடும ஒனறுமதன
அருநதவ முடைமையின அளவி லாறறலின
பொருநதிய இராவணன புருவக காரமுகந
கருநதடங கணணியா கணணின வௌளததே (13)

(ஆரணியகாணடம, மாரீசன வதை)

இநதப பாசுரஙகளைக கண்ணூன்றிக காணபவர் இராவண னுடைய புண்ணிய போகஙகளையும எணணரிய மகிமைகளையும கணனெதிரே தெரிநது கருதிமகிழநதுபெரிதுமவியநதுகொளளுவா.

கவிபபடஙகளுள சீவிய ஓவியஙகள உணாசசி ஒளிகளைவீசி எவவழியும உலலாசமாய உலாவி மிளிாகினறன பொருள நிலை களை விரிதது விளககின விரியும ஆதலால குறிபபாகக கூாநது ஓாநது ஆாநத சாரஙகளைத தோநது கொளவதே நலமாம

"தேவ தேவாகளாலும வெலல முடியாதவன, யாவரும அடிதொழ மூவுலகையும ஏக போகமாய ஆளுகிறான, பஞச பூதஙகளும அவனுககு அஞசி ஊழியஙகள புரிகினறன, கற பகதரு, சிநதாமணி, காமதேனு முதலிய தெயவத திரவியஙகள எலலாம அவன கருதியதைத தநதருள உரிமையுடன அருகே எபபொழுதும காதது நிறகினறன. ஊாவசி மேனகை எனப பேறபெறறுளள அழகிய தேவ மஙகையா விழுமிய நடனஙகள புரிநது அவனுடைய விழிகள களிககச செயகினறனா, நாரத முனிவரும துமபுருவரும வீணைகளை மீடடி இனிய கானமாய அவனது கீாததிகளைப பாடுகினறனா, கநதருவா, விஞசையா, சிததா, கினனரா முதலிய தேவ சாதிகளுள தலைவாகளாயுளள வா எலலாரும அவன ஏவிய பணிகளை ஆவலோடுசெயய அயலே அசசததோடு காதது நிறகினறனா, காலததைக குறிதது மணி அடிககுநதோறும காலன வநது வாய புதைதது நினறு நாழிகை நிலையைத தலைகுனிநது சொலலி அயல ஒதுஙகி அமாகிறான, வரு ணன் தணணீா உதவ, அககினி விளக்குகள் ஏற்ற, வாயு ஆல் வட்டம வீச, நீல மணி மலை மேல பால சூரியாகள பிரகாசித தன போல் கோலமுடிகள புனைந்து மேலான திவ்விய மணிமண் டபத்தின நடுவே அழகிய சிஙகாசனததில் இலஙகை வேநதன் எழுந்தருளி யிருநதான." என இதில் வனைந்து காட்டி யிருக்கும காட்சியை விழைநது நோககி வியநது நிறகிறோம்

புலியின அதள உடையான என்றது சிவனை. அதள் = தோல்.

புலித் தோலை ஆடையாக உடுத்தினவன் என்றது கொடியவர்களை அழித்து ஒழிக்கும் அடலாண்மை தெரிய. சருவ சங்காரமூர்த்தியான சிவன், அசுரகுலகாலனான திருமால், யாவும் படைக்கவல்ல பிரமனும் ஆகிய இந்த மூவராலும் இராவணனை யாதும் செய்ய இயலாது என்றது அவனது தவப் பேற்றின் நிலையையும் கால வலியையும் கருதி யுணரச் செய்தது.

மாதர் வலிய நெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை.

இராவணன் யாருக்கும் யாண்டும் வணங்காதவன் என்பதை இங்ஙனம் வரைந்து காட்டி யிருக்கிறார்

புலவி என்பது காமக் கலவியில் நிகழும் பிணக்கு.

அரிய அரசர்களும் பெரிய போர் வீரர்களும் இந்தப் புலவியில் தலைவணங்கி நிற்பர். பள்ளியறையில் காதலிகள் ஊடிய பொழுது அவர் உள்ளம் இணங்கி யருளக் காதலர் படாத பாடு படுவர். ஊடல் தணியவில்லை யாயின் அவரது அடியில் விழுந்து பணியவும் நேர்வர், இந்தப் பணிவு அந்தப்புரத்தில் இரகசியமாய் நிகழுவது ஆதலால் கூடலை அவாவிய இரு பாலார்க்கும் பெருவகையாய் ஆர்வம் புரிந்து நீர்மை சுரந்து வரும்.

மெல்லிய பூவைப் போல மெல்லியலாரை மிருதுவாக இணக்கி யருளுகிற இந்த வணக்கத்தை உயர்ந்த வெற்றியாகவே ஆடவர் உவந்து கொள்ளுவர். காதலின்பம் கனிந்து ஆதரவு சுரந்து வருகிற இப்பணிவில் மகளிர் உயர் வுடையராய் உவகை கூர்ந்து நிற்பர்.

"மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையும் காலைப் புலவியுள் உரிய" (தொல்காப்பியம்

தலைமையான கணவன் நிலைமை தாழ்ந்து பணிவதும், அதனை உவந்து கண்டு மனைவி உயர்ந்து நிற்பதும் புலவியுள் உரிய என்றதனால் அதன் நிலைமையும் நீர்மையும் நேரும் புலனும்.

காமத்துறைகளைச் சேமமாக முறை செய்து உலகம் அறிய உரைத்த ஆசிரியர் தொல்காப்பியனார் மாந்தரின் மானச இயல்புகளை நன்கு தோந்துள்ளமையால் இங்ஙனம் நளினமாக உணர்த்தி யருளினார். உலக அனுபவங்களுக்கு உரிய விதிகள் பெருகி வரலாயின. இன்ப விளைவுள் இனிய அன்புகள் விளைகின்றன.

மக்கள் இயல்புகளைக் கடவுள் பக்கலும் ஏற்றிக் காமச் சுவைகளைக் கவிஞர்கள் புனைந்து பாட நேர்ந்தனர்.

ஆதி பகவன் தனதூடல் தணிப்பான் கருதி அவ்இறைவன்
பாதம் இறைஞ்சும் அதற்கும்நெற்றிப் பகையும் அல்குற் பகையுமாம்
சீத மதியும் அரவும்விழும் செயற்கும் உவகை செய்யாமல் அலை
மாது பணியும் அதற்குமனம் மகிழும் உமையை வணங்குவாம்.

(பிரபுலிங்க லீலை)

உமாதேவி ஒருமுறை ஊடியிருந்தாள், அந்த ஊடலை நீக்கும் பொருட்டு இறைவன் அவள் பாதத்தில் விழுந்து வணங்கினான்; அவ்வாறு வணங்கும் பொழுது தலையிலிருந்த கங்கையும் பணிந்தாள் ஆதலால் அதனைக் கண்டதும் ஊடல்நீங்கி உவந்து கொண்டாள்; தனக்குச் சக்களத்தியாய் வாய்ந்துள்ளவள் தன் காலில் வீழ்ந்து பணிந்தது மிக்க உவகையாயது. அலைமாது = கங்கை.

எவ்வளவு பெரிய தலைவரும் இவ்வாறு புலவியில் வணங்குவர் ஆதலால் அத்தகைய புலவி நிலையிலும் தலை வணங்காதவன் என இராவணனது தனித் தலைமையை நுனித்துணர இங்ஙனம் விளக்கி யருளினர். விளக்கம் வியப்பு மிகவுடையது.

வணங்க வேண்டிய இடத்திலும் வணங்காமல் தன் கருத்துக்கு எவரும் இணங்கி வரச் செய்யும் ஏற்றம் மிகப் பெற்றவன் என்பதை இங்கே இனிதறிந்து கொள்ளுகிறோம்.

இனிய காதலிகளுடைய புலவியிலும் வணங்காத நிலையினன் என அவனது வணங்கா முடித் தனத்தைக் கவி வரைந்து காட்டியிருக்கும் காட்சி வியந்து நோக்கவுரியது.

"A Briton, even in love, should be
A subject, not a slave!" (Wordsworth)

"காதலிலும் கூட ஒரு ஆங்கிலேயன் தலைமையாளியிருப்பானே அன்றி அடிமையாயிரான்" என வேட்ஸ்வொர்த்து என்னும் கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

அடிமை மனப்பான்மை மிகவும் இழிவு என்ப படிமுறையாகவே பழகி வந்துள்ளவர் படியாள் நேர்ந்தனர். எண்ணம் உயர எல்லாம் உயர்கின்றன. அது தாழ யாவும் தாழ்கின்றன.

வீரத்தையும் காதலையும் கவி இங்கே இணைத்து உணர்த்தியிருக்கிறார். இராம காவியத்துள் வீரமும் காதலும் யாண்டும் விரிந்து கொண்டுள்ளன. அந்நீர்மைகள் கூர்மையாக உணரவுரியன.

ஆண்மைக்குத் தனி வரம்பு வீரம்; பெண்மைக்கு இனிமை காதல். ஆண்மை பெண்மை என்னும் இரு பாலின உயர் இயல்புகள் இங்ஙனம் மருவி யிருத்தலால் காவிய வுலகில் இந்த இரண்டும் சீவிய ஒளிகளாய்த் திகழ்ந்து நிற்கின்றன.

"Two things greater than all things are
One is love and the other is war." (Homer)

"உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் இரண்டு பொருள்கள் பெரியன; ஒன்று போர் வீரம்; மற்று ஒன்று காதல்" என ஹோமர் எனனும் கிரேக்க மகா கவி இவ்வாறு பாடியிருக்கிறார். இருபால் நிலையும் யாண்டும் ஒரு பாலாய் ஓங்கி யுள்ளது.

காதல் வீரங்களை அகப் பொருள் புறப் பொருள் என முறையே வகுத்துத் தமிழ் மொழி விரித்து விளக்கி யிருக்கிறது.

சகத்தியல் எல்லாம் வகுத்தினி துணரின்
அகத்திணை புறத்திணை ஆயிரு வகைத்தே

இன்ன நெறி முறைகள் இங்கே உன்னி யுணர வந்தன.

சிறந்த வீரன் உயர்ந்த போகி என இராவணனுடைய சிறப்பு நிலைகளை எல்லாம் வியப்புடன் நோக்கி வியந்து நிற்கிறோம். இவ்வளவு பெரிய மேன்மைகளை இவன் எவ் வழியில் எய்தினான் என எதிர் வினவுவார்க்குப் பதில் கூறுவார் போல இறுதியில் உறுதியாய் இசைத்தார்.

அருந்தவம் உடைமையின் என்றது பெருந் திருவுடையனாய் உலகங்களை மூன்றையும் இராவணன் ஒருங்கே ஆண்டு வந்ததற்கு அமைந்த காரணத்தை நாண்டு இனிது விளக்கி நின்றது.

## அனுமான் மூண்டது

அதிசய நிலையில் அமரரும் பணி செய்ய அரியணையில் வீற்றிருந்த இராவணனைக் கண்டதும் அனுமான் உக்கிர வீரமாய் உருத்து மூண்டான். நீண்ட சபா மண்டபத்தின் தலை வாசலை அணுகிய பொழுதே நேரே கண்டான் ஆதலால் வீர மாருதி வீறு கொண்டு துடித்தான். அந்த உள்ளத்துள் விரைந்து மூண்ட வீரத் துடிப்புகளை அயலே வியந்து காண வருகிறோம்.

உறங்கு இன்றபோது உயிருடல் குற்றமென்று ஒழிந்தேன்;
பிறக்கு பொன்மணி ஆசனத் திருக்கவும் பெற்றேன்,

திறங்கள் என்பல சிந்திப்பது? இவன்தலை சிதறி
அறங்கொள் கொம்பினை மீட்டுடன் அகல்வென் என்றமைந்தான்.

தேவர் தானவர் முதலினோர் சேவகன் தேவி
காவல் கண்டிவண் இருந்தவர் கட்புலன் கதுவப்
பாவ காரிதன் முடித்தலை பறித்திலென் என்றால்
ஏவது யானினி மேற்செயும் ஆளவினை என்றான். (2)

நீண்ட வாளெயிற் றரக்கனைக் கண்களின் நேரே
காண்டல் வேண்டி இவ்வுயிர் சுமந்து எதிர்சில கழறி
மீண்ட போதுண்டு வசைப்பொருள் வென்றிலேன் எனினும்
மாண்ட போதினும் புகழன்றி மற்றுமொன்று உண்டோ? (3)

என்று தோளிடை இறுக்கிய பாசம் இற்றேறக்
குன்றின் மேலெழு கோளரி யேறெனக் குதியின்
சென்று கூடுவல் என்பது சிந்தனை செய்யான்
நின்று காரியம் அன்றென நீதியின் நினைந்தான். (4)

அனுமானுடைய உறுதி ஊக்கங்களையும் உணர்ச்சி வேகங்களையும் ஈண்டு உணர்ந்து வியக்கின்றோம். கோபக் கொதிப்புகள் அரிய விவேகத்தையும் கடந்து வெளியே பாய நேர்ந்துள்ளன.

இராவணனைக் கண்ட போதெல்லாம் இந்த வீரனுடைய உள்ளத்தில் சினமும் சீற்றமும் விரைவாய் மண்டி வருகின்றன.

“முதலில் காணும்போது உறங்கிக் கிடந்தான்; ஆதலால் உயிர் உண்டல் பழுது என விட்டேன், இப்பொழுது விழித்திருக்கின்றான், அழித்து ஒழிக்க வேண்டும், முடித் தலைகளைப் பறித்துப் படித்தலத்தில் உருட்டிக் கற்புத்தெய்வத்தை விரைந்து ஓடுத்துப் போதலே நலமாம், சுத்த வீரனான இராமனுக்கு அடியவன் இந்த அரக்கனைக் கண்டு சில வார்த்தைகள் மாத்திரம் சொல்லிப் போவது இழிவே, கொன்று தொலைப்பதே வென்றியாம், இவனைக்கொல்ல மூண்டு வெல்லாமல் நான் அழிந்து போயினும் அது புகழே அன்றிப் பழி ஆகாது, எவ்வழியினும் இங்குள்ளவர் யாவரும் சிதறி ஓட இவனைப் பொருது தொலைப்பேன்” என்று உறுதிபூண்டு பிணித்துள்ள பாசத்தோடு இராவணன் மீது பாய மூண்டான், மூண்டு முனைந்தவன் உடனே மீண்டு மடங்கினான்.

**நின்று காரியம் அன்று என நீதியின் நினைந்தான்.**

வென்றி வீரனோடு மேலே பாய விரைந்தவன் இவ்வாறு நின்று நினைந்திருக்கின்றான். நிலைமைகள் பலவும் கருதி அமைதியாய் ஆறியுள்ளான். “இப்பொழுது இந்த அரசவையில் கல

கதனதை விளைப்பது அவலமேயாம், போர் தொடங்கினால் ஊரடங்கலும் ஓலமிட்டு எழும், பெரிய பலசாலியாய் அரிய வரபலங்கள் பெற்றுள்ள இராவணனை எளிதே வென்று விடலாம் என்று எண்ணுவது தவறு, ஆண்டவன் வென்று தலைப்பதாக வீர சபதம் கூறியுள்ளமையால் நான் முன்னுற மீறி நடப்பது மிகுந்த பிழையாம், ஒருமாதம் வரையுமே உயிர் பிழைத்திருப்பேன், குறித்த தவணையுள் வரவில்லையானால் இறந்துபடுவேன் என்று பிராட்டி உறுதி செய்துள்ளமையால் இங்கே பொருந்து நாளைக் கடத்துவது பெரிய கேடாம்; தூதுவனாய் வந்த நான் அந்த அளவிலேயே அமைந்து போவது நல்லது, வேறு மாறுகச் சிந்தனை செய்யலாகாது" என இந்தவாறு மாணி அடங்கி இசைந்து போயினன். வீரத் திறல்களின் வேகங்களும், விதி முறை தெளிந்த விவேகங்களும் இங்கே ஏகமாய் எதிர்ந்து போராடி முடிவில் நீர்மையோடு அடங்கியிருத்தலைக் கூர்மையாக உணர்ந்து கொள்கிறோம். உள்ளத்தில் இவ்வளவு ஊக்கமுடையவன் வெளியே எளியவன்போல பாசப்பிணிப்போடு நேரே போனான்.

## அவையுள் புகுந்தது.

சிங்காசனத்தில் இராசகம்பீரமாய் வீற்றிருக்க இராவணன் எதிரே கொண்டு போய் நிறுத்தி அனுமானைச் சுட்டிக் காட்டி இந்திரசித்து இருகை கூப்பித் தந்தையை நோக்கி "எந்தாய்! இதோ குரங்கைப் பிடித்து வந்துள்ளேன், அதிசய வலியுடையது, உருவில் வானரம், அறிவிலும் ஆற்றலிலும் யான் யாண்டும் கண்டறியாத அற்புத நிலைகளை இதனிடம் நேரே கண்டேன், வேறு விரித்துப் பேசுவது வீண், தேவ தேவரான மூவரே இவ்வாறு ஓர் உருவமாய் மாறி வந்திருப்பதாகக் கருதுகிறேன்" என்று தன் கருத்தைக் குறித்துச் சொல்லி அவ் வீரமகன் தீரமாய் நின்றான்.

சிவன்என்னச் செங்கணன் என்னச் சேவகன்
இவன்எனக் கூறிநின்று இருகை கூப்பினான்.

தந்தையின் அருகே போய்நின்று இந்திரசித்து இந்தவாறு மாருதியைக் குறித்துக் கூறியிருக்கிறான். உரையிலும் நிரையிலும் அவனுடைய உள்ளமும் உணர்வும் முறையே தெரிகின்றன.

தான் ஒரு குரங்கைப் பிடித்து வந்திருப்பதைத் தந்தை எளிதாக எண்ணுதபடி அம்மைந்தன் இங்ஙனம் புனைந்து கூறவில்லை;

உண்மையை நினைந்து தெளியும்படி உறுதியை வரைந்து கூறினன்.

அனுமான் கையில் அடிபட்டிருந்தும் அவனை இவ்வாறு வியந்து புகழ்ந்திருக்கிறான். சுத்த வீரர்கள் எப்பொழுதும் ஒத்த வீரர்களை உள்ளுற உவந்து கொள்ளுகின்றனர்.

அருந்திறலாண்மையை நேரே அறிந்தவன் ஆதலால் பெருந் தகவோடு அதனைப் புகழ்ந்து கூறினன். சேவகன் என்றது வீரன் என்றவாறு யாவரும் அதிசயிக்கும்படி போரில் அவன் புரிந்த சேவகச் செயலால் இப்பெயர் மேவி வந்தது.

உருவில் குரங்காயினும் சிவனும் திருமாலும் என இவனை நினைந்து கொள்ளுக என்று நினைவுறுத்தினன். சிவனை முதலில் குறித்தது இவனைக் கூர்ந்து ஓர்ந்து குறிக்கொள்ள வந்தது.

சங்கார மூர்த்தியைப்போல அரக்கரை அங்கே இவன் அழித்திருக்கிறான் ஆதலால் அந்த அழிவு நிலை தெரிய விளம்பினன்.

இராமன் ஏவிய சேவகன் சிவன் எனச் செங்கணன் என மந்திரியால் வியந்து புகழ நேர்ந்தான், இந்த ஏவலாள் இவ்வள வானால் அந்த ஆண்டவன் எவ்வளவு மகிமையுடையவன் என்பதை நண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ளும்படி உரைகள் கூர்ந்து வந்துள்ளன.

இருகை கூப்பினன் என்றது மரியாதையைக் காட்டியது.

சிறந்த தந்தையிடம் உயர்ந்த மைந்தர் ஒழுகி வரும் ஒழுக்க முறைகளைக் கண்டு உள்ளம் உவந்து கொள்ளுகிறோம். குண நீர்மைகள் யாரிடம் தோன்றினும் அவை சீவர்களுக்கு இனிமை சுரந்தருளுகின்றன.

## இராவணன் கடுத்து வினவியது

தன் எதிரே கொண்டு வந்து நிறுத்தியுள்ள அனுமானைக் கண்டதும் இராவணன் வெகுண்டு சீறினன். கோபக் கனல் விழிகள் தோறும் வீறு கொண்டு எற "நீ யார்?" என்று ஆர வாரமாய் அதட்டிக் கேட்டான். அவன் கேட்ட கேள்விகள் கொடிய வேகமாயக் கொதித்து வந்தன.

நேமியோ? குலிசியோ? நெடுங் கண்ணிச[illegible]
தாமரைக் கிழவனோ? தறுகட் ப[illegible]

பூமிதாங்கு ஒருவனோ? பொருந்து முற்றுற
நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்! (1)

நின்றிசைத்து உயிர்கவர் நீலக் காலனோ?
குன்றிசைத்து அயிலுற எறிந்த கொற்றனோ?
தென்திசைக் கிழவனோ? திசைநின் றுட்சியார்
என்றிசைக் கின்றவர் யாருள் யாவன் நீ? (2)

அந்தணர் வேள்வியின் ஆக்கி ஆணையின்
வந்துற விடுத்ததோர் வயவெம் பூதமோ?
புந்தொரு மலருளோன் இலங்கை முற்றுறச்
சிந்தெனத் திருத்திய தறுகண் தெய்வமோ? (3)

ஆரைநீ என்னையிங்கு எய்து காரணம்
ஆருனை விடுத்தவர் அறிய ஆணையால்
சோர்விலை சொல்லுதி என்னச் சொல்லினான்
வேரொடும் அமரர்தம் புகழ் விழுங்கினான் (4)

அனுமானை நோக்கி இராவணன் வெகுண்டு வினவியிருக்கும் நிலைகளை இக் கவிப் படங்கள் நமக்கு நன்கு காட்டி நிற்கின்றன. பேசியுள்ள வார்த்தைகள் அவனுடைய உள்ளத்தையும் உணர்ச்சிகளையும் ஒருங்கே வெளிப்படுத்தியுள்ளன.

குரங்கு என்று தெரிந்திருந்தும் அந்த உருவை அவன் நம்பவில்லை, தேவ தேவர்களுள் யாரோ இந்த வடிவமாய் மறைந்து வந்திருப்பதாகச் சிந்தை துணிந்து சீறியிருக்கிறான். "சூலபாணியான சிவனோ? சக்கரதரனான திருமாலா? பிரமாவா? முருகனோ? இந்திரனோ? ஆதிசேடனோ? காலனோ? எமனோ? அக்கினியா? உக்கிர வீரமான பூதமா? அல்லது இலங்கையை நாசம் செய்து வரும்படி நான்முகன் படைத்து விட்ட கால தேவதையா? யார் நீ? உண்மையை விரைந்து சொல்" என்று அவன் சினந்து சீறி முனைந்து கூறியுள்ள வேகம் நினைந்து சிந்திக்கவுரியது.

• தனது ஆளுகையுள் வேறு யாரும் துணிந்து வர முடியாது என்று அவன் இறுமாந்து எண்ணியுள்ளமையால் திரிமூர்த்திகளை முன்னதாக உன்னி முனிந்து மொழிந்தான். பேர்களை நேரே கூறாமல் நேமி, கணிச்சி, குலிசம், அயில் என்ப போர்க் கருவிகளைச் சுட்டிச் சொல்லியது வீரப்பாடுகள் தோன்ற வந்தது. போராடல்களிலேயே பழகி வீறு கொண்டுள்ளவன் உரைகள் அந்தத் துறைகளிலேயே தோய்ந்து மீறி வந்தன.

முத தேவாகளே இவவாறு ஒதது வந்திருக்க முடியும் எனறு முதலில குறிததவன் பினனும ஐயமாய அரிய திறனு டைய பலரையும் கருதி உரிய நிலைகளை உசாவி உரைததான்.

குனறு இசைதது அயில உற எறிந்த கோறறனோ?

என முருகக கடவுளை மாததிரம இவவாறு வெறறி விளைக ளோடு விரிதது விளககி யிருககிறான. குனறு எனறது கிரௌ ஞச கிரியை. தாரகாசுரனுக்கு வீர நிலையமாய அதிசயமான, மாயா வல்லபஙகளோடு மருவி யிருநத அநத மலையை ஒரு நொ டியில் பொடி செயது மீணடது ஆதலால அவ வேலின வெற்றி வியநது பேச வநதது.

"தாரகன மாாபம என்னும் தடமபெரு வரையைக் கீணடு
சீரிய கிரவுஞ சததிற சோநதுபட டுருவிச சென்று
வீரமும புகழும கொணடு விளஙகியது எனன அஙகட
சோரியும துகளும ஆடித துணணென மீணட தனறே (1)
சிறநதிடு மாய வெறறைபத திருககைவேல பொடிதத காலை
பிறநதிடு கினற தீயைத தீயெனப பேச லாமோ
அறிநதவா தெரியின குனறம அவுணன ஆகையினுல் மெயயில
உறைநதிடு குருதி துளளி உருததவா ருகும அனறே" (2)
(கநதபுராணம, தாரகனவதை)

கிரவுஞச கிரியின நிலையும, அதனைப பொடி செயது வேல சென்ற திறனும, வெனறி நலனும இதனுல நனகு அறியலாகும.

"தடடுடற வேல சயிலதது எறியும
நிடடூர நிராகுல நிாபாயனே" (கநதரனுபூதி)

குனறு எறிநத வென்றியை அருணகிரி நாதா இவவாறு துதிததிருககிறாா அதிசய வெறறி துதி செயய வநதது.

"தாரகனும மாயத தடஙகிரியும தூளாக
வீர வடிவேல விடுததோனே!" [கநதா கலி வெணபா]

குனறம் கொனற குனருக கோறறதது, வெனறி வீர என மேலோரும நூலோரும வியநது புகழநது துதிதது வரும வேலா யுதக கடவுளை இராவணன ஈணடு வரைநது குறிததான. அசுர குல காலனை அவன அரககா குலததையும அழிகக இநத உரு வில் வநதானோ? எனறு சிநதை கனனறுளளான.

அனுமான என்றபெயரும இநதக் குரஙகு வடிவமும் மெய் யல்ல; பொய யானவையே! கொடிய மாய வஞசஙகளை என் பான் நாமமும் உருவமும் கரநது நண்ணினன் என்றுன்.

போர்க் களத்தில் அரக்கர் திரள்களை மாருதி பொருது அழித்துள்ள. வீர வெற்றிகள் இராவணனுடைய உள்ளத்தில் கொடிய கலக்கத்தை விளைத்திருத்தலால் வாய மொழிகள இவ வாறு பெரிய இலக்கங்களை நாடி எழுந்தன

சோரவிலே சொலலுதி!

உள்ளதை உள்ளபடியே உண்மையாகச் சொல் என உருத்து இவவாறு உரைத்திருக்கிறான். உன்னை நான ஒன்றும் செய்யேன, கொன்று தொலையேன, நீ யாதும பயப்படாமல நின்று உள்ளதைச சொல்லிவிடு என்பான சோரவிலே சொலலுதி! என்றான். சோர்ந்து தவறுகச சொல்லாதே; ஓர்ந்து உண்மையை உரைத்து விடு, உன்னை உயிரோடு வெளியே விட்டு விடுகிறேன எனச சுட்டி யருளினன.

இந்தக் குரங்கு தானக வரவில்லை; எந்தத் தேவனே ஏவி விட்டிருக்கிறான், அந்த எதிரியை அறிந்து கொள்வோம் என்று ஆரவாரமாய வீர வாதம செயதுள்ளான

இவவாறு கேட்டவன யார்? எனபதைக் கவி நமக்குக் காட்டியிருக்குமகாட்சி அவனுடைய மாட்சியைநீட்டிநிற்கிறது.

வேர் ஒடும அமரர் தம புகழ் வி ழுங்கினன

இராவணனுக்கு இப்படி ஒரு பெயரைக கவி இங்கே சூட்டியிருக்கிறார். சிறந்த புகழோடு உயர்ந்திருந்த தேவர் எல்லாரும் தனக்கு ஏவல செய்யும்படி தலையடக்கி அவன் நிலை உயர்ந்துள்ளான ஆதலால அந்தநிலையை இந்தமொழியால் விளக்கினர்.

அரக்காபதி தலையெடுத்தபின அமரர் யாவரும நிலை குலைந்து இழிந்துள்ளனர், அவர்பழியோடு தாழ்ந்துவர இவன் புகழோடு வாழ்ந்து வருகிறான. வானும வையமும தலை வணங்கக் கோனேட்சி புரிந்து வரும கொற்றம தெரிய வந்தது.

வானவர் புகழை வேரோடு வாரி விழுங்கினவன் வானர வீரனை விழுங்கி விடுபவன போல் வெகுண்டு நோக்கி இவவாறு சீறி வினவினன

## அனுமான் சொன்ன பதில்

இலங்காதிபதி ஆரவாரமாய அடுக்கிக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அனுமான் மிகவும் வினயமாகப் பதில் சொல்லி

ஞன். மேலே வினவிய மொழிகளுக்கு வேறு யாரேனும் என்ன பதில் சொல்ல நேர்வார்? என்பதை முன்னதாக வாசகர்கள் உன்னி யுணர்ந்தால், மாருதி சொன்ன உரைகளின் சுவைகளைத் துய்த்து மகிழ்வர். எதிரே பேசியிருக்கும் மொழிகள் அதிசய மேதைகளின் துளிகளாய் ஒளி வீசி வெளி வந்துள்ளன.

சொல்லிய அனைவரும் அல்லன், சொன்ன அப்
புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்,
அல்லியங் கமலமே அனைய செங்கணோர்
வில்லிதன் தூதனியான் இலங்கை மேயினேன். (1)

அனையவன் யாரென அறிதி யாதியேல்
முனைவரும் அமரரும் மூவா தேவரும்
எனையவர் எனையவர் யாவர் யாவையும்
நினைவரும் இருவினை முடிக்க நின்றுளான். [2]

இராவணன் கேட்ட கேள்விகளுக்கு அனுமான் இவ்வாறு பதில் சொல்லியிருக்கிறான். மும் மூர்த்திகளிலிருந்து தொடங்கி உக்கிர வீரமாய் அவன் உருத்து வினவியதும், அதற்கு அமைதியாக இவன் எதிர் உரைத்திருப்பதும், அதி விநயமாய் மதி நலம் சுரந்துள்ளது. திருமால் முதலாகப் பல பேர்களைச் சுட்டிச் சொல்லி ஆரவாரமாய் அதட்டிக் கேட்டான்; ஆதலால் அக்கேள்விகளுக்கெல்லாம் ஒரே சொல்லில் விடை கொடுத்தான்.

**சொல்லிய அனைவரும் அல்லன்.**

என முன்னதாக ஒருங்கே மறுத்தான். நேமியோ? என்பது முதலாகப் பதினெட்டுப் பேர்களைப் பெருமையாக அவன் சுட்டிச் சொன்னான்; ஆதலால் அவருள் யாரும் இல்லை என்று ஒரே அடியாய் வெட்டிப் பேசினான்.

நீ வியந்து சொன்ன எவரினும் நான் மிகவும் உயர்ந்தவன் என அவன் உணர்ந்து திகைக்கும்படி மாருதி விரைந்து கூறி மேலும் தொடர்ந்து ஏறினான்.

**சொன்ன அப் புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்.**

இது எவ்வளவு வேகமான வார்த்தை! நல்ல விவேகியான அனுமான் இவ்வாறு சொல்லலாமா? என்று நாம் எள்ளி இக

மூராமல் அவனுடைய உள்ளத்தை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். உணர்ச்சி வேகம் ஓங்கி நிற்கிறது.

நீ சொன்ன அந்த அறப்பாகர்களுடைய ஆள் அல்ல நான் என்று வெளியே தோன்றிக்கும்படி மொழிகள் குதித்து வந்துள்ளன. திருமால் சிவன் பிரமன் என அவன் உயர்வாகக் கூறியதற்கு அயர்வாக இவ்வாறு இவன் மாறு கூறினன்

புலலிய என்னும் பெயரெச்சம் புன்மையான என்னும் பொருளோடு பொருந்திய வலி எனவும் ஈண்டு இசைந்துளது.

தேவ தேவர்களும் இராவணனை யாதும் செய்யாமல் ஒதுங்கி யிருந்ததலால் அவரை அவன் எளிதாக நினைந்து நிற்கிறான்.

எள்ளலான அந்த உள்ளச் செருக்கைத் தள்ளி ஒழிக்க இவன் இங்ஙனம் உள்ளி உரைக்க நேர்ந்தான்.

மும்மூர்த்திகளும் செய்யாத வேலையைச் செய்யவந்துள்ள ஒரு மூர்த்தி என இராமமூர்த்தியை அவன் உணர்ந்து கொள்ளும் படி வலியுறுத்த வந்துள்ளமையால் மற்றை எல்லாரையும் புல லிய வலியினோர் என்று இச் சொல்லின் செல்வன் துணிந்து சொல்லினன்.

எதிரியினுடைய மன நிலையை இனிதுணர்ந்து பேசுகிறான் ஆதலால் இம்மந்திரனுடைய உரைகள் அதி விநயமாய் ஆர்ந்து வந்தன நினைவு நிலைகளை நேரே அவை விளக்கி நிற்கின்றன

நேமி இருந்தும் கண்ணிச்சி இருந்தும் ஒரு உத்தம பத்தினிக்கு ஊறு விளைத்துப் பத்து மாதம் படு துயர் செய்து வருகிற அவனைச் சித்திர வதை செய்யாமல் வைத்திருந்ததலால் இவ் வித்தகன் அவரை இகழ்ந்து குறித்தான்

சக்கரதரன் ஆயினும், சூல பாணியாயினும், கற்பையும் தருமத்தையும் காத்தருள் வில்லையானால் அவரால் உலகிற்கு என்ன பயன்? என உள்ளம் கன்று இவன் உரையாடியுள்ளமையை உரைகள் உணர்த்தி நிற்கின்றன. மானச வேகம் ஞான தீரமாய விதிமுறைகளை விளக்கி அறநெறிகளைத் துலக்கி யுள்ளது.

அல்லியங் கமலமே அனைய செங்கண் ஓர்
வில்லிதன் தூதன் யான்

முன்னம் இரண்டு வகையில் விலக்கு உரைத்தவன் இறுதி யில் இன்னவாறு தன்னை இனிதுணர்த்தினன். இராமன் என்று நேரே பேரைச் சொல்லாமல் உருவ அழகை வரைந்து காட்டிச் சருவமும உணாநது கொளள ஊட்டினை.

அழகிய தாமரை மலா போனற விழுமிய கண்களையுடைய ஓா வீரன என அரிய தேக சவுநதரியததையும பெரிய நிறலையும் தெரிய விளக்கினை. அழகும வீரமும் களி நடம புரிகினற விழுமிய நிலைகளை விழி களிபபக காட்டிய படி யிது.

செஙகணன எனனச சேவகன என்று தனனைக குறிதது இநதிர சிதது முனனம சொனனதை அடியொறறி எழுநதது.

அநதச செஙகணணனே அஙகண உலகில வேறு உருவமாய மாறி வநதுளளான, அவனது சேவகன நான எனத தெரிய உணாததினை.

ஓா விலலி எனறது ஒபபறற அரிய ஒரு வெறறி விலலை யுடையவன என அக கொறறக குரிசிலின தலைமையும நிலை மையும தனியே கருதி உணர வநதது

நேமி, குலிசி, கணிசசி எனப படைக கலனகளைத தொடுத் து அவன வினவினை ஆதலால அதறகு இயைய விலலி என ருன. அவை பலவும சோநது செயய முடியாத அரிய செயலை இது தனியே நினறு செயய வநதுளளது எனபான ஓா விலலி என ஓா உரைததான இஙகே வில எனறது கோதணடததை

ஒரு விலலை மாததிரம கையில உடையவன அரககா குலத தை அடியோடு அழிகக வநதுளளான என முடிவாகக குறிப பிததான அநத வீரன ஏவிய தூதன யான எனத தனனை இறு தியில உறுதியாக உணாததினை

நான நேமி அலலன, குலிசி அலலன், கணிச்சி அலலன; பிரமன அலலன, சேடன அலலன; காலன அலலன; கொற றன அல்லன, எமன அலலன, எண திசையாளருள் எவரும் அலலன, பூதம அலலன, தெயவம அல்லன எனறு தனித தனி யே மறுததுச சொல்ல வேணடியவன அஙஙனம சொலலாமல் ஒரே சொலலில நுனிததுணர வுரைததான.

உரைகள் தோறும உணாவு நலஙகள சுரநது இனிய சுவை கள் கனிந்து, வியய நீாமைகள நிறைந்து விரிந்து வருகின்றன;

நான் இராமன் ஏவிய தூதன், இங்கே இலங்கைக்கு ஒரு காரியமாய் வந்தேன் என இராவணன் எதிரே அனுமான் இங்ஙனம் வீரியமாய் மொழிந்தான்.

ஓர் வில்லி என்று உன் உள்ளம் தெளிய நான் சொல்லிய என் ஆண்டவன் பெருமையை நீ நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். அந்த மூர்த்தியின் நீர்மை சீர்மைகளை என் வார்த்தைகளால் வரைந்து கூற முடியா, ஆயினும் எனக்குத் தெரிந்த வரையும் சொல்லுகின்றேன், தயவு செய்து செவி சாய்த்துக் கேட்டருள், அக்கேள்விகள் உனக்கு வாழ்வு தரும் என்று நம்புகிறேன். ஆதலால் உன்பால் அன்பால் உரிமையோடு கூறுகிறேன்.

தேவர்களாலும் மூவர்களாலும் செய்ய இயலாத அரிய காரியத்தைச் செய்து முடிக்க அவர் தனியே வந்திருக்கிறார். அந்தத் தரும வீரனுடைய கரும மருமங்கள் கருதியுணர வரியன. எல்லாம் உன்னை நோக்கியே ஊக்கி நிற்கின்றன.

கட்டிய வலியும் மேலோர் இயற்றிய தவமும் யாவும்
கூட்டிய படையும் தேவர் கொடுத்த நல் வரமும் கொட்பும்
தீட்டிய பிறவும் எய்தித் திருத்திய வாழ்வும் எல்லாம்
நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு நீக்க நின்றான். (1)

தேவரும் பிறரும் அல்லன், திசைக்களிறு அல்லன், திக்கின்
காவலர் அல்லன்; ஈசன் கைலையங் கிரியும் அல்லன்,
மூவரும் அல்லன், மற்றை முனிவரும் அல்லன், எல்லைப்
பூவலயத்தை ஆண்ட புரவலன் புதல்வன் போலாம். (2)

போதமும் பொருந்து கேள்விப் புரையறு பயனும் பொய்தீர்
மாதவம் சார்ந்த தீர் வரங்களும் மற்றும் முற்றும்
யார்தவம் நினைந்தான் அன்னான் பயத்தன ஏது வேண்டின்
வேதமும் அறனும் சொல்லும் மெய்யற மூர்த்தி வில்லோன். (3)

காரணம் கேட்டி யாயின் கடையிலா மறையின் கண்ணும்
ஆரணம் காட்ட மாட்டா அறிவினுக்கு அறிவு மன்னோன்
பேரணங்கு இடங்கர் கவ்வப் பொதுநின்று முதலே என்ற
வாரணம் காக்க வந்தான் அமரரைக் காக்க வந்தான். (4)

மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்.

அறந்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந் தறைந்த நீதித்
திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத் தேக விண்டு
பிறந்தனன் தன்பொற் பாதம் ஏத்துவார் பிறப்பறுப் பான் (6)

அன்னவற் கடிமை செய்வேன் நாமமும் அனுமன் என்பேன்
மன்னுநல் கன்னித் தேடி நாற்பெருந் திசையும் போந்த
பன்னரில் தென்பால் வந்த தானைக்கு மன்னன் வாலி
தன்மகன் அவன்றன் தூதன் வந்தனென் கமியோன் என்றான் (7)

தன்னை இன்னான் என்று தெரிய விளக்கி அனுமான் எதிர் மொழிந்துள்ள இவ்வுரைகளைக் கருதிக் காண்பவர் அரிய பல உறுதி நலங்களை உணர்ந்து கொள்ளுவர். எதிரி உள்ளம் தெளிந்து உய்திபெறும் படி உரைகள் முறையே துள்ளி வந்துள்ளன.

ஓவில்லி என்று முதலில் சொல்லியதைப் பின்பு விரித்து விளக்கியிருக்கிறான். "அரக்கர் பதியே! நீ அரிய தவம் புரிந்து பெற்றுள்ள பெரிய வலிகளை எல்லாம் ஒரே அம்பால் அடியோடு நாசம் செய்ய எம் பெருமான் மூண்டு நிற்கிறான், கைலையங் கிரியை எடுத்தோம், திக்கு யானைகளை அடக்கினோம், தேவர்களை ஒடுக்கினோம், யாவரையும் வென்றுள்ளோம் என்று களித்திருக்கும் அந்தச் செருக்கை ஒழித்து விடு. முந்தி நீ அறிந்துள்ள தேவர் மூவர்களோடு இந்த வீரனைச் சேர்த்து எண்ணி விடாதே, இவன் எவரினும் புதியவன், அதிசய வலியினன், அமரரும் துதி செய்யும் நிலையினனாயினும் தேவ லோகத்தவன் அல்லன், பூவுலகில் ஒரு சக்கரவர்த்தித் திருமகனே உருவில் மனிதன் எனினும் அவனது ஒரு வில் அண்ட கோடிகளையும் அழித்து ஒழிக்க வல்லது, முன்பு ஆதிமூலம் என்று அழைத்த ஒரு யானையைக் காக்க வந்தவனே இப்பொழுது அமரரைக் காக்க வந்திருக்கிறான். ஆதியும் அந்தமும் இல்லாத பரம் பொருளே இந்த வடிவில் வந்துள்ளது. ஈசன் மால் அயன் என்னும் மூவரும் ஒருருவமாய் இவ்வாறு மேவி வந்துள்ளனர் என வேதங்கள் கூவியுள்ளன. தருமத்தை நிலை நிறுத்திப் பாவிகளை அழித்து நீருக்கி நீதி நெறி வழியே சீவ கோடிகள் யாவரும் ஒழுகி வரும்படி இங்கே அவன் வந்திருக்கிறான். அந்த ஆண்டவனுடைய அடிமை நான்; என் பெயர் அனுமான். எங்கள் அதிபதியின் தேவியை ஒரு பாவி கரவாய் வந்து கவர்ந்து போயினன், அந்த உத்தம பத்தினியைத் தேடி நான்கு திசைகளுக்கும் படைகள் போயுள்ளன.

அவற்றுள் தென திசையை நோக்கி இரண்டு வெள்ளம வானா ரங்கள் வந்திருக்கின்றன. அந்தச் சேனைக்கு வாலியின் மைந்தனை அங்கதன தலைவன. அவன ஏவிய தூதன நான்'' என இவவாறு அனுமான பேசி நின்றான்.

இந்த உரைகளால் அவனுடைய கலை ஞானமும், பேச்சு வன்மையும், நெஞ்சுறுதியும், நீதி முறையும் நேரே தெரிகின்றன. எதிரி விரைந்து தெளிந்து உள்ளம திருந்தி உய்ய வேண்டும் என்றே வார்த்தைகள் ஆர்ந்து வந்திருக்கின்றன.

நீ ஈட்டியிருக்கும வலிகளும, கூட்டியுள்ள படைகளும, நீட்டி வைத்துள்ள செல்வங்கள் யாவும நீட்டிய பகழி ஒன்றால் ஓட்டி ஒழிக்க உருத்து நின்றான் என இராமன் மூண்டு நிற்கும நிலையை இராவணன உணர்ந்து கொள்ளும்படி முதலில்உரைத்து விட்டுப் பின்பு முறையே பேசினன எதிரியின நிலைகளை நிறை தூக்கி நேரே அறிவுறுத்தி வருகிறான.

நெடுங்காலமாக நெருப்பிடையே நின்று கடுந் தவம் புரிந்து பிரமனிடமிருந்து அரிய பல வரங்களை இலங்கை வேந்தன் பெற்றிருத்தலால மேலநாள இயற்றிய தவம என அதனை வியந்து குறித்தான

ஐந்தழல் நடுவில நின்று ஓராயிரம பருவம சென்றால
மைந்துடைச் சென்னி பத்தில் ஒன்றறத் தழலில மாட்டி
வெந்திறல ஏந்தன பக்கா சென்னியும வீட்டும ஏல்லை
வந்து செங்கமலப் புத்தேள வரங்கொள என்று உரைத்தலோடும்

விஞ்சையா அவுணர் சித்தர் உரகர் விண்ணவர்கள் தமமால்
துஞ்சுதல இன்றி எல்லா உலகமும துணிவில வெல்ல
வெஞ்சமத்து அற்ற சென்னி தோளவை மீள எய்தக
கஞ்சநாண மலரோய! நல்குஎன்று இரத்தலும கடவுள ஈந்தான்.

(கூரம புராணம)

இராவணன புரிந்துள்ள தவ நிலையையும, பிரமாவினிடமிருந்து அவன பெற்றிருக்கும் வர பலங்களையும இது உணர்த்தியுள்ளது. எவவளவு அருமபாடு பட்டிருக்கிறான்!

பஞ்சாக்கினி மத்தியிலிருந்து ஆயிர வருடங்கள கடுந் தவம் புரிந்தான; கருதிய பலனைக் காணமையால தனது ஒரு தலையை அறுத்து ஓம குண்டத்தில் போட்டு மீண்டும ஓர் ஆயிரம ஆண்டுகள் தவம் செய்து முடிவில் மற்று ஒரு தலையைத் தடிந்து இட்

டான, அவவாறே ஒன்பது சிரங்களையும் கொய்து வீழ்த்தினன்; இறுதியில பத்தாவது தலையை அறுக்கத் தொடங்கிய பொழுது பிரமன் விரைந்து நேரில் அருள் புரிந்து வேண்டிய வரங்களை யெல்லாம் உவந்து வழங்கினன். தேவர் முதல் யாவராலும் வெல்ல முடியாத வலியும், மூவுலக ஆட்சியும், போரில் தலைகள் அறுபடின் அவை மறுபடி முளைத்து வரவும், பிறவும் உயர்வாகப் பெற்றுக் கொண்டான். தெய்வீக மான அத் தகைய வரபலங்களை எல்லாம் ஒரே பகழியால் அழித்து ஒழிக்க இராமன் ஈண்டு மூண்டு வந்துள்ளான் என்பதை முன்னதாக உணர்த்தினன்.

நீட்டிய பகழி என்றது கோதண்டத்தில் பூட்டி நிற்கும் இராம பாணத்தின் நிலை தெரிய ஒன்று என் ஓர் எண்ணத்தில் குறித்தது பலவும் கொன்று தொலைக்க வல்ல அதன் வெற்றி வேகங்களை வியந்து காண வந்தது.

உன்னுடைய குல நாசத்திற்கே உன்னுடைய குலநாயகன் கொடி கட்டி நிற்கின்றான் என்த கலைமையாகக் குறித்து விட்டு மேலே நிலைமைகளைத் தொடுத்துப் பேசினன்.

வேதமும அறனும சோலலும மெய்யற மூர்த்தி

இராமனுடைய மகிமைகளை இராவணன் உணர்ந்து தெளியும்படி உணர்வு நலம் கனிய அனுமான் இவ்வாறு உரையாடி வருகின்றன். வாயிலிருந்து வெளி வருகிற மொழிகள் கலைஞானம் கமழ்ந்து அதி மதுரமாய் ஒளி வீசி மிளிர்கின்றன.

நான் இங்கே சொல்லுகின்ற அந்த மூர்த்தி யார் தெரியுமா? வேதங்களும் தரும தேவதையும் நாளும் விழைந்து மகிழ்ந்து புகழ்ந்து துதிசெய்து வருகிற அதிசய நிலையினன்; சத்தியசீலன், தரும மூர்த்தி அவன் எண்ணிய படியே எல்லாம் இயங்கி வருகின்றன. புண்ணிய வடிவமுடைய அவன் ஈண்டு நண்ணியுள்ளது மண்ணும் விண்ணும் செய்த மாதவங்களாலேயாம். அரிய பல காரணங்களால் அவன் அவதரித்திருக்கிறான்.

வாரணம் காக்க வந்தான அமரரைக் காக்க வந்தான.

இராமன் என்னும் பெயரோடு இங்கே பிறந்து வந்துள்ளவன் இன்னவன் என இன்னவாறு நன்னயமாய் விளக்கினன்.

முன்னம் யானையைக் காக்க வந்தவன் இன்று அமரரைக் காக்க வந்திருக்கிறான். உயிர்களைக் காக்கத் தருமத்தலே தனக்கு உரிய தொழிலாக உடைய கடவுள் என்பது காண வந்தது.

இடங்கர் கவ்வ ஒன்றது அந்த யானை அன்று அடைந்து நின்ற அல்லல் நிலை தெரிய. இடங்கர் = முதலை. வாரணம் = யானை.

## முதலையும் யானையும்

கூஹூ என்னும் கந்தருவன் ஒரு சுந்தர உருவன். ஒரு நாள் பெரிய தடாகத்தில் நீந்தி விளையாடிக் கொண்டிருந்தான். அந்த நீர்நிலையில் தேவலன் என்னும் முனிவர் நெடிது தவம் புரிந்து நின்றார். அடியில் மறைந்து வந்து அவரது காலை இந்தக் கந்தருவன் கடித்து இழுத்தான். முனிவர் உணர்ந்தார், விதலையாய்ப் பரிகாசம் செய்த இவனை முதலை ஆகும்படி சபித்தார். அவ்வாறே நெடிய முதலையாயினான். நெடுங்காலமாக அந்த மடுவில் அது கிடந்து வருங்கால் ஒரு நாள் பெரிய மதயானை ஒன்று அங்கே நீர் அருந்த வந்தது. அகத்திய முனிவரது சாபத்தினால் வாரணம் ஆன அது நீருள் இறங்கவே அதன் காலை இந்த முதலை பிடித்துக் கொண்டது. இரண்டும் நெடிது போராடியது. முடிவில் யாதும் முடியாமையால் யானை தளர்ந்து ஆதி மூலமே! என்று ஓலமிட்டது. திருமால் விரைந்து வந்து சக்கரத்தை வீசி முதலையைக் கொன்று யானையைக் காத்தருளினார்.

"கடுத்த கராம் கதுவ நிமிர் கையெடுத்து மெய்கலங்கி
எடுத்ததொரு வாரணம் அழைப்ப நீயோ அன்று ஏனென்றாய்!"

என முன்னம் * வந்துள்ளதும் இங்கே சிந்திக்க உரியது.

அன்று வாரணம் காக்க வந்த அவனே இன்று தேவரைக் காக்க வந்துள்ளான். பண்டு சாபம் நீங்கி அந்த இரண்டும் அவனால் நன்மை அடைந்தன, தெய்வத்தை மறந்து போகக் களிப்பில் செருக்கி நின்ற அமரரும் அரக்கரும் இன்று இவனால் இடரும் பாவமும் நீங்கி ஒருங்கே உய்தி பெறுவர் என்னும் உண்மை இங்கே நன்கு உய்த்துணர வந்தது.

சீவ கோடிகளுக்கு எவ்வழியும் இரங்கி யாண்டும் செவ்வையாகக் காத்தல் புரியும் அந்தக் கருணைக் கடவுளே வில் ஏந்தி

---

* இந்நூல் பக்கம் 1634, வரி 8 பார்க்க.

ஈண்டு வந்துள்ளது என இந்த ஆண்டகை இங்ஙனம் உணர்த்தியருளினன்

அமரர் குடியைக் காக்க வந்தவன் என்றது அரக்கர் குலத்தை அடியோடு அழிக்க வந்துள்ளான் என்பதை விளக்கி நின்றது. காத்தலும் அழித்தலும் கண்காண வந்தன.

முதலையைக் கொன்றால் ஒழிய யானையைக் காக்க இயலாது, அரக்கரை அழித்தால் அன்றி அமரரைக் காக்க முடியாது இந்த முடிவை அவன் சிந்தனை செய்து தெளிந்து கொள்ளும்படி இச் சுந்தரன் அதி விநயமாய் மொழிந்து நின்றான்

பாதச்ற கடவுளே இராமன் ஆய் ஈங்கு வந்துள்ளான் என்று அளவு வரைந்து சொன்னவன் பின்பு பேரளவில் பேச நேர்ந்தான். சிருட்டி திதி சங்காரம் என்னும் மூன்று தொழில்களைச் செய்து வருகிற மும்மூர்த்திகளுக்கும் மேலான மூல முதலே இந்தக் கோலம் கொண்டு வந்துள்ளது என்று குறித்தருளினன்.

மூலமும் நடுவும் ஈறும் இல்லது என்றது பரப்பிரமத்தின் எல்லை தெரிய வந்தது ஆதி மத்தியாந்த ரகிதன், கால தேச வஸ்து பரிச்சேத ரகிதன் என வேத மொழி வேதங்கள் பிரபந்தத்தை மருமமாகக் குறித்து வரும் தொடர் மொழிகள் ஈண்டு அழகிய இனிய தமிழ் மொழிகளாய் வெளியேறி வந்துள்ளன.

அநாதி நித்தியன் ஆதலால் காலமும் கணக்கும் நீத்த காரணன் என இறைவனது பரிபூரண நிலையைக் கருதியுணர வுரைத்தான் உரை உணர்வு முதலிய எல்லைகளை எல்லாம் கடந்துள்ள பரம்பொருள் கடவுள் என நின்றது

சூலம் சிவபெருமான் படை.
திகிரி திருமால் ஆயுதம்.
கரகம் பிரமன் உடையது.

என்றும் தங்கள் கைகளிலுள்ள இந்தத் திவ்விய அடையாளங்களைத் துறந்துவிட்டு அந்த மூன்று மூர்த்திகளும் ஒருருவுமாய் மருவி வேறு போர் பூண்டு ஒரு வில்லை ஏந்தி ஈண்டு வந்துள்ளது என வரவு நிலை தெரிய விளக்கினன்

ஆலமும்மலருமவெள்ளிபபொருப்புமவிட்டுஅயோத்திவந்தான்.

வெள்ளி மலையையும், தாமரை மலரையும், ஆலிலை பள்ளியையும் தள்ளி விட்டுப் பூவுலகில் அயோத்தி என்னும் திருநகரில் வந்து ஒரு சக்கரவர்த்தித் திருமகனாய் அவதரித்திருக்கிறான்.

தேவரும் அறியாத மூவராய் இருந்த அந்த மூலப்பொருள் யாவரும் அறிய ஓர் காவலன் மகனாய் ஈண்டு ஏன் வந்தது? எனின், அதனைத் தெளிவாகச் சொல்லுகிறேன் அறிவோடு கேள்! என இறுதியில் பரிவோடு கூறினான்.

அறம் தலை நிறுத்தி என்றது கருமம் தலை சாய்ந்துள்ளது, அதனை நிலை நிறுத்த வந்துள்ளான் என நினைவுறுத்தினான். தீய காரியங்களைச் செய்கின்ற பாவகாரிகளை நீறாக்கி நீக்கி நல்லோர்களை எவ்வழியும் காத்து எல்லாரும் நீதி நெறிகளில் யாதும் தவறுதல் யாண்டும் ஒழுகி ஒருமுடி தெளிவுறுத்தி நேரே செலுத்தி உலகத்தை உயர்த்தி அருள அவன் உதித்திருக்கிறான் என இராமாவதாரத்தின் குறிக்கோள்களைக் குறிப்பாக உணர்த்தினான்.

தீயோர் இறந்து உக நூறி

தீவினைகள் புரிகின்ற கொடியவர்கள் அடியோடு அழிந்து சுடுசாம்பலாய் ஒழிந்து போக அவன் பிறந்துள்ளான் என இங்ஙனம் வரைந்து கூறினான். தீயோர் ஆகிய அரக்கரின் அழிவு நிலையை இப்படி அழுத்தமாகச் சுட்டிச் சொல்லினான்.

தருமத்தை நிலை நிறுத்துதல், பாவிகளை அழித்து ஒழித்தல், நல்லவர்களைப் பாதுகாத்தல், யாவரையும் நீதி நெறியில் ஒழுகச் செய்தல் ஆகிய இந்தக் காரியங்களைச் செய்யவே கருணையினால் அவன் அவதரித்திருக்கிறான் என்றதனால் வந்துள்ளவனது கரும வீரமும் தரும சீரமையும் தெரிய வந்தன.

*யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத*
*அப்யுத்தாநம் அதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யகம்*
*பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்*
*தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே*
[கீதை 4,7-8]

"எப்பொழுது தருமம் தலை சாய்ந்து அதர்மம் எழுகிறதோ அப்பொழுது நான் பிறந்து கொள்ளுகிறேன். நல்லோரைப் பாதுகாக்கவும், தீயோரை அழித்து ஒழிக்கவும், அறத்தை நிலை நிறுத்தவும் யுகம் தோறும் நான் அவதரிக்கிறேன்" என அருச்சு-

னை நோக்கிக் கண்ணன் கூறியுள்ள இவ்வுண்மைகள் இங்கே கருதி யுணர வுரியன.

இந்த இரண்டு சுலோகங்களின் பொருள்கள் அறந்தலை நிறுத்தி என்னும் இக் கவியுள் சுவையாக மருவி வந்துள்ளன. கண்ணன் வாக்கும், அநுமான் வாசகமும் நுண்ணிய பொருள்களுடையன; எண்ணி யுணருந்தோறும் இன்பம் சுரக்கின்றன.

தன் பொற்பாதம் பற்றுவார் பிறப்பு அறுப்பான்

தன்பால் அன்பால் வழிபாடு செய்பவரது பிறவித் துன்பங்களை நீக்கிப் பேரின்ப அருள் வல்ல பெருமான் என இறுதியில் இவ்வாறு உறுதி கூறினன். அவனை வணங்கி வாழ்வதே அறிவுடைமையாம், பிணங்கி வீழ்வது பெரும் பேதைமையாம் என்பது குறிப்பு.

பேதையாய் இழிந்து அழியாதே, மேதையாய் உயர்ந்து கொள்ளுக என்று உணர்த்தியருளியுள்ள உணர்ச்சி நலம் ததும்ப உண்மை நிலைகளை இவ் வண்ணம் உரையாடி வந்தவன் முடிவில் தனது நிலைமையைத் தெளிவுறுத்தினான்.

அன்னவர்க்கு அடிமை செய்வேன் நாமமும் அநுமன் என்பேன்

தன்னுடைய சீரையும் பேரையும் இலங்கை வேந்தனிடம் இன்னபடி அநுமான் துலங்க உரைத்தான். அன்னவன் என்று சுட்டியது முன்னம் சொன்ன உண்மைகளை யெல்லாம் உன்னி ஓர்ந்து கொள்ள வந்தது. தன்னை அடிமை என்று தாழ்த்திச் சொன்னது, தனது ஆண்டவன் பெருமையைப் பிறர் உணர்ந்து உய்ய வேண்டி. அரிய ஊழியங்களைச் செய்கின்ற அடிமையே இவ்வளவு ஆற்றலும் பேச்சு வன்மையும் உடையனாயிருந்தால் அந்த ஆண்டவன் எவ்வளவு ஏற்றமுடையவனாயிருப்பான் என்று கருதியுணரின் மறுகி அடங்கி உறுதி நலங்களை ஒருவேளை அவன் அடையவுங் கூடுமாதலால் இங்ஙனம் இவன் இடை தெரிந்து மொழிந்தான்.

“கற்பரசியான சானகியைத் தேடி நான்கு திசைகளிலும் சேனைகள் சென்றிருக்கின்றன, தென் திசைக்கு வந்த படைகளுக்கு அங்கதப் பெருமான் தலைவன், வாலி மன்னனுடைய அருமை மகனை அந்த வீரன் ஏவிய தூதன் நான். களவுபோன பொருள் ஈண்டு உளது என்னும் உளவு தெரிந்தமையால் நான்

ஒருவனே தனியே இங்கு நாடி வந்தேன்" என இராவணனை நோக்கி அனுமான் இங்ஙனம் கூறி முடித்தான்.

அவனுடைய உள்ளத்தைக் கவரும் விரகோடு ஒரு சொல்லைச் சொல்லி முடிக்கவே அவன் வியந்து விழைந்து பேச நேர்ந்தான்.

என்றலும் இலங்கை வேந்தன் எயிற்றினம் எழிலி நாப்பண்
மின்திரிந்து என்ன நக்கு வாலிசேய் விடுத்த தூத
வன்திறலாய வாலி வலியனோ கொல்? அரசின் வாழ்க்கை
நன்றுகொல் என்னக் கோநெடு மாயாசன் தூதன் நக்கான்

இராவணனும் அனுமானும் இங்கே சிரித்திருக்கும் சிரிப்புகளைக் குறிப்பாகக் கூர்ந்து பார்த்து நாமும் சிரித்து நிற்கிறோம். அவன் நகைத்தது என்? இவன் நகைத்தது எதை நோக்கி? நாம் நகைப்பது எதற்கு? நகை வகைகள் தொகையாய் வந்துள்ளன.

இராமனுடைய அருமை பெருமைகளைக் குறித்து அனுமான் அதி மதுரமாய் விரித்து உரைத்து வந்தான். வேதமுதல் காரண வித்தகன், ஆதிமூலப் பொருள், மூலமும் நடுவும் ஈறும் இல்லாதவன், காலமும் கணக்கும் நீத்த காரணன், சூலமும் திகிரியும் கரகமும் துறந்து ஒரு வில்லை ஏந்தியுள்ளவன், ஆலமும் மலரும் வெள்ளி மலையும் விட்டு அயோத்தியில் தோன்றித் தருமத்தை நிலை நிறுத்தி உலகத்தைக் காத்தருள் ஏறிப் பூண்டு உலாவி வருகிறான் என இன்னவாறு மெய்யாடி வந்ததை யெல்லாம் இறுமாந்து கேட்டு அவன் யாதும் மதியாமல் அதி கம்பீரமாய் இருந்து வந்தான். ஆதலால் அவனுடைய உள்ளச் செருக்கை உடைத்தெறிய இடையே ஒரு சொல்லைப் படுத்தான். தென்பால் வந்த தானைக்கு மன்னன் வாலி தன் மகன் என்று சொன்னான். உடனே அவன் உறவுரிமையுடையவன் போல உவந்து பேசத் தொடங்கினான்.

வாலி வலியன் கோல்? அரசின் வாழ்க்கை நன்று கோல்?

என இராவணன் இங்ஙனம் வினவவே அனுமான் நகைத்தான். எம் பெருமானுடைய மகிமைகளை எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் செவி சாய்க்காமல் இறுமாப்போடு இருந்தவன் தன் பெருமையைக் குலைத்துச் சிறுமை செய்த அந்த வானர வீரனைக் குறித்துக் கூறிய உடனே சிரித்துத் தலை சாய்த்து உரிமை

யோடு பேச நேர்ந்தானே! என்று தான் வீசிய வித்தக வலையில் அவன் சிக்கிக் கொண்டதை நினைந்து இந்த மேதை உவந்து சிரித்தான்.

"என்னுடைய அருமை நண்பன் மகன் வலிய தூதனோ நீ!" என்று உரிமை யுடையவனாய உறவு கொண்டாடி இகழ்ச்சியும் இடை மிடைந்து தோன்ற இனிது நகைத்தான். பல்லுகள் வெளியே தோன்ற அந்தச் சிரிப்பு பெரிதாய் எழுந்தது ஆதலால் உவமையால் விளக்கினார்.

கரிய பெரிய உருவத்தனை அவன் எயிறுகள் இலங்கச் சிரித்தது மேகத்தினிடையே மின்னல் வீசியது போல் இருந்தது. எழிலி = மேகம். நாப்பண் = நடு.

இப்படிப் பெருஞ் சிரிப்புச் சிரித்த இராவணனை நோக்கி அனுமான் குறுஞ் சிரிப்போடு கூறிய மொழிகள் கூரிய பகழி களாய் நேரே எழுந்தன.

> அஞ்சலை அரக்க! பார்விட்டு அந்தரம் அடைந்தான் அன்றே
> வெஞ்சின வாலி மீளான், வாலும்போய் விளிந்தது அன்றே
> அஞ்சன மேனியான் தன் அடுகணை ஒன்றால் மாழ்கி
> துஞ்சினன் எங்கள் வேந்தன் சூரியன் தோன்றல் என்றான்

"வாலி சேமமா?" என்று விசாரித்த இராவணனுக்கு மாருதி இவ்வாறு மறுமொழி கூறியுள்ளான். பதிலாக வந்திருக்கிற இந்த வார்த்தைகள் எவ்வளவு வசைகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றன! எத்துணை வினயங்கள் விரவி நிற்கின்றன! உய்த்துணர வேண்டும்.

"அரக்கர் அரசே! பயப்பட வேண்டாம், வாலி செத்துப் போனான், அரிய போர் வீரனான அவன் இனி இங்கே திரும்பி வரவே மாட்டான், அந்த வாலும் அவனோடேயே போய்த் தொலைந்தது, அதுவும் ஈண்டு மீண்டு வராது; யாரும் வெல்ல முடியாத அந்த வல்லாளன் எப்படி இறந்தான்? என்று அறிந்து கொள்ள விரும்புகிறீர்களா? அப்படியானால் அவ்வுண்மையைத் தெளிவாகச் சொல்லுகின்றேன்; எங்களுடைய ஆண்டவன் எய்த ஒரே பாணத்தால் அவன் மாண்டு விழுந்தான்; இப்பொழுது எங்கள் குலத்துக்குத் தலைவராயிருப்பவர் சுக்கிரீவ மகா ராஜாவே" என இப்படிக் குறிப்போடு தொடுத்து உரைத்திருக்கிறான். பேச்சின் எச்சுகள் காட்சிகளாய் வந்தன.

கிண்டலும் கேலியும் பரிகாசங்களும் உள்ளே நிறைந்திருந்தாலும் உரைகள் யாவும் வெளியே இனிய சுவைகள் தோய்ந்து அரிய துறைகள் வாய்ந்து வந்திருக்கின்றன.

அஞ்சலை! என்று முதலில் தொடங்கியது வாலியின் பெயரைக் கேட்டவுடனே நெஞ்சம் கலங்கி அஞ்சி அலமந்து வந்துள்ளவன் ஆதலால் அவ்வாறு இனி நீ அஞ்ச வேண்டியதில்லை; தைரியமாயிரு என நேரே நெஞ்சம் தேறும்படியாக ஆறுதல் கூறி ஆற்றியருளினன். அவன் அஞ்சி நின்ற நிலையை அயலே காண வருகிறோம்.

தறை யடித்தது போல தீராத் தகைய இத் திசைகள் தாங்கும்
கறை யடிக்கு அழிவு செய்த கண்டகன் நெஞ்சம் உன்றன்
நிறையடிக் கோல வாலின் நிலைமையை உன்னுந் தோறும்
பறையடிக் கின்ற அந்தப் பயம் அறப் பறந்த தன்றே
(வாலிவதை, 143)

வாலியின் வாலை நினைந்த போதெல்லாம் இராவணன் நெஞ்சம் பறையடித்திருந்தது, அந்தப் பயம் இன்று பறந்து போயதே! என வாலி இறந்தபோது அங்கதன் இங்ஙனம் அழுதிருக்கிறான். வீர மகன் கூறியழுதது வெற்றி மணம் கமழ்ந்துளது.

இவ்வாறு அஞ்சியிருந்த அந்த நிலையைச் சுட்டிக்காட்டி அஞ்சலை! என நெஞ்சம் தேற்றினன். யாண்டும் அஞ்சாத்போர் வீரன் என்னத் தன்னை நீண்ட மதிப்போடு நினைந்து இறுமாந்து வருகிற இராவணனை கண்டு அஞ்சனை சேய அந்த அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுத்து இகழ்ந்து தாழ்த்தியிருக்கும் விநயம் வியந்து காண வந்தது.

அரக்க! என்றது அலட்சியத்தைக் குறித்தது. உள்ளத்தில் கருதியுள்ள இகழ்ச்சிநிலை உலகம் அறிய உரையில் துள்ளி வந்தது.

தேவர்களும் ஏவல் செய்ய மூவுலகங்களையும் ஏகபோகமாய் ஆளுகின்ற சக்கரவர்த்தியைப் பார்த்து நேரே இப்படிப் பேசியிருப்பது இவனது உக்கிர வீர நிலையை உணர்த்துகின்றது.

தங்கள் சாதித் தலைவன் கையில் அடிபட்டு அவமானம் அடைந்துள்ளமையால் அந்தக் குல வீரரோடு எதிரியின் குலத்தை எள்ளி இகழ்ந்துள்ளான் ஆதலால் அரக்க! என இங்ஙனம் இறக்கிப் பேசினன்.

அமரர் முதலாக உலகிலுள்ள எல்லாச் சாதிகளையும் அடக்கி ஆளுகின்றேம் என்னும் அந்த இராட்சச அகங்காரத்தையும் சாதித் திமிரையும் ஈங்கு அழிந்து ஒழிக்க உரைகள் தெளிந்து வந்தன.

அந்தரம் அடைந்தான் என்றதனால் மீண்டு ஈண்டு வந்து சேருவான் என அவன் எண்ணவும் கூடும், விண்ணுலகம் முதலாக எல்லா இடங்களுக்கும் நாளும் போய வாலி மீளும் இயல்பினன் ஆதலால் அந்த வழக்கத்தை மறந்து விடும்படி மறுத்து மொழிந்தான்.

வெருசின வாலி மீளான் என்றது அவன் மீண்டு வந்து விடுவானோ? என இராவணன் நெஞ்சம் அஞ்சாமல் ஆறுதல் அடைந்திருக்கும்படி கூறியபடியாம். சினத்தைச் சுட்டிச் சொன்னது அவனது சீற்றத்தின் ஏற்றத்தை எண்ணி. அசகாயசூரன், அருந்திறலாளன், சினந்து சீறுமேல் எதிரிகளை எளிதாக வெல்ல வல்லவன் என்னும் மேன்மைகள் தெரிய வந்தன. அவனுடைய சினத்தை அனுமான் பல முறையும் நேரே அறிந்திருக்கிறான் ஆதலால் உரையூடு அது முந்தி எழுந்தது. கண்ட அனுபவம் முண்டி முன் வருகிறது.

வாலும் போய விளிந்தது அன்றே.

இதிலேதான் பெரிய கேலி நுழைந்துள்ளது.

நயமாகப் பரிகாசம் செய்வதிலேயும் அனுமான் அதி சமர்த்தன் என்பது இதனால் தெரிய வருகின்றது.

உன்னை இறுக்கக் கட்டி எட்டுத் திசைகளிலும் இழுத்து அடித்துப் பட்டபாடுபடுத்தி முடிவில் கிட்கிந்தையில் கொண்டு வந்து கீழே அவிழ்த்துவிட்ட அந்த மேலான வீர வால் என்பான் உம்மைக் கொடுத்து அதன் தன்மையை விளக்கினன்.

வாலி மீளான் என்றதோடு அமையாமல் வாலும் போயது என மேலும் விரித்துச் சொன்னது சிரித்து நோக்க வந்தது.

அன்றே என்றது வாலி இறந்த அப்பொழுதே அந்த வாலும் அழிந்து ஒழிந்தது என அதன் அழிவு நிலையைத் தெளிந்து கொள்ள. விளிதல் = அழிதல்.

**அஞ்சன மேனியான்தன் அடுகணை ஒன்றால் மாழ்கித் துஞ்சினன்.**

வாலி எப்படிச் செத்தான்? என்பதை இப்படி விளக்கினன். நோய் முதலிய காரணங்களால் அவன் சாகவில்லை, சாவு ஏவு கூர் வாளியால் எய்தியது என்ச் செய்தியைத் தெரியச் செய்தான். அஞ்சன மேனியான் என இராமனை இங்கே இங்ஙனம் குறித்தது தனது ஆண்டவனுடைய எழில் நிலையை எதிரி தெளிவுற. அந்த அழகிய திருவுருவை நெடிது கண்டு களித்தவன் ஆதலால் அக் காட்சி பேச்சில் மாட்சிமையாய் எழுந்தது.

பசிய கோலத் திருமேனியனை இராமனைக் கரிய கோலத் திருமேனியனை இராவணன் கருதி உணர்ந்து உறுதி காணச் செந்நிறத் திருமேனியனை அனுமான் இன்னவாறு இனிது கூறினான்.

அடுகணை என இராம பாணத்தை இங்ஙனம் வினைத்தொகை மொழியால் குறித்த குறிப்பு நினைந்துணர வந்தது.

உன்னை வாலால் கட்டி வென்றவனை எளிதே கொன்ற கணை உன்னையும் கொல்ல உருத்து நிற்கிறது என உரிமையும் நிலைமையும் உய்த்துணர வுரைத்தான்.

தரும நீதி தவறிக் கருவம் கொண்டுள்ளவர்களை யெல்லாம் கருவறுக்க வந்துள்ளது என இராம பாணத்தின் கரும நீர்மையைக் காட்டியருளினன் "நீ நாட்டியுள்ள வலி முதலியன யாவும் நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு நீக்க நின்றான்" என முன்னம் நேரே கூறியதை ஈண்டு வேறொரு வகையால் விழி தெரிய வுரைத்து அழிவு நிலையைத் தெளிவுறுத்தினன்.

இவ்வாறு இகழ்ச்சிக் குறிப்போடு சுட்டிச் சொன்ன உரைகளையெல்லாம் ஒரு சிறிதும் கவனியாமல் மறுபடியும் இராவணன் அனுமானை இறுமாந்து நோக்கி எதிரே சில கேள்விகளை வீசினன்.

## எதிர் வினவியது

என்ன காரணத்தினுலே இராமன் வாலிமேல் அம்பு தொடுத்தான்? எதற்காகக் கொன்றான்? அந்தக் கொலைகாரன் இப்பொழுது எங்கே இருக்கிறான்? அவனுடைய மனைவியை அங்கதனை தேடி அலைவதற்குக்காரணம் என்ன? இந்தநிலைமைகளை எல்லாம் தெளிவாகச் சொல் என்று இராவணன் தெளித்துக் கேட்டான்.

தன்னுடைய தந்தையைக் கொன்றவனை வெறுத்து வெந்துயர் செய்யாமல் அங்கதன் எங்ஙனம் இராமனுக்கு இனிய துணைவனாய் அரிய உதவிகள் செய்ய நேர்ந்தான்? என்று அவன் பெரிய அதிசயமடைந்துள்ளமையைக் கேள்விகள் தெளிவாக்கியுள்ளன. கரும விளைவுகள் மருமங்களாயிருத்தலால் அவன் மறுகி வினவினன்.

வெளியே வருகிற மொழிகள் உள்ளத்தில் கருதியுள்ள நிலைகளையெல்லாம் ஒளியாமல் உணர்த்தி விடுகின்றன.

இலங்காதிபதி கூறிய அவ்வுரைகளைக் கேட்டதும் நிகழ்ந்துள்ள வரலாறுகளையெல்லாம் அனுமான் முறையே சொன்னன்.

## மாருதி கூறியது

தரும மூர்த்தியான இராமபிரான் தமது அருமைத் தேவியைத் தேடிவரும் பொழுது இடையே கிட்கிந்தையை அடைந்தார். எங்கள் சாதித் தலைவனாகிய சுக்கிரீவனைக் கண்டார். நட்புக் கொண்டார். பகையாய் நின்ற வாலியைக் கொன்று தொலைத்து அரசுரிமையை நண்பனுக்கு வழங்கி அயலே தம்பியோடு அங்கே நான்கு மாதங்கள் தங்கியிருந்தார். கார்காலம் கழிந்ததும் ஆவியனைய அவரது தேவியைத் தேடி வரும்படி எங்கள் அரசன் சேனைகளை ஏவியருளினர். நான்கு திசைகளை நோக்கிச் சென்றவாகளுள் நாங்கள் தென்பால் வந்துள்ளோம். என் துணைவர்களையெல்லாம் அயலே நிறுத்திவிட்டு நான் மாத்திரம் தனியே இங்கே இலங்கைக்கு வந்தேன், இப்பொழுது உன்பால் வந்து நிற்கிறேன், வந்துள்ள வரவுகளையெல்லாம் முந்துற வுணர்ந்து சிந்தை தெளிந்து உய்ந்து கொள் என அனுமான் இங்ஙனம் உரைத்து நின்ருன்.

## பரிந்து இகழ்ந்தது

இராமதூதன் கூறிய அவ் வரலாறுகளைக் கேட்டதும் இராவணன் மிகவும் அவமதிப்போடு இகழ்ந்து நோக்கி வருந்தி மொழிந்தான். அம்மொழிகள் வாலியின்பால் அனுதாபமும் கேலியும் கலந்து கிளர்ந்து வந்தன.

உங்குலத் தலைவன் தன்னேடு ஒப்பிலா உயர்ச்சி யோனை
வெங்கொலை அம்பிற் கொன்ற குற்றத்தாட் பொழில் மேற்கொண்டோ

எங்குலப் புறுநும் சீர்த்தி நும்மொடும் இயைந்தது என்றால்
மங்குலிற் பொலிந்த ஞாலம் மாதுமை யுடைத்து மாதோ! (1)

தம்முனைக் கொல்வித்து அன்றே கொன்றவற்கு அன்பு சான்ற
உம்மினத் தலைவன் ஏவ யாது எமக்கு உணர்த்தல் உற்றது
எம்முனைத் தூது வந்தாய்! இகல்புரி தன்மை என்னை?
நும்மினைக் கொல்லாம் நெஞ்சம் அஞ்சலை நுவறி என்றான் (2)

இராவணன் அனுமானை நோக்கி இவ்வாறு கூறியிருக்கிறான். உரைகளிலிருந்து அவனுடைய உணர்வு நிலைகளை ஓர்ந்து கொள்ளுகிறோம். மாண் வீரங்களையும் மரியாதைகளையும் தெரிய உணர்த்தி அரிய திறனுடன் ஆரவாரமாய்ப் பேசியிருத்தலால் வாரம் பற்றுப் பல வார்த்தைகள் ஆர்த்து வந்திருக்கின்றன.

"உங்கள் குலத் தலைவன், யாரும் நிகரில்லாத அதிசய நிலையினன், அசகாய சூரன், அத்தகைய உத்தம வீரனை அநியாயமாய்ப் படுகொலை செய்த கொடியவனோடு உறவு கொண்டாடி அவனுக்கு ஊழியமும் செய்ய நேர்ந்தீர்கள் என்றால் உங்களுக்கு மானம் மரியாதை ஏதேனும் உள்ளதா? இவ்வளவு இழி நிலையில் இழிந்துள்ள உங்கள் சாதியை உலகம் இகழ்ந்து வெறுக்காமல் புகழ்ந்து போற்றுமானால் அது பெரிய மூடத்தனமேயாம். தகுதி தெரியாத மடப்பய உலகத்தில் மடையர்களும் மதிப்படைய நேர்கின்றனர். உடன் பிறந்த அண்ணனைக் கொல்லச் செய்து, அங்ஙனம் கொன்ற கொலைகாரனோடு நட்புக் கொண்டு தலைமையானவன் போல் நிலவி நிற்கிற அந்தச் சதிகாரனை சுக்கிரீவன் ஏவிய தூதனோ நீ! அவ் வஞ்சகச் சூதன் அஞ்சாமல் ஏவ நீ நெஞ்சம் துணிந்து இங்கே வந்திருக்கிறாய்! அவன் என்ன சொல்லி விட்டான்? ஒருவன் சொன்னதைச் சொல்ல வந்த நீ என்னுடைய நகரில் சண்டை செய்ய நேர்ந்தது ஏன்? அடாத அக்கிரமங்களைச் செய்திருக்கிறாய், இருந்தாலும் உன்னைக் கொல்லமாட்டேன், பயப்படாமல் நீ வந்த காரியத்தைச் சொல்" என இவ்வாறு நிருதர் பதி உறுதியோடு கேட்டான்.

அவனுடைய தீரமான வசனங்கள் இராச கம்பீரமாய் வீறு கொண்டு வெளி வந்துள்ளன. பல குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க நின்றன.

ஒப்பு இலா உயர்ச்சியோன்.

என வாலியை இப்படிக் குறித்திருக்கிறான்.

“ஒப்பு இலாதன உவமனில் இறந்தன”

என இறைவனுடைய திருவடிகளை மாணிக்கவாசகர் துதித்திருத்தல் போல் வாலியின் உயர்ச்சியை இராவணன் இங்கே மதித்துத் துதித்திருக்கிறான்.

உயர்வற உயர்ந்துள்ள அந்தப் பரம்பொருளின் கைலாச கிரியை வாரியெடுத்து அதிசய வீரன் என்று உலகம் எல்லாம் துதி செய்ய நின்ற தன்னை வாலால் கட்டி வென்ற வெற்றி வீரன் ஆதலால் வாலியை இராவணன் இவ்வாறு வழுத்தி நின்றான். நேரே கண்டு அனுபவித்தவன் ஆகையால் நெஞ்சம் உவந்து கூறினான்.

அறிவு திரு ஆற்றல் வீரம் முதலிய எந்த நிலையிலும் தனக்கு நிகரில்லாத தலைவனாய வாலி உயர்ந்து நின்றமையால் அவன் உயர்ச்சி நிலையை உலகம் அறிய இவ்வாறு இலங்காதிபதி உரைத்து நின்றான். தங்கள் இருவருக்கும் நேர்ந்துள்ள நட்புரிமையினால் புகழ்ந்து பேசிய பேச்சு அன்று இது; உண்மைநிலையை உவந்து கூறிய உறுதி மொழியே.

முன்னம் பகைமை பாராட்டியிருந்தாலும் பின்னர் தகைமை கண்டபொழுது உவகை கொண்டுள்ளமை நுண்மையாக நன்கு உணர வந்தது. பிறருடைய தகுதியை நடுவு நிலைமையோடு அளந்தறிந்து உளம் தெளிந்து சொல்வது உயர்ந்த பண்பாடாயுள்ளது.

சிறந்த குணங்கள் நிறைந்த அந்த உயர்ந்த வீரனை மறைந்து நின்று கொன்றதை அறிந்து கொண்டான் ஆதலால் அந்த நிலைமையை இகழ்ந்து வெறுத்து எள்ளி உரைத்தான்.

**வெங்கோலை** என்றது வாலியை இராமன் கொன்றுள்ள கொடுமையைக் கடுமையாகக் கடிந்து வந்தது. கொடிய கொலை பாதகம் என அதனைக் குறித்து வருந்தியுள்ளமையால் உரைகள் கொதித்தெழுந்தன.

தங்கள் அரசனை இப்படிக் கொடுமையாகக் கொன்று தொலைத்திருப்பவனை எதிர்த்து ஒழிக்காமல் அவனுக்கு அடிமைகளாய வானரங்கள் ஏவல் செய்ய நேர்ந்தனவே! இது எவ்வளவு கேவலம்? எத்தனை இழிவு? என இரங்கி இகழ்ந்திருக்கிறான்.

மானங் கெட்ட பேடிகளாயுள்ள உங்கள் வானர சாதிக்கு இனி மதிபபு உணடோ? உஙகளை எளளி இகழநது தள்ளாமல் உலகம் புகழநது சொலலுமானுல அது பெரிய மூடமே யாம.

மஙகுலில போலிநது ஞாலம் மாதுமை உடைதது.

உலகததை இபபடி இகழநது குறிததிருககிறுன.

மாதுமை = பேதைமை. மாதின தனமை எனனும் ஏது வான வநதது. ஆணமையுடன நினறு எதையும உணாநது முடிவு செயயாமல பொதுசனஙகள மடமை மணடி யுளளமை யால பேதை உலகம எனப பேச நோநதது.

உயாவை இழிவாகவும, இழிவை உயாவாகவும நலலதைத தீயதாகவும, தீயதை நலலதாகவும மருணடு கொணடு மையல மூணடியிருததலால வையக நிலைமையை மெய யறிவாளாகள இகழ நோநதனா. வாழகினற மககளின இழிவால வையம வையபபடடது

வானம மழை பொழிநதுவர வையம வளமசுரநது வருத லால மஙகுலின போலிநத ஞாலம என அதன வாழவுநிலை தெரிய வநதது மஙகுல = மேகம இநத அடைமொழியை இஙகே இடைமடுததது நிலைமையின புலமையை நினைநது தெளிய

தஙகள குலததலைவனைக கொலை செயதவனோடு கூடி நிலை மாறி நினறு ஊழியம புரிகிற மாககள குடியிருககும நாடடில இனி மழையும பெயயுமா? அபபடிப பெயயுமானுல, வெஙகோலை புரிநதவாககு மஙகுலும உதவி செயதபடியாம, ஆகவே ஞாலம போல அதுவும பேதைமையுடையதாய பேதைகளால இகழநது வெறுககபபடும எனபது குறிபபு

உனனத நிலையில வீறறிருககிற உயாநத சககரவாததி ஆத லால உலக நிலைகளை நோககி உளளம பரிநது எளளல இழிவுகளை இகழநது இனனவாறு இணைநது பேசினுன.

இமிழதிரைப பரவை ஞாலம் ஏழைமை உடைதது மாதோ! என முனனம *கவிக கூறறிய வநதிருபபதையும, ஈணடு இராவணன வாய மொழியாக வநதுளளதையும இணைதது எணண

* இநநூல பககம 1213, வரி 5 பாாகக.

வேண்டும். கடல் சூழ்ந்தது என அங்கே வந்தது; மேகம் தாழ்ந்தது என இங்கே நின்றது.

நம் கவிஞர் பிரான் உலக நிலையைக் குறித்துக் கருதியுள்ளது அங்கங்கே துள்ளி வெளிவருகிறது. தெளிவும் தெருளும் இன்றி இளிவும் மருளுமாக ஞாலம் இயங்கி வருவதை நினைந்து நினைந்து இனைந்து இனைந்து இரங்கியிருக்கிறார். அந்த இரும்புகள் உரைக் குறிப்புகளால் உணர வந்துள்ளன. தகுந்த இடங்களில் தக்க பாத்திரங்களின் வாயிலாகத் தம்முடைய கருத்துக்களை வெளிப் படுத்தி வருவது வித்தக விநோதங்களாய் விளங்கி நிற்கின்றன.

உயர்ந்த அறிவுலகத்தில் உலாவி வருகிற சிறந்த மேதாவி ஆதலால் இந்த வெறிப்புலகத்தில் நிகழுகிற இழிவுகளைக் காணும் போது உள்ளம் வெறுத்து இரங்கி யிருக்கிறார். அந்தப் பரிதாப நிலைகள் உரைகளில் உருவாகி வந்திருக்கின்றன.

"How weary, stale, flat and unprofitable
Seem to me all the uses of this world,
Fie! it is an unweeded garden" (Hamlet, 1-2)

"இந்த உலக வழக்கங்கள் மிகவும் இழிவாகவும் ஈனமாகவும் சுவைகேடாகவும் வீணாகவும் எனக்குத் தோன்றுகின்றன. சீ! களையெடாத காடுபோல எங்கும் மடமைகள் நிறைந்திருக்கின்றன" என டேனமார்க தேசத்து அரசகுமாரன் இவ்வாறு உலகநிலையை வெறுத்து உள்ளம் கடுத்துக் கூறியிருக்கிறான்.

"Foolery governs the world" (Selden)

"மடமை உலகத்தை ஆளுகிறது" என செல்டென் என்னும் மேல்நாட்டு அறிஞர் ஞாலநிலையை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

"This world is all a fleeting show,
For man's illusion given" (Thomas Moore)

"இந்த உலகம் மனிதனுடைய மையல் மயக்கங்களுக்காகத் தோன்றிய மாயக் காட்சிகள் நிறைந்தது" என தாமஸ்மூர் என்னும் பெரியார் இவ்வாறு கூறியுள்ளார்.

"The world was sad" (Campbell)

"உலகம் துயரம் மிக வுடையது. என காம்பெல் என்பவர் இப்படி உரைத்திருக்கிறார். உரைக் குறிப்புகள் உணரவுரியன.

பொதுவாக உலக நிலைகளைக் குறித்துப் பல நாடுகளிலு முள்ள அறிஞர்கள் எவ்வாறு கருதியுள்ளனர் என்பதை இவற்றால் செவ்வையாகத் தெரிந்து கொள்ளுகிறோம்.

பலவகையான பிழைபாடுகளை மக்கள் பழகி வந்திருத்தலால் அந்த இழி பழக்கங்கள் தெளிவுடைய பெரியோர்களுக்கு அருவருப்புகளாய்த் தோன்றுகின்றன. தோன்றவே அம்மக்கள் நிறைந்துள்ள உலகம் மருளும் மையலும் உடையதென்ப பரிவு கூர்ந்து மறுகி அறிவு கூற நேர்ந்தனர்.

"Be wisely worldly, be not worldly wise" (Quarles)

"உலக நிலையை உணர்ந்து நில், அதன் போக்கில் இழிந்து போகாதே" என்னும் இது இங்கே உணர வுரியது.

தம் குல விரோதியான இராமனுக்குக் குடியடிமைகளாய் வானரங்கள் கூடியிருப்பது முழுமூடம் என இழிவுரையாடி இகழ்ந்து மேலும் இராவணன் பேசலானான்.

கொடிய சதியாலோசனை செய்து தன் தமையனைக் கொன்று அரசைக் கவர்ந்து கொண்ட அந்தக் குரங்கன் என்ன சொல்லி உன்னை இங்கே அனுப்பினான், அதனை விரைந்து சொல் என்று இலங்கைவேந்தன் கேட்கவே அனுமான் விளங்க உரைத்தான். அவனுடைய சொல்லை ஆர்ந்து கொண்டு பதிலை ஒல்லையில் கொடுத்தான்.

நெஞ்சம் அஞ்சலை நுவறி என்று அவன் முடிவில் சொன்னதை நினைந்து அஞ்சனை சேய் கொஞ்சம் புன்னகை செய்து "மன்னா மன்னவா! நான் அஞ்சவில்லை, அது இன்னது என்று எனக்குத் தெரியவும் தெரியாது, நான் தூதனாகத் தெரிந்து வந்துள்ளதைச் சொல்லுகிறேன் நீங்கள் யாதும் அஞ்சாமல் இருந்து நெஞ்சம் துணிந்து கேட்க வேண்டும்" என இங்ஙனம் வேண்டிக்கொண்டு மீண்டு பேச நேர்ண்டான்.

மேலே இராவணன் கூறியதில் ஓரளவு உண்மை யிருப்பினும் மித்திர பேதங்கள் நிறைந்திருக்கின்றன. "உங்கள் குல விரோதியோடு நீங்கள் கூடலாமா? அவனுக்குக் குடியடிமைகளாய் நின்று ஏவல் செய்யலாமா? உங்களுக்கு மானம் கிடையாதா? மரியாதை இல்லையா? பழி இழிவுகளை யுணராத முழு மடையர்கள் என்று உலகம் இகழுவதையும் நினைந்து பாராமல்

நெடு மூடர்களாய் நிமிர்ந்து நிற்கின்றீர்களே!" என இன்னவாறு அனுமானுடைய உள்ளத்தைக் கலித்து இராமனது உறவை நீங்கி விரைவில் விலகும்படி விரகோடு பேசிய உரைகளை உய்த்துணர்ந்து உள்ளே நகைத்து எள்ளலை மறைத்து மாருதி இதமாக உறுதி நலங்களை உரைக்க நேர்ந்தான்.

## நீதிகள் போதித்தது

பொல்லாத செருக்குகள் நிறைந்திருந்தாலும் வேதம் முதலிய அரியகலைகளையெல்லாம் நன்கு ஓதியுணர்ந்த சிறந்தமேதை ஆதலால் நீதி நெறிகளை நேரே சொல்லிப் பார்ப்போம், ஒருவேளை நெஞ்சம் திருந்தி நல்ல வழிக்கு வந்தாலும் வந்தருளுவான் என்று சிந்தை துணிந்து இந்த மதிமான் அந்த அரக்கர்பதிக்கு இனிய பல தரும நீதிகளை உரிமையோடு உரைத்தருளினன். சில அயலே வருகின்றன.

வறிது வீழ்த்தனை வாழ்க்கையை மன்னறம்
சிறிதும் நோக்கலை தீமை திருத்தினை
இறுதி யுற்றுளது ஆயினும் இன்னுமோர்
உறுதி கேட்டி உயிர்நெடிது ஓம்புவாய் (1)

தீமை நன்மையைத் தீர்த்தல் ஒல்லாதெனும்
வாய்மை நீக்கினை மாதவத்தால் வந்த
தூய்மை தூயவள் தன்மையில் தோன்றிய
நோய்மையால் துடைக்கின்றனை நோக்கலாய்! (2)

திறம் திறம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்தம் மதியின் மயங்கினோர்
இறந்திறந்து இழிந்து ஏறுவதே யலால்
அறந்திறம்பினர் ஆருளர் ஆயினோர்? (3)

நாமத் தாழ்கடல் ஞாலத்து அவிந்தவர்
ஏமத்தால் மறைந்தார், இளமாதர் பால்
காமத்தால் இறந்தார் களி வண்டுறை
தாமத் தாரினர் எண்ணினும் சாலவரோ? (4)

பொருளும் காமமும் என்றிவை போக்கிவேறு
இருளுண் டாமென எண்ணலர், ஏதலும்
அருளும் காதலில் தீதலும் அல்லதோர்
தெருளுண் டாமென எண்ணலர் சீரியோர் (5)

இசசைத தனமையி னிறபிறா இலலினை
நசசி நாளும நகையுற நாணிலன
பசசை மேனி புலாநது பழிபடூஉம
கொசசை ஆணமையும சீரமையில கூடுமோ? (6)

ஓத நீருலகு ஆணடவா உனதுணைப
போத நீதியா ஆருளா? போயினா
வேத நீதி விதிவழிச செலவரும
காதலநீ அறததுஎலலை கடததியோ? (7)

வெறுப புணடாய் ஒருததியை வேணடினால
மறுப்புண டாயபின வாழகினற வாழவினின
உறுப்புண டாயநடு ஓஙகிய நாசியை
அறுப்புண டாலஅது அழகென லாகுமே (8)

பாரைஞ் ஞூறுவ றபல பொறபுயம
ஈரைஞ் ஞூறு தலையுள எனனினும
ஊரைஞ் ஞூறுங கடுஙகனல உடபொதி
சீரைஞ் ஞூறவை சேமம செலுததுமோ? (9)

புரமபிழைப்பரும தீப்புகப பொஙகியோன
நரமபிழைததன பாடலின நலகிய
வரம பிழைககும மறைபிழை யாதவன
சரம பிழைககும எனறு எணணுதல சாலுமோ? (10)

பிறநதுளார பிறவாத பெரும பதம
சிறநதுளார மறறும தேவாககும தேவராய
இறநதுளார பிறா யாரும இராமனை
மறநதுளார உளராகிலா வாயமையால (11)

ஆதலாலதன அருமபெறற செலவமும
ஓதுபலகிளையும உயிரும பெறச
சீதையைத தருகென றெனச செபபினன
சோதியான மகன நிறகெனச சொலலினன (12)

நீதி போதனைகளாய வநதுளள இநதப் பாசுரங்களை ஊன்றிப் படிதது உரைகளின பொருள் நிலைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்பவர் அரியபல உண்மைகளைத தோந்து தெளிந்து கொள்ளுவர். கருதிக காணுகினற அளவு கருத்துககள் தெளிவாய்க் காட்சிக்கு வருகின்றன. ஒலிததட்டில் ஊசி ஊன்றிய பொழுது செவிக்கு இன்பமான நாதம எழுவது போல் உள்ளம் நல்ல

கவிதத்தட்டில் கவிந்து ஊன்றிய போது அங்கே அறிவுக்கு இனிய சுவைகளும் இன்பங்களும் வெள்ளங்களாய்ப் பெருகி எழுகின்றன. தட்டும் ஊசியும் தனித்தனியே பிரிந்து கிடந்தால் ஒரு சொட்டு நாதமும் கேளாது, கவியில் உள்ளம் கவியாது நின்றால் அது அரியசுவைகளை இழந்து வறிய நவைகளில் உழந்து திரியும், கருத்தூன்றிப் படியாத படிப்பு விருத்தமாய் விளிந்து மடிகிறது. மடிவு ஒழியின் விடிவு வெளியாம்.

மொழிகளின் வழியே விழிகள் ஓடுகின்றன, பொருள்களிடையே அறிவு புகுந்து ஆராய்ந்து நாடிச் சாரங்களை நுகர்ந்து வருகின்றன. அரிய அறிவின் நுகர்வு இனிய அமிர்தின் நுகர்வாய் இன்பம் தருகின்றன.

## படிப்பு நிலை

கடலில் ஆழ்ந்து மூழ்குகின்றவன் அரிய முத்துக்களை எடுத்து வருகிறான்; கலைக் கடலினுள் அவ்வாறே ஆழ்ந்து தோய்ந்தவன் இனிய பொருள்களை எய்தி மகிழ்கின்றான். அவன் மூச்சை அடக்கி மூழ்குகின்றான்; இவன் மனத்தை ஒருமுகப்படுத்தி ஆழ்கின்றான். ஒருமுகமாய் நுணுகி ஆழ்கிற அறிவு பெருவரவாய்ப் பேரொளி பெறுகிறது.

The intellectual power, through words and things,
Went sounding on, a dim and perilous way [Wordsworth]

"சொல்லும் பொருளுமாகிய இருண்ட அபாயமான வழியே நல்ல அறிவு ஆழ்ந்து செல்லுகின்றது" என்னும் இது இங்கே கூர்ந்து ஓர்ந்து கொள்ள உரியது. மானச் சத்தி மருவி வளர்ந்தபோது அங்கே ஞானசித்தி பெருகி விளங்குகின்றது.

உணர்ச்சியோடு ஊன்றிப் படியாமையால் இக்காலப் படிப்புகள் கேலிக் கூத்துகளாய்க் காலித்தனங்களை விளைத்து வருகின்றன. போலிகளே பொங்கி வருதலால் உண்மையான புலமை ஒளிகளும் மங்கிப் புன்மைகளே எங்கும் புலையாடி நிற்கின்றன. காலப்போக்கு கடுங் கேடாயுள்ளது.

காலத்தைப் வீணே போக்கிக் கைப்பொருள் தனை அழித்துச்
சீலத்தைக் கெடுத்துச் சிந்தைத் தெளிவையும் சிதைத்து நீதி
மூலத்தை உணர்வோடு ஊறுகளில் மூண்டு வந்து
கேலித்தாள் கிளர்ந்து நிற்றல் கெடுகுறி யாகு மன்றே

அறிவின் சாரமில்லாதபடிப்பு வெறியின் கோரமாய் விரிந்து வருதலால் மனித சமுதாயத்துக்கு அதுகொடிய கேடாகின்றது.

Time waste,
Money waste,
Energy waste

என்ப பத்திரிகைப் படிப்புகளால் விளைந்து வரும் கேடுகளைக்குறித்து மேல்நாட்டுக் கலைஞர்கள் இங்ஙனம் கூறியுள்ளனர்.

"காலம், பொருள், மனச்சக்தி ஆகிய இம் மூன்றும் பத்திரிகைப் படிப்பால் வீணே பாழாகின்றன" என்று மேலே வந்துள்ள ஆங்கில வாக்கியங்கள் உணர்த்தியுள்ளமையால் உண்மைகளை ஊன்றி உணர்ந்து நன்மைகளை ஓர்ந்து கொள்ளுக.

இனிய சத்தான உணவு உடலுக்கு உறுதி தந்து அழகு செய்தல் போல உத்தமமான உணர்வு நலங்கள் உயிருக்குத் தெளிவு நல்கி ஒளி புரிந்தருளுகின்றது. புல்லிய நவைகளை எள்ளி ஒதுக்கி நல்ல சுவைகளை உள்ளி நுகர்ந்து உயர்ந்து கொள்ள வேண்டும்.

## உறுதி நிலைகளை உணர்த்தியது

அரிய கலை விநோதனான அனுமான் அதி விநயமாய் இராவணனுக்கு இனியநீதி முறைகளை நேரே கூறினன். போதனைகள் பரிவும் பண்பும் படிந்து அறிவு நலங்களைக் கொழித்து எழுந்தன.

"நிருதர்பதியே! உனது அரிய அரச வாழ்க்கையை வீணே பாழாக்கியுள்ளாய், உனக்கு முடிவுகாலம் நேர்ந்துள்ளது ஆயினும் எனக்குத் தெரிந்த சில உறுதி நலங்களை உரைக்கின்றேன், உள்ளம் திருந்தித் தெளிந்து கொண்டால் உனக்கும் உன் குலத்துக்கும் நல்லதாம். புண்ணியத்தைப் பாவம் ஒருபோதும் வெல்லாது என்பதை நீ எண்ணி உணர்ந்து கொள்ள வேண்டும். அறத்தின் இறுதி வாழ்நாட்கு இறுதி என்பது. சுருதி செய்துள்ள உறுதி. தீயும் அஞ்சத்தக்க தூய பதிவிரதையை நீ காதலித்து நிற்பது எவ்வளவு பாதகச் செயல்! அந்த நீச ஆசை உன் குலத்துக் கெல்லாம் நாசம் என்பதை நீ அறியவில்லையே! அருந்தவம் செய்து பெற்றுள்ள அரிய மேன்மைகள் எல்லாம் அடியோடு அழிந்து போக நீ விழைந்து நிற்கின்றாயே! காமத் தீமை

யினால் இழிந்து அழிந்து போனவர் பலர், அதனை நினைந்து பார். பொல்லாத காமம் புலை நிலைகளை விளைத்துக் குல நாசம் செய்து விடும். வேதம் முதலிய கலைகளையெல்லாம் நீ ஓதி உணர்ந்துள்ளாய்! உலகத்தை ஆண்ட அரசர்களுள் உன்னைப் போன்ற பெரிய அறிவாளிகள் யார் உளர்? வானமும் வையமும் வணங்க அரசு புரிகிற நீ மான உணர்ச்சியை இழந்து நிற்பது ஈனம் அல்லவா? தான் விரும்பி விழைந்த பெண் தன்னை வெறுத்து இகழ்ந்த பின் அந்த ஆண் மகன் உயிர் வாழ்ந்திருக்கலாமா? மானம் கெட்டு ஈனமாகப் பழிவாழ்வோடு இருப்பதினும் இறப்பது நல்லதே, அரிய படை வலியும் பெரிய ஆற்றலும் நிறைந்திருப்பதாக நீ நினைந்து செருக்கியுள்ளாய், உள்ளே தீயுருணடையை வைத்து மேலே ஆயிரம் சேலைகளைச் சுற்றிப் பொதிந்தாலும் அத்தனையும் எரிந்து சாம்பலாய் ஒழிந்து போகுமே, கற்புத் தீயான சீதையை இலங்கையுள் வைத்துள்ளாயே! கலங்காத உன் வலிகளும் அரக்கர் குலங்களும் அடியோடு அழிந்து போகும் என்பதை நீ உணர்ந்து கொள்ள வில்லையே! சிவபெருமானிடம் பெற்றுள்ள உனது வர பலங்கள் எல்லாம் இராமபிரானுடைய பாணங்களால் அழிந்து போகுமே, இவ்வுலகில் பிறந்துள்ள சீவ கோடிகளும் அவ் வுலகிலுள்ள தேவ கோடிகளும், பிறவி தீர்ந்து நித்திய முத்தியில் நிலைத்துள்ள தத்துவ தரிசிகளும் இராமனை நினைந்து நினைந்து உவந்துள்ளனரே, அவனை மறந்து மகிழ்ந்தவர் மண்ணிலும் விண்ணிலும் எண்ணிலும் இல்லையே, இந்த உண்மைகளையெல்லாம் ஓர்ந்து சிந்தித்து நீ தேர்ந்து தெளியவேண்டும் என்று உன்பால் அன்பால் புத்தி சொல்லிச் சீதா தேவியை விட்டருளும்படி எங்கள் சக்கரவர்த்தியான சுக்கிரீவ மகாராஜா என்னை இங்கே தூதாக அனுப்பியுள்ளார், நிலைமைகளை உணர்ந்து உடனே இசைந்து நடந்து கொள்ளுவது நல்லது; மேலும் பேசுவது மிகை" என அனுமான் இவ்வாறு பேசி முடித்தான்.

வார்த்தைகள் வந்திருக்கிற நிலைகளைக் கூர்ந்து நோக்கிக் குறிப்புகளை உணர்ந்து கொள்ளுகிறோம். அரிய பல அறிவு நலங்கள் இனிய போதனைகளாய் இங்கே பெருகி வந்துள்ளன.

பொருளும் காமமும் இருள்;

அருளும் நிராசையும் தெருள்.

என்றது இராவணனை காம மயக்கம் நீங்கிச் சேமமடைய வேண்டி. பொன்னாசையும் பெண்ணாசையும் உண்மை யுணர்வை மயக்கிய புன்மை வழிகளில் செலுத்தி மனிதரை புலைப் படுத்தி வருதலால் அவை இருள் என வந்தன.

காமத்துக்குக் கண் இல்லை என்பது பழமொழி. அதனை யுடையவர் அகக்கண் குருடராய் மதிகெட்டு அவல நிலையில் விழுந்துழல்வதை இது விளக்கி யுள்ளது.

"இந்திரன் காமத்தாலே இழிநிலை யடைந்து தாழ்ந்தான்
சந்திரன் குருவின்பன்னி தாரையைத் தழுவி நொந்தான்."

என்றதனால் அந்தர வாசிகளும் காமத்தால் அலமந்தழிந்துள்ளமை அறியலாகும்.

செல்வச் செருக்கும் காம இச்சையும் அல்லும் பகலும் உன்னைக் கொல்லாமல் கொன்று வருகின்றன, அந்தக் கொலை நிலைகளிலிருந்து விலகி உய்ந்து கொள் என்பான் பொருள் காமங்களை இங்ஙனம் சுட்டிக் காட்டினன். அறிவொளி இழந்து நீ இருள் நிலையில் உள்ளாய்! என அவனது இழி நிலையை விழி தெரிய விளக்கினன்.

அருள், உள்ளத்தைக் கனியச் செய்து உயிரை உயர்த்துகிறது. நிராசை, நேரே பேரின்பத்தை ஊட்டி வருகிறது. ஆதலால் இவை ஆன்ம அமுதங்களாய் வந்தன.

பொருளும் காமமும் மனிதரை இருள் நிலைகளில் ஈர்த்துக் கொண்டு போய் ஈனப் படுத்தி இன்னல் புரிகின்றன. அருளும் நிராசையும் ஒளி நிலையில் உயர்த்தி உயர்ந்த இன்ப நலங்களை ஊட்டி யருளுகின்றன.

இருவகை நிலைகளையும் ஒரு முகமா இணைத்துச் சொல்லியது உறுதி தெளிந்து கொள்ள. இருண்ட வழியில் மருண்டு இருளாய இழிந்து செல்லாதே, தெருண்ட மேலோனாய்ச் சிறந்து உயர்ந்து வாழுக என உணர்த்தி யருளினன்.

ஓதநீர் உலகு ஆண்டவர் உன் துணைப்
போதம் நீடியர் ஆர் உளர்?

உலகங்களை ஆண்ட முடி மன்னர்களுள் உன் அளவு அறிவும் நீதியும் உடையவர் யார் உள்ளனர்? சொல்லுக என இராவணனை நோக்கி அனுமான் இப்படி வினவியிருக்கிறான். இதனால் அவனுடைய மேதா விலாசங்களையும் நீதி முறைகளையும் இவன் நன்கு தெரிந்துள்ளமை இங்கு வெளியாயது.

வேதம் ஆயிரம் வல்லான் என்ப புகழ் பெற்றிருத்தலால் அவனது கலை ஞானத்தின் எல்லை தெரியலாம்.

சிறந்த கலையறிவோடு உயர்ந்த அரச நீதிகளையும் ஆட்சி முறைகளையும் நன்கு தெரிந்தவன் மகா மேதைகளான தேவர்கள் யாவரையும் அடக்கி மூவுலகங்களையும் நெடுங்காலம் நிலையாக ஆண்டு வருவது என்றால் எவ்வளவு அதிசய அறிவுகள், எத்தனை ஆட்சித் திறங்கள் அவனிடம் மாட்சிமையடைந்திருக்க வேண்டும்! என்பதைக் காட்சியாக நாம் கருதிக் கொள்ளலாம்.

ஓதம் = கடல் போதம் = அறிவு

ஆழி சூழ் உலகம் ஆண்ட அரசர் எவரினும் அதிசய மேதை என்று இப் பேதை அவனைத் துதி செய்திருக்கிறான். இத் துதி மொழிகள் அவனுக்கு எவ்வளவு உவகையை விளைத்திருக்கும்? கலைகளில் அவன் உயர்ந்துள்ள நிலைகளை இக் கலைஞானி புகழ்ந்துள்ளான்.

இசையில் இசை பெற்றவன் இயலில் உயர்நிலை யுடையவன் அரிய கலைகள் பலவற்றிலும் அவன் பெரிய புலமையாளன்.

இவ்வளவு கற்றவன் கல்லாத மூடரினும் பொல்லாத செயலைச் செய்ய நேர்ந்தது மிகவும் புலையாம் என்ற நிலைமையைக் குறிப்பாக விளக்கி நின்றான்.

படித்துக் கெட்டவன் என இராவணனை இப்படி இடித்துக் காட்டியிருக்கிறான். நீதி நெறிகள் தெரிந்தவன் பாதகச் செயல் புரிந்துள்ளது பரிதாபம் என்பதாம்.

நீ அறத்து எல்லை கடத்தியோ?

வேத நீதிகளின் விதி வழியே தருமங்களைப் பேணி ஒழுக வேண்டிய நீ அறத்தின் எல்லையைக் கடந்து பாவங்களில் இழிந்திருப்பது கொடிய பழியாம் என விழி தெரிய உரைத்தான்.

அவனுடைய பழி வாழ்வைத் தெளிவாக விளக்க அயலே ஓர் உவமானத்தை நயமாக இணைத்தான்.

உறுப்புஉண்டாய் நடு ஓங்கிய நாசியை
அறுப்புண்டால் அது அழகு என்ல ஆகுமே.

தான் விரும்பிய ஒருத்தி வெறுத்து மறுத்தபின் ஓர் ஆடவன் உயிர் வாழ்ந்திருப்பது பெரிய இழிவாம் என இவ்வாறு தெளிவாக்கினன். மூக்கை அறுத்தால் அந்த உடலழகு பாழாம். அதைக் காட்டிலும் உன் உயிர் வாழ்வு ஈனமாயுள்ளதே! அதனை நீ உணர வில்லையே! என இரங்கி யிருக்கிறான்.

சூர்ப்பநகை இராமனை விரும்பினள், அவன் மறுத்தான்; வெறுத்தான், முடிவில் இலக்குவன் அவளை மூக்கை அறுத்து விடுத்தான். மூக்கு அறுபட்ட அந்தத் தங்கை வாழ்வினும் இந்தத் தமையன் வாழ்வு இழிவு என்பதை இங்கே குறிப்பாகச் சுட்டியுரைத்திருக்கிறான்.

இராவணன் சீதையை விரும்பினன், அவள் இகழ்ந்து மறுத்தாள், எள்ளி வெறுத்தாள். பலமுறை அப் பதிவிரதை வைது பழித்தும் இவன் நச்சிய இச்சையை விடாமல் மேலும் மேலும் நசை மிகுந்து வருவது வசை படர்ந்த வாழ்வாயது.

மூக்கு அறுபட்ட முகம்போல உன் வாழ்வு இழிவாயுள்ளதே; அதனை நீ உணராதிருக்கின்றாயே! என உணர்த்தியுள்ளான்.

நாசி அறுப்புண்ட பின்புதான் சூர்ப்பநகை நசையிழந்து மீண்டாள், தலை அறுப்புண்ட பிறகுதான் இராவணனது நாசமான ஆசை ஒழியும் என்பது இங்கே யூகமாய் அறிய வந்தது.

உன் தங்கை விதவை, அறிவு நலம் இல்லாதவள், காமவெறியால் அங்கபங்கமாய் அவமானம் அடைந்தாள். நீ பெரிய சக்கரவர்த்தி, எங்கும் புகழ் பெற்றவன், எல்லாக் கலைகளையும் நன்கு தெரிந்தவன்; இவ்வளவு மதிப்புடைய நீ அவ்வளவு கொடிய ஈனங்களுக்கு அடிகோலி வாழ்வது கொடிது! கொடிது! எனக் கொடுமையான பழிகளைக் குத்திக் காட்டினன்.

ஊன்ற ஞாறும் கடும் கனல உளபோதி
சீரை ஞாறவை சேம்ம் சேலுததுமோ?

உள்ளே நெருப்புத் துண்டத்தை வைத்துப் புறத்தே பல சீலைகளைச் சுற்றி வைத்தால் அத்தனையும் விரைந்து எரிந்து சாம்பலேயாகும்; அதுபோல் சீதையை இலங்கையுள் வைத்திருக்கின்றாய், உனது அரிய வலிகளோடு பெரிய குலமும் முழுதும் ஒருங்கே நாசமாகும் என்பதை இங்ஙனம் நயமாக உணர்த்தினான்.

நூறுதல் = அரைத்து அழித்தல். நகரத்திற்கு ஞகரம் போலியாய் வந்தது ஞூறு = நூறு.

தனக்கு நாசம் என்று தெரியாமல் சீதையை ஊரில் வைத்திருப்பது பெரிய மடமை என்று அறிய உரைத்தான். கனல் உள் பொதிந்த சீலை போலச் சீதையைத் தன் உள்ளத்தில் நச்சி வைத்து இராவணன் வெளியே ஆரவாரமாயிருக்கின்றான் என்றது அவனது அழிவு நிலை விழி தெரிய நின்றது.

"சனகி என்று ஒரு தழல் நடுவண் தங்கலால்" இலங்கையும் அரக்கர் குலமும் ஒருங்கே எரிந்து விரைந்து அழியும் என முன்னம் * சொன்னதும் இங்கே எண்ணி அறிய உரியது.

வீர வாகு தேவர் மகேந்திரபுரிக்குத் தூது சென்று சூரபன்மனுடைய அவையுள் புகுந்து நோக்கி அவனது தீமையை நினைந்து வருந்தி விரைவில் அழிந்துபடுவான் என்று முடிவு செய்தார். அப்பொழுது உரைத்த கவி அடியில் வருவது.

மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை
விரகின்மை கொண்ட குருகார்
கச்சோதம் என்று கருதிக் குடம்பை
தனிலுய்த்து மாண்ட கதை போல்
அச்சோ என்பல இமையோரை யீண்டு
சிறைவைத்த பாவ மதனால்
இச்சூர பன்மன் முடிவெய்தும் நாளை
இதனுக்கொர் ஐயம் இலையே
(கந்தபுராணம், அவைபுகு, 43)

கொள்ளித் தீயை மின்மினிப் பூச்சி என்று எண்ணி எடுத்துக் கொண்டு போய்த் தன் கூட்டில் வைத்து எரிந்து மாண்ட குருவி போல் தன் நகருள் அமரரைச் சிறை வைத்த சூரபன்மன் அழிந்து மடிவான் என்னும் இது ஈண்டு அறிய உரியது.

* இந் நூல் பக்கம் 3124, வரி 16 பார்க்க.

உத்தம பத்தினியின் உள்ளம் கொதிக்கச் செய்தவன் குலத்தோடு அழிந்து படுவான் என்பதை இங்ஙனம் குறித்துணர்த்தி மேலும் குறிப்போடு உரைத்தான் "சிவபரம் பொருளிடம் அரிய பெரிய வரபலங்களைப் பெற்றிருக்கிறோம், சிறிய ஒரு மனிதன் நம்மை என்ன செய்ய முடியும்" என்று அவன் எண்ணியிருக்கவும் கூடும் என நுண்ணிதாக வுணர்ந்து இவ் வீரன் நுவல் நேர்ந்தான்.

புரம் தீப்புகப் பொங்கியோன் எனச் சிவபெருமானை இங்கே குறித்தது. தன்னுடைய ஒரு சிறு சிரிப்பினால் அரிய முப்புரங்களையும் ஒருங்கே எரிக்க அற்புதன் என்பது அறிய அந்தப் பரம பொருளினுடைய அதிசய மகிமைகளை உணர்ந்து கொள்ளாமல் தனது மனச் செருக்கினால் அரக்கர்பதி மட்டத்தனம் புரிந்தான்.

கைலாச கிரியை இராவணன் எடுத்த பொழுது இறைவன் பெருவிரல் நுனியினால் கீழே அழுத்தினன்; அழுத்தவே ஆலையில் சிக்கிய கரும்பு போல மலையின் அடியில் அகப்பட்டு அவன் அலமந்து துடித்தான். பரமன் சாம கானப் பிரியன் ஆதலால் அந்த வேதத்தை இசையோடு பாடும்படி அமைச்சர் கூறினர். அவ்வாறே அவன் பாடினன். தன் தலையுள் ஒன்றைத் தடிந்து கை நரம்பை அதில் மாட்டி வீணையாக்கிக் கொண்டு அன்போடு கானம் செய்தான். சிவபெருமான் எதிர் தோன்றி அரிய வரங்களை உரிமையோடு அருளினர்.

வானிகழ் வெள்ளி வெற்பின் கீழுற்று வருந்துகின்ற
ஊனிகழ் வேலியானை அமைச்சர்தாம் உற்றுநோக்கித்
தேனிகழ் இசழியான்தன் திருச்செவி சார நின்கை
தானிகழ் வீணை யாக்கப் பாடுதி சாமம் என்றார் (1)

அன்னதே கருமம் என்றே அரக்கனும் அறிவுட் கொண்டு
தன்னது தலையில் ஒன்றைத் தடிந்து தன் கையிற் சோர்த்த
இன்னவில் நரம்பில் துத்தம் கிளைமுதல் இசைகள் ஏழால்
பன்னரும் சாம கீதம் பரிவுடன் பாட லுற்றான் (2)

பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகன்
பொருப்பின்கீழ்க் கிடந்து போகாது
இரக்கமுற்றுக் கதறுதலால் இராவணன்தான்
எனப்பெயரும் இயம்பி வாவென்று

அரக்கனுக்கு முக்கோடி அரைக்கோடி
வாணாளும் அளித்துப் போவென்று
உரைப்ப அரன் அடிவணங்கி ஆங்கெழில் சேர்
புட்பகத்தின் உவந்து போனான் (3)
(உத்தர காண்டம்)

கைலாசபதியிடம் இலங்காதிபதி வரம்பெற்றுள்ள வகைகளை இவை உணர்த்தியுள்ளன. அதிசயமான பலசாலி, அரிய கலை ஞானி, ஈசனும் இன்புறும்படி இசைபாட வல்லவன் என்பதை இங்கே அறிந்து கொள்ளுகிறோம்.

நரம்பு இழைத்தன பாடலின் நல்கிய வரம்

என்றது அவன் அரும்பாடு பட்டுப் பெற்றிருக்கிற வரங்களின் திறம் தெரிய வந்தது. ஈசன் அருளியுள்ள அந்த வரங்கள் எல்லாம் அழிந்து போகும் காலம் நெருங்கியுள்ளது. இராமன் சரங்கள் வரும்வரையும் அவை பிழைத்து நிற்கும் என்ற அவனுடைய வாழ்வுக்கு எல்லையை வகுத்துச் சொல்லினான்.

கற்புடையாளுக்குத் துயர் இழைக்க இராவணன் தொடங்கிய பொழுதே அந்த அற்புத வரங்கள் அயல்கல நேர்ந்தன.

மறை பிழையாதவன் என்று இராமனை இங்கே குறித்துச் சொன்னது வேத விதி வழியே ஒழுகி வரும் நீதிமான் என்பது தெளிய. அந்த நீதியினாலேதான் அவனுடைய சரங்கள் யாதும் தவறாமல் எதையும் என்றும் வென்று வருகிறது. தரும நீதிகளை யாண்டும் பாதுகாத்து வருவன் ஆதலால் அதரும அநியாயங்களை எவ்வழியும் அவை மூண்டு அழித்து ஒழிக்கின்றன.

சீவ கோடிகள் மறைவழி ஒழுகும்படி முறை செய்ய வந்துள்ளவனுடைய திவ்விய சரங்கள் தெய்வ வரங்களை வசம் செய்து கொண்டு வெய்யவர் குலங்களை வேரறுத்து விடும் என நேரெடுத்துரைத்தான்.

நீ தவ நிலையில் பெற்றுள்ள வர பலங்கள் அவ நிலையில் அழிய நேர்ந்துள்ளன, அந்நிலைமையை ஓர்ந்து கொள்ளுக என உணர வுறுத்தினான்.

பிறந்துளார், சிறந்துளார், இறந்துளார் யாரும்
இராமனை மறந்துளார் இலர்.

என்றது அவனது மகிமையை உணர்ந்து கொள்ள வந்தது.

சீவகோடிகள் தேவகோடிகள் தேவ தேவர்கள் யாவரும் நினைந்து மகிழ்ந்து வருகிற நீதி மூர்த்தியே ஈண்டு நீதி செலுத்த வில் ஏந்தி மூண்டு வந்துள்ளது என இறுதியில் உறுதியாக உரைத்தருளினன்.

பிறந்துளார் என்றது வினை வயத்தராய் உலகங்களில் வந்து பிறந்துள்ள சீவர்களை பிறவாத பெரும்பதம் சிறந்துளார் என்றது பிறவி தீர்ந்து பேரின்ப நிலையை அடைந்துள்ள நித்திய முத்தர்களை. தேவர்களும் தேவராய் இறந்துளார் என்றது திரிமூர்த்திகளை. இறத்தல் = வரம்பு கடந்து நிற்றல்

சூலமும் திகிரியும் கரகமும் துறந்து ஆலமும் மலரும் வெள்ளியும் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான் என முன்னம் சொன்னதை முடிவில் இவ்வண்ணம் குறித்து முடித்தான்.

எல்லா வுயிர்களுக்கும் இனிய மூலப் பொருளே இந்தக் கோலம் கொண்டு வந்துள்ளது, நீ அந்தச் சீலம் கண்டு தெளிந்து கொள்வது நல்லது என நெஞ்சம் தெளிய நிலைமைகளை விளக்கினன்

தரும நீதிகளையும் கரும வினைகளையும் இவ்வாறு பேசி வந்தவன் முடிவில் யாவும் தொகுத்துச் சுட்டி மேலே செய்ய வேண்டியதைத் தெளிவுறுத்தினன்

உன்னுடைய அரச செல்வங்களும் பெரிய கிளைகளும் அரிய குலமும் இனிய உயிரும் உன்பால் நிலைத்திருக்க என்பால் சீதையைத் தந்து விடுக என்று இந்தவாறு எங்கள் அரசன் சொல்லி விடுத்தார் என முடித்தான்.

தான் தோந்து கூறிய அறவுரைகள் யாவும் சுக்கிரீவன் கூறி விடுத்ததாகச் சுட்டி முடித்தது அனுமானுடைய விநயசாதுர்யங்களையும் வினை மாட்சி நிலைகளையும் விளக்கி நின்றது.

## தூதர் நிலை

தூதுவர் மூவகைப் படுவர். தன் தலைவன் எழுதிக்கொடுத்த ஓலையைக் கொண்டு வந்து எதிரியிடம் கொடுத்து அவன் கொடுப்பதை வாங்கிச் செல்பவன் கடைத்தூதன். தலைவன் சொன்ன

தைச் சொல்லி மீள்பவன் இடைத்தூதன். தானாகவே யாவும் ஓர்ந்து கூறி உறுதி காண்பவன் உத்தம தூதன்.

ஓலை கொடுத்து நிற்பான், கூறியது கூறுவான், தான் வகுத்துக் கூறுவான் என்னும் அந்த மூவகைத் தூதுவரினும் அனுமான் முதன்மை எய்தி நிற்றலால் அதிசயத் தூதன் என உலகம் துதி செய்ய நின்றான்.

உன் உயிர் பெறச் சீதையைத் தருக.

என்றது கருவக்கால விளைவதை விளக்கி நின்றது.

சீதையைத் தரவில்லையானால் உன் அரசு அழிந்து போம், கிளைகளும் ஒழிந்து போவர், குலமும் அடியோடு நாசமாய்ப் போம், நீயும் செத்துத் தொலைவாய்! இந்த இழவுகள் எல்லாம் நேராதபடி உடனே ஒழுங்கு செய்து கொள் என்பதை உய்த்துணர வைத்து இறுதி மொழியை உறுதியாகப் பேசி முடித்தான்.

## இராவணன் இகழ்ந்து மொழிந்தது

அரிய பல அறிவு நலங்களை அனுமான் உரிமையோடு பேசி உறுதி நலங்களை ஊட்டியும் இராவணன் சிறிதும் கவனியாமல் செருக்கு மீதூர்ந்து இறுதியில் சிரித்து இகழ்ந்து கூறினான்.

என்றலும் இவை சொல்லியது எற்கொரு
குன்றில் வாழும் குரங்கு கொலாம் இது
நன்று நன்றென மாநகை செய்தனன்
வென்றி என்றொன்று தானறி வேறிலான் (1)

குரக்கு வார்த்தையும் மானிடர் கொற்றமும்
இருக்க நிற்க நீ என்கொலடா இரும்
புரத்தினுள் தரும தூது புகுந்தபின்
அரக்கரைக் கொன்றது அஃதுரையாயென்றான் (2)

(பிணி வீட்டு படலம், 107-108)

தனக்கு நெடுநேரம் நீதி போதனைகளைச் செய்த மாருதியை நோக்கி மாறுபாடு மண்டி இராவணன் இவ்வாறு சீறிச் சினந்து பேசியிருக்கிறான். எள்ளலும் இகழ்ச்சியும் பேச்சில் துள்ளி நிற்கின்றன.

குன்றில் வாழும் ஒரு குரங்கோ எனக்கு இவை சொல்லியது!

இதில் எவ்வளவு இகழ்ச்சி இசைந்திருக்கிறது! சுக்கிரீவனை எப்படி இளிவாக எண்ணியிருக்கிறான்! மலையில் அலைந்து திரிகிற காட்டுக் குரங்கு உலக முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளுகிற அரிய பெரிய ஒரு சக்கரவர்த்திக்குப் புத்தி போதிக்கத் துணிந்தது என்றால் இது எவ்வளவு வித்தக விநோதம்! என்று பரிகாசம் செய்து சிரித்திருப்பது அவனுடைய உள்ளத் திமிரையும், உறுதி நிலையையும் உலகம் அறிய உணர்த்தி நிற்கிறது.

நன்று நன்று என்ற அடுக்கு இகழ்ச்சிக் குறிப்பில் ஏறி வந்துள்ளது. மா நகை என்றதனால் உடல் குலுங்கச் சிரித்திருக்கிறான் என்று தெரிகிறது. மனச் செருக்கும் மமதையும் எவரையும் யாதும் மதியாதபடி செய்து விடுகின்றன. அவனுடைய நிலைமை தலைமை நீர்மைகளை நாம் கூர்மையாகக் கண்டு கொள்ளும்படி கவி இங்கே சீர்மையாகக் காட்டியிருக்கிறார்.

**வென்றி என்று ஒன்று தான் அன்றி வேறிலான்.**

இராவணனுக்கு இப்படி ஒரு பேரைக் கவி புதுமையாகச் சூட்டியிருக்கிறார். வெற்றி தோல்வி என்னும் இரண்டனுள் முன்னதையே யாண்டும் கண்டு வந்தவன், பின்னதை யாதும் காணாதவன் என்று அவனைக் காட்டியிருக்கும் காட்சி கருதி உணர வுரியது.

வெற்றி வடிவமாகவே அவன் கொற்றம் கொண்டாடி நிற்கின்றான் என்பார், "தான் அன்றி வேறிலான்" என்றார்.

ஒளியையே கண்டு வந்தவன் இருள் நிலையைக் காணாதது போல வெற்றியிலேயே திளைத்து வந்தவன் அந்த உள்ளத்திமிரோடு உச்ச நிலையில் பேச நேர்ந்தான்.

"அந்தக் காட்டுக் குரங்கு சொன்ன வார்த்தைகள் இருக்கட்டும், நாட்டு மனிதர்களுடைய வீரப் பிரதாபங்களும் நிற்கட்டும், அவற்றை இனி இங்கே விரித்துப் பேசாதே, தூதனாக வந்த நீ அரக்கரை எதற்காக அடா! கொன்றாய்? அதற்கு மாத்திரம் பதில் சொல்!" என்று அனுமானை நோக்கி இராவணன் இப்படி அதட்டி வெருட்டிக் கேட்டான்.

**அடா! என்றது இகழ்ச்சிக் கடுப்பில் வந்த இளி விளி.**

இராவணனைப் போன்ற பெரிய மனிதன் வாயிலிருந்து வரக

கூடாத வார்த்தை இது; ஆங்கார முனைப்பால ஆத்திரம் பொங்கி இப்படி வந்துள்ளது. உள்ளத்தில கோபம் மூண்ட போது உரைகள் முறைமாறி எள்ளல் இளிவுகளாய வெளி வருகின்றன.

## குற்றம சாட்டியது

தூதனாய் வந்தவன தனது தலைவன் கூறி விடுத்த செய்திகளை மாத்திரம் சொல்லிப போக வேண்டும; இவன அதற்கு மாறாக அரக்கரை அக்கிரமமாக் கொன்றிருக்கின்றான ஆதலால் அவன உக்கிரமாய் உருத்துச சீறிக் கொன்றதற்குக் காரணத்தைச் சொல்லும்படி கடுத்துக கேட்டான.

இராச நீதிகளை நன்கு தெரிந்தவன் ஆதலால் தன்பால் வந்த தூதன அடாத அநீதிகளைச் செய்திருக்கிறான என ஆட்சி முறையில் குற்ற விசாரணை செய்து அனுமான் கொடிய கொலைக் குற்றவாளி என்று குறித்து நிறுத்தினான்

அஃது உரை என்றது குற்றவாளியின வாக்கு மூலத்தை நோக்கி வந்தது நீதிபதி தன் தீர்ப்பை நேரே குறித்து வைத்தாலும எதிரியினுடைய பதிலுரையைக கேட்டறிந்த பின்பே இறுதியாக அறுதியிட்டு முடிவை உறுதி செய்ய வேண்டும ஆதலால் அந்த முறையில இந்த வினா இங்கே எழுந்தது

அஃது என்று சுட்டியது அரக்கர பலரைக கொன்றழித்துள்ள அக் கொலைக்குக் காரணத்தை. இந்தக் கேள்வியைக் கேட்டதும அனுமான உடனே பதில சொலல நேர்ந்தான.

## மாருதி மறுமொழி

மேலே குறித்த இராவணன கேள்விக்கு வேறு யாரேனும என்ன பதில சொல்ல நேர்வார் என்பதை முன்னதாக நீங்கள் கொஞ்சம உன்னி ஆலோசித்து அதன பின்னர் அனுமான சொன்ன பதிலை அறிய வேண்டும. அவ்வாறு காணின அறிவின சுவையை நுகரலாகும. அயலே பாட்டு வருகிறது, காணுங்கள்.

காட்டுவார் இன்மையால கடிகாவினை
வாட்டினேன், எனனைக கொலல வந்தாரகளை
வீட்டினேன்; பினனும மென்மையினால் உனறன்
மாட்டு வந்தது காணும மதியினால். (பிணிவீட்டு, 109)

குரக்கு வார்த்தை இருக்க, மானிடா கொற்றம் நிற்க; நீ அரக்கரைக் கொன்றதற்குக் காரணம் என்ன? அதை மாத்திரம் சொல் என்று இராவணன் கேட்ட கேள்விக்கு அனுமானி டமிருந்து இப்படி விடை வந்துள்ளது. பதில் மொழி எப்படி!

அரக்கரைக் கொல்ல வேண்டும் என்று நான் ஈண்டு வர வில்லை, என்னைத்தான் அவர்கள் கொல்ல வந்தார்கள். கொடிய கொலைகளுக்கெல்லாம் அவரே முடிவான காரணம், இப்படிப் பொல்லாத கொலையாளிகளை வளர்த்து வைத்துள்ள கொடும் பாவமும் நெடும்பழியும் உன்னையே சார்ந்திருத்தலால் எல்லாக் கொலைகளுக்கும் நீயே மூல காரணமாயுள்ளாய், தருமதேவதை உன்னைத்தான் உறுதியாகத் தண்டிக்கும் என்பதை நீ கண்டிப் பாக உணர்ந்து கொள்ள வேண்டும் என இங்ஙனம் விநயமுடன் உணர்த்தியிருக்கிறான். இவ்வாறு நேரே தெளிவாகச் சொல்ல வேண்டியதை வேறோர் வழியாக மாற்றி நளினமாக விளம்பி யிருப்பது உவகைச் சுவையாய் ஓங்கியுள்ளது.

காட்டுவார் இன்மையால் கடிகாவினை வாட்டினேன்.

என்றது இராவணனைக் காண வேண்டும் என்னும் விருப் போடு அனுமான் கருதிச்செய்ததை இவ்வாறு தெரியக்கூறினன்.

"இலங்கேசா! உங்களை நேரே காண வேண்டும் என்னும் ஆவலோடு நான் கடல் கடந்து இங்கு வந்தேன். தங்கள் அரண் மனையை அணுகி நோக்கினேன். தேவர்களும் அஞ்சி ஏவல் செய்வதைப் பார்த்தேன், அருகே நெருங்கவும் முடியாதபடி நெடிய வேல்களை நீட்டிக் கொடிய காவலாளிகள் திரண்டு நிற் றலைக் கண்டு மருண்டேன். எப்படியும் சக்கரவர்த்தியைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் என் உள்ளத்தில் பெருகியிருந் தமையால் ஓர் உபாயத்தைக் கருதினேன். மிகவும் அழகாயுள்ள அசோகவனத்தில் போய் இரண்டு மரக்கிளைகளை ஒடித்தால் அங் கிருக்கின்ற காவலாளிகள் என்னைப் பிடித்துக் கொண்டு வந்து உங்கள் முன்னிலையில் நிறுத்துவார்கள், அப்பொழுது நேரே தெரிசித்து வந்த காரியத்தைச் சொல்லிவிடலாம் என்று இந்த நோக்கத்தோடு பூஞ்சோலையைச் சிதைத்தேன், காவலர் என்னைக் கொல்ல வந்தனர், அவரை நான் கொன்று தொலைத் தேன், மேலும் படைகள் வந்தன, யாவும் பட்டு மாண்டன.

நான் எண்ணிச் செய்ததற்கு மாறாய எல்லாம் நடந்து முடிந்தன. முடிவில் இந்திரசித்து கையில் அகப்பட்டதுபோல் அடங்கி இதோ வந்து நிற்கிறேன்; தங்களைக் காண வேண்டும் என்ற பேராசையைத்தவிர வேறே பேராசை எனக்குக் கிடையாது, இந்த உண்மையை நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள் என்று நம்புகிறேன்" என இங்ஙனம் நயமாக உரைத்தான்.

அடே! அரக்கரைக் கொன்றது ஏன்? என அவன் அடமாய்ச் சினந்து கூறியதும், அதற்கு இவன் இதமாய் பதில் மொழிந்ததும் இருவர் நிலைகளையும் எதிர் தெரியச் செய்கின்றன.

## கொல்லச் சொன்னது

மாருதி கூறிய இவ்வுரைகளைக் கேட்டதும் இராவணனுக்குக் கோபம் மூண்டது. மமதையும் பரிகாசமும் வார்த்தைகளில் மருவி யிருக்கின்றன என்று சினந்து சீறி "இவனைக் கொன்று தொலையுங்கள்" என அயலே நின்ற அரக்கரை நோக்கி ஆர்த்துக் கூறினான். கூறவே கூரிய வேல்களோடு வீரியமாய் நின்ற அவர் அனுமான் மேல் கொதித்துப் பாய்ந்தனர்.

## விபீடணன் தடுத்தது

கொடிய புலிகள்போல் கொலை மூண்டு அவர் கொதித்துப் பாயவே உடனே விபீடணன் விரைந்து எழுந்து "நில்லுங்கள்! நில்லுங்கள்"! என்று கையை நீட்டி அவரைத் தடுத்து நிறுத்தி அரியணையில் வீற்றிருக்கிற அண்ணனை வணங்கிக் கண்ணியமான நீதிகளைக் கருத்தோடு எடுத்துக் கூறினான்.

கொல்மின் என்றனன் கொல்லியர் சோர்தலும்
நில்மின் என்றனன் வீடணன் நீதியான்

அங்கே நிகழ்ந்த கருமக் காட்சிகளையும் காரிய நிகழ்ச்சிகளையும் இதனால் கண்டு கொள்ளுகிறோம். வீடணனை நீதியான் என்றது அவனுடைய நெறி முறைகளைக் கருதி யுணர வந்தது.

ஆண்டு எழுந்து நின்று அண்ணல் அரக்கனை
நீண்ட கையன் வணங்கினன் நீதியான்
மூண்ட கோபம் முறையதன் றாமென
வேண்டு மெய்யுரை பைய விளம்பினான் (1)

*அந்தணன் உலகம் மூன்றும் ஆதியின் அறத்தின் ஆற்றல்*
*தந்தவன் அன்புக்கு ஆன்ற தவநெறி யுணர்ந்து தக்கோய்!*
*இந்திரன் கருமம் ஆற்றும் இறைவனீ இயம்பு தூது*
*வந்தனென் என்ற பின்பும் கொல்லியோ மறைகள் வல்லோய்!*

*பூதலப் பரப்பின் அண்டப் பொகுட்டினுட் புறத்துட் பொய்தீர்*
*வேதமுற் றியங்கு வைப்பின் வேறுவே றிட்டது வேந்தர்*
*மாதரைக் கொலை செய்தார்கள் உள்ளென வரினும் வந்த*
*தூதரைக் கொன்றுளார்கள் யாவரே தொல்லை நல்லோர்.* (3)

*பகைப்புலன் அணுகி உய்த்தார் பகர்ந்தது பகர்ந்து பற்றார்*
*மிகைப்புலன் அடக்கி மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட*
*தகைப்புலக் கருமத் தோரைக் கோறலின் தக்கார் யார்க்கும்*
*நகைப்புலன் பிறிதுண் டாமே நங்குலம் நவையுண் டாமே.* (4)

*முத்தலை எஃகன் மற்றை முராந்தகன் முனிவன் முன்னா*
*அத்தலை நம்மை நோனா அமரர்க்கும் பகையிற் றாமால்,*
*எத்தலை உலகம் காக்கும் வேந்தநீ வேற்றோர் ஏவ*
*இத்தலை எய்தினோனைக் கோறலும் இழுக்கம் இன்னும்.* (5)

*இளையவன் தன்னைச் சொல்லாது இருசெவி மூக்கோடு ஈர்ந்து*
*விளைவுரை என்று விட்டார் வீரராய் மெய்ம்மை யோர்வார்*
*களைதியேல் ஆவி நம்பால் இவன்வந்து கண்ணிற் கொண்ட*
*அளவுரை யாமல் செய்தி யாதி என்று அமையச் சொன்னான்,*
(*பிணி வீட்டுப் படலம்*, 111-116)

அநுமானைக் கொல்லும்படி கொதித்துச் சொல்லிய இராவணனை எதிரே நின்று வீடணன் இன்னவாறு நீதி முறைகளை நெறியே கூறியருளினான் தொழுது வணங்கிப் பிரியமான மரியாதைகளோடு இதமாகவும் இனிமையாகவும் பேசியிருக்கின்றான்.

வேண்டும் மெய்யுரை பைய விளம்பினான்.

என்றதனால் அவன் நின்று பேசியுள்ள உரைகளையும் நிலைகளையும் நேரே தெரியலாகும். பொல்லாத கோபி ஆதலால் அண்ணனுடைய உள்ளம் அடங்கி உறுதி நலங்களை உணர்ந்து கொள்ளுமாறு பணிவோடு நயமாக உரைத்திருக்கின்றான்.

"அரசர் பெரும! உங்கள் மகிமைகள் அளவிடலரியன. 'பிரம தேவனும் பிரியமுறும்படி அரிய தவங்களைச் செய்து பெரிய பதவிகளை அடைந்திருக்கிறீர்கள்;' இந்திரன் முதலிய தேவர்களும் ஏவல் புரிய மூவுலகங்களையும் முறையே ஆண்டு வருகிறீர்கள்; வேதங்களை யெல்லாம் நன்கு ஓதி உணர்ந்துள்ள

நீங்கள் பிறர் சொல்லியதைச் சொல்ல வந்துள்ள ஒரு தூதனைக் கொல்ல மூண்டது அதிசயமாயுள்ளது. அன்று முதல் இன்று வரையும் எந்த அண்டத்திலேயும் எந்த அரசராவது தம்பால் வந்த தூதுவனைக் கொன்றது உண்டா? மாதரைக் கொன்றவர் உளர் எனினும் தூதரைக் கொன்றவர் இலர். தனது தலைவன் சொல்லி யனுப்பிய உறுதி மொழிகளைக் கருதி வந்து பகைவருடைய ஊருள் புகுந்து அரசனைக் கண்டு வரிசையோடு உண்மைகளைக் கூறிப் போவதையே விரதமாகக் கொண்டுள்ள தூதரைக் கொல்ல நேரின் அது கொடிய பழி பாதகமேயாம், நம் குலத்துக்கெல்லாம் நெடிய பழியாம். உங்களைப் பெருமையாக மதித்துள்ள திரிமூர்த்திகளும் சிரிப்பர், நம் மேல் பகைமை கொண்டுள்ள தேவர்கள் யாவரும் நகைப்பர். நகையான பழிமொழிகள் யாண்டும் விளைந்து விடும், தான் இருக்கும் இடம் தெரிந்து எதிரிகள் படை எடுத்து வந்து விடுவார் என்று அஞ்சியே வந்த தூதனை மீள விடாமல் இலங்கை வேந்தன் கொன்று தொலைத்தான் என்னும் கொடும்பழி உலகமெங்கும் பரவி நிற்கும். நமது தங்கையை அங்கபங்கம் செய்து உன் உற்றாரிடம் போய் உள்ளதைச் சொல் என்று எள்ளித் தள்ளி விட்ட அவரது ஆண்மை வீரங்களை உலகம் மேன்மையாக வியந்து பாராட்டுகின்றது. நாம் இங்கே இவனைக் கொன்றால் பகைவர் உளவறிந்து கொள்ளாதபடி செய்த படுகொலை என்று ஒரு கொடிய பழி நம் வழி முறைக்கெல்லாம் நெடிதோங்கி நிற்கும், நிலைமையை நினைந்து உங்கள் தலைமையை உணர்ந்து தகுதியாக ஆய்ந்து கொள்ளுங்கள்'' என இங்ஙனம் அத் தருமவான் உறுதியை உரிமையாக உரைத்தருளினன்.

வீடணனுடைய மனநிலை மதிநலம் அண்ணன்பால் கொண்டுள்ள அன்புரிமை அரசியல் முறை முதலிய நிலைமைகள் பலவும் இங்கே வெளியாயுள்ளன. ஆட்சி முறையோடு தருமநெறிகளைக் கருதி யுணரும்படி உறுதி கூறியிருக்கிறான்.

மாதரைக் கொலை செய்வதினும் தூதரைக் கொல்வது கொடிய பாவம் என்று குறித்திருத்தலால் தூதுவருடைய நிலைமையும் நீர்மையும் கூர்மையாக ஓர்ந்து கொள்ள வந்தன.

## தூதர் நிலை

தூதுவர் நீதிபதிகள் போல நடுவு நிலைமை யுடையவர்.

யாண்டும் அமைதியைச் செய்து வருபவர். இரண்டு அரசர்களுக்குப் போர் மூண்டால் இடையே நின்று அறிவு நலங்களைக் கூறி இரு திறத்தாரும் இனிது வாழ உறுதிகளை உரிமையோடு புரிபவர். எவ்வழியும் நல்ல சீர்மைகள் வாய்ந்தவரே தூதுசெல்ல உரியவர் ஆதலால் அவருடைய வாய்மொழிகள் பெரிய நன்மைகளை அருளி வருகின்றன.

அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று. (குறள் 682)

மாண்டமைந்தார் ஆய்ந்த மதிவனப்பே வன்கண்மை
ஆண்டமைந்த கல்வியே சொல்லாற்றல் — பூண்டமைந்த
காலம் அறிதல் கருதுங்கால் தூதுவர்க்கு
ஞாலம் அறிந்த புகழ். (ஏலாதி, 26)

அன்புடைமை ஆய்ந்த அறிவுடைமை இற்பிறப்பு
நன்குடைமை நல்ல நயனுடைமை — வன்கண்மைந்த
சுற்றமுண்மை வடிவுடைமை சொல்வன்மை
கற்றடங்கல் தூதின் கடன். (1)

நடுமாற்றம் இன்றித் தகைசான்ற சொல்லான்
வடுமாற்றம் வாய்சோரான் ஆகி — விடுமாற்றம்
எஞ்சாது கூறி இகல்வேந்தன் சீறுங்கால்
அஞ்சாது அமைவது தூது. (2)

([illegible])

தூதுவருடைய இயல்புகளை இவை குறித்துள்ளன. இத்தகைய நல்ல பண்புகளுடைமையால் தூதர் உத்தமர் என ஒளி மிகுந்து நின்றார்.

பகைவகையினரிடத்தும் அஞ்சாது புகுந்து அருள் புரிபவர் ஆதலால் தூதுவரைத் துயர்செய்வது பாதகம் என வந்தது.

## விகர்னனது நீதி

பாண்டவர்களுக்காகக் கண்ணன் துரியோதனனிடம் தூது போயிருந்தான். நீதிகள் பல கூறியும் அவன் நெஞ்சம் திருந்தாமல் நெடுஞ் செருக்கோடு நிமிர்ந்து நின்றான், ஆகவே கண்ணன் எழுந்து போய் விதுரன் அரண்மனையில் இரவு தங்கியிருந்தான். தூதனாய் வந்துள்ளவன் கொடிய சூதன் ஆதலால் அவனை மீண்டு போகாதபடி செய்ய வேண்டும் என்று சகுனி

கன்னன் முதலானவர்களோடு கூடி அரசன் சதியாலோசனை செய்தான். அம்மன்னன் தந்தையான திருதராட்டிரன் கண்ணனைக் கொல்வதே நல்லது என்று குறித்துரைத்தான். அவ்வுரையைக் கேட்டதும் அவனுடைய இளைய மகனான விகர்ணன் என்னும் மதிமான் அது அதிபாதகம் என்று தடுத்துத் தந்தைக்கு அரிய நீதிகளை எடுத்துச் சொன்னான்.

கண்ணிலான் உரைத்த மாற்றம் கேட்டலும் காவலோரின்
மண்ணிலார் இதற்கு முன்பு தூதரை வளைந்து கொன்றார்
எண்ணிலா இந்த எண்ணம் எவ்வழிக் கற்றது என்று
வெண்ணிலா முறுவல் செய்து விகர்ணனும் விளம்ப லுற்றான்

மூத்தவர் இளையோர் வேத முனிவரர் பிணியின் மிக்கோர்
தோத்திரம் மொழிவோர் மாதர் தூதர் என்றிவரைக் கொல்லின்
பார்த்திவர் தமக்கு வேறு பாவம் மற்றிதனின் இல்லை
பூதெரி தொடையாய்! பின்னும் நரகினும் புகுவர் என்றான்

பழியுடைப் பகைஞ ரேனும் தன் பெரும் பதியில் வந்தால்
அழிவுறக் கோறல் பாவம் ஆண்மையும் அல்ல என்பார்,
கழிகடற் சேனை யோடு கங்குலின் வளைந்திட் டாலும்
எழிலுடைக் கொண்டல் வண்ணன் அகப்படான் எவர்க்கும்
[என்றான் (பாரதம், கிருட்டிணன் தூது)

தூதரைக் கொல்வது பாவம் என்று விகர்ணன் இவ்வாறு சொல்லியுள்ளான். வீடணன் அண்ணனுக்குப் புத்தி சொல்லினான். விகர்ணன் தந்தைக்கு அறிவு கூறியிருக்கிறான். பொல்லாதவர்கள் கூட்டத்தில் நல்லவர்களும் இடையிடையே இருந்து தரும நீதிகளைச் சொல்லி வருவது உவகை புரிந்து வருகிறது.

பாரத நூலாசிரியராகிய வில்லியாழ்வார் கம்பர் காவியத்தை நன்கு பயின்று வந்துள்ளமையை ஆங்காங்கே அவருடைய வாக்குகள் தெளிவாக விளக்கி வருகின்றன. இங்கு வந்துள்ள கவிகளின் சாயல்களையும் கருதிக் காணுக.

தூதுவருடைய பொதுவான இயல்புகளையும் உயர்வுகளையும் வீடணன் நயமாக அண்ணனுக்கு உணர்த்தியிருக்கிறான். தகைப் புலக் கருமத்தோர் என்று தூதரை இவ்வாறு குறித்தது, அவரது செயலையும் அறிவையும் தெரிய வந்தது.

அரசர்களிடையே கலகங்கள் நேராதபடி நடுவே நின்று

உலக மக்கள் நன்மைக்காக அறிவு நலங்களைக் கூறி அரிய வினைகளைச் செய்தருளுகிற பெரிய கரும வீரர்கள் ஆதலால் தூதர்கள் தரும சீலர்களாய் யாண்டும் மதித்துப் போற்றப் படுகின்றனர்.

"An ambassador is an honest man sent to lie abroad for the Commonwealth" (Henry Wotton)

"தூதர் என்பவர் குடிசனங்களுடைய நன்மையை நாடி அயலிடம் வினைமேல் அனுப்பப்படுகிற யோக்கியமான கண்ணியபுருடர்" என உட்டன் என்னும் போராசிரியர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

ஆட்சி முறைகளில் தேர்ச்சி பெற்றுள்ள எந்த நாடுகளும் தூதரை மந்திரிகளினும் மேலாக மதித்து வந்துள்ளன.

இந்த நாடு தூதருக்குப் பெரு மதிப்புத் தந்துள்ளது. சிவபெருமானும் திருமாலுமே தூதராகிச் சென்றார் என்றால் அந்த தொழிலின் மேதகவு எவ்வளவினது என்பதை எளிதே தெளிந்து கொள்ளலாம். தூது என்ற வகையில் பல நூல்கள் செய்யப்பட்டுள்ளன. தூதின் பிரிவு என்று காதல் வாழ்வில் ஒரு துறை அமைந்துள்ளது. பலவகைச் சுவைகள் அதில் பெருகி யிருக்கின்றன.

மாலோடு மோதும் இருமன்னர் போரை மறிப்ப மன்னர்
காலோடு தேரொடும் தூதுசென் றார்களி ரேல்மென்ன
ஆலோபம் தீர்த்த குலோத்துங்க சோழன் அளகை வெற்பின்
மேலோர் இருவர் பொரப்போரும் தூது விலக்குவரே
(குலோத்துங்கன் கோவை)

தூதரது கருமக் காட்சியை இது காட்டியுள்ளது.

'ஓதல் பகையே தூதிவை பிரிவே
அவற்றுள், ஓதலும் தூதும் உயர்ந்தோர்மேன"
(தொல்காப்பியம்)

தூதின் நிலைமையும் அதனைச் செய்ய வுரியவரது தலைமையும் இதனால் அறியலாகும். சிறந்த பெருந் தகைமையாளர் செய்ய வுரிய அரிய வேலை ஆதலால் உயர்ந்தோர் மேன என்றார்.

இவ்வளவு உத்தம நிலையில் உயர்ந்துள்ள தூதனைக் கொல்லுதல் எவ்வழியும் தீதாம் எனச் செவ்விய தரும நீதிகளைக் கூறி வந்த வீடணன் இறுதியில் தெளிவான மொழியை நளினமாகச் சொல்லி முடித்தான். அந்த வுரைதான் இராவணனுடைய உள்ளத்தை விரைவில் மாற்றியது.

இளையவர் தனனைக் கொல்லாது
விளைவு உரை என்று விட்டார்

"நம் தங்கையைக் கொல்லாமல் அங்கபங்கங்களைச் செய்து உன் குலத்தவரிடம் போய்ச் சொல் என்று போருக்கு அறை கூவியதுபோல் தீரமாய் விரட்டி விட்ட அந்த இராமலட்சுமணர்களுடைய வீரப் பிரதாபங்களை யாவரும் வியந்து பாராட்டுகின்றனர். நாம் இன்று இங்கே இந்தத் தூதுவனைக் கொன்றோமானால் உலகம் நம்மை என்ன சொல்லும் தெரியுமா? தூதாய் வந்தவன் மீண்டு போனால் ஈண்டுள்ள உளவுகளைக் கூறி இலங்கை மேல் படையெடுத்து வரும்படி இராமனைத் தூண்டி விடுவான் என்று பயந்தே வந்த தூதனை மீள விடாமல் இராவணன் கொன்று தொலைத்தான் என ஒரு பெரிய கொடும்பழி உலகம் எங்கும் நெடிதோங்கி நிற்கும், நிலைமையைக் கொஞ்சம் சிந்தனை செய்து பாருங்கள்" என்று வீடணன் இந்தவாறு கூறவே அவன் உள்ளம் விரைந்து மாறியது.

எவ்வளவோ நீதி நெறிகளை எடுத்துக் கூறியும் நெடுஞ் செருக்கொடு நிமிர்ந்து நின்ற அவனுடைய நெஞ்சம் தன் வீரத்துக்கு இழுக்கு வந்துவிடும் என்று சொன்னவுடனே முழுதும் மாறிக் குறித்த கொலைத் தண்டனையை நிறுத்தி விடும்படி பணித்தான். சிறந்த போர் வீரன் ஆதலால் அவ் வீரத் திறலுக்கு இளிவு நேரும் என்று தெரிந்ததும் விரைந்து திருந்தினன். மனித சுபாவங்களையும் மானச மருமங்களையும் அறிந்து பேசுகின்றவன் எவ்வழியும் காரியசித்தியை அடைந்து கொள்ளுவான் என்பதை இறுதியில் கூறிய வீடணன் வார்த்தை இங்கே தெளிவுறுத்தி நின்றது.

## வாலைச் சுடுக என்றது

அண்ணன் உள்ளம் தெளிந்து திருந்தும்படி தம்பி மொழிந்த இந்த வாசகம் அவனுக்கு வேறு ஒரு யோசனையை விளைத்து விட்டது. நமது தங்கையை மூக்கும் காதும் அறுத்து அவர் அவமானப்படுத்தி விட்டது போல நாமும் இவனை வாலைச் சுட்டுப் பொசுக்கி ஈனப்படுத்தி ஊரைச் சுற்றி வெளியே விரட்டி விடுவோம் என்று இராவணன் களி மீறி உரைத்தான். வீடணன் வேறு யாதும் பேசாமல் உளைந்து அயல் ஒதுங்கி நின்றான்.

கோல்மின! இவனை என்று முன்னம் சொன்ன சொல்லைக் கேட்டவுடனே கொல்லத் துடித்து நின்ற அப் பொல்லாத அரக்கரை மீண்டும் இராவணன் எல்லையோடு ஓலை நோக்கினன

"தொலலை வாலை மூலம் அறச் சுட்டு நகரைச் சூழ போககி எல்லை கடககவிடுமின!"

என்று இவவாறு சொல்லி விடுத்தான். இங்ஙனம் அவன சொல்லவே எல்லாரும் அனுமானைச் சூழ்ந்து வளைந்தார.

## பாசப் பிணிப்பு நீங்கியது

வேறு அல்லலான தண்டனை நேர்ந்த பொழுது தெய்வப் படை சேர்ந்திருக்கலாகாது ஆதலால முன்பு பிணித்திருந்த நாக பாசத்தை மந்திர முறையோடு இந்திரசித்து வாங்கிக் கொண்டான. கொள்ளவே அரக்கர்கள் ஆரவாரத்துடன அனுமானைச் சுற்றிப் பற்றி அரண்மனைக்கு வெளியே கொண்டு வந்து ஒரு பெரிய மைதானத்தில நிறுத்தினார அடிவாலிலிருந்து தொடர்ந்து எண்ணெயத் துணிகளை நிறையச்சுற்றினார பொதி பொதிகளாக ஆடைகளைக் கொண்டுவந்து நெடிது பொதிந்து நீண்ட கயிறுகளை வரிந்து கட்டினார பெண்கள் கழுத்துகளிலிருந்த தாலிக் கயிறுகள தவிர வேறுயாவும் கோலிக் கொணர்ந்தார கண்ணிலகண்ட சேலைகளையும் வாரி வந்து வரிந்து சுற்றினார், சுற்றுந்தோறும் வால நீண்டு பெருகி நின்றது ஆகலால மேலும் மேலும புனைந்து வனைந்து பொதிந்து சுற்றி வெண்ணெயகளையும், எண்ணெயகளையும் விளைந்து வார்த்து வெளியெங்கும் நனைத்தார தீயைக்கொளுத்துதற்குரிய ஆயத்தங்கள யாவும் செய்து முடித்த பின்பு ஊரைச் சுற்றிக்கொண்டு போகத் தொடங்கினார.

அந்த வேடிக்கையைப் பார்த்தற்கு நகர சனங்கள எல்லாரும் திரள திரளாய வந்து கூடினார. இரண்டு புறமும தோவடம்போல நீண்டிருந்த நெடிய கயிறுகளைப் பலலாயிரம அரக்கர்கள் அடர்ந்து பிடித்து ஆர்த்து ஆர்த்து முதலில் பெரிய இராச வீதிகளின வழியே கொண்டு போனார

## அனுமான் நினைந்து மகிழ்ந்தது

அரிய தரும நீதிகளைக் கூறியும அந்த வெறியனிடம யாதும் பயனிலலாது போயதே என்று இரங்கியும், வீடணனுடைய மதி

நலனை வியந்தும் நின்ற அனுமான முடிவில் தனக்கு அவன் இட்ட தண்டனையை நினைந்து உவந்து கொண்டான். பிரமாத்திரத்தின் ஆணையைக் கடந்தேன் என்ற பழி என்னைச் சேராதபடி பகைவன் மகனே பாசத்தை நீக்கி எனக்கு மிகவும் இதம் செய்தான்; இப்பொழுது இராக்கதர் செய்கிற வேலை இலங்கையைச் சுட்டு எரிக்கும்படி என்னைத் தூண்டி விட்டபடியாம்; ஆண்டவன் அருளால் எல்லாம் அனுகூலமாகவே முடிகின்றன; நெருநல் இரவு நான் தெளிவாகக் காணாத இடங்களை யெல்லாம் இன்று நன்றாகக் கண்டு கொள்ளும்படி வாய்த்தது என்று உள்ளம் களித்து அனுமான் உவந்து போனான்.

பொய்ய பாசம் புறம்பிணிப்ப நோன்மை யில்லன போல உடல் நுணங்கி
வெய்ய அரக்கர் புறத்தலைப்ப வீடும் உணர்ந்தே விரைவிலர்
ஐயன் வினைசை தனையறிந்தும் அறியாதான்போல் அவினைசை எனும்
பொய்யை மெய்போல நடிக்கின்ற யோகி போனான் போகின்றான்.
(பிணிவீட்டு, 122)

அரக்கர்களுடைய பிணிப்பில் அகப்பட்டது போல அடங்கிச் செல்லுகிற அனுமானை இப்படிக் காட்டி யிருக்கிறார். இந்தக் காட்சி அரிய தத்துவ நிலைகளை மருவி வந்துள்ளமையால் உய்த்துணர்வுகள் மிகவும் பெருகியுள்ளன

## சித்த யோகி போல் சென்றது

கயிறுகளால் தன்னைப் பிணித்திருக்கிற பிணிப்புகளையும், அரக்கர்களையும் எளிதே தகர்த்து அழித்து மேலே விரைந்து தாவிப் போக வல்லவனாயிருந்தும் யாதொரு வலியும் இல்லாத மெலியவனைப்போல் அடங்கி மடங்கி அந்தக் கொடியவர் அலைத்து இழுத்துப் போகிறபடியெல்லாம் அலமந்து அலைந்துபோதலால் அரிய ஒரு ஞான சித்தனைப் போல இம் மான வீரன் அன்று நடித்துப் போனான் என்றார்.

பொய்யை மெய்போல நடிக்கின்ற யோகி போனான்.

பொருளைத் தெளிவாக ஓர்ந்து உணர்ந்து கொள்ளும்படி இந்த உவம வாசகம் ஈண்டு வெளியாயுள்ளது.

உலகத்தையும் தன்னையும் கடவுளையும் அறிந்து தெளிந்து பாசபந்தங்கள் ஒழிந்து பரம சிந்தனையோடு உயர்ந்திருந்தாலும்

சில ஞான யோகிகள் உலக மக்களைப போலவே பல வழி களிலும் பழகித தொழில்களை நடததி வருவா

தீரராயப பிரம விததாயக தெளிநதவா தெளியு முனனம
வாரமாய இருநத தஙகள வருணம ஆசசிரமம் சொன்ன
பார காரியம ஆனாலும பலாககுப கார மாக
நேரதாச செயவா தீாநத நிலைவிடாா சீவன முததா (1)

காமம ஆதிகள வநதாலும கணததிலபோம மனததில பறறா
தாமரை இலைததண ணீாபோல சகததொடும கூடி வாழவாா
பாமரா எனககாண பிபபாா பணடிதத திறமை காடடாா
ஊமரும ஆவாா உளளத துவகைகயாம சீவன முததா. (2)

பேதகா மததால வநத பிராரததம நாநா வாரும
ஆதலால விவகா ரஙகள அவரவாககு ஆவ ஆகும
மாதவம செயினும செயவாா, வாணிபம செயினும செயவாா,
பூதலம புரபபாா ஐயம புகுநதுணபாா சீவன முததா (3)

சென றது கருதாா, நாளை ச சோவது நினையாா, கணமுன
நின றது புசிபபாா, வெயயில நிலவாய விணவிழுது வீழநது
பொன றின சவம வாழநதாலும புதுமையா ஒனறும பாராா
நனறுதீது எனறு சாடசி நடுவான சீவன முததா. (4)

(கைவலலியம)

இநதப பாசுரஙகள இஙகே நன்கு சிநதிசகத தககன. பாச பநதஙகள நீஙகிப பேரினப முததியை அடைய நோநதுள்ளவா சீவன முததா என நினறாா. உளளததில பறறு அறறிருநதாலும் உடலோடு கூடியுளள அளவும உலக மககளைப போலவே பல தொழிலகளையும செயது அவா உலாவி வருவா. தாமரை இலை தணணீரிலிருநதாலும சலம அதில் ஏறாது, சீவன முததா உலகத திலிருபபினும பாச பநதஙகள அவா உளளததில் பறறா ஆதலால் தாமரை யிலைத தணணீா போல சகததோடும் வாழவாா என்றார்.

எல்லா அறிவுகளும ஆறறல்களும ஒருங்கே நிறைந்திருந் தாலும் யாதும் தெரியாதவா போலவே எளியராய அவா அடஙகி யிருப்பர்.

பாமரா எனக் காண்பிப்பாா; பணடிதத திறமை காட்டாா்.

தததுவ தரிசிகளான சீவன முததா இததகைய நிலைகளில் இருந்து வருவது சிததக விஞ்ஞைதமாய விளைநது வருகிறது.

சனகன், சடபரதர் முதலிய ஞான சீலர்கள் இந்த நிலையில் ஒழுகி வந்துள்ளனர். விஞ்ஞை = பிரமவித்தை. அவிஞ்ஞை = அவித்தை. விஞ்ஞை மந்திரங்கள் பலவும் தெளிந்த வித்தகன் பஞ்ஞைபோல அமைந்து போனதை நெஞ்சம் தெரிய விளக்கினார்.

சகல கலைகளையும் ஓதி உணர்ந்தவன், அதிசயமான சித்திகளையுடையவன், அற்புத ஆற்றல்கள் எல்லாம் நிறைந்துள்ளவன், அத்தகைய அனுமான் ஒன்றும் தெரியாத எளிய பேதைபோல அடங்கி அரக்கர் பிணிப்புகளில் ஒடுங்கிப் போனதற்குக் கவி இங்கே உவமை காட்டியிருப்பது உணர்வின் சுவையாய் உவகை சுரந்துள்ளது.

தான் கருதிய மாத்திரத்தில் எதையும் செய்ய வல்ல ஒரு ஞான சித்தனை மூடமக்கள் பலர் கூடி வளைந்து கேலிகள் செய்து பரிகாசம் புரிந்து வருவதுபோல பஞ்ச பூதங்களையும் கடந்துசெல்லவல்ல அதிசய விஞ்ஞன அனுமானை அறிவிலிகளான அரக்கர்கள் ஆர்த்து ஈர்த்து ஆரவாரங்கள் செய்து யாவரும் பார்த்துச் சிரிக்கும்படி தெருக்கள் தோறும் நடத்திக் கொண்டு போனார். அவர் களித்துப் போக இவன் ஒளித்துப் போனான்.

## வாலில் தீ வைத்தது

நாலுவீதிகளும் கூடுகின்ற நெடிய சந்தி ஒன்றில் அனுமானை நிறுத்தினார். அரக்கர் திரள்கள் எல்லை காண முடியாதபடி யாண்டும் நீண்டு நெருக்கி நின்று வேடிக்கை பார்த்தனர். ஊரார் எல்லாரும் வந்து பார்க்கும்படி பெரிய முரசங்களை முழக்கினார். அதன்பின் சேனைத்தலைவன் ஒருவன் தீப்பந்தம் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு அனுமானைச் சுற்றி வந்து வாலில் பொதிந்திருந்த எண்ணெய்த் துணியின் நுனியில் தீயை வைத்தான். தீ பற்றிக்கொண்டது. எல்லோரும் கைகளைத் தட்டி அண்டம் வெடிக்க ஆரவாரித்தனர். மீண்டும் நீண்ட வீதி வழியே அனுமானை விரைந்து கொண்டு போயினார்.

வேந்தன் கோயில் வாயிலொடு விரைவிற் கடந்து வெள்ளிடையின்
போந்து புறநின் றிரைக்கின்ற பொருநர் தீர மறவர் புறஞ்சுற்ற
ஏந்து நெடுவால் கிழிசுற்றி முற்றும் தோய்த்தார் இழுதெண்ணெய்
காந்து கடுந்தீக் கொளுத்தினார் ஆர்த்தார் அண்டம் கடிகலங்க. (1)

அந்த நகரும் கடிகாவும் அழிவித்து அக்கன் முந்தலாயோ
சிந்த நூரிச் சீதையொடும் பேசி மனிதர் திறம் செப்ப
வந்த குரங்கிற்கு உற்றதனை வெம்பின காண வெம்மெனவு
தங்கம் தெருவும் வாயில் தொறும் யாரும் அறியச் சாற்றினார் (2)

ஆர்த்தார் அண்டத்து அப்புறத்தும் அறிவிப்பார் போல் அங்கோடியரு
ளார்த்தார் முரசம் சாற்றினார் இடித்தார் தெழித்தார் எப்பமருங்கும்
பார்த்தார் சூடிச் சானகிக்கும் பகர்ந்தார் அவன்றன் உயிர்ப்பைக் கைக்கதாள்
வேர்த்தாள் உலர்ந்தாள் விம்மினாள் விழுந்தாள் அழுதாள் வெய்து
[யிர்த்தாள்

தாயே அனைய கருணையானை நலானையை ஏதும் நக்கவில்லை
நாயே அனைய வல்லரக்கர் நலியக் கண்டால் நல்காயோ?
நீயே உலகுக்கு ஒருசான்று நிற்றே தெரியும் கற்புக்கனில்
தூயோன் என்னின் நெருப்பே நின்னே தீயே அவனைச் சுடல் என்றாள்

அனுமான் வாலில் தீயைக் கொளுத்தி இழுத்து அரக்கர்கள் செய்திருக்கிற ஆரவாரங்களையும், அந்தக் கொடிய கோரச் செயலைக் கேட்டு சீதை துடித்திருக்கிற துடிப்புகளையும், பின்பு தேறி அக்கினி தேவனைத் தொழுது வேண்டி உருகி உரைத்திருக்கும் நிலைகளையும் இங்கே கண்டு செறிந்து கருதி உளைந்து ஏங்கி மயங்கி உறுதி முடிவுகளை ஓர்ந்து தெரிந்து விரைந்து நிற்கிறோம்.

யாண்டும் கலங்காத போர் வீரனான அனுமானை இலங்காபுரியின் வீதிகளிடையே அரக்கர் ஆரவாரித்து ஈர்த்துப் போயிருப்பதைப் பார்த்துப் பார்த்து நாம் பரிந்து உளைகின்றோம். அவன் யாதும் வருந்தாமல் உவந்து போயிருக்கிறான். தன் வால் நுனியில் வைத்த தீயை இராவணனுடைய ஊர் முழுதும் வைத்து எரித்தழிக்க வேண்டும் என்று உள்ளம் துணிந்து மறைவாய்ச் சிரித்துக் கொண்டே அவ்வீரன் சிங்க ஏறு போல நடந்து போனான்.

எதிரிகள் கையில் அகப்பட்டு அவன் எரிக்கப் படுகிறான் என்று கேள்விப்படவே சீதை தீயில் விழுந்தவள் போல நோயுழந்து துடித்தாள். "ஆ! தெய்வமே! சுத்த வீரனான அந்த உத்தமனுக்கா இத்தகைய கேடு நேரவேண்டும்? தாயினும் இனிய கருணையுடைய தூயவனை நாயினும் இழிந்த கொடிய அரக்கர்கள் சுடு தீயை மூட்டிக் கொல்ல நேர்ந்தால் தரும தேவதைகளே! நீங்கள் எல்லாரும் பார்த்துக் கொண்டா இருக்கிறீர்கள்?

தீயே நீயும் கூடவா சேர்ந்து கொண்டாய்! நீதியை உணர்ந்து தருமநெறிகளை ஓர்ந்து உடனே இந்தக் கருமவீரனைக் காத்தருள்; அக்கினி பகவானே! சத்திய நிலைகளை உலகிற்கு எடுத்துக் காட்டுகிற அரிய பரிசோதகன் நீ, யாண்டும் நீதியின் சாட்சியாய் நிலைத்து நிற்கின்ற நீ மகா நீதிமானான அனுமானை யாதும் சுடாமல் ஆதரித்தருளுவாய்! என்று நம்பியுள்ளேன், உன்னைத் திசை நோக்கிக் கும்பிடுகிறேன், என்னுடைய உயிரை எனக்கு அருளி என்னை இனிது காத்துள்ள அந்தப் புண்ணிய உருவை நீ கருணை கூர்ந்து காத்தருள வேண்டும் என்று நான் கை தொழுது உன்னை வேண்டுகின்றேன்" என இன்னவாறு சானகி பன்னிப் பதைத்து உள்ளி உருகி தெய்வங்களைவேண்டி மறுகியிருக்கிருள்.

கற்பதனில் தூயேன் என்னில் தொழுகின்றேன்,
எரியே அவனைச் சுடல்!

இறுதியில் இவ்வாறு ஆணையிட்டு வேண்டியுள்ளாள். நான் உண்மையான பதிவிரதையானால் அனுமானை யாதும் சுடாதே! என்று தீக்கடவுளை நோக்கிச் சீதாதேவி இங்ஙனம் பரிந்து கூறவே அக்கினி பகவான் அஞ்சி யருளினன்.

தீயுள் அகப்பட்ட பிள்ளையை நினைந்து பெற்ற தாய் துடித்துள்ளது போல தேவி ஆவி அலமந்துள்ளமையால் அந்த அன்புரிமையை அறிந்து கொள்ளுகிறோம்.

இந்தக் கற்புத் தெய்வம் இப்படி மனம் உருகி வேண்டவே அந்தத் தீத் தெய்வம் உள்ளம் நடுங்கி உடனே ஒடுங்கி அருளினன். அருளவே இயல்பான சூடு நீங்கியது, அயலான குளிர் ஓங்கியது. வாலின் வெளியே மேலெல்லாம் தீ வீசி எரிந்தாலும் அனுமான் உடல் பனி வெள்ளத்தில் மூழ்கியது போல் கடுங் குளிராய் நடுங்க நேர்ந்தது.

வெளுத்தமென் நகையவள் விளம்பும் எல்லையில்
ஒளித்தவெங் கனலவன் உள்ளம் உட்கினன்
தளிர்த்தன மயிர்ப்புறம் சிலிர்ப்பத் தண்மையால்
குளிர்த்ததக் குரிசில்வால் எனப் புகரவே

அன்பு கூர்ந்து சானகி வேண்ட அனலவன் புனலவன் போல் நண்பு கூர்ந்து இங்ஙனம் நலம் புரிந்துள்ளான். "தீயே!

நான் தூயேன் என்னில அவனைச் சுடாதே!" என்றுதான் பிராட்டி சொன்னாள், தீ சுடாமையோடு பெரிய குளிர்ச்சியை யும ஊட்டியுள்ளது. கறபுத தீ ஊழித தீயினும உககிரமுடை யது ஆதலால் அநதக் கறபரசி சொல்லைக் கேட்டதும் கனலர சன் இப்படி ஆவலோடு அரிய ஏவல செயய நேரநதான.

கறபின மகிமை

அறபுதக் கறபுடைய சீதையின் அரிய மகிமை இங்கே தெரிய வந்துளளது .எல்லைநீதத உலகஙகள யாவும என சொல் லினால சுடுவேன என இத தூயவள முனனம சொலலியதும் இங்கே உளளி யுணரவுரியது. கறபு அரிய பராசததியின நீரமை ஆதலால் அதனை நிரே பஞசபூதஙகளும அஞசி அடஙகுகினறன.

என்றும எரியும இயலபுடைய தீ இததூயவள சொலலுககு அடஙகி அனறு குளிரநதருளியபோது உலகில் நிகழநத நிலைகளை அயலே வரும கவிகளில காண வருகிறோம.

மறறினிப பலஎன? வேலை வடவனல புவிய ளாய
கறறையங கனலி மறறைக காயததீ முனிவ ராககும
முறறுறும முமமைச செநதீ முப்புரம முருஙகச சுட்ட
கொறறவன நெறறிக கணணின வனனியும குளிரநத அனறே (1)

அணடமும கடநதான அஙகை அனலியும குளிரநதது, அஙகிக
குணடமும குளிரநத, மேகத துருமெலாம குளிரநத, கொறறச
சணடவெங கதிர வாகித தழஙகிருள விழுஙகும நாவில
மணடலம குளிரநத, மீளா நரகமும குளிரநத மாதோ! (2)

வெறபினை இயனற கனன மேனியை விழுஙகி வெநதீ
நிறபினும சுடாது நினற நீரமையை நினைவின நோககி
அனபினா அருந்த சிநதை அனுமனும சனகன பாவை
கறபினால இயனற தெனபான பெரியதோர களிபபின ஆனான் (3)

அறறைஅவ இரவில தான்தன அறிவினால முழுதும உனனப
பெறறிலன எனினும ஆணடொனறுளளாது பிழையு ளுமே
மறறுறு பொறிமுன் செலல மறைநதுசெல அறிவு மரனக
கறறிலா அரககா தாமே காட்டலின தெரியக கணடான. (4)

முழுவதும தெரிய நோககி முறறுமஊர முடிவில சென்றுன்
வழுவுறு காலம ாதெனறு எணணினன வலிதிற பறறித
தழுவினன இரணடு நூருயிரமபுயத தட்கைத தாமபோடு
எழுவென நால் விணமேல எழுநதனன விழுநத எல்லாம். (5)

இற்றவாள அரக்கா நூருயிரவரும இழநத தோளாா
முறறினா உலநதாா ஐயன மொயமபினேடு உடலே மூழகச்
சுறறிய கயிறறினேடும தோனறுவான அரவின சுறறம
பறறிய கலுழன எனனப பொலிநதனன விசும்பின பாலான (6)

துனனலா புரககை முறறும சுடுதொழில் தொலலே யோனும
பனனின பொருளும நாணப பாதகா இருக்கை பறற
மனனனே வாழகதிப பினனே வயஙகெரி மடுபபொன எனனப
பொனனகா மீதே கன்போர வாலினைப போக விடடான் (7)

வெளளியிற பொனனின நாறு விளஙகுபொன மணியின்விளைச
கொளளிய கடவுள தசசன கைமுயனறு அரிதிற செயத
தளளாறு மனேகள தோறும முறைமுறை தாவிச செனறு ன
ஒளளரி யோடிய குனறகது ஊழிவீபு உருமோடு ஒபபான (8)

நோநதுளள நிகழசசிகளே மானச நோககால நேரே கண்டு நிலைமைகளை ஓாநது கொளளுகிறேம. பிராடடி பரிநது பணிதத ஆணையை உவநது அககினி பகவான விரைநது அடஙகினை, வெபபம மாறி யாணடும தடபம ஓஙகியது தன இயலபை மாறறி அககினி குளிரவே உலகம எஙகும குளிாசசி பரவியது நெருபபுகளாய நிலைததுளள இடஙகள எலலாம குளிாநது தணணிய நீாமைகள தழைதது நினறன

சிவபெருமான கையிலிருநத அனல மழுவும குளிாநதது; நெறறிககண நெருபபும குளிாநதது, ஊழிததீ முதலிய யாவும குளிாநதன எனறது அககினியின அதிசய நீாமையையும, தேவியின திவவிய மகிமையையும உலகம காணக காடடியருளியது

தனனுடைய வாலில பறறிய தீ மேலே படாநது விரிநது வீசி எரிநதாலும உளளே யாதும சுடாமல எனபும குளிரும்படி அனபு செயதிருநதமையை நினைநது முதலில அனுமான வியநதான பினபு இது அமமையினுடைய திருவருளால நோநதது எனறு தெளிநது பெரு மகிழவு கொணடான

சனகன பாவை கறபினுல இயனறது

எனறு கருதிக கொளளவே உளளே பெரிய மகிழசசி பொஙகி எழுநதது. தன வாலில அரககா தீயை வைதத வுடனே அக்கினித தமபனம எனனும விஞசை மநதிரததைச செபிதது உடலில சூடு தாககாதபடி செயது கொணடு அதி விரைவில இலஙகை முழுவதையும கொளுததி விட வேணடும எனறு உக்

கிர வேகமாய்த் துணிந்து நின்ற மாருதி வெப்பம் யாதும் இல்லாமையோடு உடம்பெல்லாம் கடுங்குளிராயக் கலந்துள்ளமையை உணாந்ததும் பிராட்டியின் கற்பு மகிமையால் இந்த அற்புதம் விளைந்துள்ளது என்று தெளிந்து கொண்டான், கொள்ளவே பேரானந்தமடைந்து அமைதியாய்நின்று மெல்ல வேலைசெய்யலாம் என்று உள்ளந் துணிந்து உவகை மீதூர்ந்து சென்றான்.

"நம்முடைய ஊரில் வந்து நமமவா பலரைக் கொன்று உக்கிர வீரமாய அக்கிரமங்கள் செய்த பொல்லாத குரங்கு அகப்பட்டுக் கொண்டது; அதன் வாலைச் சுட்டுப் போக்கி ஊரை விட்டு ஓட்டப் போகிறோம், எல்லாரும் வந்து பாருங்கள்!" என்று தங்கள் அடலாண்மைகள் தெரியப் பறை சாற்றி முழக்கி யாவரும் திரண்டு காணும்படி செய்து மாருதியை அரக்காகள் இடங்கள் தோறும் ஈாத்துப் போயினா. அங்ஙனம் போங்கால் இச் சிங்க ஏறு எல்லா நிலைகளையும் கண் ஊன்றிப் பாாத்துப் போனான். அவருடைய போக்கும் இவனுடைய நோக்கும் கவருடையனவாயக் கலந்து நின்றன

முன்பு வந்த அன்று இரவு சீதையை நாடி ஊா முழுவதும் தேடியலைந்த பொழுது காணாத இடங்களையெல்லாம் இப்பொழுது நேரே கண்டு கொண்டான் ஆதலால் உள்ளே களிப்பு மிகுந்து போனான். அவா இளிப்புடன் இழுத்துச் செல்ல இவன் களிப்புடன் கரந்து நோக்கி உவந்து சென்றான்.

> மற்றுறு போறிமுன் செலல மறைந்துசெல அறிவு மானக
> கறறிலா அரக்கா தாமே காட்டலின் தெரியக் கண்டான.

இலங்கை வீதி வழியே ஈாத்துச் செல்லுகிற அரக்கரையும், யாவும் அதி விநயமாயப் பாாத்துப் போகிற அனுமானையும் கவி நமக்கு இவ்வாறு காட்டி யிருக்கிறாா உவமான நயங்கள் உணருந்தோறும் உவகை சுரந்து வருகின்றன. அரிய கலையின் சுவைகளை எவ்வழியும் அவா வாரி வீசி வருகிறாா, இடங்கள் தோறும் செவ்வையாக நாம அள்ளி நுகாந்து மகிழ்கிறோம.

நெருப்பு குளிாந்தது என்று சொல்ல நோந்த போது குறித்துள்ள குறிப்புகள் எல்லாம எவ்வளவு சிறப்புகளை விளக்கி நிற்கின்றன! விரிக்க விரும்பாமல விரைந்து செல்லுதலால் கருதது

களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். முத்தீயும் குளிர்ந்தன, எத்தீயும் தண்மையாயின, முப்புரம் சுட்ட கொற்றவன் நெற்றிக் கண்ணும் குளிர்ந்தது என்றது எத்துணை வியப்பு!

கண் காது முதலிய பொறிகளின் வழியே புகுந்து அறிவு பொருள்களை அறிந்து கொள்ளுகிறது. அரக்கர்கள் மூலமாக இலங்காபுரியின் அரிய இரகசியங்களையெல்லாம் அனுமான் தெளிவாய் அறிந்து போகிறான் ஆதலால் அறிவு இவனுக்கு உவமையாய் வந்தது. பொறிகள் காணுமே அன்றிக் கருத்தை உணராது ஆதலால் உணர்விலிகளாகிய நிருதர்களுக்கு அவை நேராயின. பொறிகள் இழிவான புலை நிலைகளில் உழலும், அறிவு உயர்வான உறுதி நலங்களை மருவி மகிழும் இன்னவாறு பல உண்மைகளை நுண்மையாக உணர்ந்து கொள்ளும்படி இவ் உவமானங்கள் ஈண்டு உருவாகி யுள்ளன.

தங்களை அடியோடு அழித்தொழிக்க வந்துள்ள வலிய பகைவனுக்குத் தங்கள் ஊரின் மருமங்களையெல்லாம் நேரே கொண்டு வந்து காட்டுகின்றார்கள் மடையர்கள் என இராக்கதர்களுடைய மடத்தனத்தைக் குறிப்பாகச் சுட்டிக் காட்டுகிறார் ஆதலால் கற்றிலா அரக்கர் என்றார் தாமே என்றது தங்கள் அழிவுக்குத் தாங்களே வழி கோலி வைத்ததை விழி தெரிய விளக்கியது தங்களை ஒருங்கே அழிக்க வந்துள்ள உண்மையை உணர்ந்து கொள்ளாமையால் உள்ளம் களித்துச் சென்றார். அக் களிப்பு இளிப்புற வந்தது. அதி மேதையான அற்புத வீரனை முழு மூடர்கள் முரட்டுத்தனமாய் இலங்கைத் தெருக்களில் இழுத்துப் போயினர் என்பதை இப்படி விழுமிய நிலையில் விளக்கியருளினர்

தாங்கள் வாலில் வைத்த தீயை இலங்காபுரியுள் இன்ன இன்ன இடங்களில் இன்னவாறு வை என அனுமானுக்குச் சுட்டிச் சொன்னது போல ஊரின் நிலையங்களையெல்லாம் நேரே காட்டி இராக்கதர் அவனைக் கட்டிக் கொண்டு போயினர்.

## விண்மேல் எழுந்தது

ஊர் முழுவதையும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து போன அவ் வீரன் முடிவான ஓர் இடத்தை அடைந்ததும் மேலே தாவிப் போக விரைந்தான், இருமருங்கும் விரிந்து நூறாயிரம் பேர் இர

ண்டு கயிறுகளைப் பிடித்து நின்றார் ஆதலால் இரண்டு கைகளா லும் கோதி மேலே வேகமாய்த் தாவினான் அதி விரைவாய் வெட்டித் தாவவே பாசங்களைப் பற்றியிருந்த கைகள் யாவும் இற்று அயலே தொங்க யாவரும் செத்து விழுந்தனர் வெற்றி வீரன் விரைந்து விண்மேல் விளங்கினான் பாம்புத் திரள்களைப் பற்றிக் கொண்டு ஆகாயத்தில் வட்டமிடுகிற கருடனைப் போல கைத்தாம்புகள் பக்கம் எங்கும் சூழ்ந்து தூங்கித் தாழ்ந்தசைய வானில் ஓங்கிய அனுமான் அங்கு ஓர் ஒன்பதடுக்கு மாளிகை மேல் பாய்ந்து நின்றான் நின்றவன் தனனுடைய வாலை நீள நீட்டினான் தீயோடு சொலித்திருந்த வால் சென்ற இடமெல லாம் செந்தீ பற்றிக் கொண்டது திரிபுரத்தைத் தகித்த சிவபெரு மானுடைய அக்கினிக் கணை போல அனுமானுடைய வால் இலங்கையை எரித்தது. யுகாந்த காலத்தில் நெருப்பால் உலகங் களையெல்லாம் அழித்தற்குச் சருவ சங்கார மூர்த்தியான உருத்திரன் நெருப்பைக் கொளுத்தி முதலில் பயிற்சி பெறுவது போல அனுமான் அன்று இலங்காபுரியை உல்லாச விநோதமாய் எரித்து உலாவினான்.

## தீ மூண்டது

தன் வாலில் வைத்த தீயை ஊர்முழுவதும் வைக்க விரும்பி மாடங்கள்தோறும் மாருதி தாவிப் பாய்ந்தான் தீச் சுவாலை யோடு இவ் வீரன் குதிக்கக் குதிகள் ஊழிக் காலத்து இடிகள் மின்னலோடு கூடி விழுவதுபோல மேவி எழுந்தன. யாண்டும் விரைந்து பாய்ந்து வாலை நீட்டி வேலை செய்ததையால் எங்கும் தீ மூண்டு கொண்டது. உலகில் நெடுங்காலமாக வேள்விகள் நடவாதபடி அரக்கர்கள் இடையூறு செய்து வந்தனர், யாகங்க ளில் உண்டுவந்த அவியுணவு கிடையாமல் அக்கினி பகவான் கொடிய பசியோடு நெடிது வாடி யிருந்தான். அந்தக் கோப மும் தாபமும் தணிய அரக்கர் ஊரை இன்று அவன் வாரிப் புசிக்க நேர்ந்தான்.

நீல்நிற நிருதர் ஈண்டு நெய்பொழி வேள்வி நீங்கிய
பாலவரு பசியன என்பான் மாருதி வாலைப் பற்றி
ஆலம் உண்டவன் அன்று ஊட்ட உலகெலாம் அழிவினுண்ணும்
காலமே என்ன மனனே கனலியும் கடிதின் உண்டான்.

நெருப்பு இலங்கையில் விருப்பமாய் விரைந்து எரிந்தநிலையை இங்ஙனம் வரைந்து காட்டினார். கடும் பசியுடையவன் உணவைக் கண்டபோது ஆவலோடு அள்ளிப் புசிப்பதுபோல இலங்காபுரியை அக்கினி பகவான் அன்று உவந்து உண்டிருக்கிறான். அநுமான் வாலை நீட்டு முன்னே அக்கினி நாவை நீட்டி ஊரை விழுங்கி எரித்திருக்கும் வேகங்களை விழியெதிரே தெளிவாகக் காண இங்ஙனம் விளக்கியருளினார். நெடுங்காலமாக அரக்கர்கள் செய்து வந்த தீமைகள் யாவும் ஒருங்கே திரண்டு அன்று அந்தக் கொடுந் தீயாக அடர்ந்தெழுந்து ஊரெல்லாம் படர்ந்தெரிந்தது. உள்ளவர் செய்து வந்தது ஒள்ளெரியாய்த் துள்ளியெழுந்து உற்ற இடங்களை எல்லாம் சுட்டழித்தது.

சரித்திர நிகழ்ச்சியில் அரிய பல உணர்ச்சிகளை விளைத்தருளுவது விசித்திர நிலைகளாய் விளங்கி வருகிறது. கொடிய பாவிகள் குடியிருக்கிற ஊர் முடிவில் அடியோடு நாசமடைந்து போம் என்பது இங்கே நன்கு தெரிய வந்தது.

## இலங்கை எரிந்த நிலை

மாடங்கள் மீது தாவி இடங்கள் தோறும் பாய்ந்து அநுமான் தீயை வைக்கவே இலங்கை எங்கும் நெருப்பு விரைந்து படர்ந்து எரிந்தது. கொடிகளைப் பற்றியும், விதானங்களைக் கொளுத்தியும், தூண்களைத் தழுவியும், சன்னல்களுள் நுழைந்தும், வாசல்களை வளைந்து மேலும் கீழும் மாளிகைகள் எங்கணும் மேவிப் படர்ந்து தீ தாவி எரிந்தமையால் யாண்டும் புகைக் காடுகள் மண்டி யெழுந்தன. குடிசனங்கள் யாவரும் கூவி யலறி வெளியேறி ஓடினர். அயலிடங்களில் யாண்டும் விரைந்து போக முடியாதபடி நெருப்பு நெடிய சுவாலைகளை வீசிக் கடுமையாய் எரிந்தமையால் அரக்கர் பலர் மாண்டு மடிந்தனர். தேர்கள் யானைகள் குதிரைகள் முதலியன யாவும் பந்தி பந்தியாய் எரிந்து படு நாசம் ஆயின. பெண்களும் ஆண்களும் பிள்ளைகளும் தீயுள் அகப்பட்டு அல்லல்பல அடைந்து அலமந்து தவித்தனர். புகைப் படலங்கள் எங்கும் மண்டி யாண்டும் நீண்டு அடர்ந்து நிமிர்ந்து நின்றமையால் ஒருவர் போனவழி ஒருவர் அறியாமல் மனைவியும் மக்களும் கணவரும் ஒக்கலும் மறுகித் துடித்தனர்.

வான கததை நெடுமபுகை மாயததலால
போன் திககு அறியாது புலமபினா
தேன கதத மலாபல சிநதிய
கான கதது மயில அனன காடசியாா (1)

கூயககொ ழுஙகலல குஞசியில கூநதலில
மீசசொ ிநதன மாதரும வீரரும
ஏயதத தனமையி னுலஎரி இனமையும
தீககொ ளுநதின வுமதெரி கினறிலாா (2)

இலலில தஙகு வயஙகெரி யாவையும
சொலலில தீாநதய போலவன தொலலுருப
புலலிக கொணடன மாயைப புணாபபறக
கலவித தமமியலப எயதும கருததாபோல (3)

பொடித தெழுநது பெருமபொறி போவய
இடிககு லஙகளின வீழதலும எஙகணும
வெடித்த வேலை வெதுமபிட மீனகுலம
துடிதது வெநது புலநதுயிா சோாநதவால (4)

உரையின முநதுலகு உணணும எரிஅதால
வரை நிவநதய பனமணி மாளிகை
நிரையின நீணெடுஞ சோலையின நிறதுமோ
தரையும வெநதது பொனனெனும தனமையால (5)

பேயம மனறினில நினறு பிறஙகெரி
மாயா உணட நறவு மடுககதால
தூயா எனறவா வைகிடம துனனிறல
தீயா அனறியும தீமையும செயவரால (6)

ஊனில ஓடும எரியொ டுயஙகுவாா
கானில ஓடும நெடுமபுனல காணஎனு
வானில ஓடும மகளிா மயஙகினா
வேனில ஓடருந தேரிடை வீழநதனா. (7)

எழுநது பொறறலதது ஏறலின நீளபுகைக
கொழுநது சுறற உயிாபபிலா கோளுமுறறு
அழுநது படடுளா ஒததயாந தாரழல
விழுநது முறறினா கூறறை விழுஙகுவாா (8)

(இலஙகை எரியூடடு படலம)

நெருப்பு எரிந்துள்ள நிலைகளும், இலங்கை பட்டுள்ள பாடு-களும, அரககாகள அழிநதிருககும் அழிவுகளும், அவல்த் துய

ரங்களும் அளவு கூறலரியன, ஓரளவு இங்கே காட்டப்பட்டுள்ளன. மேலே வந்துள்ள கவிப் படங்களைக் கூர்ந்து நோக்குவார் எவரும் துன்பக் காட்சிகளை நேரே ஓர்ந்து கொள்ளுவார்.

என்றும் இன்பமாய் எழில் நிறைந்திருந்த நகரம் அன்று தீ மூண்டு பற்றி யாண்டும் எரித்தழிக்கவே எங்கும் துன்பத் துடிப்புகள் நீண்டு துயர அழுகைகள் பெருகி நின்றன.

பொன் கொண்டு இழைத்து மணிகள் அழுத்தி அதிசய நிலைகளில் தெய்வத தச்சன் திவ்வியமாகச் செய்திருந்த மணி மாடங்கள் எல்லாம் எரிந்து உருக்குலைந்து கரிந்து வீழ்ந்தன. வாசலில் இட்ட தீ மாளிகைக்குள் மூச்சு முட்டியதால் மகளிர் யாவரும் ஊசலிட்டு உளைந்து பின்பு வெளியேறிப் பூசலிட்டு ஓடினர் பலர் தீயில் அகப்பட்டு மாண்டனர் புகையுள் சிக்கி மூச்சு முட்டிப் பேச்சிழந்து செத்தனர். தீயின் வெப்பம் பொறுக்க முடியாமல் சிலர் கடலில் பாய்ந்து மாய்ந்தனர். உடலில் பற்றிய நெருப்போடு அரக்கரும் அரக்கியரும் அயலே ஓலமிட்டு ஓடினர் கானக மயில் போன்ற அழகிய மங்கையர் அனலுக்கு அஞ்சி வானக வழியே மேலே போயினர், போனவர் வேனிலால் விளைந்த கானலை நீர் என்று எண்ணிக் கடிது வீழ்ந்து மாண்டனர் எரி புகைகள் விரியவே அழிதுயரங்கள் யாண்டும் பெருகின ஊருள் இடையிடையே இருந்த அழகிய குளிர் பூம் பொழில்கள் எல்லாம் பொரிந்து கரிந்தன. பூவும் தளிரும் காயும் கனியும் யாவும் பாழாய்க் காவினங்கள் எங்கும் அடியோடழிந்தன மாவினங்கள் மறுகி மாண்டன, ஆவினங்கள் அலறி ஓடின. மடந்தையர் பலர் வெளியே வரமுடியாமல் உள்ளேயே மாண்டு மடிந்து நீண்டு கிடந்தனர்.

அடுப்பு முதலிய இடங்களிலிருந்த சிறு நெருப்புகள் எல்லாம் அனுமான் இட்ட பெருந் தீயோடு சேர்ந்து உற வுரிமையாய் ஒருங்கே ஒளி செய்து ஓங்கின.

பந்த பாசம் நீங்கியவுடன் சீவான்மா பரமான்மாவோடு கலந்து சோதிச் சுடராய்ப் பிழம்பாய்த் தோன்றுதல் போல் மனைகளுள் ஒடுங்கியிருந்த தீ ஊரின் தீயோடு பொருந்தி ஒருருவாய்ப் பேருருவடைந்தது.

மங்கையைப் புணர்ப்பு அறத் தம் இயல்பு எய்தல்போல்

சின்னத் தீ பெரிய தீயோடு சேர்ந்து கொண்ட நிலையைச் சொல்லும் போதே இன்னவாறு ஓர் அரிய பெரிய உண்மையை உணர்த்தி யுள்ளார். அரக்கர்களுக்குச் சோறு முதலியன ஆக்கித் தந்து இராவணன் ஆணைக்கு அஞ்சி யாவருக்கும் ஊழியம் புரிந்து வந்த நெருப்புகள் அன்று அந்தக் கட்டு நீங்கி உரிய தீக் கடவுளோடு மருவி அரிய ஆற்றலை அடைந்து நின்றமை தெரிய வந்தது.

எல்லா இடங்களிலும் எரித்து வந்த தீ கள் சாராயம் முதலிய இழிந்த பான வகைகள் நிறைந்திருந்த சாலைகளையும் தகித்து எரித்தது. பரிசுத்தமான தீத் தெய்வம் இழிவான அந்தத் தீய பானங்களையும் ஒருங்கே உண்டு ஒழித்ததே! மானக் கவி வருந்தி யுரைத்துள்ளது ஈண்டு அறிந்து மகிழ வந்தது.

தூயர் என்றவர் வைகிடம் துன்னினால்
தீயர் அன்றியும் தீமையும் செய்வரால்.

என்றும் தூய்மையாயுள்ள நல்லவர்கள் தீயவர் இருக்கும் இடத்தை அடைந்தால் தீயராய் மாறித் தீமைகளையும் செய்ய நேர்வர் என்ற தீய சேர்க்கையின் தீமையை இங்ஙனம் விளக்கியிருக்கிறார். பேயம் = மதுபானவகை. அரக்கர்கள் பெருங் குடியர் ஆதலால் அந்தக் குடி வகைகள் மருவியிருந்த மாடங்களும் எரிந்து போயின. நறவுக் குடங்கள் நாசமாய் அழிந்து போனமையால் அவற்றைத் தீயுண்டதாகக் காட்டி இந்த நீதியை இங்ஙனம் ஊட்டியருளினார்.

கோரமான தீ விபத்துகளைக் கூறும்பொழுதும் நல்ல உறுதி நலங்களை உரைத்தருளுவது கவியின் உள்ள நீர்மையைத் தெள்ளத் தெளிய விளக்கி நிற்கிறது.

தீயவர்களோடு சேராதீர்கள், கெட்ட இடங்களுக்குப் போகாதீர்கள், பாச பந்தங்கள் நீங்கி ஈசனை அடைந்து கொள்ளுங்கள் என்னும் தத்துவ போதனைகள் இங்கே உய்த்துணர வந்துள்ளன. உறுதி நலங்களைக் கருதி ஓர்ந்து கொள்ளுக.

இலங்கை எரிந்த நிலையைச் சொல்லுவதிலேயே இராக்கதர்களுடைய செயல்களும் இயல்களும் பழக்க வழக்கங்களும் தெரிந்து கொள்ள நேர்ந்தன,

சிவந்து அடர்ந்த சுருண்ட குஞ்சியர் ஆதலால் அரக்கர்களுடைய தலையில் நெருப்புப் பிடித்ததும் பிடியாததும் தெரியாமல் மறுகி ஓடி மயங்கி அலமந்தனர்.

நெஞ்சில் ஈரமும் நீதியும் குடிபுகா நிருதர் சென்னியில் வன்னி
குஞ்சிநீடுறவளாவபோல் அசைந்துசெங்கொழுந்துவிட்டனமேன்மேல்
வஞ்சி நேரிடை அரக்கியர் நகமுழு மதிசிவப்பு புறத் தீட்டும்
பஞ்சி போன்றன அவரவர் பதயுகம் பற்றிய சிகை வன்னி.
(பாரதம், காண்டவதகனம், 23)

அருச்சுனன் காண்டவ வனத்தை எரித்தபோது அங்கே எழுந்த நெருப்பின் கொழுந்தைக் குறித்த படியிது. இரக்கம் அற்ற அரக்கர் குஞ்சி போல செந்தீக்கொழுந்து எழுந்தது என்னும் இது இங்கே அறிய உரியது.

குஞ்சியில் கூந்தலில் என்றது இருபாலாருடைய தலைகளையும் நிலைகளையும் தெரிய வந்தது. வீடு வாசல்களை இழந்து தலைகளில் பற்றிய நெருப்பினராய ஆடவரும் மகளிரும் யாண்டும் நிலை குலைந்தோடி நெடுந்துயருழந்துள்ளனர்.

கூற்றை விழுங்குவார் புகையை விழுங்கி மாய்ந்தார்

என்றது எமனையும் எளிதே வெல்லவல்ல பெரிய போர் வீரர்களான அரக்கர் தீப்புகையில் சிக்கி மூச்சு முட்டிச் செத்து திருத்தலை விழி தெரிய விளக்கி நின்றது. வலிய கூற்றையும் விழுங்க வல்ல ஆற்றலுடையவரை எளிய புகை விழுங்கிக் கொண்டது என்றது அரிய அதிசயமாய் வந்தது.

கரிந்து சிந்திடக் கடுங்கனல் தொடர்ந்துடல் கதுவ
உரிந்த மெய்யினர் ஓடினர் நீரிடை ஒளிப்பார்
விரிந்த கூந்தலும் குஞ்சியும் மிடைதலின் தாமும்
எரிந்து வேகின்ற ஒத்தன எறிதிரைப் பரவை (1)

மருங்கின் மேலொரு மகவுகொண்டு ஒருதனி மகவை
அருங்கையால் பற்றி மற்றொரு மகவுபின் அரற்ற
நெருங்கி ஞெரோடு நெறிகுழல் சுறுக்கொள நீக்கிக்
கருங்கடல் தலை வீழ்ந்தனர் அரக்கியர் கதறி (2)

வில்லும் வேலும் வெங்குந்தமும் முதலிய விறகாய
எல்லுடைச் சுடர் எனப்புகர் எஃகெலாம் உருகிப்
தொல்லைநன்னிலைதொடர்ந்து பேருணர்வனைதொழிலால்
சல்லியுண்டையில் திரண்டன படைக்கலச் சாலை (3)

வெருளும வெமபுகைப படலையின மேறசெல வெருவி
இருளும் வெஙகடல விழுநதா எழுநதில பறவை
மருளின மீனகணம விழுஙகிட உலநதன மனததோடு
அருளில வஞசரைத தஞசமென்று அடைநதவ ரனைய (4)

நீரை வறறிடப பருகிமா நெடுநிலம தடவித
தாருவைச சுட்டு மலைகளைத தழறசெயது தனிமா
மேருவைப பறறி எரிகினற காலவெங கனலபோல
ஊரை முறறுவித்து இராவணன மனைபுககது துயா;தீ (5)

வான மாதரும மற்றுள மகளிரும மறுகிப
போன போனதிககு அறிகிலா அனைவரும போனா,
ஏனை நினறவா எஙகணும இரிநதனா இலஙகைக
கோன வானவா பதிகொணட நாளெனக குலைநதாா (6)

அனைய காலையின அரககனும அரிவையா குழுவும
புனை மணிபபொலி புடபக விமானததுப போனா
நினையு மாததிரை யாவரும நீஙகினா, நினையும
வினையி லாமையின வெநததவ விலஙகனமேல இலஙகை

ஆழித தேரவன அரககரை அழுலெழ நோககி
ஏழுககு ஏழென அடுககிய உலகஙகள எரியும
ஊழிக காலம வநதுறறதோ? பிறிதுவே றுணடோ?
பாழித தீசசுட வெநததென நகரெலாப பகாநதான (8)

கரஙகள கூபபினா தஙகிளை திருவொடும காணா
இரஙகு கினறவல அரககா ரியமபினா இறையோய!
தரஙக வேலையின நெடியதன வாலிட்ட தழலால
குரஙகு சுட்டதீ தெனறலும இராவணன கொதித்தான

இலஙகை தீயில் வெநதபோது நிகழநத நிகழசசிகளை இவை நேரே காட்டி யிருககினறன கொடிய கோரக காட்சிகளையும் பெரிய பரிதாப நிலைகளையும பல வகைகளிலும பாாததது வருகி றோம. தீயின சூடு பொறுகக முடியாமல அரககாகள ஓடிப் போயக் கடலில வீழநது மறைநதனா, அஙகே அவா உடலகள நிறைநது மிதநதன, சிவநத குஞசியும கூநதலும வெளியே பரநது நினறமையால கடலும தீபபறறி எரிவது போல தெரிந தது. பிளளைகளை இழுததுக கொணடு பெறறோா அலறி அலமந தனா, வேல வாள குநதம முதலிய ஆயுதங்கள எல்லாம உருகி ஒன்றாய இரும்பு மலையாயப பெருகி நினறது பறவைகள் எல்

லாம் பதறி எழுந்து மேலே புகைப் படலங்களில் பறந்து செல்ல முடியாமல் கடலில் விழுந்து மடிந்தன. அவற்றை அங்கே மீன்கள் தின்று மகிழ்ந்தன. எல்லா இடங்களையும் பற்றி எரித்த தீ இறுதியில் இராவணனுடைய அரண்மனையில் தாவி யேறி மேலோங்கி எழுந்தது. ஏழு உலகங்கள் போல எழிலமிருந்து பல அடுக்குகளோடு உயர்ந்து நின்ற அந்த அரிய அரச மாளிகைகளை நெருப்பு கவர்ந்து கொள்ளவே தனது மனைவி மக்களோடு இராவணன் விரைந்து புட்பக விமானத்திலேறி மேலே போயினன். ஏவலாளராய் இருந்த தேவ சாதியார் யாவரும் அயலே ஆகாயத்தில் ஒதுங்கினார். தனது இராசதானியாகிய அழகிய நகரம் முழுதும் ஒரே தீக்காடாய் எரிந்து விரிந்து நிற்கும் நிலையை நோக்கி இராவணன் உள்ளம் கொதித்து, "இது என்னே! யுகாந்த காலம் நேர்ந்ததா? ஊழித் தீயா இது?" என்று அயலே நின்றவரை உருத்துக் கேட்டான். அவர் உண்மையை உரைத்தார். "நாம் வாலில் வைத்த தீயை அந்தக் குரங்கு இப்படி நம ஊரில் வைத்து விட்டது" என அவர் கூறவே இராவணன் சீறிச் சினந்தான். "நமக்கு அஞ்சி அடங்கி எவ்வழியும் என்றும் ஏவல் புரிந்து வந்த அக்கினியும் இன்று இவ்வாறு துணிந்து நம் இலங்கையை எரிக்க நேர்ந்தானே? அந்தத் தீயனை உடனே பிடித்து வாருங்கள்" என்று அடுத்து நின்ற அதிகாரிகளை நோக்கிக் கடுத்துக் கூறினன்.

தீ எல்லாவற்றையும் மடுத்து எரித்து அடியோடு நாசம் செய்து கொண்டிருக்கிறது, அப் பொல்லாதவன் உள்ளச் செருக்கோடு இவ்வாறு உரையாடி யிருக்கிறான். அவனுடைய நெஞ்சு நிலை யாதும் அஞ்சாத நெடுந் திமிராய் யாண்டும் நெடிதோங்கி நீண்டு நிற்கிறது.

நெருப்பு மண்டி எரிந்த பொழுது இலங்கை வாசிகள் நிலை குலைந்து கலங்கிப் பல வகையிலும் அலமந்து தவித்துள்ளனர். அந்த அவலங்கள் யாண்டும் பரிதாபங்கள் ஆய்ப் பெருகி நின்றன.

மருங்கினின் மேல் ஒரு மகவுகொண்டு ஒருதனி மகவை
அருங்கையால் பற்றி மற்று ஒரு மகவுபின் அரற்ற.

என்றது இளங் குழந்தைகளையுடைய தாய்மார்கள் அன்று அலமந்து அலைந்து உழந்த நிலைகளை விழிதெரிய நின்றது. வீட்டில்

தீ பற்றியவுடனே கைக்குழந்தைகளை இடுப்பில் இடுக்கிக் கொண்டு மற்றப் பிள்ளைகளை அணைத்துத் தழுவி அலறித் துடித்து வெளியே ஓடியிருக்கின்றனர். அந்த அவலநிலையை இவ்வாறு எழுதிக் காட்டியுள்ளார்

"தவழும் புதல்வரை ஒருகையால் தழீஇப்
பவழம் சோர்ந்த பல்காழ் அல்குலர்
அவிழ்ந்த பூந்துகில் அங்கையின் அசைஇ
நகைப்பூங் கோதையொடு நான்று கூந்தற்கு
மிகைக்கணை காஞ்து புகைத்தீ மறிப்பப்
படைத்தோன் குற்றம் எடுத்துரைஇ இறக்கேம்
அங்கித் தேவன் அருளென அயல்மனைப்
பொங்குநீர்ப் பொய்கை புக்கனர் ஒருசார்"

(பெருங்கதை, 1-43)

பிரசசோதனன் என்னும் மன்னனுடைய இராசதானி ஆகிய உச்சைனி நகரில் ஒருமுறை தீப்பற்றிக் கொண்டது. அப்பொழுது அங்கே நிகழ்ந்த அவலக் காட்சிகளுள் ஒன்றை இது குறித்துள்ளது.

மனையில் நெருப்புப் பற்றியவுடனே ஒரு மங்கை விரைந்து வெளியேறினாள், தனது வலது கையால் தன் பிள்ளைகளைத் தழுவிக் கொண்டாள், அப்பொழுது நழுவிய சேலையை இடது கையால் இடுக்கிக் கொண்டு அலமரலோடு வெளி வரவே கூந்தல் அவிழ்ந்து சரிந்தது, அதனைச் செம்மைப் படுத்த வேறு கை இல்லாமையால் மீறி மண்டிய புகையில் தள்ளாடித் தவித்துப் படைத்த பிரமனைச் சபித்து "அக்கினி பகவானே! நான் இறந்து படுவேன்; என் பிள்ளைகளைக் காத்தருள்" என்று சொல்லி அயலே யிருந்த ஓர் தண்ணீர்ப் பொய்கையில் பாய்ந்தாள் என்னும் இது ஈண்டு எண்ணியறிய வுரியது.

புதலவரை ஒரு கையால தழீஇ என்னும் இந்தக் கவியோடு நம் கவி ஓதியிருத்தல் இங்கே உய்த்துணரத்தக்கது.

அருள் இல் வஞ்சரைத் தஞ்சம் என்று அடைந்தவர் அனைய.

இலங்கை எரிந்தமையால் மருங்கே யிருந்த சோலைகளிலுள்ள பறவைகள் எல்லாம் விரைந்து எழுந்தன; புகைப் படலங்

கள் ஆகாயம் எங்கும் பரந்து விரிந்துள்ளமையால் மேலே பறந்து போக முடியவில்லை, வெப்பம் தாங்க மாட்டாமல் அயலே கடலில் போய் விழுந்தன, அந்தப் பட்சிகளை அங்கே மீன்கள் பற்றித் தின்றன. தங்களுக்கு நேர்ந்த அல்லலுக்குப் பயந்து போய்க் கொடிய வஞ்சரைத் தஞ்சம் என்று அடைந்தவர் அவரால் துயரமடைந்து துடித்தல் போல் பறவைகள் பரிதாபமாய் மடிந்தன ஆதலால் அவற்றிற்கு இது உவமையாய் வந்தது.

நெஞ்சில் இரக்கம் இல்லாத வஞ்சரை அணுகலாகாது, அணுகினால் அபாயம் ஆம், அவரை அஞ்சி அகல வேண்டும் என்னும் நீதியை இங்கே வினயமாய்ப் போதித்திருக்கிறார்.

இலங்கையில் வாழ்ந்த பறவைகளும் பரிதபித்து மாண்டன என்றதனால் அங்கே யிருந்த மாந்தரது அழிவுநிலை தெரிந்து கொள்ள வந்தது.

ஊர் முழுவதும் பற்றி எரியவே எங்கும் பேரமலையாயது அரக்கர்கள் யாவரும் ககன மார்க்கமாய்ச் செல்ல வல்ல காம சாரிகள் ஆதலால் பலர் சேமமாய்த் தப்பிப் பிழைத்தனர்.

இந்திரனுடைய மாளிகையினும் சிறந்து யாண்டும் சுந்தர சோதிகளை வீசித் துலங்கியிருந்த இராவணனது அரண்மனைகள் யாவும் தீயில் அழிந்தன. எழு உலகங்கள் போல மேலே எழில் கொண்டிருந்த ஏழடுக்கு மாளிகைகள் எரிந்து வீழ்ந்தன. பொன் மயமான அவை நெருப்பில் உருகிப் பொருப்பைப் போல நிமிர்ந்து நின்றது.

பொன் திருத்தியது ஆயதால் இராவணன் புரைதீர்
குன்றம் ஒத்துயர் தடநெடு மாநிலைக் கோயில்
நின்றது உற்றுஎரி பருகிட நெகிழ்வுற உருகித்
தென்திசைக்கும் ஓர் மேரு உண்டாம் எனத் தெரிந்த.

இலங்காதிபதியினுடைய அரண்மனை உயர்ந்த பொன்னால் அமைந்திருந்தது; அது தீயால் உருகவே தென்திசையிலும் ஒரு மேருமலை உண்டு என்னும்படி ஓங்கி விளங்கியது. அவனுடைய செல்வத் திருவும் அரச வாழ்வும் அதிசய நிலையுடையன, அவை அழிவுற நேர்ந்துள்ளமை விழி தெரிய வந்தது.

பெருந் தீ பற்றிய வுடனே புட்பக விமானத்தில் தன் குடு

மபத்துடன் மேலெழுந்து போய் வானில் அமர்ந்து கொண்டு தனது இராசதானி நெருப்பால் நாசமாவதைக் கண்டு நெஞ்சம் கன்றினான். அயலே நின்ற அதிபதிகளை நோக்கிக் காரணம் யாது? என்று கருதி வினவினான்

ஊழிக்காலம் வந்து உற்றதோ? பிறிது வேறு உண்டோ?
பாழித் தீச் சுட வெந்தது என் நகர்?

என்று அவன் வெருண்டு கேட்டான். இவ்வாறு கேட்கவே நிகழ்ந்துள்ள நிலையை அரக்கர் நேரே கூறினார்

தன் வால் இட்ட தழலால் குரங்கு சுட்டது

என் இவ்வாறு அவர் சுட்டிச் சொல்லவே அவன் உள்ளம் கொதித்து உருத்துச் சினந்தான். வாலைச் சுட்டுப் பொசுக்கி வெளியே விரட்டி விடுங்கள் என்று தான் தண்டனை யிட்டுத் தள்ளிய குரங்கு தன்னுடைய ஊரை முழுதும் சுட்டு உயிர்கள் பலவற்றையும் நாசம் செய்து விட்டதே! என்று நெடுங் கோபம் கொண்டு நெருப்பை இகழ்ந்தான். தனது வென்றி வீரங்களுக்கு அவமானம் நேர்ந்ததே! என்று கன்றிக் கன்றினான்

என்றுகொல் குரங்கு அனல் இவ் வலியுளது? இலங்கை
நின்று வெந்து மாறு நீறு ஆகின்றது; நெருப்புத்
தின்று தேக்கிடுகின்றது; தேவர்கள் சிரிப்பார்
நன்று நன்று போர் வலி எனா இராவணன் நக்கான்

அவன் கருதிக் கன்றியிருக்கும் நிலைகளை இது காட்டியுள்ளது. அமரர் உலகமும் துதி செய்யும் படியான அதிசய இலங்கையில் ஒரு குரங்கு தீயை வைக்க நேர்ந்தது; அறிவில்லாத அந்தக் காட்டுக் குரங்கு சேட்டையாக வைத்தாலும் நெருப்பும் நெஞ்சம் துணிந்து எரிக்க மூண்டது; யாவும் விருப்பமாய்த் தின்று ஏப்பம் இடுகின்றது; அஞ்சி அடங்கியிருந்த தேவர்கள் இனி மிஞ்சிச் சிரிப்பர்; திரிலோகாதிபதி எனப் பெரு மகிமையுடன் வாழ்ந்து வந்த எனது ஆற்றலும் ஆட்சியும் சீ சீ எவ்வளவு மாட்சிமையாய் மருவியுள்ளன! என்று இகழ்ச்சிக் குறிப்போடு வெறுத்து வைது செருக்கு மீக்கொண்டு சிரித்தான்.

மாயமான ஒரு குரங்கோடு சேர்ந்து கொண்டதனாலேதான் தீயும் இந்த வேலை செய்ய நேர்ந்தது. நல்லவைகளைப்போல் அஞ்சி

அடங்கியிருந்தாலும சமையம் வாயதத போது தீயவர்கள் தீமையான காரியஙகளைத துணிநது செய்து விடுகிறாகள. நீரு க்கு வருணன போல நெருபபுககுத தலைவன அக்கினிதேவன் அவன நமககுக குல விரோதிகளான தேவர்கள இனததைச் சேர்நதவன ஆதலால நமது இராசதானி இவவாறு எரிநது நாச மடையுமபடி வஞசமாகப புரிநதிருககிறுன. தீயனை அநத அககினிதேவனையும மாயக குரஙகையும விரைநது பிடிததுக கொணடு வாருஙகள என்று அடுதது நினற அரககாகளிடம இராவணன கடுததுக கூறினன

உணட நெருபபைக
கணடா யா பறறிக
கொணடணை கென்றுள
அணடரை வென்றன (1)

உறறக லாமுன
கறற குரஙகைப
பறறுமின என்றன
முறறும முனிநதான (2)

வெறறிச செருககோடு எப்பொழுதும வீறு கொணடுளள இராவணன இவவாறு கூறவே நிருதா அயலே சீறிப போனா ஊாமுழுதும எரிநது நாசமாய போயது, நெருபபு மணடியுளள தனது வாலைக கடல நீரில அவிகக நினைநது அனுமான விரைந தான, அபபொழுது அரககாகள வநது வானில வளைநது கொண டாா. வளையவே அநதவாலால அனைவரையும வளைததுப பிணிதது மேலே வாரி எறிநதான நெருஙகி வநதவரை யெலலாம ஒருஙகே சீறி அறைநது வாரியில வாரி வீசினன ஆதலால ஐமபதினுயிரம போ அதில இறநது முடிநதார்.

## தேவியைத தொழுது மீண்டது

இலங்கையை எரிததகோடு எதிாதது வந்த அரக்கரையும் நீறுசெயது முடிதது விரைந்து கடலில் பாயநது குளிதது பாருதி மேலே எழுநதான். வாரி நீருள் மூழகி வானில எழுநதபோது தான் சீதையை நினைநதான. சிநதை கலஙகினன் "அந்தோ! இந் தத் தீயில் அமமையும வெந்து போயிருப்பாளோ?" என்றுநொந்து தவித்தான். அப்பொழுது ஆகாயமார்க்கமாயச சென்றுகொண்

டிருந்த விததியாதரா இலஙகைத தீயைக குறிததுப் பேசிப் போனா "சீதாதேவி இருககும இடம ஒனறுதான பசுமை யாய யிருககிறது, மறற எலலா இடஙகளும எரிநது கரிநது கொடிய சுடுகாடுகளாய இழிநது கிடககினறன" எனறு விஞசையா பேசிக கொணடு போவதைக கேடடதும அனுமான பெரு மகிழ்சசி யடைந்தான. அதி விரைவில அசோக வனத்திறகு வாவி வநதான. கீழே பாயநது தேவியைத தொழுதான அவ ளைப் பாாததததும பிராடடி பேரானநதம அடைநதாள. அனுமான யாதும பேசவிலலை, கணணீா ததுமப நோககி "வநதனம, ஆணடவன ாணடு விரைநது வநதருளுவாா" எனறு இநத அள வே கூறிவிடடு மேலே விணணில தாவி வடதிசை நோககி வேக மாயப போயினன.

அவன வநது வணஙகி அநதரம எழுநதுசெனற விநதையை வியநது மகிழநது சிநதை குளிாநது சீதை தேறியிருநதாள

இநதிரன நகரமும, குபேரன படடணமும இநத நகரத திறகு இணையாகாதெனறு எஙகும யாணடும இசைபெறறு நினற இலஙகை அனறு எரிநது கரிநது இழிநது கிடநத நிலை கொடிய பரிதாபமா யிருநதது.

உலகில பெரிய நெருபபு அழிவுககு இலஙகை எரி உரிய ஓா கரியாய நினறது அககினி தேவனே உககிர வீரததுடன உணடு தொலைததது ாக இராவணன உருககிருககிறான

சிவபெருமான திரிபுரததை எரிததது போல அனுமான இலங்கையை எரிததான எனக கவியும துலஙக உரைததாா.

துபபுறழ மேனி அணணல மேருவில குழையத தோளால
முபபுரததது எயத கோலே ஒததது அமமெரிப போவால

பவள மேனியனை பரமன திரிபுரததை எரிதத பொழுது அரிய பல போாககருவிகள உரிய துணைகளாய நினறன மேரு மலை வில, வாசுகி நாண, அககினி பாணம வாயு வேகம என இனனவாறு பல சாதனஙகள அப பெருமானுககுப பேருதவி களாய மனனி நினறன.

அனுமானுககு அவவாறு யாதொரு துணைகளும இல்லை. தன் வால் ஒனறே உதவியாய நினறது. கோலே ஒததது எனறது அவ் வாலின வனமையையும தனமையையுமஉயததுணா.

சிவனுடைய தனுவிலிருந்து எழுந்த அக்கினி பகவானைப் போலவே அனுமானுடைய தனுவிலிருந்து நீண்ட வால உக்கிர வேகமாய இலங்கையை எரித்தழித்துள்ளமை இதனால் விளங்கி நின்றது. தனு = வில், உடல்.

"ஐந்தலை யுத்தி அரவு நாணாக
மந்தர வில்லின் அந்தணன் விட்ட
திவாய அம்பு திரிதரு நகரின" (பெருங்கதை)

உச்சைனி நகரில் உற்ற தீக்கு இது உவமையாய் வந்துள்ளது.

மந்தர வில்லின் அந்தணன் என்றது பேருமலையை வில்லாக வுடைய சிவ பெருமானை. பெரு நெருப்புக்குத் திரிபுரம் எரித்த கதை எங்கும் உவமையாய் வந்து அதன் நிலைமையை விளக்கியது.

முன்னை இட்ட தீ முப்புரத்திலே
பின்னை இட்ட தீ தென்இலங்கையில்
அன்னை இட்ட தீ அடிவயிற்றிலே
யானும் இட்ட தீ மூள்க மூள்கவே (பட்டினத்தார்)

தன்னைப் பெற்ற தாய் இறந்து மயானத்தில் எரி மூட்ட நேர்ந்தபோது பட்டினத்தார் இவ்வாறு பரிந்து பாடியிருக்கிறார். தாய் இறந்ததுக்கம் தன் அடிவயிற்றிலே கொடிய தீயைப்போல மூண்டு எரிந்தது, அந்தத் துயரக்கோடு மூட்டத்தில் கொள்ளித் தீயை வைத்துள்ள காட்சியை இது காட்டியுள்ளது. எல்லாருமே தாய்க்குக் கொள்ளி வைக்கிறார்கள், பெற்ற தாயின் பிரிவுத்துயரம் புத்திரர்களுடைய உள்ளத்தை உருக்கி வாட்டும், ஆயினும் பெரிய துறவியான பட்டினத்துப்பிள்ளையார் இங்கே உருகி உரைத்திருக்கும் உரைகள் உலக உள்ளங்களை என்றும் உருக்கி வருகின்றன.

திரிபுரத் தீயும், இலங்காபுரி எரியும் பெரிய இலக்கியங்களாய்ப் பெருகி நிற்கின்றன. இலங்காதகனம் என நாடகங்களிலும் ஒரு காட்சி பீடு பெற்றுள்ளது.

காலனும் அருகே அணுக அஞ்சி வெருவி ஓடுகிற வீர இலங்கையில் அனுமான் நேரே புகுந்து பட்டப் பகலில் எல்லாரும் காணத் தீயை வைத்துப் போயிருக்கும் வித்தக நிலை வியந்து சிந்திக்கத்தக்கது. வைப்புத் தீ ஒப்பு நீங்கி ஓங்கியது.

அனுமான் போன பின்னே அக்கினி பகவானும் அஞ்சி மறைந்தான்.

தெள்ளிய மாருதி சென்றபின்
கள்ள அரக்கர்கள் கண்டால்
எள்ளுவர் புறம் பேசுவர் என்று
ஒள்ளெரியோனும் ஒளித்தான்.

தீயின் அதிதேவதையான அக்கினி பகவானும் இப்படி அஞ்சி ஒளித்தது இராவணனுடைய அதிகார ஆற்றல்களை நெஞ்சில் நினைந்தேயாம். அனுமானுடைய ஆதரவைக் கொண்டே நெருப்பு இலங்கையை எரித்திருத்தலால் அதன் நிலைமையும் தலைமையும் நேரே தெரிய வந்தன.

அத்தகைய அதிசய நிகழ்ச்சிகளைச் செய்து இசையாக்கி இந்த வீரன் திரும்பிப் போனான். இலங்கை எரியூட்டு படலம் இத்துடன் முடிந்தது. பின்பு நிகழ்ந்த செய்திகள் அயலே வருகின்றன.

## மீண்டு வந்தது

ஆண்மை கைம்மேலுடன் மீண்டு வந்த அனுமான் இலங்கையின் வடபால் நின்ற குன்றின் மேல் தாவினான், சிறிது இளைப்பாறி நின்றான், பின்பு இராமபிரானுடைய திருவடிகளை நினைந்து உருகினான், கண்களில் நீர் பெருகி வழியது, "எம்பெருமானைப் பிரிந்து வந்தேனே! குறித்த தவணை கடந்து போயதே!" என்று விரைந்து விசுவரூபம் கொண்டு விசும்பில் எழுந்தான். வான வீதி வழியே வானர வீரன் வாவி வந்த வேகத்தைக் கண்டு வாயு பகவானும் உவந்து வியந்தான். பிள்ளைப் பாசம் அவன் உள்ளத்தில் பெருகியது, உவகை வெள்ளமும் பொங்கி ஓங்கியது. கடலின்மேல் அதி விரைவாக வந்தவன் முன்னம் உறுதி கூறியபடியே இடையே மைநாக மலைமேல் கொஞ்சம் தங்கியிருந்து உரிமையுரை கூறி உடனே எழுந்து அதிவேகமாய் விரைந்தான். ஆகாய வீதி முழுவதும் ஏகநிலையாய் எதிரே தோன்றியது. ஆவலோடு வாவி வந்தவன் மகேந்திரகிரி மேல் லகுபாய்ந்து தாவலானான்.

மைந்நாகம் என்னு நின்ற குன்றையும் மருவி எய்திக்
கைந்நாகம் அனையோன் உற்ற துணைக்கு இனியன் கண்ணுதின் காலைப்
பைந்நாகம் நிறைக்கும் வீரன் தனை நெடுவரைவு பார்க்கும்
கொய்யந்நாக நறுந்தேன் சிந்தும் குன்றிடைக் குதியும் கொண்டான்.

போயவரும் கருப்ப முறிப்பறு என்பதோர் பொய்ம்மல் பொங்க
வாய்வெரீஇ நின்ற வெள்ளி வானர வீரர் மன்னோ
பாயவரு நீளத் தாங்கண் இருந்தனர் பண்ணைப் பாரப்புந்
தாயவரைக் கண்டன்ன உவகையில் களிக்கின்றார் மைந்தர்! (2)

அழுதனர் சிலவர், முன்னின்று ஆர்த்தனர் சிலவர், அண்மித்
தொழுதனர் சிலவர், ஆடித் துள்ளினர் சிலவர், அள்ளி
முழுதுற விழுங்குவார்போல் மொய்த்தனர் சிலவர், சுற்றும்
எழுவினர் சிலவர், கொண்டு சுமக்கின்றார் சிலவர் தாங்கி (3)

தேனொடு கிழங்கும் காயும் கனியான அரிதில் தேடி
மேன்முறை வைக்கத் தேம் அண்ணல் நுகர்ந்தனை மெலிவு நீந்தி
மானவன் முகமே நங்கட்கு உரைத்தது மாற்றம் என்று
தானுயர் சாகம் எல்லாம் முறைமுறை சிலவர் தந்தார் (4)

தாள்களில் பரியில் தோளில் தலையினில் உடம்பில் மார்பில்
வாள்களின் வேலின் கோலின் மழையினின் வருந்து புண்கள்
நாள்களைமேல் உலகிற் சென்ற எண்ணினார் நடப்பிக் கண்ணை
ஊழ்கொள் நோக்கி நோக்கி உயிருக உளைந்து உயிர்த்தார் (5)

வாலிகா தலனை முந்தை வணங்கினன், எண்ணின் வேந்தைக்
காலுறப் பணிந்து பின்னைக் கடன்முறை கடவோர்க் கெல்லாம்
ஏலுற இயற்றி யாங்கண் இருந்தவண் இருந்தோர்க் கெல்லாம்
ஞால நாயகன்தன் தேவி சொல்லினள் நன்மை என்றான் (6)

என்றலும் கரங்கள் கூப்பி எழுந்தனர் இறைஞ்சிக் காழ்தா
நின்றனர் உவகை பொங்க விம்மலால் நிமிர்ந்த நெஞ்சர்
சென்றது முதலா வந்த திறுதியாச் செப்பற் பாலை
வென்றிறல் உரவோய்! என்னச் சொல்லினன் மருத்தின் மைந்தன்

ஆண்டகை தேவி யுள்ளத்து அருந்தவம் அமையச் சொல்லிப்
பூண்டபோர் அடையாளம் கைக்கொண்டதும் புகன்று போரில்
நீண்டவாள் அரக்கரோடு நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான் தன்னதன் வென்றியை உரைப்ப வெள்கி

பொருதமை புண்ணே சொல்ல வென்றமை போந்த தன்மை
உரைசெய ஊர்தீ யிட்டது ஓங்கிரும் புகையே ஓதக்
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் சிறப்பே காட்டத்
தெரிதர உணர்ந்தேம் பின்னர் என்னினிச் செய்தும் என்றார் (9)

யாவையும் இனிவே றெண்ணல் வேண்டுவது இறையும் இல்லை
சேவகன் தேவி தன்னைக் கண்டமை விரைவில் செப்பி
ஆவதை அண்ணல் உள்ளத்து அருந்துயர் ஆற்ற லேயாம்
போவது புலமை என்னாப் பொருக்கென எழுந்து போனார். (10)

(திருவடி தொழுத படலம், 2-11)

அனுமான் இலங்கையிலிருந்து மீண்டு வந்ததும், மகேந்திர மலையில் தங்கியிருந்த அங்கதன் முதலிய வானர வீரர்கள் எல்லாரும் அவனைக் கண்டு மகிழ்ந்ததும், அருகே சேர்ந்தபோது ஆனந்த பரவசத்தால் தழுவிப் போற்றி உழுவலன்போடு உவந்து கொண்டாடியதும், அதன்பின் கனி காய் கிழங்கு முதலியன கொண்டு வந்து தந்து உண்டு மகிழும்படி ஊட்டி உபசரித்ததும், உண்டபின் சென்று வந்த காரியங்களை அவன் கருதிச் சொன்னதும், அந்த வீரனுடைய உரைகளைக் கேட்டு யாவரும் பேரானந்த முடையராய்ப் பெருகியிருந்ததும் பிறவும் இங்கே அறிய வந்துள்ளன.

நடந்துள்ள நிகழ்ச்சிகளைக் கவிப் படங்கள் தெளிவாக வரைந்து காட்டியிருக்கின்றன. காட்சிகளைக் கருதிக் காணுகிறோம்; யாவும் விழியெதிரே நேரே கண்டு வியந்து மகிழ்கிறோம். அறிவுக் காட்சிகள் அதிசய இன்பங்களை ஊட்டி வருகின்றன.

கதையை நடத்திச் செல்லும் முறை காவிய ஓவியமாய் யாண்டும் கவின் சுரந்து மிளிர்கிறது. மானச மருமங்கள் இராம காதையுள் ஞான நிலையங்களாய் எவ்வழியும் செவ்வி சிறந்து திகழ்கின்றன.

மைந்நாகம் என்னும் நின்ற குன்றையும் மரபின் எய்தி

என்றது அனுமானது பெருந் தகைமை தெரிய வந்தது. முதலில் இலங்கையை நோக்கி ஆகாய வழியாய் வரும்பொழுது கடலின் இடையே எதிரே வந்து தோன்றித் தன்பால் சிறிது தங்கி இளைப்பாறி விருந்துண்டு போகும்படி மாருதியை மைந்நாகம் வேண்டியது. அந்த வேண்டுகோளுக்கு அப்பொழுது இந்த ஆண்டகை இசையவில்லை. "ஆண்டவனுடைய பணியைச் செய்து முடித்து மீண்டு நான் வரும்பொழுது ஈண்டு உன்பால் இருந்து விருந்துண்டு கொள்கிறேன்; இது சமையம் தங்க இயலாது; விடை தருக" என்று விரைந்து போனான். ஆதலால் அந்த உறுதி மொழியை மறவாமல் வந்து மைந்நாகத்திடம் உறவாய் அமர்ந்தான். அரிய கருமங்களை ஆற்றி வருகிறவன் உரிய கடமைகளைப் பூர்த்தி செய்தருளுகிறான்.

கைந்நாகம் அனையோன் என் அனுமானை இங்ஙனம் குறித்தது அவனது கம்பீர நிலைகளைக் கருதி. கைந்நாகம் = யானை.

இருகைவேழத்து இராகவன் என்றபடி மாருதியும் இங்கே மத யானை என நேர்ந்தான். கொய் நாகம்=மலர் கொய்கிற சுர புன்னை மரங்கள் பைநாகம்=படமுடைய பாம்பு படம் எடுத்த பாம்புகள்போல் தலை நிமிர்ந்து தன்னை ஆவலோடு துணைவர்கள் எதிர்பார்த்து நின்ற மலையில் வந்து குதித்தான் என்க. பைநாகம் என்றதை எதிர்நோக்கிப் பின் மூன்றடிகளிலும் எதுகைகள் வந்துள்ளன.

பைந்நாகப் பள்ளி மணிவண்ணனிற் பாயல் கொண்டு
கைந்நாகம் துஞ்சும் காழகாந்தளம் சாரல் போகி
மைந்நாக வேலி மலிபல்லவ தேயம் நண்ணிக்
கொய்ந்நாகச் சோலைக் கொடியந்நகர் புக்க வாறும்
(சீவகசிந்தாமணி 17)

இந்தக் கவியில் வந்துள்ள எதுகைகள் நான்கும் நம் கவியில் சுவையாக அமைந்திருத்தலால் இதனை எண்ணிப் பாடியதுபோல் தெரிகிறது. சிந்தாமணியை நம் கவி சிந்தனை செய்து வந்திருப்பதை நாம் சிந்தித்து வருகிறோம்.

அனுமானைக் கண்டபொழுது வானரங்கள் அடைந்த மகிழ்ச்சிகள் அதிசய ஆனந்தங்களாய்ப் பெருகியுள்ளன. உவகை நிலைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்ளுமாறு உவமை வந்துள்ளது.

தன் குஞ்சுகளுக்கு இரை தேடி வரும்பொருட்டு ஒரு தாய்ப் பறவை வெளியே பறந்து போயிருந்தது. நெடு நேரம் வராமையால் குஞ்சுகள் எல்லாம் நெஞ்சம் கலங்கி நெடிது ஏங்கி நிலை குலைந்து பேராவலான அலமரலோடு பெருகியிருந்தன. இறுதியில் தாய் கருதி வந்தது. அந்தத் தாயைக் கண்ட பொழுது அப் பறவைக் குஞ்சுகள் சிறகுகள் அடித்து உறவுடன் ஒலித்து உவந்து துடித்தது போல வானரங்கள் கைகளை நீட்டிக் குதித்து ஓலமிட்டுக் களித்தனர்.

தாய்வரக் கண்டது அன்ன உவகையால் தளிர்த்தார்

இலங்கை போய் வந்தவனைக் கண்டபொழுது மகேந்திரமலையில் நின்றவர் நிலையை இங்ஙனம் விளக்கினார். பார்ப்பு=பறவைக் குஞ்சுகள். தாய் அனுமானுக்கும், குஞ்சுகள் வானரங்களுக்கும் உவமைகள் ஆயின. இரையின்றிக் கூட்டில் கிடந்து

பசித்துத் துடிக்கின்ற பார்ப்புகள் போலப் பெருங் கவலையால் உள்ளம் கலங்கி உறுதி குலைந்து பெரிதும் மறுகி மலைச் சாரலில் தவித்திருந்தனர். ஆதலால் வானரவீரர்கள் பார்ப்பு என நோக்கினர்.

உவகையில் தளிர்த்தார் என்றது முன்பு துன்பத் தீயால் உள்ளம் கருகி உயிர் வாடியிருந்தமை ஒரு வந்தது. வாடி வதங்கிய பயிர்கள் மழையால் தளிர்த்து வளர்ந்ததுபோல் மறுகி மயங்கிய உயிர்கள் மாருதியால் உயர்ந்து உவந்திருக்கின்றன.

வாய் வெரீஇ நின்ற என்றது அவரது நிலைமை தெரிய வந்தது.

## அனுமானைக் கண்டது

அங்கதன் முதலிய வீரர்கள் யாவரும் கவலைக் கடலில் மூழ்கியிருந்தனர். "கடல் தாவிப் போனவன் இன்னும் வரவில்லையே! கொடிய பகைவர் ஊரில் என்ன நடந்ததோ? அம்மையைக் கண்டானோ? காணவில்லையோ? யாதொரு தகவலும் ஏதும் தெரியவில்லையே! தன்னந் தனியனாய்ப் போயுள்ளானே! அவனைத் தனியே போகவிட்டு இனியவர்போல நாம் இங்கே இருக்கின்றோமே, என்னே நம் இருப்பு!" என இன்னவாறு எண்ணி உளைந்து உறுதி குலைந்து வானரர் மறுகியிருந்தனர். பரிதாபமாய் அவ்வாறு அவர் பரிந்திருக்கும் பொழுது வானிலிருந்து ஓர் ஓசை வந்தது. ஆசையோடு தென் திசையை நோக்கினர். கண்ணுக்குத் தெரியாத நுண்ணிய நிலையில் புகைப் படலம்போல ஒரு உருவம் தோன்றியது. அடுத்த ஒரு கணத்துள் வடிவம் தெளிவாகத் தெரிந்தது. ஆகாய கமனமாய் வெகு தூரத்தில் வரும் பொழுதே அனுமானை மகேந்திர மலையிலிருந்த வானரர்கள் கண்டு கொண்டார். காணவே யாவரும் ஓ! என்று ஆரவாரித்து எழுந்தனர். உள்ளக் கவலைகள் எல்லாம் ஒழிந்தன. பேரின்ப வெள்ளத்தில் மிதந்தவர் போல ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து நின்றனர். அங்ஙனம் நிற்கவே ராம, ராம, ராம என்ற இனிய ஒலி மதுர கீதமாய் எதிரே எழுந்து வர அனுமான் நேரே வேகமாய்ப் பாய்ந்து மலைச்சாரலில் வந்து நின்றான்.

## ஆனந்தம் பொங்கியது

மகேந்திரகிரிச் சாரலில் மாருதி வந்து நிற்கவே வானரர்கள் உவந்து சூழ்ந்து உள்ளம் களித்து எவ்வழியும் துள்ளி நின்றனர்.

அழுதனர் சிலர், ஆர்த்தனர் சிலர், தொழுதனர் சிலர்; துள்ளினர் சிலர், அள்ளி விழுங்குவார் போல் தள்ளி நெருங்கினர் சிலர், தழுவினர் சிலர், உழுவலன்போடு தோளில் சுமந்து கொண்டு ஓடிவந்தார் சிலர் என்றதனால், அன்று அவர் அடைந்துள்ள ஆனந்த நிலைகளை அறிந்து கொள்ளலாம்.

காணோமே! என்று கருதி உருகி மறுகி யிருந்தார் ஆதலால் நேரே கண்டவுடனே பரிவோடு அழுதிருக்கின்றனர். இந்த ஆனந்தக் கண்ணீர் அவரது அன்புரிமையை அளந்து காட்டியது. எல்லாரும் இன்பக்கடலில் மூழ்கி எழுந்துள்ளமையை அவரவர்களுடைய செயல்கள் அயலறியச் செய்தன.

இவ்வாறு உவந்தவர் இனிய கனிகளையும் தேனையும் கொணர்ந்து உண்ணும்படி உபசரித்தனர். இவ்வீரனுடைய தோள் தாள் மார்பு தலை முதலிய அவயவங்கள் எங்கும் வாள் வேல் சூலம் அம்புகள் பாய்ந்து புண்களாய் இருப்பதைக் கண்டு எல்லாரும் கண்கள் நீர் சோரக் கசிந்து உருகினர்.

ஊழ்கொள் நோக்கி நோக்கி உயிர் உக உளைந்து உயிர்த்தார்.

அனுமானுடைய திருமேனியில் பட்டுள்ள படுகாயங்களைப் பார்த்துப் பார்த்து இவ்வாறு மறுகி அழுதிருத்தலால் வானரங்களுடைய உழுவலன்பும் உரிமை நிலையும் தெரிய வந்தன.

பொல்லாத கொடிய அரக்கர்களிடையே தனியே நின்று போராடிப் பட்ட பாடுகள் பட்டு வீரப்பிரதாபத்துடன் மீண்டு வந்திருக்கலால் இந்த ஆண்டகையின் அதிசய நிலையை இங்கே மதி தெளிய விளக்கினர். உறுப்புக்களில் தோய்ந்துள்ள வீரப் புண்களைக் கவிகள் காணக் காட்டி வெற்றித் திறலை விளக்கி யிருக்கும் திறம் வியத்தக விநோதமாயுள்ளது.

## மரியாதை முறைகள்

இராசகுமாரன் ஆதலால் அங்கதனை முதலில் தொழுதான், அதன்பின் சாம்புவந்தனைக் காலில் விழுந்து வணங்கினான்; வயது முதிர்ந்தவன், சிறந்த மதிமான், தன்னை ஊக்கப்படுத்தி உறுதி கூறி இலங்கைக்குப் போய்வரும்படி தூண்டி விடுத்தவன் ஆதலால் அந்தப் பெரியவன் அடியில் விழுந்து தொழுது இந்த ஆண்டகை அன்புரிமை செய்தான். உரிய துணைவர் அனைவருக்கும்

பிரிய மொழிகள் கூறினன். யாவரும் பேராவலுடன் சூழ்ந்திருந்தனர்.

ஞாலநாயகன் தன் தேவி சொல்லினள் நன்மை என்றான்

வானர வீரர்களுடைய உள்ளங்களில் உவகை வெள்ளம் பொங்கும்படி அநுமான் உரிமையோடு இனிமையாகப் பேசியிருக்கிறான். பிராட்டி உங்கள் எல்லாருக்கும் நலங்களும் உண்டாகும்படி வாழ்த்தித் தனது அன்புரிமையைச் சொல்லியருளினள் என்று மாருதி சொல்லவே வானரங்கள் யாவரும் எழுந்து தென்திசையை நோக்கி நின்று கைகளைத் தலைமேல் கூப்பித் தொழுது கண்களில் நீர் பெருக வந்து புகழ்ந்தார். எல்லாரும் பிராட்டிபால் [illegible] ஆர்வ நிறைமையும் பூரணம் யாண்டும் பரிவு கொண்டாடி வரும்படி அநுமான் உடம்பிடித்து வைத்திருக்கும் நிலை [illegible] ஒவ்வொழியும் உள்ளம் உயர்ந்து உண்மை சுரந்து உவகை புரிந்து வாய்மையாய் வருகின்றன. மொழிகள் தோறும் அறிவொளிகளும் அன்பின் துளிகளும் பெருகி மிளிர்கின்றன.

அன்பு சுரந்து இன்பம் நிறைந்து ஆர்வத்தோடு சூழ்ந்திருந்த வானரர்கள் அநுமானை நோக்கி, இலங்கை போய் வந்த விவரங்களை எல்லாம் விளங்க உரைக்கும்படி வேண்டினார்.

## அநுமான் விளம்பியது

தான் போய் வந்த காரிய நிலைகளைக் குறித்து உரிமைத் துணைவர்கள் விரும்பி வினவவே, அநுமான் இனிது கூறினன். சீதாதேவியைக் கண்டதும், அந்த அம்மை அங்கு அமர்ந்திருக்கும் தன்மையும், கற்பின் மகிமையும், அற்புத அடையாளம் கைக்கொண்டு மீண்டதும் ஆகிய இவ்வளவே சொல்லி வேறு யாதும் கூறாமல் அடக்கமாய் நின்றான்.

நீண்டவாள் அரக்கரோடு நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான்தான் தன் வென்றியை உரைப்ப வெள்கி

வெளியே சொல்ல நாணி அநுமான் மறைத்து வைத்திருந்ததைக் கவி இப்படி இங்கே வெளிப்படுத்தியிருக்கிறார்.

சென்றது முதலா வந்தது இறுதியாச் செப்புக என்று யாவும் தெரிய ஆவலோடு கேட்ட தன் துணைவர்களிடம் மாருதி சொல்

லாமல் மறைத்ததைக் கவி சுட்டிக் காட்டி அதன் காரணத்தை விளக்கியிருப்பது சுவை சுரந்து நிற்கிறது.

பல்லாயிரம் போர் வீரர்களோடு தனியே நின்று போராடி மல்லரையும் தொலைந்து இலங்கையை எரித்து அரிய பல அற்புதங்களைச் செய்து பெரிய வெற்றியோடு வந்துள்ளான்; அந்த வீரத்திறல்களை அனுமான் வெளியே சொல்லவில்லை; அவ்வாறு சொல்லாமைக்குக் காரணம் என்ன? தன் வென்றியைத் தான் உரைப்ப வெள்கி என்க. தன்னுடைய வீரப் பிரதாபங்களைத் தன் வாயினால் சொல்ல நாணியே இம்பான் வீரன் மறைத்தான் என்றும் இது எவ்வளவு மகிமைகளை உலகம் அறிய உரைத்துள்ளது! அரிய பெருந்தன்மைகள் யாவும் இச் சிறிய திருவடியிடம் பெருகியுள்ளன. மேலான குண நீர்மைகள் எவ்வழியும் இந் திவ்விய போதபால மணம் வீசி வருகின்றன; கருதி உணர்பவர் அரிய பல மாண்புகளை மருவி உயர்கின்றனர்; கருதாதவர் வெறுதாவாய் விளிகின்றனர்.

சிறிய காரியங்களைச் செய்தாலும் தம்மை வியந்து தாமே பெருமையாகப் பேசிக் கொண்டு களிக்கிற புல்லிய மனித உலகிலே இப் புனிதன் நிலை அரிய பல உணர்வு நலங்களை அருளி வருகிறது.

யாண்டும் அடக்கமாய் எவ்வழியும் தளராமல் கருதிய கருமங்களைக் கடைபோகச் செய்யும் உறுதி நிலைக்கு இவ் வீரன் ஓர் உன்னத ஒளியாய் ஓங்கி மிளிர்கிறான்.

வீணே விரித்துப் பேசாதே; வினைகளை விரைந்து செய்து வெற்றி பெற்று வாழ் என்னும் தத்துவ நீதிகளை இவ் உத்தமன் செயல்கள் உய்த்துணரச் செய்துள்ளன.

கரும வீரமும் தரும நீர்மையும் ஒருமையாய் மருவி இவனிடம் ஒளி செய்து வருகின்றன. அருந்திறலோடு பெருந்தகைமைகள் யாவும் பெருகியுள்ளமை திருந்திய பேருயர் சிறந்து மிளிர்கிறது.

இலங்கையில் ஆற்றி வந்த அரிய வீரச் செயல்களைத் தனது இயல்பான அடக்கத்தால் இவன் சொல்லாமல் மறைத்து நின்றும் அங்கதன் முதலிய மதிமான்கள் நுட்பமாய் அறிந்து கொண்

டனா. தாஙகள குறிபபால தெளிநது கொணடதை அனுமா
னிடம அவா வாயதிறநது தெளிவாகச சொலலவும நோநதனா.

பொருதமை புணணே சொலல

எனறது அனுமான இலஙகையில போராடியுளள நிலைகளை
மகேநதிர மலையில இருநத வானரஙகள நேரே கணடு கொணட
தறகுக கருவியாய வநதது

அனும நாயகா! நீ வாய திறநது சொலலாவிடினும உன
உடலில படடிருககிற படைககலனகளின புணகளே பலலாயிரக
கணககான பொலலாத அரககாகளோடு போராடி யிருககிறாய
எனபதை நேரே எஙகளுககுத தெளிவாகச சொலலி யருளின
எனறு சொலலியிருபபது அநத யூக சமூகததின யூக விவேகங
களை எகபாய விளககி நினறது.

வெனறமை போநத தனமை உரை செய

நிருதாகளோடு போா செயதிருபபதை உன காயததில
நோநதுளள காயஙகலால அறிநதோம எதிரிகள எலலாரையும
அழிதது ஒழிதது நீ வெறறி பெறறுளளாய எனபதை இஙகு
மீணடு வநதிருககும நிலையால நனகு தெரிநது கொணடோம
எனபதை இஙஙனம தெரியப படுததினா

இலஙகையில தீயைக கொளுததி அநத ஊா முழுவதையும
எரிதது அழிததிருககிறாய எனபதை ஆகாயததில ஓஙகி எழுநத
புகை மணடலஙகளால நாஙகிருநதபடியே நாஙகள ஓாநது உண
ாநது கொணடோம எனபாா ஊா தீ இடடது ஓஙகு இரும புகை
யே ஓத எனறா. இரும=பெரிய நெடுநதூரததிலிருநதவாகளும
கொடுந தீ நிலையைத தெரிநது கொளளுமபடியாயக கடும புகை
வானுற ஓஙகி வளாநதுளளமையை அடை மொழிகள விளககி
நினறன அனுமான யூகஙகள ஈணடு அறிய வநதன

இலஙகையில தான செயத அரிய வீர காரியஙகளைத தன
வாயால சொலல நாணி அடககததுடன அனுமான மறைத
திருநதாலும வானர வீராகள குறிபபால அவறறை உணாநது
கொணடனா. விளை புரிநதுளள உணமைகளை நேரில கூறிப
போரில வெறறி பெறறு வநதுளளதை உவநது புகழநதாா;

தஙகளுடைய உயிரையும மானததையும காபபாறறி யரு ளிய பேருபகாரி எனறு அனுமானை யாவரும ஆரவம மீதூாநது துதிதது மகிழநதாா அதன பின புறபபடத துணிநதாா.

## திருமபி வநதது

சீதையைத தேடிக தென திசையை நோககி வநத வானரங கள மகேநதிரகிரியை அடைநதன, மறுகினறன, அபபொழுது உறுதி கூறி இலஙகை சென்ற அனுமான மீணடு வநது அம மையைக கணடதைச சொலலவே எலலாரும ஆனநதபரவச ராயத துளளிக களிததாா, உடனே போய ஆணடவனிடம சொலலி வேணடியதை விரைநது செயயவேணடும எனறுவிரைந து எழுநதாா வானரஙகள அம மலையிலிருநது புறபபடடு வட திசை நோககி நடநதன அஙகதனும சாமபுவநதனும அனுமா னிடம பகைவனுடைய நிலையைக குறிததுப பலவும உசாவி வந தாா. கருதி வநத கருமம இனிது முடிநதது எனறு எலலாரும உளளம உவநது உலலாச விநோதமாயத துளளி நடநது வருங கால வழி இடையே அழகிய ஓா மது வனததை அடைநதாா

## மதுவனம

இநத வனம அதிசயமான வளஙகளை யுடையது இனிய கனி மரஙகள நிறைநதது அதிமதுரமான செநதேனகள அடை அடையாகக கிளைகள தோறும மருவி யுளளது கநதருவா முத லிய அநதர வாசிகள மாலை நேரஙகளில இள மஙகையரோடு வநது உலலாசமாய உலாவிக கனியும தேனும இனிது மாநதிப போவதறகுத தனி நிலையமாய அமைநதது இநதிரன முனபு வாலிககுத தநதது அநதப பூஙகாவனததைக கணடதும வான ரஙகள அஙகே தஙகினாா இனிய தேனைப பருக விருமபினாா. அஙகதனிடம பணிநது வேணடினாா யாவரும உணடு மகிழும படி அக கோமகன உததரவு தநதான எலலாரும பெருஙகளிப போடு உளளே புகுநது மதுககளை மாநதினாா. உலலாசமாய யாணடும திரிநது தேனகளையும கனிகளையும அவா உணடு வரு வதைக கணடதும அநத வனததின காவலாளிகள கடுததுவநது தடுததாா அவரை இவா அடிதது விரடடினாா அவா வெளியே ஓடிப்போயத தனதலைவனிடம சொலலினாா. ததிமுகன எனனும அத தலைவன தனது படைகளோடு அதி வேகமாய வநதான.

உலக நிலை தெரியாதவன் தனது காப்பிலுள்ள மது வனத்தை அங்கதன் படைகள் வந்து அழிக்கின்றன என்று கேட்டவுடனே நாட்டம் சிவந்து விரைந்தெழுந்து பழம்பகையை நினைந்து வெகுண்டு வந்தான். வானரங்கள் யாவும் பொழிலுள் புகுந்து உல்லாசமாய் ஓடி உலாவிக் கனி தேன்களை உண்டு அலைவதைக் கண்டு கன்று அங்கதனை நோக்கி, "உன் தகப்பன் செத்து வீழ்ந்ததை உணராமல் நீயும் சாகத் துணிந்து இப்படி என் காவலைக் கடந்து அடம் புரிந்துள்ளாய்!" என்று கடுமையாக இகழ்ந்து பேசி அங்கே கிடந்த ஒரு திரண்ட கல்லை விரைந்தெடுத்து வெகுண்டு எறிந்தான். மூண்டு மேல் வந்த கல்லை ஒல்லையில் ஒதுக்கி விட்டு அவனது மடமையையும் கொடுமையையும் கண்டு சினந்து அங்கதன் அவனை அறைந்து போக்கினான். இந்த வீரன் குத்திய குத்தால் அவன் இரத்தங்களைக் கக்கிக் கொண்டு சுக்கிரீவனிடம் போய் இங்கே நடந்ததைச் சொல்ல வேண்டும் என்று அல்லலோடு ஓடினான். அவனுடைய ஏவலாளர் மற்றக் காவலரையும் வானரங்கள் விரைந்து அடித்து வெருட்டி விரட்டினர். அனைவரும் அஞ்சி ஓடினர்.

அமர்ந்திருந்தது

அவர் அவ்வாறு போகவே இவர் அங்கே கனியும் தேனும் இனிது அருந்தி உல்லாசமாய் விளையாடிச் சல்லாபங்கள் புரிந்து நின்றனர். அப்பொழுது மத்தியானமாயது கடும் வெயில் ஆனமையால் நிழல்களை நாடினர். வெயில் தணிந்த பிறபாடு போவோம் என்று கருதி அயலே அழகிய பூஞ்சோலையில் எல்லாரும் இனிது தங்கியிருந்தனர்.

முத்தலை எஃகினாற்கும் முடிப்பரும் கருமம் முற்றி

அனுமான் செய்து வந்துள்ள அதிசய காரியங்களைக் கவி இவ்வாறு துதி செய்துள்ளார். முத்தலை எஃகினான் என்றது சிவபெருமானை. மூன்று கிளைகளையுடைய சூலத்தைக் கையில் ஏந்தியுள்ளமையால் சூலபாணி என அப்பெருமான் பேர் பெற்று நின்றான். அரிய கருவியால் உரிய நிலைமை உணர்த்தப்பட்டது.

தன் கைச் சூலத்தால் ஞாலத்தையெல்லாம் எளிதே வெல்ல வல்லவன் ஆதலால் அந்தக் கோலத்தை இங்ஙனம் குறித்துக் காட்டினார். கால காலன், சூலபாணி, ஆலமுண்டவன் என்னும்

நாமங்கள் அற்புத நிலை, அதிசய ஆற்றல், அருள் நீர்மைகளை முறையே உணர்த்தி வருகின்றன.

தனது எண்ணத்தினாலேயே யாவும் செய்ய வல்ல தேவ தேவனாலும் முடிக்க முடியாத காரியத்தை முடித்து வந்தவன் என அனுமானை இங்கே எடுத்துக் காட்டியிருக்கும் காட்சி கருதி யுணருந்தோறும் அதிசய உவகையை அருளி வருகிறது. யாண்டும் சிவ பெருமானையே அனுமானோடு நினைவூட்டி வருவது இனிய உறவுரிமையைக் கருதியுணர. அப்பெருமானுடைய அமிசமாகவே இவன் ஈண்டு உதயமாகியுள்ளமையால் அவ்வுண்மை இடையிடையே எண்மையாய் உதயமாகி வருகிறது.

மூல நிலையில் நின்று முடிக்க முடியாத கருமத்தை இக்கோல நிலையில் வந்து முடித்தருளுகின்றான். அந்த முடிவு நிலையும் விழுவு வகையும் ஈண்டு வெளியாகி நின்றன.

சிவ பெருமானுடைய வர பலங்களாலேயே இராவணன் பெரு மகிமை பெற்றுள்ளான். அவனது இராசதானியாகிய இலங்கை அரிய திருவுடன் அழகு சுரந்துள்ளது. அவன் கொடுமை புரியவே யாவும் கடுமையாக முடிவடைய மூண்டன.

தான் தந்த வரங்களைத் தானே அழிப்பது தகாது ஆதலால் இந்த உருவில் வந்து அழிக்க நேர்ந்தான். அந்த அழிவு நிலை விழி தெரிய வந்தது. புதியவனது அதிசய வேலையை மதி தெளிய விளக்க வந்த கவி பழையவனது கிழமையையும் இங்ஙனம் உளம் அறிய உணர்த்தியருளினார்.

கடலைக் கடந்து தாவி, அரக்கர் பலரைக் கொன்று தொலைத்து, வெள்ளி மலையை அள்ளி எடுத்த இராவணனை எள்ளி விடுத்து, இலங்கையைக் கொளுத்தி விட்டு யாண்டும் கலங்காமல் அதிசய வெற்றியுடன் மீண்டு வந்திருக்கிறான் ஆதலால் அனுமானை ஈண்டு இவ்வண்ணம் கவி நமக்குக் காட்டியருளினார்.

வினையாளை வேலை முடிவில் புகழ வேண்டும் என்பது அறநூல் மரபு ஆதலால் அந்நிலையில் இது இங்கே தலைமை எய்தி வந்தது.

“நேசனைக் காணாவிடத்து நெஞ்சாரவே துதித்தல்
ஆசானை எவ்விடத்தும் அப்படியே—வாச

மனையாளைப் பஞ்சணையில் மைந்தர் தம்மை நெஞ்சில்
வினையாளை வேலைமுடி வில்''

இன்னாரை இன்னார் இன்ன இடத்தில் புகழ வேண்டும் என ஔவையார் இன்னவாறு உரைத்துள்ளார். உரைக் குறிப்புகள் ஊன்றி உணர்ந்து கொள்ள உரியன.

அரிய வினைகளை முடித்து வந்துள்ள பெரிய வீரனை உரிய இடத்தில் புகழ்ந்து உலகம் காணச் செய்திருக்கும் காட்சி கவியின் மாட்சியைக் காட்டியுள்ளது.

வித்தகன் என அநுமானுக்கு இங்கே ஒரு பெயரைச் சூட்டியிருக்கிறார். வித்தகம் என்னும் சொல் அறிவு, ஞானங்களோடு அதிசய ஆற்றல்களையும் உணர்த்தி வரும்.

அரிய காரியங்களைச் சாதுரியமாகச் சாதித்தருளும் சாமர்த்திய சதுரர்களே வித்தகர் என்னும் பேருக்கு உரியவராவர். உயிரைக் கொடுத்தும் புகழை வளர்க்க வல்லவர் யாவரோ அவரே வித்தகர் என (குறள், 235) நாயனார் குறித்துள்ளமையால் அவரது திறமும் தேசும் தெரியலாகும்.

யாரும் செய்ய முடியாத அதிசய வினைகளை ஆற்றி வந்துள்ள அற்புதக் கீர்த்திமான் துணைவர்களைக் கண்டு யாவரும் கூடி அளவளாவி மகிழ்ந்து மதுவனத்தை அடைந்து இனிய கனி உணவுகள் உண்டு அரிய பல அறிவுரைகளாடி எழில் மிகுந்த ஒரு குளிர் பூம் பொழிலில் இனிது அமர்ந்திருந்தான்.

## இராமன் இருந்த நிலை

தேவியைத் தேடித் தென்திசை நோக்கிச் சென்ற வானர வீரர்கள் காரிய சித்தியோடு வந்து இவ்வாறு அங்கே தங்கியிருந்தனர். அவரது இருப்பு ஆண்டு உவகை நிலையமாயிருந்தது.

இனி ஈண்டு இராமன் இருந்த நிலையையும் விளைந்த விளைவையும் தொடர்ந்து காண வருகிறோம்.

அத்தலை அறிந்தவெல்லாம் அறைந்தனம், ஆழியான் மாட்டு
இத்தலை நிகழ்ந்த எல்லாம் இயம்புவான் எடுத்துக்கொண்டாம்

எனக் கவி காவியத்தை நடத்தி வருகிற காட்சியையும் மாட்சியையும் இப்படிக் காட்டியிருக்கிறார். ஒரு தொகுதியை முடித்து மற்றொரு பகுதியைத் தொடங்கும் பொழுது தோன்றி

யெழுகிற கமபீர நிலையைக கருதிக காணுமதோறும உளளம பெரிதும மகிழுகிறது கலையின சுவைகள எவவழியும செவவை யாயக கனிநது வருகினறன சரித விளைவுகள அரிய பணபாடுக ளோடு மருவி மிளிாகினறன

தனது அருமை மனைவியைத தேடி வருமபடி வானரசேனை களை அனுப்பி விடடுக கிடகிநதை அருகே ஒரு மலையில தமபியு டன வாழநது வநத இராமன நாளும நாளும நிலைமையை நினை நது நெஞசம கவனறிருநதான உறுதி மிகுநத அரிய நெஞசம மறுகி மயஙகியது பரிதாபமா யிருநதது.

கிழக்கு, தெறகு, வடககு எனனும இத திசைகளில சீதை யைத தேடிச சென்றவா யாணடும காணோம எனறு மீணடு வநது சொலலவே இநத ஆணடகை யுளளததில கவலைகள நீணடு கடுந துயரஙகளாய மூணடு நினறன

தென திசைச செயதி ஒனறையே ஆவலோடு எதிா நோககி உயிா ஊசலாடி நினறது தேவியின கவலையால யாவும துயரஙகளாய மேவி நினறமையால அநத மலைவாசம இநதத தலை மகனுககு மிகவும அவலமாகவே யிருநதது

சுககிரீவனும அஙகேயே வநது தஙகி இந நமபிககு ஆறு தல கூறி அருகேயே எபபொழுதும தேறுதல செயதிருநதான எவவளவு தேறறினும இராமன ஆறறாமை மீதூாநது அல மநது நொநதான குறிதத தவணை கழிநதும தெனதிசை போன வானரஙகள வநது சேராமையால உளளக கவலை வெளளமாய விரிநதது. கவியரசனும கருதி மறுகினன, ஆயினும உறுதி கூறி இப பெருமானை நாளும நயமாகத தேறறி வநதான அநத அருமைத துணைவனுடைய உரைகளால ஆறுதலுறினும இவ வீரன அலமநதே யிருநதான

காாவரை இருநதனன கதிரின காதலன
சீரிய சொறகளின தெருடடச செஙகணனை
ஆருயிா ஆயிரம உடைய ஐயெனச
சோாதொறும சோாதொறும உயிாததுத தோனறினை

தணடலின நெடுநதிசை மூனறும தாயினா
கணடிலா மடநதையை எனனும கடடுரை

உணடுயிா அகதசெதன ஒறுகக வுமழுனன
திணடிறல அனுமனை நினையும சிநதையான (2)

ஆரியன அருநதுயாக கடலில ஆழபவன
சீரிய தனறுநம செயகை தீாவரும
பூரிய வெமபழி பொடிதத தாமெனச்
சூரியன சிறுவனை நோககிச சொலலினன- (3)

குறிததநாள இகநதா குனறத தெனதிசை
வெறிககருங குழலியை நாடல மேயினா
மறிததிவண வநதிலா மாணடுளாா கொலோ
பிறிததவாக குறறுள தெனனை பெறறியோ? (4)

மாணடனள அவளஇவண மாணட வாாததைதய
மீணடவாக குரைததலின விளிதல நனறெனப
பூணடதோா துயாகொடு போனறி னாகொலோ
தேணடினா இனனமும திரிகின றாாகொலோ? (5)

கணடனா அரககரைக கறுவு கைமமிக
மணடமா தொடஙகினா வஞசா மாயையால
விணடல மதனினமே யினாகொல வேறிலாத
தணடலின நெடுஞசிறைத தளைபபடடாா கொலோ? (6)

கூறின நாளஅவா இருககை கூடலம
ஏறலஞ சுதுமென இனப துனபஙகள
ஆறினா அருநதவம அயாகினறாா கொலோ?
வேறவாக குறறதென விளமபுவாய! எனறான (7)

(திருவடி தொழுத படலம)

மலைவாசம செயது கொணடிருநத இராமபிரான அடைந்துளள துயர நிலைகளை இக கவிப் படஙகளில கணடு இரங்குகிறோம. சுககிரீவன ஆறறித தேறறினலும ஆறாததுயரமுடையனாய மாறி மாறி மறுகி உருகி யிருககிறான. பிரிவினபரிவு பெரிய துயரமாய எவவழியும சூழநது உளளததை வாடடியுளளது. பெரிய சுதத வீரன இபபடிப பேதுறறிருததலால அநதப பரிதாபம எவவளவு கொடியது! எனபதை எளிதே தெளிநது கொளளலாம. தேவியை இழநதிருபபது ஆவியை இழநதுளள தாய அலமநது உழநதிருககிறான.

கதிரின காதலன எனறது சூரிய குமாரனான சுக்கிரீவனை. அருமை நண்புடைன அவன நாளும் அருகிலமாநது உறுதி மொழி

கள் பலகூறி உரிமையுடன் இராமனை ஆற்றித் தேற்றிப் போற்றி வந்திருக்கும் நிலையைச் சீரிய சொற்களின் தெருட்ட என்றதனால் தெரிந்து கொள்ளுகிறோம். மருண்டு மறுகிய போதெல்லாம் தெருண்டு தெளியச் செய்திருக்கிறான்.

பல வளங்களும் நிறைந்த நல்ல மலைச் சாரலில் வசித்திருந்தாலும் இராமனுடைய உள்ளத்தில் கவலைகள் புகுந்து கடுந்துயரங்கள் செய்திருக்கின்றன. இராமன் இருந்த அந்த மலைக்குப் பிரசரவணம் என்று பெயர். நான்கு மாத காலமாக அங்கேயே தங்கி இந் நம்பி தம்பியோடு வெம்பியிருந்தான்.

சீதா தேவியைத் தேடி வரும்படி திசைகள் தோறும் சேனைகளை ஏவி விட்டுச் சுக்கிரீவன் இராமன் பக்கலே அமர்ந்து வேண்டிய இதங்களைச் செய்து வந்தான். தனது சுக போகங்களையெல்லாம் மறந்து இரவும் பகலும் அருகே யிருந்து உரிமையுடன் அவன் ஆற்றி வந்த ஆதரவுகள் ஆர்வம் கனிந்து நின்றன.

அவனுடைய அன்புரிமையும் நண்பு நிலையும் இராமனுக்கு இன்பம் தந்து வந்தன. தன் உள்ளத்தைத் தேற்றி உறுதிகள் கூறி அவன் உதவி புரிந்து வந்தாலும் இவ் வீர வள்ளல் சோகத்தால் சோர்வடைந்தே யிருந்தான்.

ஆருயிர் ஆயிரம் உடையனும் என்னச்
சோர்தொறும் சோர்தொறும் உயிர்த்துத் தோன்றினன்.

இராமன் அடைந்திருந்த துயர நிலையை இது வரைந்து காட்டியுள்ளது. உயிர் வெளியே போய் உள்ளே மீண்டு வந்திருக்கும் காட்சியை இதில் கண்டு வருந்திக் கரைந்து மறுகுகிறோம். துயரத் துடிப்புகள் உயிரை வதைத்திருக்கின்றன.

தனது அருமை மனைவி உயிரோடு இருக்கிறாளோ? இல்லையோ? எடுத்துச் சென்ற தீயவன் எங்கே கொண்டுபோய் வைத்துள்ளானோ? தின்று தீர்த்தானோ? கொன்று தொலைத்தானோ? எவ்வழியும் யாதும் பழி படாத தனது அரச குடிக்குப் பெரிய இழிவு நேர்ந்ததே! தென் திசையில் தேடிச் சென்றிருப்பவர் மீண்டு வந்து என்ன சொல்வார்களோ? கண்டோம் என்பாரோ? காணவில்லை என்பாரோ? அங்கும் இல்லை என்றால் வேறு யான் செய்வது என்? என் இன்னவாறு இன்னலுழந்து உன்னி

புனைவி புலைந்து புலைந்து உயிர் மறுகியிருந்தான் ஆதலால் அந்தத் துயரப் பரிதாபங்கள் பெருகியிடலரியனவாய் ஓங்கி நின்றன. ஆயிரம் உயிர்களையுடையவனாய் இக்கோமகன் நோயுழந்து துடித்தான் என்பது நுனித்து நோக்கத்தக்கது. நாழிகை தோறும் செத்துச் செத்துப் பிழைத்தான் என்பதை இப்படி வித்தக விநோதமாய் விளக்கியிருக்கிறார்.

தனது இனிய மனைவியின் பிரிவுத் துயரம் உயிரை வாட்டி ஓட்டுகிறது; உரிமைத் துணைவனுடைய கருமக் காட்சி அதனை மீட்டியருளுகிறது. ஆகவே உயிர் உள்ளும் புறனும் ஊசலாடியுழலுகிறது.

சிறந்த மதிமானான அனுமான் போயிருக்கிறான், எப்படியும் தேவியைக் கண்டே வருவான் என்று கருதுந்தோறும் உள்ளம் தேறி உயிர் அமைதியுறுகிறது. அவன் வாயிலிருந்து என்ன வருமோ என எண்ணும் போதெல்லாம் இவன் ஆவி அலமரலடைந்துள்ளது. அந்த அவல நிலையைக் கவி இவ்வாறு விளக்கியருளினார்.

இந்த அல்லல் நிலையில் அயல் இருந்து நல்லன பல சொல்லி வானர வேந்தன் இம்மான வீரனைத் தேற்றிப் போற்றியுள்ளது அவனது நட்பின் எல்லையைத் தெளிய விளக்கி நின்றது.

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை. (குறள், 789)

யாண்டும் நிலை திரியாமல் எவ்வழியும் இடர்களைந்து இதம் புரிந்தருளுவதே உண்மையான நட்பின் தன்மையாம் என்னும் இவ்வுறுதி மொழிக்குச் சுக்கிரீவன் அங்கே உரிமையாயிருந்தான்.

இராமன் மறுகி அயரும் போதெல்லாம் அவன் உள்ளம் உருகி உறுதி கூறினான். கலங்காத திண்ணிய நெஞ்சன் ஆயினும் இப்புண்ணியனுடைய துயர நிலையை எண்ணி எண்ணி அவன் கண்ணீர் சொரிந்து கரைந்து வந்தான். அவனுடைய உள்ளப் பரிவு உரிமையை உணர்த்தி நின்றது.

"The element of friendship is tenderness" (Emerson)

"நட்பின் உண்மை நிலை உருக்கமே" என எமர்சன் என்னும் பேரறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். மனித வாழ்வில் இனிய நண்பன் அமைவது பெரிய பாக்கியமாம்.

நல்ல செல்வம் உள்ளபொழுது பலர் நண்பர் போல நடிப்பர். அல்லல் நேர்ந்தபோது எல்லாரும் அயல் ஒதுங்கிப் போவர். இத்தகைய பொல்லாத உலகத்தில் நல்ல ஒரு துணைவன் அமையின் அது அரிய பெரிய செல்வமாய் ஆதரவு தருகிறது.

வறுமை முதலிய கேடுகள் ஒருவனுக்கு நேரும்போதுதான் உண்மையான நண்பனை உறுதியாக அவன் காண நேர்கின்றான்.

"A friend in need is a friend indeed"

"ஆபத்தில் உதவுகிறவனே உண்மையான நண்பன்" என்னும் இது இங்கே ஓர்ந்து உணரவுரியது. அல்லல் நிலையில் ஆதரவு புரிந்தருளுகிறவனே நல்ல நண்பன் ஆகின்றான்.

அன்புரிமையும் பண்புடைமையும் நண்பில் அமைந்திருத்தலால் அது இன்ப நிலையமாய் நின்று யாண்டும் இனிமைகளை விளைத்தருளுகிறது.

"Flowers are lovely, Love is flower-like,
Friendship is a sheltering tree" (Coleridge)

"அன்பு மலர்போல இனியது, நண்பு குளிர் தருவாய் அளி புரிகின்றது" எனக் கோலரிட்ஜ் என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு பாடியிருக்கிறார்.

உள்ளம் கனிந்த நண்பன் உயர்ந்த உறுதி நலங்களை அருளி வருதலால் நட்பு மனித வாழ்வில் ஓர் அற்புத நிலையமாய் அமைந்து திட்பம் புரிந்து தெளிவருளி வருகின்றது.

இத்தகைய உத்தம துணைவனை சுக்கிரீவனை நாளும் ஆதரவு புரிந்து ஆற்றி வந்தமையால் இராமன் ஆருயிர் தேறியிருந்தான். ஒரு நாள் அவனை நோக்கிப் பரிவோடு சில உசாவினான். "சுக்கிரீவா! தென் திசை நோக்கிச் சென்றவர் இன்னும் வந்திலர், குறித்த தவணை கடந்து போயது, ஒருவரையும் காணோம்; யாதொரு தகவலும் தெரியவில்லை, ஒருவேளை சீதை இறந்து போயிருப்பள்; அந்தத் துக்கச்செய்தியை இங்கே வந்து சொல்ல மனமில்லாமல் அங்கேயே யாவரும் மடிந்து முடிந்திருப்பரோ? அல்லது பொல்லாத அரக்கர்களோடு மூண்டு போராடி மாண்டு போயிருப்பரோ? தேடி வந்த காரியம் யாதும் கைகூடாமையால் மீண்டு வர நாணி ஆண்டே பரதேசிகளாய்த் திரி

வார்களோ? உள்ளத்தில் அல்லல் மிகுந்தமையால் உலகத்தைத் துறந்து துறவிகளாய்ப் போயிருப்பார்களோ? தேடி வருவதாக உறுதி கூறி இங்கிருந்து விடை பெற்றுப் போனவர்கள் கதி இன்னது என்று யாதும் தெரியவில்லையே! நீ என்ன எண்ணுகிறாய்? உன் கருத்து என்ன?" என இன்னவாறு இராமன் இன்னலோடு வினவினான்.

இங்ஙனம் பரிதாப நிலையில் மறுகி மயங்கி அப்பெருமான் கூறிய உரைகளைக் கேட்டுச் சுக்கிரீவன் உள்ளம் உருகினான்; உறுதியுடன் பதில் சொல்ல நேர்ந்தான். அப்பொழுது அங்கே ததிமுகன் வந்து சேர்ந்தான். அவ்வரவு அதிசயமாய் நின்றது.

## சிந்தை மகிழ்ந்தது

மதுவனத்தின் தலைமைக் காவலனான ததிமுகன் அங்கே விரைந்து வந்து சுக்கிரீவன் அடியில் விழுந்து பணிந்து எழுந்து தொழுத கையனாய் எதிரே நின்று நேர்ந்ததை யெல்லாம் நேரே சொன்னான்: "மகாராஜா! நமது அழகிய பொழிலில் வலிந்து புகுந்து கனிகளையும் தேன்களையும் கொள்ளைசெய்து உண்டனர், நீலன் குமுதன் முதலான வானர சேனைகள் அங்கே களியாட்டம் கொண்டன, நான் புகுந்து தடுத்தேன், என்னை அங்கதன் அடித்துக் குத்திப் பழித்து விடுத்தான்" என அவன் இவ்வாறு உரைத்து நின்றான். இவ்வுரைகளைக் கேட்டதும் சுக்கிரீவன் உள்ளம் களித்துத் துள்ளி எழுந்து இராமனை உவந்து நோக்கி வணங்கி நின்று "ஐயனே! என் அம்மை சேமமாயிருக்கிறார், நான் பிறந்த பேறு பெற்றேன், அனுமான் இப்பொழுது விரைந்து வந்து சேருவான், உங்கள் உள்ளத்தில் இனி யாதொரு கவலையும் கொள்ள வேண்டாம், எல்லாம் நன்மையாகவே முடிந்துள்ளது" என இவ்வண்ணம் பரவசமாய் உவந்து சொல்லித் ததிமுகனைத் திரும்பிப் பார்த்தான்: "அப்பா! நீ இன்னம் தெரியாமல் நடந்திருக்கிறாய்! அங்கதன் யார் தெரியுமா? இந்த அரசுக்குரிய தலைமகன், அவனுடைய சொந்த வனத்தில் உள்ள கனிகளை வானரங்களுக்குத் தானம் செய்திருக்கிறான், நிலைமையை உணராமல் கலகத்தை விளைத்திருக்கிறாய்! உடனே போய் அந்த இளவரசனை வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொள்." என்று உறுதி மொழி கூறிப் பொறுதி நிலைகளைப் போதித்து விடுத்தான்.

## ததிமுகன் மீண்டது

தன் பிழையை உணர்ந்து அவனும் மீண்டு போனான். மது வனத்தை அணுகினான் தனது ஏவலரான காவலாளர்களோடு ததிமுகன் திரும்பி வருவதை அங்கதன் கண்டான். மீண்டும் போருக்குத் திரண்டு வருகிறான் என வெகுண்டு நின்றான். தலைமீது கூப்பிய கையனாய் அவன் விரைந்து வந்து இவன் அடியில் விழுந்து தொழுது வணங்கித் தான் செய்த பிழையைப் பொறுத்தருளும்படி போற்றி வேண்டினான். அவனைத் தழுவி எடுத்து உபசரித்து அங்கதன் ஆதரவு புரிந்தான்.

தனது சிறிய தந்தை தன்பால் அன்புரிமை கொண்டுள்ளதை உணர்ந்து உவந்தான். அதன்பின் அனுமானை நோக்கினான்: "வெயில் சிறிது தணிந்துள்ளது; நாங்கள் பின்னே நடந்து வருகிறோம், நீ முன்னே விரைந்து செல்லுக! ஆண்டவன் ஆவலாய் எதிர்பார்த்திருப்பார், அந்தப் புண்ணிய மூர்த்தியின் உள்ளக் கவலை தீர்ந்து உவந்திருக்கும்படி உண்மையை உரைத்தருளும்" என்று அங்கதன் வேண்டினான். வேண்டவே அந்த ஆண்டகை உவந்து தொழுது அங்கிருந்தபடியே ஆகாய வீதியில் தாவியேறினான்; வான வீதிவழியே வாவி வந்தான்.

## அனுமான் வந்தது

ததிமுகன் வந்து போனபின் சுக்கிரீவன் பெரு மகிழ்ச்சியுடையனாய் இராமனிடம் உரிமையுரைகளாடினான்: "அருமை அண்ணலே! ஐயம் தீர்ந்தது, அல்லல் ஒழிந்தது, தென் திசை நோக்கித் தேடிச் சென்றவர் பிராட்டியைக் கண்டு கொண்டதனாலேதான் இவ்வளவு ஆனந்தத்தோடு மது வனத்துள் வந்து புகுந்து விருந்து அருந்தியுள்ளனர், ததிமுகன் வந்து போனது பல உண்மைகளைச் சிந்தை தெளியச் செய்துள்ளது, மாருதி விரைவில் வருவான், சுப சோபனமான நல்ல மங்கலச் சொல்லை உள்ளம் குளிரக் கேட்கலாம்" எனக் கவியரசன் இவ்வாறு சுவையாக உவகையுரைகள் கூறினான்.

அன்பு நலம் கனிய இங்ஙனம் இன்பமொழிகள் இயம்பிய அந்த நண்பனை இராமன் நயந்து நோக்கி, "போனவர் வந்து என்ன சொல்லுவரோ? இந்த அண்டம் முழுவதும் தேடினோம்; யாண்டும் அரசியைக் காணவில்லை என்று கூறவும் கூடுமே!

விதியின் விளைவு யாதாகுமோ?" எனப் பரிதாபத்தோடு பரிந்து பேசிக் கொண்டிருக்கும் பொழுது தென்திசையை இயல்பாக நோக்கினான்; வான வீதி வழியே அனுமான் வாவி வருவதைக் கண்டான்; ஆனந்த பரவசனாய் ஆவலோடு பார்த்தான். அந்தக் கமலக் கண்ணனுடைய உள்ளத்தில் அப்பொழுது பொங்கி யெழுந்த உவகைத் துடிப்புகளை யார் சொல்ல வல்லார்?

இப்புறத்து இராமனும் இரவி சேயினை
ஒப்புற நோக்கிவந் துற்ற தானையர்
தப்புறக் கண்டனம் என்பரோ நகாது
அப்புறத் தென்பரோ அறைதியால் என்றான் (1)

என்புழி அனுமனும் இரவி என்பவன்
தென்புறத் துள்ளனன் தெரிவ தாயினான்
பொன்பொழி தடக்கையப் பொருவில் வீரனும்
அன்புறு சிந்தையன் அம்மைய நோக்கினான் (2)

எய்தினன் அனுமனும் எய்தி ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன் முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்
வையகம் தழீஇ நெடி திறைஞ்சி வாழ்த்தினான் (3)

திண்டிறல் அவன்செயல் தெரிய நோக்கினான்
வண்டியல் ஓதியும் வலியள் மற்றிவன்
கண்டதும் உண்டவள் கற்பும் நன்றெனக்
கொண்டனன் குறிப்பினால் உணரும் கொள்கையான் (4)

ஆங்கவன் செய்கையை அளவை யாமென
ஓங்கிய உணர்வினால் விளைந்த துன்னினான்
வீங்கினன் தோள்புயல் கண்கள் விம்மினன்
நீங்கியது அருந்துயர் காதல் நீண்டதே! (5)

இங்கே நிகழ்ந்துள்ள அதிசய நிகழ்ச்சிகளை வியந்து காண்கின்றோம். உவந்து உணர்ந்து உள்ளம் களிக்கின்றோம்.

நேரே காண்கின்ற நாடகக் காட்சிகள் போல் இக்காவிய நிகழ்ச்சிகள் சீவிய உணர்ச்சிகளைத் திவ்விய நிலையில் விளக்கி வருகின்றன. மலைச் சாரலில் வசித்து வந்த சக்கரவர்த்தித் திருமகனுடைய பரிதாப நிலைகளைப் பரிவோடு காட்டி வந்த கவி உடனே அனுமானைக் காணச் செய்திருக்கும் காட்சி அதிசய மாட்சியாய் ஆனந்தத்தை விளைத்து நிற்கிறது.

அரிய மானச மருமங்களும இனிய கலையின சுவைகளும் எவவழியும வெளியாய இனப ஒளிகளை வீசி வருகினறன.

இரவிஎனபவன தெனபுறதது உளளனஎனத தெரிவது ஆயினன.

அனுமான ஆகாய வீதி வழியே வநதிருககும காட்சியை இது காட்டியுளளது காரிய சிததி பெறறு வீரிய ஒளி வீசி வந திருததலால சூரியன உவமையாயினன. இரவி = சூரியன. இரவை நீககுபவன எனனும ஏதுவான வநதது

துனப இருளை நீக்கி இராமனுககு இனப ஒளியை அருள வருகினறன ஆதலால அனுமான இஙகே இரவி என நேரநதான

சூரியன கிழககே உதயமாகி எழுவது இயலபு அநத வழககததிறகு மாறுகத தென திசையிலிருநது வேறே ஒரு சூரியன் புதுமையாயத தோனறியது போல மாருதி இஙகே தோனறியிருககினறன

அறிவின ஒளி, வீர ஒளி, தரும ஒளி, ஞான ஒளி, புகழொளி முதலிய உயாநத ஒளிகளுக கெலலாம நிரநதர நிலையமா யிருகத லால அனுமானை ஒளி மயமான சூரியன என ஈணடுத துலககி யருளினா

கடலைத தாவி இலஙகைககுச செலலும பொழுது வடக்கி லிருநது எழுநது செலலுகிற சூரியனைபபோல மாருதி போனன என முனனம கூறினா.

வடககெழுநது இலஙகை செலலும பரிதி வானவனும ஒததான

என அனுமான புறபபட்டுப போகும போது இபபடி உரைததவா திருமபி வருஙகால அநத உவமானததையே ஞாபக மாக ஈணடு உரைததிருபபது ஊனறி யுணர வுரியது. வடககி லிருநது போன ஒளி தெறகிலிருநது மீணடு வநதுளளது

கிழககும மேறகுமாயச செனறு வருகிற சூரியன அநத வழககம மாறி வடககும தெறகுமாய மருவி வநததுபோல கரும வீரன இலஙகைபோய மீணடு வநதுளளான. கலைககதிா விரிநது ளளஞான சூரியனுககு உலகசூரியன ஒபபாயத தோனறினன.

இலஙகையை எரிததுவிட்டு அயலே ஒரு மலையில வநது தாவிய பொழுதும ஆங்கு ஒரு குடுமிக் குனறை அருககனின

அணைந்த ஐயன் எனவே குறித்தருளினார். முதலில் உரைத்த கருத்தை இடங்கள் தோறும் நிலை நிறுத்தி வருவது கவியின் இயல்பாய் நிலைத்து வருகிறது.

பொன்பொழி தடக்கை அப் பொருவில் வீரனும்
அன்புறு சிந்தையன் அமைய நோக்கினான்

வான்வீதியில் வரும்போதே அனுமானைப் பார்த்த இராமனை நமக்கு இப்படிக் காட்டியிருக்கிறார். பொன்னை வாரிப் பொழிகின்ற அழகிய கையில் விழுமிய ஒரு வில்லைப் பிடித்துள்ளவன் என்றது அவனுடைய கொடை வீரங்களைக் கருதியுணர வந்தது. நல்லவர்களுக்கு இரங்கி ஈயும் கருணை வள்ளல்; பொல்லாதவர்களைக் கொன்றழிக்கும் வென்றி வீரன் என்பது விளங்கி நின்றது.

மனைவியைப் பிரிந்து வருந்தியிருக்கும் பெருந்தகையாளனை இங்ஙனம் உலகம் தெரிந்து கொள்ள உரைத்தார்.

இந்தச் சமையத்தில் இங்கே இவ்வாறு குறித்தது இனிமேல் அடுத்து நிகழவுள்ளதைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள.

தெய்வத் திருவை வாரிக் கொடுத்து அமரரைப் பொன்னுலக வாழ்வில் வைக்கவும், அம்புகளை வாரியிறைத்து அரக்கரை அடியோடு அழித்தொழிக்கவும் மூண்டு வந்துள்ள இந்த ஆண்டகை அனுமான் மீண்டு வருவதை எதிர்பார்த்திருக்கின்றான் ஆதலால் அந்தக் கொடையும் வீரமும் இடை தெரியப் பொன் பொழி தடக்கையும், பொருவில் வீரமும் இன்ப அடைகளாய் ஈண்டு எழுந்தன. உரிய நீர்மைகள் உரிய இடத்தில் உணர வந்தன.

## அனுமான் வந்து நின்ற நிலை

இத்தகைய வீர வள்ளல் அன்பு ததும்பிய சிந்தையனாய் அனுமானை ஆவலோடு நோக்கினான். அழகிய செந்தாமரைக் கண்களால் இங்ஙனம் உரிமையுடன் பார்க்கவே, அந்தரத்திலிருந்து வாவி வந்தவன் கண்ணீர் ததும்பப் முன்னே வந்து நின்றான். நின்றவன் இராமனைப் பார்க்கவில்லை, தென்திசை நோக்கித் தலைமேல் இரண்டு கைகளையும் கூப்பித் தரையில் நெடிது வீழ்ந்து தொழுதான். விரைவில் எழுந்தான், உடல் குழைந்து தலை வணங்கி வாய் புதைத்து விழி நீர் மல்க இராமன் எதிரே உழுவலன்போடு கெழுதகைமை தோன்ற உருகி நின்றான்.

அந்தக் கரும வீரனுடைய செயலையும் நிலைமையும் கண்டதும் இந்தத் தரும மூர்த்தி பெருமகிழ்ச்சி அடைந்தான். தனது அருமை மனைவி உயிருடன் இருக்கிறாள்; புனித நிலையிலுள்ள அவளை இவன் நேரே கண்டு வந்திருக்கிறான் என்று கருதி உணர்ந்து உறுதியடைந்து உள்ளம் தெளிந்து உவகை மீதூர்ந்தான். காட்சியும் மாட்சியும் காண வந்தன.

இவன் கண்டதும் உண்டு, அவள் கற்பும் நன்று.

என இவ்வென்றி வீரன் நன்கு தெரிந்து கொண்டான்.

தென் திசையை நோக்கி அனுமான் கும்பிட்டு வீழ்ந்தது சீதை அங்கே சேமமாயிருக்கிறாள் என்பதைத் தெரியப் படுத்தியது. உலகமெல்லாம் திக்கு நோக்கித் தொழும்படி புனித நிலையில் அப் பதிவிரதை இனிது அமைந்துள்ளமையை அவனது செயல் நுணுகி உணரச் செய்தது.

குறிப்பினால் உணரும் கோள்கையான்

என இராமனை இவ்வாறு நமக்கு உணர்த்தி யிருக்கிறார்.

வாய்திறந்து சொல்லாமலே பிறருடைய செயல் இயல்களைக் கொண்டு உண்மை நிலையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளும் அதிசய மதிமான் என இராமனை இங்கே கவி துதிசெய்து துலக்கி யிருக்கிறார்.

ஆண்டவனுடைய மதி மாண்பும் அடியவனுடைய வினையாண்மையும் ஈண்டு ஒருங்கே வெளியா யிருக்கின்றன.

நுண்மாண் நுழைபுலமுடைய இப் புண்ணிய வீரன் முன்னிலையில் வந்து நின்று அவ்வீத்தகன் வினைத்துள்ள விசித்திரச் செயல்களை வியத்தற்கு நிலையன. தலைவனுடைய உள்ளக் கவலைகளெல்லாம் ஒலியிலை ஒளியும்படி அம்மதியூகி அதிவிநயமாய் ஆற்றி யருளினன்.

தேவி உயிரோடு இருக்கிறாளோ அல்லது இல்லையோ என்று அலமாப்புக்களும் அவியலமந்து கண்டதோறும் கருதிமறுகி உருகி யுளைந்திருக்கும் நாயகனுடைய உள்ளத்தில் பேரின்ப வெள்ளத்தை அத் தூயவன் ஊட்டி யுள்ள உபாயம் உணர்வொளி வீசி உயரிய நாகரிகத்தைக் காட்டி யுள்ளது.

நாவை அசையாமலே அவன் யாவும் கூறினன்,

காதால் யாதும் கேளாமலே எல்லாவற்றையும் இவன் தெரிந்து கொண்டான். இரண்டு மேதைகளுடைய அரிய நீர்மைகளை ஒருங்கே உணர்ந்து ஈண்டு நாம் உவந்து நிற்கிறோம். குறிப்பினால் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து அறிவதில் இருவரும் அதிசய நிலைகளில் உயர்ந்து நிற்கின்றனர். அனுமான் கலை ஞானத்தால் அம் மகிமையை அடைந்திருக்கிறான். இராமன் இயல்பாகவே அதில் நிபுணனாயுள்ளான்.

"இங்கிதஜ்ஞ ஞாஸது கோஸலா"

"கோசலா தேசத்தவர் குறிப்பறிதலில் சிறந்தவர்."

என்பது பண்டுதொட்டே இங்ஙனம் உயர்ந்த புகழ்பெற்றுச் சிறந்த பண்பாடுகளில் விளங்கியிருக்கின்றனர்.

அத்தகைய தேசத்தை ஆளுகின்ற சக்கரவர்த்தித் திருமகன் எத்தகைய மதியூகி! குறிப்பறிவதில் எவ்வளவு தேர்ச்சியுடையவன்! என்பதை ஈண்டு உய்த்துணர்ந்து கொள்ளுகிறோம். அதிசய மேதைகள் துதி செய்ய வந்தன. காண்டல், கருதல், முதலிய அளவைகள் ஈண்டு வெளியாயுள்ளன.

அனுமானுடைய குறிப்பினால் அனுமானமாய்த் தேவி சுகமாயிருக்கிறாள் என்று தெரிந்தவுடனே இக்கோமகன் உள்ளத்தில் பேரின்ப வெள்ளம் பொங்கி எழுந்தது. அந்த இன்ப உணர்ச்சிகளைச் சொல்லால் வரைந்து சொல்ல முடியாது. கவி குறிப்பாக எழுதிக் காட்டியிருக்கிறார், அந்த எழுத்து ஓவியங்களைக் கருதிநோக்கி உறுதி உண்மைகளை ஓர்ந்துகொள்ள வேண்டும். செவியால் உரையைக் கேளாமலே செயலைக் கண்டு உயிர் உவகையில் ஓங்கியுள்ளது.

வீங்கினன தோள், புனல் கண்கள் விம்மின,
நீங்கியது அருந்துயர், காதல் நீண்டதே.

இலங்கையிலிருந்து மீண்டு வந்து தனது எதிரே நின்ற அனுமானது செயலைக் கண்டபோது இராமன் அடைந்து நின்ற நிலையை இந்த இரண்டு அடிகளும் தெளிவாகக் காட்டியுள்ளன.

தனது அருமை மனைவியைப் பிரிந்து பரிதாப நிலையில் மறுகியிருந்தவனை இவ்வாறு நேரே எழுதி நிறுத்தி அவனது நிலைமை நீர்மைகளைக் கண்ணும் கருத்தும் கண்டுமகிழ விளக்கியிருக்கும் வித்தகம் வியப்பு மிகவுடையது.

பிரிவுத்துயரால் மெலிந்திருந்த தோள்கள் வளர்ந்து நிமிர்ந்தன, ஆனந்தத்தால் கண்களிலிருந்து நீர்கள் பொங்கின, உள்ளத்தில் புகுந்திருந்த துன்பங்கள் அடியோடு ஒழிந்து போயின, அன்புரிமையான காதல் பெருகி நெடிது ஓங்கி நீண்டது.

நீண்டதே என்பதில் ஏகாரம் அதிசய உருக்கமாய் எழுந்தது. அதில் உள்ள பரிவான ஓசையை உள்ளச் செவியால் ஓர்ந்து உறுதி நலங்களைத் தேர்ந்து கொள்க.

தோள்வீங்கியதும் கண்கள்நீர் பொங்கியதும் புறத்தேநிகழ்ந்தன

துயர் நீங்கியதும் காதல் நீண்டதும் அகத்தே விளைந்தன

உடலில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் கண்ணுக்குத் தெரிந்தன ஆதலால் அவற்றை முதலில் குறித்தார், உள்ளத்தில் நிகழ்ந்தன உணர்வால் யூகித்தறிய உரியன ஆதலால் பின்பு உரைத்தார்

புறமும் அகமும் முறையே அறிய வந்தன

உருவத் திருமேனியிலும் உள்ளக் கரணங்களிலும் தோன்றியுள்ள நிலைகள் இவ்வெற்றி வீரனை இங்கே நன்கு விளக்கி நின்றன

இந்தப் பிறவியில் மீண்டும் சீதையைக் காண முடியுமா? என்று ஏங்கியிருந்த ஆண்டகை அநுமானால் உண்மை தெரிந்ததும் அந்த ஏக்கம் நீங்கி இன்பக் கடலில் மூழ்கியிருக்கிறான்

உழுவலன்போடு தழுவி மகிழ்ந்த விழுமிய தோள்கள் ஆதலால் அவை முதலில் வீங்கின அனுதினமும் இனிதே கண்டு களித்த கண்கள் ஆதலால் அந்த உருவ அழகைக் கருதி நோக்கின, நோக்கவே பரிவோடு உருகி நின்றன. அவ்வுருக்கம் கண்ணீராப் பெருக்கமாய் வெளிப்பட்டது. மீளவும் நேரே கண்டு மகிழலாம் என உழுவலன்பு மண்டி எழுந்தமையால் அது ஆனந்த அழுகையாய் மிண்டி விளைந்தது.

சிறந்த சுத்த வீரன் ஆதலால் தோள் வீக்கம் முதலில் தோன்றியது தீயோரை அழித்து நீக்கவும், நல்லோரை அளித்துக் காக்கவும் வில் எடுத்து வந்தான்; இடையே மனைவியை இழந்தான், மனம் உடைந்து நின்றான்; இப்பொழுது இருப்பதை அறிந்தான். எப்பொழுதும் கருதி வந்த தனது கடமையை விரைந்து செய்யலாம் என்று உவந்து கொண்டான். அவ்வுவகை களிப்பால் இவ் வீரன் தோள்கள் பூரித்து வளர்ந்தன.

காதால் யாதும் கேளாமலே எல்லா வற்றையும் இவன் தெரிந்து கொண்டான். இரண்டு மேதைகளுடைய அரிய நீர்மைகளை ஒருங்கே உணர்ந்து ஈண்டு நாம் உவந்து நிற்கிறோம். குறிப்பினால் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து அறிவதில் இருவரும் அதிசய நிலைகளில் உயர்ந்து நிற்கின்றனர். அனுமான் கலை ஞானத்தால் அம் மகிமையை அடைந்திருக்கிறான். இராமன் இயல்பாகவே அதில் நிபுணனாயுள்ளான்.

"இங்கிதஜ்ஞ ஞாஸது கோஸலா"

"கோசலர் தேசத்தவர் குறிப்பறிதலில் சிறந்தவர்."

என்பு பண்டுதொட்டே இங்ஙனம் உயர்ந்த புகழ்பெற்றுச் சிறந்த பண் பாடுகளில் விளங்கி யிருக்கின்றனர்.

அத்தகைய தேசத்தை ஆளுகின்ற சக்கரவர்த்தித் திருமகன் எத்தகைய மதியூகி! குறிப்பறிவதில் எவ்வளவு தோய்ச்சி யுடையவன்! என்பதை ஈண்டு உய்த்துணர்ந்து கொள்ளுகிறோம். அதிசய மேதைகள் துதி செய்ய வந்தன. காண்டல், கருதல், முதலிய அளவைகள் ஈண்டு வெளியாயுள்ளன

அனுமானுடைய குறிப்பினால் அனுமானமாய்த் தேவி சுகமாயிருக்கிறாள் என்று தெரிந்தவுடனே இக்கோமகன் உள்ளத்தில் பேரின்ப வெள்ளம் பொங்கி எழுந்தது. அந்த இன்ப உணர்ச்சிகளைச் சொல்லால் வரைந்து சொல்ல முடியாது. கவி குறிப்பாக எழுதிக் காட்டி யிருக்கிறார், அந்த எழுத்து ஓவியங்களைக் கருதிநோக்கி உறுதி உண்மைகளை ஓர்ந்துகொள்ள வேண்டும். செவியால் உரையைக் கேளாமலே செயலைக் கண்டு உயிர் உவகையில் ஓங்கி யுள்ளது

வீங்கினன தோள், புனல் கண்கள் விம்மின,
நீங்கியது அருந்துயர், காதல் நீண்டதே

இலங்கையிலிருந்து மீண்டு வந்து தனது எதிரே நின்ற அனுமானது செயலைக் கண்டபோது இராமன் அடைந்து நின்ற நிலையை இந்த இரண்டு அடிகளும் தெளிவாகக் காட்டியுள்ளன.

தனது அருமை மனைவியைப் பிரிந்து பரிதாப நிலையில் மறுகி யிருந்தவனை இவ்வாறு நேரே எழுதி நிறுத்தி அவனது நிலைமை நீர்மைகளைக் கண்ணும் கருத்தும் கண்டுமகிழ விளக்கியிருக்கும் வித்தகம் வியப்பு மிகவுடையது.

பிரிவுத்துயரால் மெலிந்திருந்த தோள்கள் வளர்ந்து நிமிர்ந்தன, ஆனந்தத்தால் கண்களிலிருந்து நீர்கள் பொங்கின; உள்ளத்தில் புகுந்திருந்த துன்பங்கள் அடியோடு ஒழிந்து போயின, அன்புரிமையான காதல் பெருகி நெடிது ஓங்கி நீண்டது.

நீண்டதே என்பதில் ஏகாரம் அதிசய உருக்கமாய் எழுந்தது. அதில் உள்ள பரிவான ஓசையை உள்ளச் செவியால் ஓர்ந்து உறுதி நலங்களைத் தேர்ந்து கொள்க.

தோள் வீங்கியதும் கண்கள் நீர் பொங்கியதும் புறத்தே நிகழ்ந்தன.

துயர் நீங்கியதும் காதல் நீண்டதும் அகத்தே விளைந்தன.

உடலில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் கண்ணுக்குத் தெரிந்தன ஆதலால் அவற்றை முதலில் குறித்தார், உள்ளத்தில் நிகழ்ந்தன உணர்வால் யூகித்தறிய உரியன ஆதலால் பின்பு உரைத்தார்.

புறமும் அகமும் முறையே அறிய வந்தன.

உருவத் திருமேனியிலும் உள்ளக் கரணங்களிலும் உற்றுள்ள நிலைகள் இவ்வெற்றிவீரனை இங்கே கன்குவிளக்கி நின்றன.

இந்தப் பிறவியில் மீண்டும் சீதையைக் காண முடியுமா? என்று ஏங்கியிருந்த ஆண்டகை அநுமானால் உண்மை தெரிந்ததும் அந்த ஏக்கம் நீங்கி இன்பக் கடலில் மூழ்கியிருக்கிறான்.

உழுவலன்போடு தழுவி மகிழ்ந்த விழுமிய தோள்கள் ஆதலால் அவை முதலில் வீங்கின. அநுதினமும் இனிதே கண்டு களித்த கண்கள் ஆதலால் அந்த உருவ அழகைக் கருதி நோக்கின, நோக்கவே பரிவோடு உருகி நின்றன. அவ்வுருக்கம் கண்ணீராய் பெருக்கமாய் வெளிப்பட்டது. மீளவும் நேரே கண்டு மகிழலாம் என உழுவலன்பு மண்டி எழுந்தமையால் அது ஆனந்த அழுகையாய் மிண்டி விளைந்தது.

சிறந்த சுத்த வீரன் ஆதலால் தோள் வீக்கம் முதலில் தோன்றியது. தீயோரை அழித்து நீக்கவும், நல்லோரை அளித்துக் காக்கவும் வில் எடுத்து வந்தான்; இடையே மனைவியை இழந்தான், மனம் உடைந்து நின்றான்; இப்பொழுது இருப்பதை அறிந்தான். எப்பொழுதும் கருதி வந்த தனது கடமையை விரைந்து செய்யலாம் என்று உவந்து கொண்டான். அவ்வுவகைக் களிப்பால் இவ் வீரன் தோள்கள் பூரித்து வளர்ந்தன.

அன்புரிமையாலும் வீரத் திறலாலும் இக்கோமகன் தோள்கள் ஈண்டு வீங்கியுள்ளமை ஊன்றி உணர்ந்து கொள்ளுகிறோம்.

அனித் துணையை இழந்து விட்டோம் என்ற அவலத் துயர் ஒழிந்து போயது, விரைந்து அடைந்து கொள்ளலாம் என்ற ஆவல் பெருகி எழுந்தது. ஆதலால் துயர் நீங்கியது காதல் நீண்டது என அந்த இரண்டையும் இறுதியில் ஒருங்கே வரைந்து காட்டினார்.

உள்ளக் கவலை நீங்கி உவகை ஓங்கிய இவ்வள்ளலை நோக்கி அனுமான் பின்பு சொல்ல நேர்ந்தான். அச் சொல்லின் செல்வன் பேசியுள்ள வாசகங்களை அயலே காண வருகின்றோம்.

கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்
தெண்டிரை அலைகடல் இலங்கைத் தென்னகர்
அண்டர் நாயக! இனித் துறத்தி ஐயமும்
பண்டுள துயரும்என்று அனுமன் பன்னுவான்

சீதையை இலங்கையில் கண்டு வந்த அனுமான் இராமனிடம் இவ்வாறு கூறியிருக்கிறான். சொல்லியுள்ள முறையில் அறிவின் சுவைகள் பெருகியுள்ளன. தேவி இருக்கிறாள் என்று செயலால் ஒருவாறு யூகித்துக்கொண்டாலும் மாருதி நேரே கண்டானோ? காணவில்லையோ? அவன் வாய் திறந்து என்ன சொல்லுவானோ? என இன்னவாறு ஐயமும் கவலையும் ஆவலும் மண்டி இராமன் ஏங்கியிருக்கிறான். ஆதலால் அந்த உள்ளத்தில் உறுதியை ஊட்டி உவகைகளை விளைக்க உரைகள் விளைந்து வந்திருக்கின்றன.

நான் அம்மையைக் கண்டேன் என்று சொல்ல வேண்டியவன் அவ்வாறு சொல்லவில்லை. அம்மை என்று தொடங்கினால் அடுத்து என்ன வருமோ? கண்டேன் என்பானோ? காணேன் என்பானோ? வேறு என்ன சொல்லுவானோ? என இராமன் உள்ளம் அவாவித் துடிக்கும். ஆதலால் அந்த அவலம் யாதும் நேராதபடி நேரே கண்டனென் என முதலிலேயே தெளிந்து தேறுமாறு மொழிந்து தொடர்ந்தான்.

ஆவி பதைத்திருக்கிற அவ்வள்ளலுக்கு அமுதம் ஊட்டியது போல் இம் மொழி முன்னே ஒளிவீசி வந்தது. கண்டனென் என்று சொன்னால் யார் கண்டது? என்ற ஐயத்தை உண்டாக்கும் ஆதலால் அங்ஙனம் கூறாமல் தனது ஒருமைக்கே தனியுரிமையான என் விகுதியால் கூறினான். 'யாரைக் கண்டேன் தெரி

யுமா? என்று மேலே விசயமாய்த் தெரியப்படுத்தி யிருக்கும் வித்தகம் வியந்து நோக்கத் தக்கது.

கற்பினுக்கு அணியை.

பிராட்டியைக் கண்டேன் என்று சொல்லாமல் இப்படிச் சொல்லி யிருக்கிறான். தான் கண்டு வந்த பொருளைக் கருத்தில் கொண்டுவந்து இங்கே காட்டியிருக்கும் காட்சி அரிய மாட்சியுடையது. ஒரு மொழியிலேயே பலபொருள்கள் ஒளி புரிகின்றன.

சீதையைக் கண்டேன் என்று அனுமான் சொன்னால் அவள் எந்த நிலையில் இருக்கிறாளோ? என்ச் சந்தேகமும் தோன்றும் ஆதலால் அந்த ஐயத்தை அறவே நீக்கி மெய்ம்மை உணர்ந்து கொள்ளும்படி அச் செய்யவளைக் கற்பினுக்கு அணி என இங்ஙனம் அற்புத நிலையில் காட்டியருளினான். கற்பைத் தான் அணியாப் பூண்டுள்ளாள் என்னாமல் தன்னை அது அணியாகக் கொண்டுள்ளது என்றது கூர்ந்து சிந்திக்க வுரியது.

கற்பு என்றது தான் கொண்ட கணவனையே தெய்வமாகக் கருதி ஒழுகும் உறுதி நிலை. வேறு எந்த ஆடவரையும் சிந்தையாலும் தொடாத செவ்விய நீர்மையாதலால் அது திவ்விய மகிமையுடையதாய் யாண்டும் சிறந்து நிற்கிறது. மழை பெய் எனப் பெய்யும், தேவரும் ஆவலோடு ஏவல்செய்வார் என்றதனால் அதன் அற்புத நிலை அறியலாகும்.

இத்தகைய அரிய கற்பும் சீதையால் பெருமை பெற்றுள்ளது. பெண்ணுக்கு அணிபோல் கற்புக்குச் சீதை அழகு செய்துள்ளமையால் கற்பினுக்கு அணி என நேர்ந்தாள்.

கற்பு என்னும் அழகிய ஓர் அரசிளங்குமரி சீதை என்னும் பெயரையுடைய ஒரு சோதி மணி அணியைப் பூண்டு விழுமிய எழிலோடு விளங்கி நிற்கும் நிலையை கண்டு உளங்கூர்ந்து நோக்கி உவந்து கொள்ளுகிறோம்.

உலகில் தோன்றியுள்ள சிறந்த பதிவிரதைகளுக்கெல்லாம் சீதை உயர்ந்த ஓர் அதி தேவதையாய் ஒளி செய்துள்ளாள்.

ஞான சீலனான சனகனிடம் தோன்றிய சானகி வானகமும் வையகமும் உய்ய வந்திருக்கிறாள். பெண்களுக்கெல்லாம் குலதிலகமாய் இப்பெண்ணரசி விளங்கி நிற்கிறாள்.

உத்தம பத்தினிகள் எவரும் திசைநோக்கித் தொழுது வருதலால் இவளது விழுமிய நிலை தெளிவாய் வெளியாகியுள்ளது.

கற்பைக் காப்பதில் இவளுக்கு நேர்ந்துள்ள சோதனைகள் போல வேறு எவருக்கும் நேரவில்லை. அங்கக் கொடிய சோதனைகளையெல்லாம் அடியோடு அழித்தழுக்தன் கற்புப் புனித நிலையில் நெடிது காத்திருக்கிறாள் ஆகலால் பெண்ணுலகம் இவளைக் கண் எனக் கருதி யாண்டும் உரிமையோடு போற்றி வருகிறது.

சானகி, சீதை, மைதிலி என்னும் இவளுடைய திருநாமங்களைத் தங்கள் குழந்தைகளுக்குப் புனிதமாக இட்டுத் தாய்மார் வழங்கி வரும் வழக்கம் இமயம் முதல் குமரி வரை இத்தேச முழுவதும் பரவியுள்ளமையால் இப்பதிவிரதையின் மகிமையும் மாட்சியும் எங்கும் ஓங்கிப் பெற்று ஒளிசெய்திருத்தல் அறியலாகும்.

பெயரளவில் நில்லாமல் இவளது சீலத்தைப் பின்பற்றி ஞாலம் ஒழுகிவரின் மேலான மகிமையை மேவி விளங்கும்.

> "The women of India must grow and develop in the foot-prints of Sita Sita is unique " (Vivekananda)

"சீதையின் அடிச் சுவடுகளைப் பின்பற்றி இந்தியப் பெண்கள் வளர்ந்து உயர வேண்டும். அவள் புனித நிலையில் தனியுயர்ந்துள்ள ஒப்பற்ற பதிவிரதை" என விவேகானந்தர் இவ்வாறு கூறியுள்ளார். அந்த ஞான சீலர் வாயிலிருந்து வந்துள்ள இந்த வாசகம் இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது. அரிய துறவிகளும் பெரிய முனிவர்களும் தொழுது துதிக்கும் விழுமிய நிலையில் இப்பத்தினித் தெய்வம் ஒளி மிகுந்துள்ளது.

தருமத்தின் திருவுருவமாய் இராமன் தோன்றியுள்ளான்.

கற்பின் அணி எனச் சீதை சிறந்திருக்கிறாள்.

இந்த அற்புத உருவங்களைக் கருதி மகிழ்ந்து அறிவுலகம் உயர்ந்து வருகிறது. ஆணுலகமும் பெண்மையுலகமும் மேன்மை அடையும்படி இவர் அவதரித்திருக்கின்றனர். "மூவுலகின் இருந்திறத்தாரக்கும் செய்த வாம்பு இவர்" எனச் சூர்ப்பநகையின் வாய்மொழியால் கவி குறித்திருப்பது அதிசய இன்பமாய் ஒளி செய்துள்ளது.

பெயரைச் சொல்லாமலே "கற்பினுக்கு அணி" என அனுமான் இங்கே சுட்டிச் சொல்லியிருப்பது எவ்வளவு சிறப்பை விளக்கி நிற்கிறது! அந் நிலையை உய்த்துணர வேண்டும்.

கடலைக் கடந்து போய்ப் பட்ட பாடுகள் பட்டு யாண்டும் தேடித் திரிந்து முடிவில் அரிதாகக் கண்டான் ஆதலால் அந்தக் காட்சியையும் மாட்சியையும் முதலில் காட்டினான்.

கண்களால் என்றது வேண்டாத வார்த்தை

நடந்தேன் என்றால் காலால் நடந்தான் எனவும், கேட்டேன் என்றால் காதால் கேட்டான் எனவும் யாரும் தெளிவாகத் தெரிந்து கொள்ளுவர். அப்படியிருக்க அதிசய மதிமானான இராமனிடம் வியாகரண பண்டிதனான அனுமான் இப்படிச் சொல்லியிருப்பது வியப்பைத் தருகிறது!

வேண்டாத சொல் ஒன்று ஈண்டு மூண்டு வந்துள்ளமையால் அது வேண்டி நிற்கும் பொருளை இந்த மேதை கூர்ந்து ஓர்ந்து கொள்ளுவான் என்றே அந்த ஆண்டகை துணிந்து கூறினான்.

சீதை இருக்கும் உண்மையை யாரேனும் ஒரு பெண்ணின் மூலமாய் அறிந்து வந்தாலும் கண்டேன் என்று துணிந்து கூறலாம் ஆதலால் அவ்வாறு அன்று, நேரேயே போய் என் கண்களால் நானே பார்த்தேன் என்பதை வலியுறுத்த இந்த மிகையான சொல்லைத் தொகையாகத் தொடுத்துச் சொன்னான்.

அசோக வனத்துள் புகுந்து ஒரு மரக் கிளையில் மறைந்திருந்து அனுமான் சீதையைக் கண்டான் பெரு மகிழ்ச்சி கொண்டான். நேரே தாவி வர நோந்தான். அதுபொழுது அங்கே இராவணன் வந்தான். காம இச்சையால் கடுகி வருகிற அத் தூர்த்தனைப் பார்த்ததும் சானகி உள்ளம் துடித்து உயிர் பதைத்தாள். அந்தப் பதிவிரதையின் நிலைமையை நேரே கண்டதும் அதுவரையும் கொண்டிருந்த ஐயம் எல்லாம் நீங்கி அனுமான் பேரானந்தம் அடைந்தான். அவ் வுத்தமியைத் தனக்குப் பத்தினியாகக் கொண்டுள்ள இராமனைப் புகழ்ந்து துதித்தான், சனக குலத்தை வியந்து வாழ்த்தினான்.

"கூசி ஆவி குலைவுறு வாளையும்
ஆசையால் உயிர் ஆச்சழி வானையும்

காசில் கண்ணிணை சான்றெனக் கண்டனன்
ஊசல் ஆடி உளையும் உளத்தினன். (22)

வாழி சானகி, வாழி இராகவன்;
வாழி நான்மறை; வாழியர் அந்தணர்,
வாழி நல்லறம், என்று வாழ்த்தினன்
ஊழி தோறும் புதிதுறும் கீர்த்தியான." (23)

(நிந்தனைப் படலம்)

அனுமான் சீதையைக் கண்டதும், அந்தக் கற்பரசியின் நிலைமையைத் தெளிந்ததும், உள்ளம் களித்து உவந்து வாழ்த்தியதும் இவற்றால் உணர்ந்து கொள்ளுகிறோம்.

**காசில் கண்இணை சான்று எனக் கண்டனன்.**

முன்னே இங்ஙனம் அவன் கண்டுள்ள காட்சியை இங்கே விண்டு விளக்குகின்றான் ஆதலால் கண்களால் என உறுதி தெளிய உரைத்தான். தனது இனிய காட்சியை அரிய சாட்சியாக வலியுறுத்தினன். காசு = குற்றம். காசில கண் என்றது அந்தக் கண்ணின் தூய்மையையும் வாய்மையையும் கருதியுணர வந்தது.

எந்த மாதரையும் காமக் குறிப்போடு காணாதது, எதையும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து தெளிவது, குறிப்பறிவில் சிறந்தது, கலை ஞானங்களையே கண்டு களிப்பது, தலைமையான திவ்வியக் காட்சியே எவ்வழியும் உடையது என அதன் செவ்வியும் தேசும் தெரிய இவ்வழி அவ்வடைமொழி இயைந்து நின்றது

இனி கண்களால் என்பதைச் சீதையின் விழிகள் என்று கொண்டும் பொருள் காணலாம். அவள் கற்பினுக்கு அணி என்பதை அவளுடைய கண்களே காட்டியருளின. அது எப்படி? பிரிவுத் துயரால் பரிதபித்துத் தன் நாயகனையே கருதிக் கருதி உருகி அழுதாள்.

"ஊரிய காண்டலும் கண்ணினீர் கடல்புக்க கலுழ்வாள்
மழைக்கண் என்பது காரணக் குறி என வகுத்தாள்.
அழுதல் அன்றி மற்று அயல் ஒன்றும் செய்குவது அறியாள்'

சிறையிருந்த சீதையின் பரிதாப நிலைகளைக் குறித்து வந்துள்ளவை கண்டு அறிய உரியன. கணவனையே கருதி இவ்வாறு

உருகி அழுதிருத்தலால் அவள் அரிய கற்புரசி என்பது தெரிய வந்தது. கண்ணீர் உண்ணீர்மையை உணர்த்தியுள்ளது.

கற்பு நிலை குறைந்திருந்தால் இப்படி அழுதிருக்க மாட்டாள். உயிர் பிரிந்த உடல்போல் உரியவனையே அவாவி மறுகி அழுதுள்ளமையால் அந்தக் கண்கள் அவளது பதி விரத சீர்மையைத் தெளிவுறுத்தி நின்றன.

"கண்ணினை நீரக் கடலில் கண்டேன்" எனத் தான் கண்ட பொழுது சீதை இருந்த இருப்பை அனுமான் இவ்வாறு கூறியுள்ளான். ஆகவே தன் கண்களாலும், அவள் கண்களாலும் பிராட்டி கற்பினுக்கு அணி என்பதைத் தெளிந்து கொண்டான் ஆதலால், அந்த உண்மையைச் சொந்த நாயகனிடம் வந்து இந்த வாறு மொழிந்து நின்றான்.

கண்ணினால் என்று கூறியிருக்கலாம், அங்ஙனமின்றிக் கண்கள் எனப் பன்மையில் உரைத்தது என்னே? எனின், பின்னே நோக்குக. பிராட்டியின் நிலைமையை அறிவுக் கண்ணாலும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து வந்துள்ளான் ஆதலால் அவ்வுண்மை நிலையை இங்ஙனம் பன்மை நிலையில் உரைத்தருளினான்.

முகக் கண்ணாலும் அகக் கண்ணாலும் அவன் நன்கு கண்டு வந்திருக்கும் காட்சியை நாம் கருதிக் காணும்படி உரைகள் மருவி வந்தன.

சீதையின் உருவத்தையும் உள்ளத்தையும் அவன் ஒருங்கே கண்டு தெளிந்து வந்துள்ளமையைக் கண்களால் என்னும் இருமையால் இங்ஙனம் காட்டியருளினன்.

"கற்பினுக்கு அணி எனச் சீதையை நீ எப்படிக் கண்டாய்?" என இராமன் இப்படிக் கேட்பின், அதற்குச் சரியான பதிலாக அனுமான் சொல்லியுள்ளது போல் கண்களால் என்பது இங்கே தோன்றியுள்ளது.

கேட்கின்றவன் அதிமேதை ஆதலால் அவன் மதி தெளிந்து மகிழ, அனுமான் இனிது பேசி வருகிறான். மானச உணர்ச்சிகளை நுணுகி உணர்ந்த நிபுணன் ஆதலின் உரைகள் உள்ளத்தில் பதிந்து உணர்வு நலங்களை சுரந்து, உவகை நிலைகள் வளர்ந்து வரும்படி உறுதியோடு உரிமை கூர்ந்து ஓர்ந்து பேசுகிறான்.

தான் நேரில் கண்ட பொருளின் சீரமை நீர்மைகளைத் தெளிவாக உரைத்து வந்தவன் பின்பு அப் பொருள் இருக்கும் இடத்தை வெளியே விளக்க நேர்ந்தான்

**தெண்திரை அலைகடல் இலங்கைத் தென்னகர்.**

தான் கண்ட கற்பரசி இருக்கும் இடத்தைக் குறித்தபடியிது. நீண்டு பரந்து விரிந்துள்ள நெடிய கடலுக்கு அப்பால் இலங்காபுரி என்னும் அழகிய நகரில் ஓர் அசோக வனத்துள் பிராட்டியைக் கண்டேன் என்பதை இங்ஙனம் காட்டி நின்றான்.

கடல் இலங்கை என்றது இயற்கையான நீர் அரணோடு அது நிலவியுள்ள நிலை தெரிய. எதிரியினுடைய வலி, ஊர் இருக்கும் தூரம் முதலிய நிலைகள் எல்லாம் இதில் உடனுணர வந்தன. தென் என்னும் சொல் அழகு தெற்கு முதலிய பல பொருள்களையும் குறித்து வரும். இலங்கை தென் திசையில் உள்ளது, பொழுகுடையது என்பது தெரிய நேர்ந்தது.

அரிய பெரிய கடலைக் கடந்து போய் அரும் பாடுபட்டுக் கண்டு வந்துள்ள தனது வினையாண்மையையும் இதில் வினயமாய் விளக்கி யுள்ளான். குறித்த தவணையில் வந்து சேரவில்லையே என்று குறை கூறிக் குற்றம் சுமத்தாமல் உற்ற உழைப்பை உய்த்து நோக்கிக் கால தாமதத்தைப் பொறுத்தருளும்படி குறித்தருளினான்.

இவ்வாறு உரைத்து வந்தவன் அண்டநாயக! என இராமனை ஆர்வத்தோடு விளித்தான். அண்டர் = தேவர்

அரக்கர்குலத்தை அழித்து அமரரைக் காக்க வந்துள்ளவன் ஆதலால் அந்த வரவு நிலையை உறவுரிமையுடன் உணர்த்தினான். நீ கொண்ட நாயகி உன் காரியத்திற்கு அனுகூலமாய் முன்னதாகவே போய் இலங்கையில் அடியூன்றியிருக்கிறாள், நீ விரைந்து சென்று வினையை முடித்தருள் என நினைவூட்டி யுள்ளான்.

தேவர்களுக்கும் நாயகனா யுள்ளவன் பூவுலகில் மனித வடிவம் தாங்கி அரிய காரியங்களை முடிக்க வந்திருக்கிறான், அந்த முடிவு நிலையை ஞான சித்தனான அனுமான் இங்கே உய்த்துணர வுரைத்தான். குறிப்பு மொழி சிறப்பு நிலையை வெளியாக்கியது.

வானவர் நாயகன் வானர நாயகனைத் தூதனுப்பித் தனது நாயகியுடைய நிலைமையைத் தெளிந்து மகிழ்ந்து மேல் வினை செய்ய மூண்டிருப்பது விந்தையாகவே நீண்டு நிற்கிறது.

ஐயமும் துயரும் துறந்தது என்று உள்ளக் கவலைகளை யெல்லாம் ஒழித்து உறுதியோடு வினை செய்ய வேண்டியபடியாய் ஆண்டு மூண்டு வந்தது.

இராம தூதனாய் சீதையைத் தேடி இலங்கைக்குப் போன அனுமான் மீண்டு வந்து பிராட்டியின் பெரு மகிமையை இவ்வாறு தொகுத்துணர்த்திப் பின்பு விரித்துப் பேசினான். அம் மதியூகி பேசிய விரிவுரைகள் அரிய பெரிய பொருள்களையுடையன அயலே காண வருகிறோம்.

உன்பெருந் தேவியென்னும் உரிமைக்கும் உன்னைப் பெற்ற
மன்பெரு மருகியென்னும் வாய்மைக்கும் மிதிலை மன்னன்
தன்பெருந் தனயையென்னும் தகைமைக்கும் தலைமை சான்றாள்
என்பெருந் தெய்வம்ஐயா இன்னமும் கேட்டி என்றான் (1)

பொன்னலது இல்லை பொன்னை ஒப்பது பொறையில் நின்றாள்
தன்னலது இல்லைத் தன்னை ஒப்பது தனக்கு வந்த
நின்னலது இல்லை நின்னை ஒப்பது நினக்கு நேர்ந்தாள்
என்னலது இல்லை என்னை ஒப்பது எனக்கும் ஈந்தாள். (2)

உன்குலம் உன்னதாக்கி உயர்புகழ்க்கு ஒருத்தி யாய
தன்குலம் தன்னதாக்கித் தன்னைஇத் தனிமை செய்தான்
வன்குலம் கூற்றுக்கீந்து வானவர் குலத்தை வாழ்வித்து
என்குலம் எனக்குத் தந்தாள் என்னினிச் செய்வதெம்மோய்? (3)

விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீர் இலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்பதொன்றும் இரும்பொறை என்பதொன்றும்
கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன் (4)

கண்ணினும் உளைநீ தையல் கருத்தினும் உளைநீ வாயின்
எண்ணினும் உளைநீ கொங்கை இணைக்குவை தன்னின் ஒவ்வா
தண்ணல்வெங் காமன் எய்த அலரம்பு தொளைத்த ஆறாப்
புண்ணினும் உளைநீ நின்னைப் பிரிந்தமை பொருந்திற்றுமோ? (5)

வேலையுள் இலங்கையென்னும் விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலைதானும் இல்லதோர் கனகக் கற்பச

சோலையங் கதனின் உம்பி புல்லினால் தொடுத்த தூய
சாலையின் இருந்தாள் ஐய! தவம்செய்த தவம்ஆம் தையல் (6)

மண்ணொடுங் கொண்டு போனான் வானுயர் கற்பி னாள்தன்
புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான் உலகம் பூத்த
கண்ணகன் கமலத் தண்ணல் கருத்திலாள் தொடுதல் கண்ணின்
எண்ணருங் கூற்றம் ஆய்தி என்றதோர் மொழியுண் டென்பான்

தீண்டிலன் என்னும் வாய்மை திசைமுகன் செய்த முட்டை
கீண்டிலது அநந்தன் உச்சி கிழிந்திலது எழுந்து வேலை
மீண்டில சுடர்கள் யாவும் விழுந்தில வேதம் செய்கை
மாண்டில தென்னும் தன்மை வாய்மையால் உணர்தி மன்னோ

சோகத்தா ளாய நங்கை கற்பினால் தொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும் வான்சிறப் புற்றார் மற்றைப்
பாகத்தாள் இப்போது ஈசன் மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தாள் அல்லள் மாயன் ஆயிரம் மௌலி மேலாள் (9)

இலங்கையை முழுதும் நாடி இராவணன் இருக்கை எய்திப்
பொலங்குழை யவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்
அலங்குதண் சோலை புக்கேன் அவ்வழி அணங்க னாளைக்
கலங்குதெண் டிரையிற் றீய கண்ணினீர்க் கடலிற் கண்டேன்

(திருவடிதொழுத படலம், 59-68)

இந்தக் கவிகளைக் கண்ணூன்றி நோக்கிக் கருத்துக்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். அனுமானுடைய உரையாடல்கள் உணர்வு நலங்கள் சுரந்து உவகை நிலையமாய் உயர்ந்துள்ளன. அன்பு மொழிகள் அறிவு மணம் கமழ்ந்து இன்ப ஒளிகளை எங்கும் வீசி மிளிர்கின்றன.

"இரகுநாதா! உனது அருமை மனைவியின் மகிமை அளவிடலரியது. உன் தந்தையாகிய தசரத சக்கரவர்த்தி தனது அருமை மருமகள் என்று பெருமை பாராட்டவும், மிதிலாதிபதியான சனக மன்னன் தன்னுடைய தலைமகள் என்று உள்ம்மிக மகிழவும், நான் என்னுடைய குல தெய்வம் என்று துதித்து வணங்கவும் பிராட்டி பெரு நிலையில் பேரொளி செய்துள்ளாள். அவள் பொன்னைப் போல் தன்னிகர் இல்லாத தனி நிலையினள். அவ்வுத் தமியைப் பத்தினியாப் பெற்றுள்ள உன்னைப் போல் உலகில் எவரும் இலர்; உங்கள் இருவருக்கும் ஊழியம் புரிந்து நிற்றலால் என்னை ஒத்தவர் யாண்டும் இலர்; இட்சுவாகு முதலிய

பெரிய சக்கரவர்த்திகள் தோன்றியுள்ள உனது அரச குலத்தை உனக்கே தனியுரிமை ஆக்கினாள். தான் பிறந்துள்ள சனக குலத்தைத் தன்னுடைய தாக்கினாள். தன்னைப் பிரித்து இன்னல் இழைத்த அந்த இராவணன் குலத்தை அடியோடு நாசமாக்கி எமனுக்குக் கொடுத்தாள், வானவர் குலத்தை வாழ்வித்தருளினாள், வானர சாதியான என் குலத்தைப் பொன் குலமாக்கி எனக்கே உரிமையாகத் தந்தாள். என் தாய் செய்துள்ள உதவிகள் வாய்மொழிகளால் வரைந்து கூறலரியன. கோதண்டத்தை ஏந்தியுள்ள வீர வள்ளலே! இலங்கையில் நான் கண்ட காட்சியை என்னென்று சொல்லுவேன்? அங்கே யான் பிராட்டியைப் பார்க்கவில்லை, அறிவு தவம் பொறுமை கற்பு குடிப்பிறப்பு அடக்கம் அமைதி அருள் முதலிய குண நலங்கள் எல்லாம் ஒருங்கே திரண்டு ஓர் எழில் உருவம் கொண்டு கனி நடம் புரிவதையே விழி களிப்பக் கண்டேன். அந்தக் கற்பரசி உன்னைப் பிரிந்திருப்பதாக நீ வருந்தியிருக்கிறாய்! அது பொருந்தாது, அவளுடைய கண்ணிலும் கருத்திலும் எண்ணிலும் சொல்லிலும் எவ்வழியும் நீ நிலைத்து வாழ்ந்துள்ளாய்! உன்னைத் தவிர அவளுக்கு ஓர் உள்ளமும் உயிரும் வேறில்லை, இலங்கை அயலே அழகிய அசோக வனத்தில் இனிய தழைக் குடிசையில் தனியே தங்கியிருக்கிறாள். அந்தக் குடிசை இளைய பெருமாள் கட்டியதே. கோதாவரி நதியருகே பஞ்சவடி என்னும் சோலையில் வசித்த பொழுது தம்பி சமைத்த அப் பன்னசாலையில் இருந்து உன்னையே நினைந்து அல்லும் பகலும் கண்ணீர் சோர அப் பெண்ணரசி பெருந்தவம் புரிந்துள்ளாள். அந்த அரிய புனித நிலையை விண்ணவரும் கண்டு வியந்து துதித்துள்ளார். தவம் செய்த தவமே ஒரு பெண்ணுருவை மருவிக் கண்ணனைய ஒருவனைக் கருதி எண்ணரிய யோகம் செய்திருப்பதாக நான் கண்ணெதிரே கண்டு எண்ணி மகிழ்ந்துள்ளேன். குடிசையிருந்த பூமியோடே பெயர்த்தெடுத்துக் கொண்டு போய் இலங்கை வேந்தன் அங்கு வைத்திருக்கிறான்; அஞ்சாத கொடிய நெஞ்சனான அத் தூர்த்தன் கற்பரசியின் அருகு நெருங்கவும் அஞ்சி அயர்ந்து நிற்கின்றான்; விரும்பாத மங்கையரைத் தீண்டினால் உன் தலை வெடித்துப் போம் என்று பிரமன் இட்ட சாபம் ஒன்றே எட்ட நிற்கும்படி அவனைக் கட்டிக் காத்துள்ளது. அண்டங்களும் அகில லோகங்களும்

அழியாமல நிலைதது நிறபதே அப பழிகாரன பன்னசாலையை அணுக விலலை என்பதை உணாததியுள்ளது. வெளியே உனனைப பிரிநதுள்ள பிரிவே உருவமாயச சோகம மீதூாநதுள்ள அப புணணியத திருவின கறபு நிலையைக் கருதி நோககி அருநததி முதலிய மணணுலக மடநதையரும இந்திராணி முதலிய விண ணுலக மஙகையரும வியநது புகழநதுளளனா திருமாலின மாாபிலுள்ள இலடசுமியும, சிவபெருமான பாகததில இருககிற உமா தேவியும சீதாதேவியின புனித நிலையை நினைநது வியநது தனியுயாசசி யடைநதுளளனா. முபபெருமபுலகில வாழுகினற பெணமை இனம முழுவதும தஙகள குலம தழைகக வநத பெணணரசி என்று மணணிக களிதது இனபுறறிருககினறனா. நான பணணிய புணணியததால அநதக கறபுத தெயவததை என கண குளிர நேரே கணடேன, எனது பிறபபுப புனிதமா யது, அப பததினிக தெயவததின அறபுத மகிமையைத தெளி வாக விளககிச சொலல மொழிகள கிடையா, நானும வலலேன அலலேன'' என இவவாறு சொலலி நிறுததினன

அனுமானுடைய சொல வனமையும உளளப பணபும அதிசய இனபஙகளை அருளி வருகினறன. உரைகள தோறும உணாசசிகள பொஙகி நிலைகளை வெளிபபடுததியுளளன

மறுகி மயஙகி உருகி உயஙகியிருநத இராமன உளளததில அமுத தாரைகளைப பொழிநதது போல இனிய உணாவு நலங களை மொழிநதிருககிறான அநதக குலமகன நோநதுளள நிலைமை களை யெலலாம உணாநது நெஞசம தெளிநது உவநது களித்து உறுதி பூண்டு வினைமேல மூணடு விரைநது வேலை செயயுமபடி ஓாநது பேசியுளளமை கூாநது காண உரியது

**உன குலம் உனனது ஆககி**

என்றது சீதையால இராமனுககுக கிடைததுள்ள பெரு மகிமையைக் குறிததுக் காட்டிய படியாம். வழிவழியே உயர்ந்த புகழோடு விளஙகி வநத சூரிய குலம் இனிமேல இராமனையே தலைமையாக் கொண்டு நிலவி நிறகும். மகா பதிவிரதையான சீதையை மணநத இராமன பிறநத குலம் என்று வானும் வைய மும் அக் குலத்தின் நலததைப் புகழ்நது போறறி உவந்து பாரா ட்டிவரும என்பதை விழைநது நோக்கி மகிழ விளககியருளினன்.

தன குலம் தனனது ஆககி

எனறது கான பிறநத சனக குலம இனிமேல சானகியின் பெயரால் சிறநது விளஙகும எனபதாம பிறநத குடியும் புகுந்த குடியும பிராடடியால பெரு மகிமை அடைநதன எனறு சொல்லாமல குலஙகளைக குறிததுக காடடியது அவளது உயாந்த நிலைகளை உணாநது கொளள வநதது ஒரு குடியை விளக்குவதே ஒரு பெண்ணுககு அரிய செயல; இவள இருவகைக் குலங்களும் உயா நிலையில விளஙக உதயமாகியுளளாள. சநதிரன தோனறிய வானம் போல இச சுநதரி பிறநது புகுநத இடஙகள் பேரொளி வீசியுளளன. சூரியனோடும சநதிரனோடும தொடாபுடைய இருவகை அரச குலஙகளும இநதப பதிவிரதையால் அதிசய நிலைகளை அடைநதிருககினறன.

பிறநத குலததினும புகுநத குலததை முதலில் குறிததது அதன தலைமை கருதி இக குலமகளை மனைவியாக கொணடமையால இராமன குல முதலவனயத தலைமகனயினன.

சூரியனும சநதிரனும உளள அளவும இராமனும சீதையும புகழொளி வீசி விளஙகி நிறபா எனபதை இஙஙனம விளககியருளினன.

என குலம எனககுத தநதாள

தனககுக கிடைததுளள பேறறை அனுமான இபபடிப் புகழநது போறறியிருககிறன வானர சாதி எலலாம இனி என்னையே குலமுதலவனாகக கொணடு குலாவி வரும எனக குறிததுளளமை கூாநது சிநதிககவுரியது. ஊழியும அழியாத கீாததியுடையவாககு ஊழியம புரிநது வநதவன ஆதலால அநத ஊதியம தெரிய வநதது. உலகில சாதாரணமாக ஒரு குரஙகைப பாாததாலும "இதோ அனுமாா போகிறா" என இபபொழுதும வழஙகி வரும வழககம அபபொழுது அவன உரைதத மொழிககு ஓரளவு உறுதி பயநதுளளது. பிராடடியைக கணடதனைல தனது பிறவி பெருமகிமை பெறறது என அவன உளளம் களிததுளளமை உணர வநதது.

தனனை இத தனிமை செயதான எனறது இராவணனை.

இராமனிடமிருந்து பிரிததுச சீதையை எடுத்துக கொண்டு போயச சிறையில வைதது வீணே காதலிததுக கடுந்துயர்

செய்து வருகிருன் ஆதலால் அவனது கொடுமை தெரிய வந்தது. இத்தனிமை என்னும் அண்மைச் சுட்டு இராமனையும் நேரே கை நீட்டிச் சுட்டிக் காட்டியதுபோல் தோன்றுகிறது.

வென்றி வீரன் எதிரே அனுமான் நின்று பேசும் காட்சி அரிய பல மாட்சிகளை மருவி உரிமைகளை உணர்த்தி மிளிர்கிறது.

தனது கணவனேடு கலந்து இனிது மகிழ்ந்து வந்த இன்ப வாழ்வைச் சிதைத்துத் தனக்குக் கொடிய துன்பம் இழைத்துள்ள அந்த இராவணனுடைய குலம் அடியோடு அழிந்து ஒழியப் பிராட்டி அங்கே விழி நீர் சிந்தியுள்ளாள் என்பதைத் தெளிவாக விளக்கினன். தன்னைக் குடிபெயர்த்தவன் குலத்தை எமலோகத்தில் குடியேற்ற நேர்ந்தாள் என்பான் வணக்கும் கூற்றுக்கு ஈந்து என்றுன்.

குலத்தின் அழிவு கூறவே அவன் அழிந்துபடும் நிலை தெளிந்து கொள்ள வந்தது. தன் குலம் முழுவதும் நாசம் அடையும் படி நீச நிலையில் இராவணன் நிமிர்ந்து நிற்கிருன் என அவனது புலை நிலையை இங்ஙனம் புலப்படுத்தினன். அரக்கரையெல்லாம் போரில் இழந்து முடிவில் முடியப் போகிருன் ஆதலால் அந்த முடிவு தெரிய நேர்ந்தது.

இறுதியில் எம்மோய் என்றது அன்புரிமை கனிந்த ஆர்வமொழி. மோய் = தாய். என் தாய் உன் குலத்தையும், தன் குலத்தையும், என் குலத்தையும் மகிமைப் படுத்தினுள், வானவர் குலத்தை வாழ்வித்தாள், அரக்கர் குலத்தை அழித்தருளினுள் எனத் தெளித்திருக்கும் இதில் களித்திருக்கும் பொருள்கள் கருதியுணர வுரியன.

இலங்கையில் நான் பிராட்டியைக் காணவில்லை.

இற்பிறப்பும், இரும்பொறையும், கற்பும் களி நடம் புரியக் கண்டேன் என்னும் இது எவ்வளவு அற்புத விளக்கம்! அரிய பதிவிரதையினுடைய இனிய நீர்மைகளை உரியவனிடம் அப் பெரியவன் தெரியப் படுத்தி வரும் திறம் உள்ளத்தையும் உணர்வையும் கவர்ந்து உவகையை யூட்டி வருகிறது.

உயர்ந்த பெண்மைக் குணங்கள் எல்லாம் இந்தப் பெண்ணரசி முன்னிலையில் ஆனந்தக் கூத்தாடுகின்றன என்று தான் கண்ட காட்சியை இங்ஙனம் மாட்சி பெறக் காட்டியருளினன்.

தன் ஒரு சொல்லால் இலங்கையை எரித்து அழிக்க வல்ல வள்; அங்ஙனம் வெகுண்டு சபிககாமல் அரக்கன் திருந்தி விடு வான் என்று இரங்கிக் காலம கருதி, நாயகன வரவை எதிர் நோக்கி எலலாத 'துயரங்களையும் பொறுததுக் கொண்டு சிறை யில் அமைதியாய இருககிறுள ஆதலால அந்தப பொறுமை நிலை யை வியந்து இரும்பொறை எனப பெரும பொருள தெரியக் கூறினன். பொறையும நிறையும இறைமை கொணடுளளன.

சனகன மகள், இராமன் மனைவி, சீதை, சிறந்த பதிவிரதை என இநத அளவிலேயே உலகம எணணி வருகிறது; அந் தப் புண்ணிய உருவம் எண்ணரிய குண நீாமைகளால் இனித மைநதுள்ள உணமையை நுண்மையாக நேரே கண்டு வந்த அனுமானஅதன் தனமைகளை இங்ஙனம் தகவோடு விளக்கினன்.

· பெணணரசியின் பெரு மகிமைகளைப பேரரசனை அண் ணலிடம் மாருதி ஆாவம் மீதூாநது கூறி வருவதை நாம் கூாமை யாக ஓாநது உணாநது உவநது வருகிறோம்.

**கணணினும் உளை நீ! தையல கருததினும் உளை நீ!**

இராமனுடைய உண்மை இருப்பை இஙஙனம உணாததிய ருளினன. தன நாயகனுடைய திரு வுருவததையே கருதி அரிய தவயோகிகள போல சீதை உருகி யிருததலால அநதச சிறை வாசததின நிலைமையும நீாமையும தெரியலாகும.

தனது அருமை மனைவியைப பிரிநதிருபபதாக இராமன் வருநதி யுளைவது பெருமபிழை என அவவருநதிறலாளன தெரி நது மகிழ இப பெருநதகை இஙகே பேசியிருபபது உணர்வின் ஒளியை வீசியுள்ளது.

பிரிவில மறுகி யுள்ள அரிய காதலா இருவரிடையும் உழுவ லனபுகளை விழுமிய நிலையில் விழி தெரிய விளககி இம மதிமான் ஆறறிப போற்றித தேற்றி வருவது அதிசயமான • அன்புரிமை களையும இன்ப ரசங்களையும் ஊட்டி வருகின்றது.

தன் கணவனைப பிரிநது மறுகி மயஙகி இலஙகைச் சிறை யில் கலஙகியிருந்த சீதையைக கண்டு தேறுதல் கூறினன். அல் லும் பகலும அண்ணல் உனனையே கருதியுள்ளான்; அவனு டைய கண்ணிலும கருத்திலும் நீ குடி புகுந்திருககிறுய்! உன்

னைத தவிர அவனுக்குத தனியாக வேறு உயிர இல்லை; பிரிவுத் துயரால் உருகி உயஙகினும் உயிரககு அழிவு சேராது, நீ இங்கே தஙகி இருததலால அவன அஙகே எநத உயிரை விடுவான? என இநதவாறு முனனம தேவியைத தேறறி ஆவியை இனபுறுததி ஆறறியருளினன

"ஆணடகை நெஞசின நினறும அகனறிலை, அழிவுணடாமோ? ஈணடுநீ இருநதாய ஆணடு அஙகு எவவுயிர விடும இராமன? "

என இவவாறு ஆண்டுச சீதையைத தேறறி வநதவன ஈண்டு இராமனிடம போநது உன உருவும உயிரும இலஙகைச சிறையில் ஒரு பெண்ணுருவில புகுநது கணணிலும கருத்திலும எண்ணிலும மருவி இனபம புரிநதுளளன எனறு அனபுரிமைகள் ததும்ப உரையாடி யிருககிறான.

இம மேதையின அறிவு மொழிகள இனிய நீரமைகள் சுரந்து யாண்டும பெரிய இனபஙகளை விளைதது வருகினறன.

உமபி புலலினால தொடுதத தூய சாலையின இருநதாள.

இலஙகைச சிறையில சீதை இருககும் நிலையை இஙஙனம தெரியப படுததினன். யாரும யாதும தீண்டாத புனித நிலையில் அப புண்ணியவதி இருநது வருதலை இராமன எண்ணி மகிழும படி இவவணணம் பன்னசாலையைப் பன்னி யுரைததான. இலக்குவன் கட்டிய அநதத தழைக் குடிசையிலேயே இலககுமி குடி புகுநதிருக்கிறாள எனறான் தூய சாலை எனறது தூயவர இருவரும் முன்னம அதில தோயநதிருநத நேய நிலை தெளிய. தன தம்பி கையால் சமைதத பாணசாலையில் சீதை தவ நெறியுடன் இருக்கிறாள் எனனும இவவுரை இராமனுககுப பேருவகை தரும் என மாருதி உணாநது கொண்டமையால அதனை நன்கு வலியுறுததி இஙகே நலமுற நவினறான.

பிராட்டியைத தீண்ட அஞசி நிலததோடு பெயாத்து இராவணன் எடுததுப போனான் என முனனம * குறிதததை ஈணடு அனுமான வாய மொழியாகக கவி வெளிபபடுததி யிருககும விதததகம் வியநது சிநதிக்கத தககது தான ஓர இடததில நிலை நாட்டியதை எல்லா இடஙகளிலும ஞாபகமாய வலியுறுததிச் செல்லுவது காவிய நீர்மையை நனகு தெளிவுறுததி வருகிறது.

---

* இந நூல பக்கம 2009, வரி 34 பாாககு.

இலங்கைச சிறையில் சீதை பரிசுததபாய் இருக்கிருள் என் பதை இங்ஙனம விளஙகவுரைததான உண்மை நிலையை உணர்த்த வநத மொழிகள் தண்மையும தகவும கனிந்து நன்மை சுரநது நவ நவமாய் ஒளிகள வீசி வெளி யெழுந துளளன.

தவம் செயத தவமாம் தையல

சானகிககு இவவாறு ஓர் அரிய பெயரைச சூட்டி இனிது காட்டியிருககிருர மேலோரகள அரிய தவஙகளைச் செயது பெரிய பதவிகளை அடைகிருர்கள அததகைய அருந தவமும் நீணட காலம வருநதிச் செயத பெருநதவமாகவே சீதை சிறந துளளமை தெரிய வநதது

உணவும நீரும துறநது தவ நெறியோடு மருவியிருததலால அதிசயமான அநதப புனித நிலையைத துதி செயது துலககினர். தவம் செயத தவம் என இராமனது தவ வேட நிலையை முனனம குறிததார், சீதையை ஈணடு இனனவாறு உரைததார். அரிய தவ வுருவஙகள் உரிய கருமஙகளைச செயது முடிககப பிரிவு கொணடு பரிவு மணடி யுளளன புணணியததின புணணியம என இப பெணணரசியை எணணி மகிழ அனுமான இஙகே இசைததருளினன். உரைகள தோறும உணர்வொளி தவழநது வருகிறது

பிராடடியை இராவணன தீணடி யிருநதால அவன எரிந்து போதலோடு அணடஙகள யாவும அழிநது போயிருககும, சூரிய சநதிரரகள கீழே விழுநது ஒழிநதிருபபர், அகில உலகஙகளும நாசமாயத தொலைநது போயிருககும, அவவாறு யாதொரு அழிவும நேராமையால அப பழிகாரன தீணடவில்லை என்பதைத தெளிவாக அது விளககி யுளளது எனத துலககி யருளினன.

திசை முகன செயத முடடை கீண்டிலது

இராவணன சீதையைத் தீணடிலன என்பதற்கு நேரே சாட்சியாயுள்ளதை இஙஙனம் காடசிபபடுததிக காட்டினன்.

திசைமுகன் = பிரமன. முட்டை = அண்டம்.

அண்ட கோளஙகள பிளநதுபடாமல் நிலைத்து நிற்பதே பிராட்டியின நிறையை நிறை தூககிக் காட்டி யுளளது என்னும் இக் காட்சி அரிய பல மாட்சிகளை விளககி நிறகிறது.

கற்பரசியின் மகிமையை அறபுத நிலைகளிலறிவுறுத்தி வருகிருன்.

சோகத்தாளாய நங்கை என்றது சிறையிலிருக்கும் சீதையின் பரிதாப நிலை தெரிய வந்தது. கணவனைப் பிரிந்த துயரால் மறுகி யுருகி மயங்கி யிருந்தாள். பிரிவு எனும் துயர் உருவு கொண்டால் அன பிணியாள் (காட்சி, 7) என முன்னம் குறித்துள்ளதும் ஈண்டுக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள உரியது.

எண்ணரிய துயரங்களை அடைந்தும் இப்பெண்ணரசி நிறை காத்துப் பொறைபூத்திருக்கும் புனிதநிலை புண்ணிய நிலையமாய்ப் பொங்கி நின்றது. மாகத்தார் தேவிமாரும் வான சிறப்புற்றார் என்றது இப்பதிவிரதையால் தேவ மங்கையரும் மேன்மை மிகப் பெற்றார் என்பதாம். மாகத்தார் = வானவர்.

*பாகத்தாள் இப்போது ஈசன் மகுடத்தாள், பதுமத்தாளும்*
*ஆகத்தாள் அல்லள் மாயன் ஆயிர மௌலி மேலாள்*

சீதையின் கற்பு நெறியால் மண்ணுலகிலும் விண்ணுலகிலும் உள்ள பெண்கள் எல்லாரும் பெருமித நிலையைப்பெற்றனர் என்று கூறி இறுதியில் இருவரைத் தனியே விதந்தெடுத்து வியப்பும் நயப்பும் தோன்ற விளக்கி யருளினர்.

பாகத்தாள் என்றது சிவபெருமானுடைய இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமாதேவியை. பதுமத்தாள் = இலக்குமி. பதுமம் = தாமரை. தனது மனைவியாகிய பார்வதிதேவியை ஈசன் பாகத்தில் வைத்துப் பேணி வந்தார், இப்பொழுது தன் தலையில் வைத்துக் கொண்டாடுகிறார். ஆகத்தில் வைத்து அன்புரிமை செய்துவந்த இலட்சுமியை இதுபொழுது சிரசிலதூக்கிவைத்துத் திருமால் போற்றி மகிழுகிறார். ஏன்? மகா பதிவிரதையான சீதையின் இனம் என்று கருதித் தங்கள் மனைவியரை ஈசனும் மாலும் இவ்வாறு பெருமையாகப் பேண நேர்ந்தார் என்க.

சானகி ஒருத்தியால் பெண்குலம் முழுவதும் பெருமகிமை பெற்றது என இம் மதிமான் உணர்த்தியிருப்பது உவகை நிலையமாய் ஒளி பெற்றுள்ளது. உடையவன் உள்ளம் தெளிந்து மகிழ உரையாடி வருவதில் உறுதிநலங்கள் பெருகி வருகின்றன.

அசோக வனத்தில் தான் பார்த்த காட்சியை வார்த்தைகளால் வார்த்துக் காட்டுகிறான். வாய்மொழிகள் உள்ளத்தை மகிழச்செய்து உணர்வைப் பெருக்கி உயிரை உருக்கி வருகின்றன.

*இரக்கம் என்று ஒன்று தானே ஏந்திழை வடிவம் எய்தித்*
*தருக்கிய சிறையுற்றன்ன தகையள் அத்தமியள் அம்மா!*

சிறையிருந்த சீதையின் உருவ நிலையை உருவகமாக்கி இங்ஙனம் உணர்த்தியருளினன். இரக்கம் அற்ற அரக்கியர் குழுவில் இரக்கமே ஓர் அழகிய உருவம் எடுத்து விழுமிய நிலையில் மருவி யிருந்தது போல பிராட்டி அங்கே உருகி யிருந்தாள்

அவளுடைய எண்ணம் எல்லாம் உன்னுடைய வண்ணமாகவே வளர்ந்து கிளர்ந்து விளைந்து வந்தன அந்தப் பெண்ணரசியின் அன்புரிமையை நீ இன்ப நிலையமாய்ப் பெற்றுள்ளமையால் உனது பிறப்பு பெருஞ் சிறப்புடையது.

உலகம் எல்லாம் தொழுது ஏத்துகிற பதிவிரதை உன்னையே கருதி உருகி உழுவலன்புடன் தொழுது வருகிறாள் ஆதலால் நீ விழுமிய பாக்கியவானாய் விளங்கி நிற்கின்றாய் அந்தப் பத்தினித் தெய்வத்தின் பதியாய் அமைந்துள்ளமையால் நீ பரமபதியாய்ப் பெரு மகிமை பெற்றுள்ளாய் கண்ணும் உயிரும் என அப் பெண்ணரசி உன்னையே கருதி மகிழ்ந்து வருதலால் புண்ணிய உருவனான உனது மகிமையை விண்ணும் வியந்து புகழ்ந்து வருகிறது. யாவரும் எண்ணி உவந்து ஏத்தி வருகின்றனர்.

அற்புத நிலையில் அமர்ந்துள்ள அக் கற்பரசியைக் காண முயன்று கருதியலைந்தேன், இலங்கை முழுவதும் தேடியும் யாண்டும் காணாமையால் என் உள்ளம் கலங்கியது, உயிர் பதைத்தது, அவ்வாறு மறுகி மயங்குங்கால் அயலே ஓர் அழகிய பொழில் தெரிந்தது அங்கே புகுந்து நாடினேன். அசோகவனம் என்னும் பெயரையுடைய அந்த விழுமிய சோலையில் ஒரு குளிர் தருவின் அடியில் சோகமே உருவமாய்ப் பொலிவிழந்த பூரண சந்திரன் போல மெலிவடைந்துள்ள பெண்ணரசியைக் கண்டேன். கழிபேருவகை கொண்டேன், கற்பும் தவமும் அற்புதமான அழகிய பெண்ணுருவை மருவி யிருத்தல் போல உருகி யிருந்த அவ் வுத்தமியை நோக்கி உள்ளம் களித்த நான் நேரே போக நேர்ந்தேன். அப்பொழுது அங்கே இலங்காதிபதியான சக்கரவர்த்தி வந்தான். நான் மரக்கிளையில் ஒளிந்திருந்தேன்; அவன் அம்மையின் அருகே வந்து அடியில் விழுந்து தொழுது வணங்கி மறுகி மொழிந்தான்; அத் தூர்த்தனைப் பார்த்ததும் பிராட்டி

வெறுத்து இகழ்ந்து வைது பழித்த வார்த்தைகள் அவளுடைய உள்ளத் துணிவையும் உறுதி நிலையையும் குல வீரத்தையும் வெளிப்படுத்தி நின்றன. வீர மூர்த்தியான இராமனுக்கு இவளே உண்மையான வீரபத்தினி என்பதை நேரே கண்டு நெஞ்சம் உருகினேன். இராவணனை நோக்கி என்ன பேச்சுப் பேசினாள்! "அடா நீசா! எனது ஈசனது பாணம் மேருவை உருவுமே! விண்ணை பிளந்து ஏகுமே, ஈரேழு புவனங்களையும் ஒரு நொடியில் ஊடுருவி அழிக்குமே! அத்தகைய சுத்த வீரனுடைய உத்தம பத்தினி என்பதை ஒரு சிறிதும் உணராமல் ஈனமாய் மானம் கெட்டு உளறுகின்றாயே! உனது குடியும் குலமும் அடியோடு நாசமாய்ப் போய் விடும் என்றே நான் இரங்கி வருந்துகிறேன், உணர்ந்து பிழை, ஒதுங்கி ஓடிப்போ!" என இன்னவாறு அரிய பல உறுதி நலங்களை நேரே திருத்தமாகத் தெளிந்து உருத்து உரைத்தாள்.

வீரா வேசமாய்ப் பேசிய அந்த தீர வசனங்களில் தருமமும் நீதியும் பெருகி யிருந்தன. மேனகை உருப்பசி முதலிய தேவ மங்கையரும் ஊழியம் புரிய அதிசய ஆடம்பரங்களோடு வந்த இராவணன் அந்த உணர்வுரைகளைக் கேட்டதும் உள்ளம் கன்று உருத்துப் போனான். அவன் தொலைந்து போகவே அம்மை உளைந்து வருந்தினாள். "எனது ஆண்டவன் வந்தருள வில்லை, ஈண்டு இந்த அல்லலை அடைந்து இருப்பதை விட இறப்பது நன்று" என்று துணிந்து எழுந்து அயலே ஒரு பொதும்பருள் புகுந்து இளங்கொடி ஒன்றைக் கழுத்தில் மாட்டி இறந்து போக மூண்டாள், அப்பொழுது நான் ராமா! ராமா! என்று கூவிக் கொண்டு விரைந்து பாய்ந்து எதிரே போய் நின்றேன். ராமா! என்னும் இந்தப் பேரைக் கேட்டதும் அமுதம் உண்டவள் போல உவகை மீதூர்ந்து சாவதிலிருந்து நீங்கி ஆவலோடு என்னைப் பார்த்து "யார் நீ?" என்று பேர் விவரங்களைத் தெரிய வினவினாள். நான் உண்மையை உரைத்தேன். அதன் பின் கணையாழியை எடுத்துக் கொடுத்தேன். அதனைக் கண்டபொழுது பிராட்டி அடைந்த இன்ப நிலைகளை எவர் சொல்ல வல்லார்?

அறிவினில் தேறிச் சொன்ன பேரடை யாளம் யாவும்
செறிவுற நோக்கி நாயேன் சிந்தையில் திருக்கம் இன்மை
முறிவுற எண்ணி வண்ண மோதிரம் காட்டக் கண்டாள்
இறுதியின் உயிர்தந் தீயும் மருந்தொத்தது அனையது எந்தாய்!(1)

ஒருகணத்து இரண்டு கண்டேன் ஒளிமணி ஆழி ஆன்ற
திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலும் செல்வ நின்பால்
விரகம் என்பதனின் வந்த வெங்கொழுந் தீயினால் வெந்து
உருகியது, உடனே ஆறி வலித்தது குளிர்ப்புள் ஊற (2)

வாங்கிய ஆழிதன்னை வஞ்சரூர் வந்ததாம் என்று
ஆங்குயர் மழைக்கண் நீரால் ஆயிரம் கலசம் ஆட்டி
ஏங்கினள் இருந்த தல்லால் இயம்பலள் எய்த்த மேனி
வீங்கினள் வியந்த தல்லால் இமைத்திலள் உயிர்ப்பு விண்டாள்.

அன்னவர்க்கு அடியனேன் நிற் பிரிந்தபின் அடுத்த வெல்லாம்
சொன்முறை அறியச் சொல்லித் தோகைநீ இருந்த சூழல்
இன்னதென்று அறிகி லாமே இத்தனை தாழ்த்தது என்றே
மன்னநின் வருத்தப் பாடும் உணர்த்தினென் உயிர்ப்பு வந்தாள்.

இங்குள தன்மை எல்லாம் இயைபுளி இயையக் கேட்டாள்,
அங்குள தன்மை எல்லாம் அடியனுக்கு அறியச் சொன்னாள்,
திங்கள் ஒன்று இருப்பென் இன்னே திருவுளம் தீர்ந்தபின்னை
மங்குவென் உயிரொடென்றுன் குரைகழல் தலைக்கண் வைத்தாள்.

வைத்தபின் துகிலின் வைத்த மாமணிக்கு அரசை வாங்கிக்
கைத்தலத் தினிதின் ஈந்தாள் தாமரைக் கண்கள் ஆர
வித்தகக் காண்டி என்று கொடுத்தனன் வேத நன்னூல்
உய்த்துள காலம் எல்லாம் புகழொடும் ஓங்க நிற்பான் (6)

பைப்பய்ப் பயந்த காமம் பரிணமித்து உயர்ந்து பொங்கி
மெய்ப்புற வெதும்பி யுள்ளம் மெலிவுறு நிலையை விட்டான்
ஐயனுக்கு அங்கி முன்னா அங்கையால் பற்றும் நங்கை
கையெனல் ஆயிற் றன்றே கைப்புக்க மணியின் காட்சி (7)

பொடித்தன உரோமம், போந்துபொழிந்தன கண்ணீர், பொங்கித்
துடித்தன மார்பும் தோளும், தோன்றின வியர்வின் துள்ளி,
மடித்தது மணிவாய், ஆவி வருவது போவ தாகித்
தடித்தது மேனி, என்னே! யாருளார் தன்மை தேர்வார்? (8)

(திருவடிதொழுத படலம்)

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இந்தக் கவிப் படங்களில் நேரே பார்க்கின்றோம். உணர்ச்சிப் பெருக்குகளை ஓர்ந்து களிக்கின்றோம். அனுமானுடைய உரைகளும் செயல்களும் அதிசய விநோதங்களாய் ஒளி மிகுந்து வந்துள்ளன. இராமனுடைய உள்ளம் உவந்து துள்ளப் பேரின்ப வெள்ளம் பெருகிவர நேரே நின்று அவ் வீரன் பேசி வருகிற சாதுரிய சாகசங்கள் எவ்வழியும் மாதுரியங்களை மருவி மிளிர்கின்றன. "அரசே! நீங்கள்

*என் கையில் அடையாளமாகத் தந்து விடுத்த மோதிரத்தை முடி வில் அம்மையிடம் நேரே கொடுத்த போது நேர்ந்த காட்சியை ஓர்ந்து உணரலாமேயன்றி உரையிடலரிது" என இவ்வாறு முக வுரையாகச் சொன்னவன் பின்னர் அதனைத்தெளிவாக உரைக்க*

வண்ண மோதிரம் காட்டக் கண்டாள்.

*கணையாழியை அனுமான் கையிலெடுத்த பொழுது சீதை கண்டு கொண்ட காட்சியை இது காட்டியுள்ளது.* வண்ணம் *என்றது அதன் நிறம் ஒளி அழகு முதலிய நீர்மைகளை விளக்கி நின்றது. அழகன் அணி அதிசய நிலையது.*

*அந்த மோதிரத்தைக் கண்டபொழுது பிராட்டி பேரானந் தம் அடைந்துள்ளமையை உணர்ந்து கொண்டான் ஆதலால் அதனை இங்கே உணர்த்தி யருளினன்.*

*இறுதியின் உயிர் தந்து ஈயும் மருந்து ஒத்தது*

*இராமனுடைய கணையாழியைக் காணுமுன் சீதை இருந்த நிலையையும், அதனைக் கண்ட பின் அத்தேவியின் ஆவி தளிர்த்து ஆனந்தம் கொண்டு நின்ற நிலையையும் இது ஒருங்கே காட்டி யுள்ளது. இவன் விரலணி அவள் உயிரமுதமாயது.*

*முடிவாய இறந்து படும்படி கரணங்கள் கலங்கி மரண நிலையில் மறுகியிருந்த ஓர் உயிரை மீட்டியருளிய மிருதசஞ்சீவி என்னும் திவ்விய மருந்து போல அந்த மோதிரம் அப்பொழுது ஆதாரம் அருளி நின்றது என்றது நிலைமைகளை நினைந்து தெளிய. தன் தேவி உய்ந்துள்ளமை இவன் ஆவி மகிழ வந்தது.*

*நாயகனைப் பிரிந்த பிரிவுத் துயரால் பரிதபித்து இறுதியில் உயிரையும் மாய்க்கத் துணிந்தாள், மரணம் மீதூர்ந்து நின்ற அந்தச் சோகத்தை அடியோடு நீக்கிப் பேரின்பத்தைக் கணை யாழி இங்கே வேகமாய் ஊட்டி யுள்ளமையால் உயிர் ஈயும் மருந்து என அதன் உயர் நீர்மை தெரிய உரைத்தான். தந்து ஈயும் என்றது உயிரை உடலில் நிலைபெறச் செய்ததோடு உறுதி யான பேரின்பத்தையும் உடனே அருளி யுள்ளமையால் அந்த அருட்கொடையின் பெருக்கு உணர வந்தது. இராமன் மோதி ரம் சீதைக்கு உயிர் மருந்து ஆயிருந்தது, அந்த இருபயை விருப் புற விளக்கினன். உரை விளக்கம் உவகை சுரந்துள்ளது.*

"வீயும உயிர மீளும மருநதும எனலாகியது வாழிமணி ஆழி"

என முன்னம் * பிராட்டியிடம கொடுததபோது கவி குறித்து வைத்தார. இங்கே அனுமான வாயிலாக மீளவும் அதனே வலியுறுததி யருளினார. தன வாய மொழியை எவ் வழியும ஒளி பெறச செயது கதையைத தெளிவாக நடததி வருவது இக் காவியக கவியின நீரமையாயுளளது, அவ வுண்மையை இடங்கள தோறும கூரமையாக ஓரநது நாம உவநது வருகிறோம.

ஆழியைக கணடபொழுது உயிர அடைநத இன்ப நிலையை முன்பு கூறினன, பினபு அதனைக் கையில கொண்டபோது நிகழ்நத அதிசய ஆனநதஙகளை மதி தெளிய விளககினன.

ஒருக்ணததது இரணடு கணடேன ஒளிமணி ஆழி
உருகியது, உடனே ஆறி வலிததது.

தனது கணவனுடைய மோதிரததைச சீதை கையில் வாங்கிய போது நேரநத நிலையை இது குறிததுள்ளது. இநதக் குறிப்பு கூரநது சிநதிககவுரியது. கணையாழி பொனனால் அமைந்தது; அநதத தஙகமோதிரம இஙகே இருவகைக காடசிகளை ஒருஙகே காடடிப பெணமையின உணமையை நுண்மையாக விளக்கியிருககிறது.

அருமைக காதலனுடைய உரிமை மோதிரம கையிலவரவே மெயயில ஓர மெயபபாடு விளைநதது. அவனைப பிரிநது மறுகியுளள விரகதாபததால அது உருகியது; அநதநாயகனை விரைந்து அடைநது கொளளலாம எனற உளளக களிபபினால உடனே அது குளிரநது இறுகியது எனக.

தன பிரிவினால தனது நாயகி தனிததுத தவிததிருக்கும் நிலையையும, தன்பால் அவள கொண்டுளள அனபின ஆவலையும் ஒருஙகே உணரநது கொளளுமபடி இராமனிடம அனுமான் இஙஙனம உரைததிருககிறான். அநத உததமபததினி தன் பதியை நினைநது நினைந்து உருகி மறுகியுளள நிலைமையை உரிமை கனிய உணரததி யிருககும இது உறுதி நலஙகள் சுரந்து அரிய உணர்வின் சுவையாய இனிய மணம் வீசி யுளளது.

கையில வாஙகிய மோதிரததைக கண் குளிர நெடு நேரம்

* இந நூல பக்கம 3057, வரி 8 பாரக்க

கனிந்து பார்த்தாள்; முத்தமிட்டாள், தலையில் வைத்து உவந்தாள்; முலைமேல் அழுத்தி மகிழ்ந்தாள் மூக்கில் வைத்து மோந்தாள்; பரம புனிதனை தனது நாயகன் கையில் அணிந்திருந்த அணி பாவிகளான அரக்கர் ஊரில் வர நேர்ந்ததே! என்று இரக்கம் மீதூர்ந்து அழுதாள், உழுவலன்போடு அழுத அந்தக் கண்ணீர் அதனைக் கழுவித் தூயமையாக்கியது, மீள மீள நோக்கி ஏதோ பேசப் போவது போல வாய் மலர்ந்தாள், யாதும் பேசவில்லை, கண்ணீர் மல்கியபடியே உணர்மையோடு உவந்து நோக்கி னள். மெலிந்திருந்த திருமேனி வளர்ந்து பூரித்தது, வியப்பி ஏங் கிப் பெருமூச்சு விட்டு இமை கொட்டாமல் ஆழியை நோக்கிய படியே ஓவியம் போல் தேவி ஒளி செய்திருந்தாள்.

ஏங்கினள் இருந்த தல்லால் இயம்பலள், எய்த்த மேனி
வீங்கினள், வியந்த தல்லால் இமைத்திலள், உயிர்ப்புவிண்டாள்

மோதிரத்தைக் கண்டபோது சீதை கொண்ட மெய்ப்பாடு களை இப்படி வாய்ப்பாடுகளா விளக்கிக் காட்டினை வெளியில் தோன்றிய இந்தச் செயல்களைக் கொண்டு அந்தப் பெண்ணரசி யின் உள்ளத்தின் அடிப்புகளையும் உவகை நிலைகளையும் யூகமாய் ஓர்ந்து கொள்ளுக என இந்த விவேகி விளக்கி யிருக்கும் வித்த கம் வியப்பு மிக வுடையது.

தன்பிரிவில் மறுகியுள்ள அருமைக் காதலியை உரிமையாள விடம் இவ்வாறு உருவம் வரைந்து உயிருருக உரைத்தருளினை.

ஆங்கு உயர் மழைக்கண் நீரால் ஆயிரம் கலசம் ஆட்டி

என்றது ஆழியைக் கண்ட பொழுது தேவி அழுதிருக்கும் அளவு தெரிய வந்தது. பரிதாப நிலையில் ஆவி அலமந்திருந்தவள் உரியவன் அணியைக் காணவே உள்ளமும் உயிரும் உருகி நின் றன. அவ் வுருக்கம் வெள்ளமாய்ப் பெருகி வெளி வந்தன, தாரை தாரையாக் கண்ணிலிருந்து வழிந்து ஓடின நீர் ஓட்டம் கையிலிருந்த கணையாழியைக் கழுவிப் போயது. சீதையின் கண் ணீரால் இராமன் கைமோதிரம் அபிடேகம் செய்யப் பட்டுள்ள காட்சியை இங்கே கண்டு கனிந்து களித்து நிற்கிறோம் புறத் தில் நிகழ்ந்த அழுகை அகத்தில் நிறைந்துள்ள உழுவலன்பினை விழி தெரிய விளக்கி அளி நிறைந்து ஒளி புரிந்துள்ளது.

அன்பு சுரந்து ஆர்வம் கனிந்து உரிமைக் காதலால் இங்ஙனம் உள்ளம் கரைந்து உயிர் உருகியுள்ள பிராட்டிக்கு ஈண்டு எம்பெருமானுக்கு நேர்ந்துள்ள நிலைகளையெல்லாம் நேரே தெரியக் கூறினன். இருவர் நீர்மைகளும் எதிர் அறிய வந்தன.

பஞ்சவடியிலிருந்து பிரிந்த பின்பு நிகழ்ந்திருக்கும் வரலாறுகளை யாவும் அம்மைக்கு அறிவுறுத்தினேன். இருக்கும் இடம் தெரியாமையினாலேதான் இவ்வளவு தாமதம், தெரிந்திருந்தால் அரக்கர் குலம் இதற்குள் அழிந்து போயிருக்கும், உங்களைக் கைவிட்டுப் பராமுகமாயிருப்பதாக யாதும் கருதலாகாது; எம்பெருமானுடைய பேரன்பு அளவிடலரியது, விரைவில் வந்து சிறை மீட்டு அருளுவார் என்று உறுதி கூறி உள்ளம் தேற்றினேன் தேறியிருந்தாலும் அங்கு அம்மை மாறி மறுகியே யுள்ளாள் "ஒரு மாதம் வரையும் உயிர் வைத்திருப்பேன், அதற்குள் என் ஆருயிர் நாயகன் ஈண்டு வரவில்லையானால் நான் மாண்டே போவேன், இறந்து போன எனக்குக் கங்கையாற்றில் அந்த அழகிய செந்தாமரைக் கைகளால் நீர்க்கடன் தீர்த்தருளும்படி சொல், இந்தப் பிறவியில் அந்தப் புண்ணியத் திருமேனியைத் தீண்டாதொழிந்தாலும் மறு பிறவியிலாவது மீண்டு வந்து தீண்டி மகிழும்படியான வரம் ஒன்று வேண்டினேன் என்று கூறுக" என் இவ்வாறு பரிதாப நிலையில் கண்ணீர் மல்கி அப் பெண்ணரசி உறுதி கூறி விடுத்தாள் என உரைத்தவன் இறுதியில் தன் ஆடையில் பொதிந்து வைத்திருந்ததை அவிழ்த்தான்.

## சூளாமணி கொடுத்தது.

தன் நாயகனிடம் கொடுக்கும்படி சீதை அடையாளமாக அனுப்பிய சூடாமணியை அனுமான் கையில் எடுக்கவே அதனை இராமன் கண்டு பேரானந்தம் அடைந்தான். உரைகளைக் கேட்டு உள்ளம் களித்து வந்த அவன் மனைவியின் அணியைக் காணவே உயிர் பரவசமாயினன். அந்தப் பரவச நிலையிலுள்ள அவனிடம் அனுமான் பணிவோடு அவ்வணியைத் தந்தான்.

> வீத்தகக் காண்டி! என்று கொடுத்தனன் வேத நன்னூல்
> உய்த்துள காலம் எல்லாம் புகழொடும் ஓங்க நிற்பான்

இராமன் கையில் சூடாமணியைக் கொடுத்த சீர்மையையும், கொடுத்தவனது நீர்மையையும் கவி இவ்வாறு காட்டியிருக்கிறார்.

கொண்டவனையும் கொடுத்தவனையும் ஒருங்கே கண்டு உவந்து நிற்கிறோம். உலகம் உள்ள அளவும் தலைமையான கீர்த்திமானாய அனுமான் நிலவி நிற்பான் என்பதை ஈண்டு நினைவுறுத்தியருளினார். அரிய வினைகளைச் செய்து பெரிய உதவிகளைச் செய்துள்ளவன் ஆதலால் அவனது பெரும் கீர்த்தியும் யாரும் புகழ்ந்து போற்ற யாண்டும் நிலைத்து என்றும் நீண்டு வருவனவாயின.

தோன்றின் புகழொடு தோன்றுக என்று தேவர் குறித்துள்ளமையால் புகழுக்கும் தோற்றத்துக்கும் உள்ள உறவுரிமை யுணரலாகும். உயர்ந்த பிறவிப் பேறாகப் புகழ் அமைந்திருத்தலால் அந்தப் பேற்றை ஏற்றமாகப் பெற்றுள்ளவனை உலகம் போற்றி வரக் கவி உரிமையோடு ஏத்தியருளினார்.

அரிய காரியங்களைச் செய்து அனுமானைப் போலவே மனிதர் மருவி வர வேண்டும் என்று கவி கருதி வருதலால் இந்த ஆண்டகையின் அதிசய நிலைகளை மதிநலம் கனிய யாண்டும் துதி செய்து வருகிறார். அவ்வரவு உவகை நிலையமாய் ஒளி செய்து வருகிறது.

பொறி வெறிகளை அடக்கி அறிவாண்மைகளில் உயர்ந்து அரிய வினைகளை ஆற்றிய பெரிய கரும வீரனாய அனுமான் பேரொளி செய்து நிற்றலால் அப் பேராளனது சீர் பாருலகெங்கணும் பரவியுள்ளது. அவனை உன்னுந்தோறும் உணருந்தோறும் உயிரினங்கள் உயர்ந்து வருகின்றன. மகா மேதை, மகா வீரன் என மகிமை பெற்றுள்ளமையால் அவனுடைய ஞான தீரங்களை வானவர்களும் வியந்து புகழ்ந்துள்ளனர்.

மனிதன் எதைக் கருதி வருகிறானோ அதன்படி உறுதி பெற்று வருதலால் இந்தக் கரும வீரனை நினைந்து வருபவர் உயர்ந்த பலன்களை அடைந்து வருகின்றனர். அரிய மகான்களும் அனுமானைக் கருதி மகிழ்ந்து பெரிய மகிமைகள் பெற்றிருக்கின்றனர்.

பிறந்த மனிதன் எவனும் சிறந்த காரியங்களைச் செய்து உயர்ந்து கொள்ள வேண்டும் என்று இவன் சரிதம் உணர்த்தியுள்ளமையால் மனித சமுதாயத்துக்கு இவனுடைய நினைவு புனித நிலைகளை அருளிப் புண்ணிய நலங்களை உதவி வருகிறது.

**"As on the one hand Hanuman represents the ideal of service, so on the other, he represents leonine courage, striking the world with awe." (Vivekananda)**

"ஒரு நிலையில் அநுமான் சிறந்த கரும வீரன்; மற்றொரு வகையில் அரியேறு போல உலகமெல்லாம் அதிசயிக்கத் தக்க உயர்ந்த தைரியசாலி" என்னும் இது இங்கே நினைந்து சிந்திக்கத் தக்கது.

இத்தகைய உத்தமன் வித்தகக் காணடி! என்று இராமன் கையில் சூடாமணியை எடுத்துக் கொடுத்தான். அந்த அணியைப் பெற்றதும் அப் பெருமான் அடைந்த பேரானந்த நிலைகளை யார் சொல்ல வல்லார்? யாதும் சொல்ல முடியாத நிலையில் அவ் வுள்ளம் இன்ப வெள்ளத்தில் மூழ்கிப் பின்பு மெள்ள எழுந்து மேலே வந்தது. மெய் மறந்திருந்தது.

அருமை மனைவியின் அணி தன் கையை மருவவே அவளைத் தழுவியது போலவே உயிர் பரவசமடைந்துள்ளது. அவ்வுண்மை உடலில் விளைந்த மெய்ப்பாடுகளால் உலகம் அறிய வந்தது.

ஐயனுக்கு அங்கி முன்னர் அங்கையால் பற்றும் நங்கை
கையெனல் ஆயிற்றன்றே கைபுக்க மணியின் காட்சி.

சூடாமணி கையில் புகுந்த பொழுது இராமனது உள்ளத்தில் புகுந்த அன்புரிமைகளையும் இன்ப நிலைகளையும் இது இனிது விளக்கியுள்ளது. மிதிலையில் கன்னி மாடத்தில் முதலில் கண்டு மயங்கிக் காதல் மீக்கொண்டு கருதி யுருகி யிருந்த இராமன் பின்பு சனகன் அரண்மனையில் அரசர் குழு முன்னே அக்கினி சாட்சியாகச் சானகியைக் கைப்பிடித்து மணந்து கொண்டான். அந்தப் புது மணத்தில் அம் மணமகளுடைய கையை முதலில் தீண்டிய பொழுது இந்த ஆண்டகை உள்ளத்தில் ஓர் அதிசய ஆனந்தம் பொங்கி யெழுந்தது. மனைவியை மருவிய பொழுது பெருகிய அந்த அரிய இன்ப வுணர்ச்சி இப்பொழுது அவளது அணியைக் கையில் கொண்ட பொழுது உண்டாயது.

அரிய இனிய காதலர்களுடைய பிரியமும் மகிழ்ச்சியும் வெளியே உரையிடலரியனவாய் உள்ளே பெருகியிருக்கின்றன. அகத்தில் விளைந்த அந்த இன்பப் பெருக்கான உணர்ச்சி நிலை

கலையைப் புறத்தில் நிகழ்ந்துள்ள குறிப்புகளால் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம்.

உரோமங்கள் சிலிர்த்தன, கண்கள் நீர் பொங்கிப் பொழிந்தன, மார்பு பதைத்தது, தோள்கள் துடித்தன, வெயர்வைகள் துளிகளாய்த் தோன்றின, வாய் இதழ் மடித்துக் கடித்தது; உயிர் வருவது போவது ஆய் ஊசலாடியது, உடல் பூரித்துத் தடித்தது, இன்னவாறு அரிய குறியீடுகள் பல அவ் வீரமூர்த்தியிடம் அப்பொழுது தோன்றின ஆதலால் அந்த உள்ளத்தில் பொங்கி எழுந்த அன்பு நிலைகளையும் இன்ப உணர்ச்சிகளையும் நான் எப்படி எல்லை கண்டு சொல்ல முடியும்? எனக் கவி இப்படி இங்கே வியந்து விலகி விளக்கியிருக்கும் அழகை உவந்து நோக்கி நாம் உணர்ந்து களித்து ஓர்ந்து திளைக்கின்றோம்.

ஆவி வருவது போவது ஆகி என்றது தேவியைக் கருதிக் களித்து உருகி மறுகிய போது இராமன் இருந்த நிலையை உணர்த்தி நின்றது. பெருமூச்சு எறிந்து ஏங்கியிருந்துள்ள பாங்கு தெரிய வந்தது.

இராமனுடைய கை அணியாகிய கணையாழியைக் கண்ட பொழுது சீதை அங்கே அடைந்த அவச நிலைகளை முன்பு பார்த்தோம், அவளது தலையணியாகிய சூடாமணியைத் தன் கையில் கொண்ட பொழுது இராமன் இங்கே அடைந்துள்ள உவகை நிலைகளைக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து மகிழ்கின்றோம்.

அரிய இரண்டு அன்புருவங்கள் உரிமை மீதூர்ந்து காதல் இன்பங்களைக் கருதி மகிழ்ந்து உருகி உளைந்திருக்கும் நீர்மைகளை உரைகளில் கூர்மையாய் நோக்கி உணர்ந்து கொள்ளுகிறோம்.

கணையாழியைக் கண்டவுடனே தனது இனிய நாயகனை இனிமேல் அடைந்து மகிழலாம் என்று சீதை தெளிந்து மகிழ்ந்தது போலவே சூளாமணியைப் பார்த்தவுடனே தன்னுடைய அருமை மனைவியை விரைந்து காணலாம் என்று இராமன் உறுதி பூண்டு உவந்து கொண்டான். அந்த உவகைக் காட்சிகள் இருபாலும் பெருகி எழுந்துள்ளன. அவ் உணர்வின் நீர்மைகளை ஓவிய உருவங்களாக் கவிகள் சுவையாகக் காட்டியிருக்கின்றன. கலையுணர்ச்சியுடையவர் என்றும் நிலையாய்க் கண்டு களித்து வருகின்றார். காவியக் காட்சி சீரிய மாட்சியாய்த் திகழ்கிறது.

## அங்கதன் முதலியோர் வந்தது.

முன்னம் வந்த அனுமானுடைய உரைகளைக் கேட்டு அடையாளத்தைக் கண்டு இன்னவாறு இராமன் உவந்திருக்கும் பொழுது அங்கதன் முதலிய வானர வீரர்கள் வந்து வணங்கி நின்றார் காரிய சித்தி பெற்று வந்துள்ளமையால் பெருமகிழ்ச்சியுடையராய்க் கவியரசனைத் தொழுது உரிமை கூறாது நிறைந்தார். அவர் அனைவரையும் உபசரித்து இருத்திச் சுக்கிரீவன் விரைந்து எழுந்து இராமனை வணங்கி "ஐயனே! அம்மை இருப்பு நிலை அறிந்தும் இனி நாம் இங்குத் தாமதித்து இருக்கலாமா?" என்று விநயமாக வினவினன் "உடனே படைகள் எழும்படி செய்க" என்று இராமன் கூறினன் கூறவே சுக்கிரீவன் கட்டளைப்படி வானரப்படைகள் உள்ளம் களித்து ஒருங்கே எழுந்தன.

## படைகள் எழுந்தது.

கடல்கள் பொங்கி எழுந்தது போல எம்மருங்கும் கவியின் சேனைகள் கால் பரந்து நின்றன நாடு நகரங்களின் இடையே சென்றால் மக்கள் மருண்டு பயந்து மறுகுவர் ஆதலால் அவ்வாறு செல்லாமல் ஒதுக்கிக் காடு மலைகளின் வழியாகவே படைகளை நடத்திச் செல்லுக என்று இராமன் உரைத்தருளினமையால் அங்கனமே நீலன் குமுதன் பனசன் முதலிய சேனைத் தலைவர்கள் எச்சரிக்கையுடன் செலுத்திச் சென்றார் போர் புரியப் போகின்றோம் என்னும் பிரியத்தினால் வானர வீரர்கள் எல்லாரும் உள்ளக் களிப்போடு ஊக்கிப் போனார் அவ்வாறு செல்லும் பொழுது எதிரியினுடைய இருக்கை முதலிய நிலைகளை எல்லாம் அனுமானிடம் வினவியறிந்து வியந்து மகிழ்ந்து விரைந்து நடந்தார்

வீரரும் விரைவில் போனார் விலங்கல்மேல் இலங்கை வெய்யோர்
சோர்விலாக் காவற்பாடும் பெருமையும் அரணும் கொற்றக்
கார்நிறத்து அரக்கர் என்போர் முதலிய கணிப்பி லார்க்க
வார்கழல் அனுமன் சொல்ல வழிநெடிது எளிதிற் போனார் (1)

அங்கெறி கடிது செல்ல அரிகுலத்து அரசன் ஏந்தி
கனனெறிக் குமரர் போகப் பயந்துடன் புணர்ந்த சேனை
இன்னொடும் பழுவக் குன்றில் பகலெல்லாம் இறுத்த பின்னர்ப்
பன்னிரு பகலில் சென்று தென்திசைப் பரவை கண்டார். (2)

கிட்கிந்தையிலிருந்து புறப்பட்டு வானரச் சேனைகள் கானகங்களின் வழியே நடந்து பன்னிரண்டாவது நாளில் தென் கடலை வந்து அடைந்தன. வழி நடை முழுவதும் அனுமானுடைய மொழிகள் படை வீரர்களுக்கு மிகவும் உவகைகளை விளைத்து வந்துள்ளன என்று தெரிகின்றது "கொடிய பகையாளியோடு போர் செய்ய மூண்டு வருதலால் அந்த வகை விவரங்கள் யாவும் ஆவலோடு சேனைகள் அறிய நேர்ந்தன.

இலங்கையை நேரே கண்டு வந்த அனுமான் அதன் காட்சிகளையும் மாட்சிகளையும் நண்பர்களுக்கு நன்கு சொன்னான். அந்த மதிமானுடைய மதுர மொழிகளைக் கேட்டு வந்தமையால் வழி நடையின் வருத்தம் யாருக்கும் யாதும் தெரியாமலிருந்தது.

வார்கழல் அனுமன் சொல்லால் வழிநெடிது எளிதில் போனார்

வானர வீரர்கள் உல்லாச விநோதமாய்ச் சல்லாபங்கள் புரிந்து கானம் மலை காடு முதலிய வழிகளை எளிதே கடந்து போயுள்ளமையை இது காட்டியுள்ளது வழி நடந்து செல்வோர் கதைகளைப் பேசிக் கொண்டு செல்லும் இயற்கை வழக்கமும் இங்கு இடையே தெரிய வந்தது.

**மொழித் துணை வழித் துணை** என்பது முதுமொழி.

உரிய நண்பர்கள் உரையாடி வரின் அரிய வழியும் எளிதே கடந்து போம் என்பதை இப் பழமொழி தெளிவாக விளக்கியுள்ளது.

"Good company upon the road is the shortest cut"

"வழியில் நல்ல துணைவர் அமையின் அது எளிது கழியும்" என்னும் இந்த ஆங்கிலப் பழமொழியும் ஈங்கு அறியவுரியது.

சில மலை வழிகளைக் கடக்கும் பொழுது இராமனை நடக்க விடாதபடி அனுமான் தோளில் தாங்கிச் சுமந்து சென்றான். அவ்வாறே இலக்குவனையும் அங்கதன் எடுத்துச் சென்றான். அவரது அன்புரிமையான செயல்கள் அதிசய ஆர்வங்களை விளைத்து வந்தன. உரிய துணைவர்களோடு அவர் உவந்து சென்றனர்

**நன்னெறிக் குமரர்** என இராம லட்சுமணர்களை இங்கே குறித்தருளினர். சன்மார்க்கமான நீதி நெறிகளை உலகத்திற்கு உணர்த்தித் தரும நெறி தவறாமல் யாண்டும் நல்ல வழியில் நடந்து வருபவர் ஆதலால் அவரை ஈண்டு இங்ஙனம் உரைத்தார்.

தீய நெறிகளில் நடக்கின்ற அரக்கர்களை அழிக்கப் போகின்றார் ஆதலால் அந்தப் போக்கும் நோக்கும் தெரிய நன்னெறிக் குமரா என்றார். நெறியுடையார் நெறிகேடரை நீறு செய்யப் போதலால் அச் செயல் இயல்புக்கியைய பெயரெழுந்து வந்தது.

என்றும் நல்ல நெறிகளிலேயே நடந்து வந்த செல்லக் குமாரர்கள் இன்று கல்லும் முள்ளும் காடும் மேடுமான பொல்லாத நெறிகள் பலவும் கடந்து போக நேர்ந்தார் என்னும் பரிவும் இவ்வுரையால் உணர நேர்ந்தது.

சுக போகிகளான சிறந்த சக்கரவர்த்தித் திருமக்கள் தங்களுடைய இன்ப நலங்களை யெல்லாம் துறந்து கானகம் புகுந்து காடும் மலையும் கடந்து வானகமும் வையகமும் உய்ய வழிநாடிப் படாதபாடுகள் பட்டு வருகின்றார். உலகம் நலம் கருதி உழைத்து வருகிற அந்த வரவில் இப்பொழுது கடல்கடக்க நேர்ந்துள்ளார்.

"மண்டு நீர்க்கடல் கடந்தவன் நடந்தமை வழங்கிப்
பண்டை நான்மறைக் கரியவன் பதுமமென் கரத்தில்
தொண்டை வாய்மயில் அளித்த சூடாமணி அளிப்ப
அண்டர் நாயகன் அம்மணி கண்மணிக் களித்தான்

தேனி ரைத்ததார்ச் செழுங்கதிர் மகன்முனம் செல்ல.
நீனிறக்கடல் கடந்தவன் நீலனே முதலாம்
வானரப் படை வளைதர இளையவன் மருவக்
கான கத்தினைக் கடந்தனன் கடல்வண்ணன் எழுந்தே

விரியு மூவுல கத்துமன் னுயிர்க்கணே விளங்கிப்
பெருகு மாறுவந் தருட்புனல் நிச்சலும் பெய்யும்
கரிய மாமுகில் கொழுந்தெழு கடற்படை யோடு
திரைசெய் வாரிதிப் புறத்தினில் சென்றிறுத் ததுவே"
(பாகவதம், 9-9)

இலங்கை போய் வந்த அனுமான் உரைகளைக் கேட்டுச் சூடாமணியைக் கண்டு உவகை மீக் கொண்டு போருக்கு எழுந்து வானரப் படைகளோடு இராமன் தென் கடலை அடைந்துள்ளமையைச் சுக முனிவர் இங்ஙனம் கூறியுள்ளார். இராம சரிதம் அரிய தவ முனிவர் எவர்க்கும் பெரிய அமிர்த போகமாய்ப் பெருகி யாண்டும் திரும நிலையமாய் மருவியுளது.

எதிரியை வென்று தொலைக்க விழைந்து சேனைக்கடல் புடைசூழ எழுந்து வீரக்கடலான இராமன பன்னிரண்டு தினங்கள நடநது வழிகள பல கடநது தென கடலை வந்து கண்டான.

இந்த அளவில் சுநதர காண்டம் முடிநதுளளது.



வீர அனுமான விரைநதுபோயத தூ துவநது
பாரநிலை யாவும பகாநதுநினறான-- -தீரன தன
பககமுறு நணபனைப பாாததான படைகளெலாம
ஒகக எழுநத வுடன

தெனனிலஙகை மனனவனமேல் சீராமன சேனையுடன
உனனிஎழுந தோாமுகமாய ஊககியே---தனனுள
அடலகொணடு வநதான அலைகள தவழும
கடலகண்டு நினறான கனிநது.



# ஆறுவது யுத்த காண்டம்.



ஒரு காண்டத்தை முடித்து அடுத்த காண்டத்தைத் தொடங்குங்கால் கடவுளைத் துதிசெய்து கொள்வது நம்கவியின் இயல்பாயுள்ளது. வாலறிவனை நினைந்து தொழுவது நூலறிவின் சிறந்த நிலை ஆதலால் அவ் வுறவும் சால்பும் இவ்வாறு உணர வந்தன.

தெய்வ சிந்தனை சீவர்களுக்கு எவ்வழியும் உறுதி நலங்களை அருளி வருகின்றது, அதனால் அது திவ்விய போதமாய்ச் சிறந்து திகழுகின்றது. மனிதன் எதனோடு பழகி வருகிறானோ அதன் மயமாய் மருவி வருகிறான் உயிர்க்கு உயிரான பரமான்மாவைக் கருதி வந்தவர் மகான்களாய் மருவிவந்துள்ளனர். சீவாத்துமா மேலே சிறிது உயர்ந்த போது அது மகாத்துமா ஆகிறது; பின்னும் மேலே போனால் பரமாத்துவாய் மிளிர்கிறது.

"அஹம் ப்ரஹ் மாஸ்மி"

என்பது ஒரு வேத மந்திரம். "நான் பிரமமாய் இருக்கிறேன்" என்னும் பொருளையுடைய இது பெரிய தத்துவ நிலைகளை உய்த்துணரும்படி ஒளி செய்துள்ளது. சித்த சுத்தி பரிபூரணமாய் வாய்ந்து பரிபக்குவம் அடைந்த போது தானாக அறிய வுரியதை வேறு யாரும் அறிவிக்க முடியாது.

அஞ்ஞானமாகிய இருள் நீங்கிய பொழுது ஆன்மா பரமான்வாய் இன்புறுகின்றது. அந்த இன்பம் வெளியிலிருந்து வரவில்லை, தன்னிடமே என்றும் நிலையாயுள்ளது. உள்ளிருந்து வருகிற இன்பத்தை அயலிருந்து பெறுவதாக நினைவது மயலேயாம்.

"ஆத்மா து சததம ப்ராப்தோப்யப்ராப்தவத் அவித்யயா
தந்நாசே ப்ராப்தவத்பாதி ஸ்வகண்டாபரணம் யதா"

"ஆத்துமா எப்பொழுதும் பரம நீர்மையாய் மருவியுளது; மாய மயலால் அது அயலாய்த் தோன்றுகிறது; அந்த மயக்கம் ஒழிந்தால் தன் கழுத்தின் அணி போல் அது சொந்தமாய் விளங்குகிறது". என ஆதிசங்கரர் ஆன்ம தரிசனத்தை இங்ஙனம் அருளியுள்ளார். ஆத்ம போதம் ஆனந்த போகமாகிறது.

ஓர் அரசிளங்குமரி கழுத்தில் முத்துமாலை அணிந்திருந்தாள்; உறங்கி எழுந்த போது அதனை மறந்து போனாள், எங்கேயோ இழந்து விட்டதாக உழந்து வருந்தினாள், அருகே நின்ற ஒருத்தி "அதோ உன் கழுத்தில் உள்ளதே!" என்று குறித்துக் காட்டினாள், கண்டாள், யாரிடமிருந்தோ புதிதாய் அதனைப் பெற்றுக் கொண்டவள் போல் பெரு மகிழ்ச்சி அடைந்தாள்.

ஆன்மா பரமான்வின் ஒளி என்பதை அறியாமல் மனிதன் மயங்கியிருந்தான், குரு உண்மையை உணர்த்தினார்; தன்மையை உணர்ந்தான் இருள் நீங்க ஒளியடைந்தது போல அவன் கழிபேருவகையடைந்தான். இந்தத் தத்துவ நிலையை உய்த்துணரும்படி தெளிவாக விளக்கி நின்றமையால் இதற்கு அது உவமையாய் வந்தது கண்ட பூஷண நியாயம் என வடமொழியாளர் இதனைக் குறித்துக் கூறுவர்.

உயிருக்கும் பரமபொருளுக்கும் உள்ள உறவுரிமையை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம் சித்த சுத்தியை அடைந்து தத்துவ ஒளியைப் பெற்ற பொழுது தெய்வக் காட்சி தெளிவாகின்றது. அந்த மெய்யுணர்வு எய்தும் வரையும் பொய்யான மயல்களில் சீவர்கள் புலையாட நேர்ந்தனர்

தெய்வ சிந்தனை செய்து தன் உள்ளத்தைப் புனிதமாக்கிய பொழுது மனிதனுடைய வாழ்க்கை திவ்விய நிலையை அடைகிறது. நல்ல நீர்மைகள் வளர்ந்து வர எல்லாம் சீர்மைகளாயச் சிறந்து திகழ்கின்றன

"Be strong, live happy, and love, but first of all,
Him whom to love is to obey" (Milton)

"தைரியமாயிரு; இன்பமாய வாழ், அன்பு செய், எவற்றிற்கும் முதன்மையாப் பக்தி செய்யவுரிய இறைவனுக்குக் கீழ்ப்படிந்து நட" என மிலட்டன் என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

பரமனுக்கும் சீவனுக்கும் அநாதியாகவே உறவுரிமையுள்ளமையால் அவ்வுண்மையை உணர்ந்து வாழ்வது நன்மையாயது. அறிவு நலம் பெருகி வரும் பொழுது மனிதர் உரிமைகளை மருவி வருகின்றனர். அவ வரவுகள் பலவாறு பரவியுள்ளன.

எவ்வழியும் காண முடியாத கடவுளைக் கண்டபடி யெல்லாம் மாந்தர் பேணவும் பேசவும் நேர்ந்தனர். அப் பேச்சுகள் காட்சிகளாய் வந்தன. பரமனை நினைந்து பேசுபவர் பெரும்பாலும் படியேறிய சீலர்கள். ஆதலால் அவருடைய வாய் மொழிகள் கடவுட் காட்சிக்கு ஓரளவு கூரிய விழிகளாய் ஒளி செய்துள்ளன. கடவுளைக் குறித்து வந்துள்ள உரைகள் அளவிடலரியன. ஒரு நிலையின்றிப் பலர் பலவாறு கூறி வருகின்ற அந்த நிலைகளை யெல்லாம் நெஞ்சில் வைத்துக் கொண்டு நம் கவி இங்கே கடவுளைத் துதி செய்திருக்கிறார். அதிவிநயமான அத் துதி மொழிகள் அயலே வருகின்றன.

ஒன்றே என்னின் ஒன்றேயாம், பலஎன் றுரைக்கின் பலவேயாம்,
அன்றே என்னின் அன்றேயாம், ஆமே என்னின் ஆமேயாம்,
இன்றே என்னின் இன்றேயாம், உளதே என்னின் உளதேயாம்,
நன்றே நம்பி குடிவாழ்க்கை! நமக்கிங் கென்னோ பிழைப்பம்மா!

இக் காண்டத்துக்கு மங்கலமாகக் காப்புக் கூற நேர்ந்தவர் கடவுளை இவ்வாறு வாழ்த்தியிருக்கிறார். தெய்வத் துதியில் திவ்விய உணர்வு நலங்கள் செவ்விதாகச் செழித்து வந்துள்ளன.

ஒன்று என்றும், பல என்றும், உண்டு என்றும், இல்லை என்றும், அன்று என்றும், ஆம் என்றும் இன்னவாறு பல படியாகக் கூறிப் பலரும் நிலை தடுமாறும்படி பரமன் நிலையுள்ளதே! நான் எவ்வாறு அவனை உறுதி கூறித் தொழுது துதிப்பேன் என வித்தக விநோதமான பத்தி விநயத்தோடு கவி இங்கே துதித்திருப்பது உய்த்துணரத் தக்கது. கடவுளைக் குறித்து உலகில் வழங்கி வரும் நிலைகளை இது தழுவி வந்துள்ளது. விரிந்த பொருள்களையுடையது. ஈண்டு விரிப்பின் பெருகும் ஆதலால் சுருக்கமாகக் கூர்ந்து நோக்கி மேலே போவோம்.

எல்லாம் வல்ல பொருள் ஒன்று உண்டு; அது கடவுள் என நின்றது. கடவுள் ஒன்றே எனினும் பாலுள் நெய் போல் எல்லா உயிர்களிலும் யாண்டும் பரந்து நிறைதலால் பல என நேர்ந்தது. நேரே கண்ணுக்குத் தெரியாமையால் கடவுள் என்று ஒன்று இல்லை எனச் சிலர் சொல்ல நேர்ந்தார். உலகம் ஒழுங்காய் இயங்கி வருதலால் அது உண்டு என்பர் பலர் உறுதி கூறினர். சூரியன், சந்திரன், தீ முதலிய ஒளிகளைக் காட்டி இதுதான்

கடவுள் இதுதான் கடவுள் என்று கூறிய போதெல்லாம் அது அன்று, அது அன்று என விதிமுறையே மறுக்கப்பட்டது.

"அல்லை ஈது, அல்லை ஈது, என மறைகளும் அன்மைச்
சொல்லினால் துதித்து இளைக்கும்"

என்றது கடவுளின் எல்லையை விளக்கி நின்றது. நேதி நேதி என வேதமும் ஓதி ஓதி உண்மையை உணர்த்தியுள்ளது.

இன்னவாறு ஒன்று, பல, அன்று, ஆம், இல்லை, உண்டு என ஆதி முதல் யாதும் எல்லை காண முடியாதபடி உள்ள பொருள் எனக் கடவுள் உண்மையை இங்கே இங்ஙனம் காட்டியருளினர்.

"ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முகன் அரன் என்னும் இவரை
ஒன்றநும் மனத்து வைத்து உள்ளி நும் இருபசை அறுத்து
நன்றென நலம் செய்வது அவனிடை நம்முடை நாளே"
(திருவாய்மொழி)

இறைவனைக் கருதி இருவகைப் பற்றும் அற்று உறுதிநலம் பெறுவதே நம் பிறவிப் பேறும் என நம்மாழ்வார் நமக்கு இங்ஙனம் செம்மையாக உணர்வு போதித்துள்ளார்

அல்லை, இல்லை, ஆம், உண்டு எனக் கடவுள் நிலையே இப்படி அல்லலடைந்துள்ள பொழுது மனிதராகிய நம்முடைய வாழ்வையும் பிழைப்பையும் குறித்து என்ன சொல்வது? எனக் கவி இங்ஙனம் உல்லாச விநோதமாயுரைத்து முடித்திருப்பது உணர்வு நலனை விளைத்து வருகிறது. ஈசன் பேச அரியவன் என்ப பேசியருளினர். எல்லை காண இயலாத அந்தப் பரம்பொருளே ஒரு வில்லை ஏந்தி இராமன் என்னும் பெயரோடு யாரும் காண ஈண்டு இப்படி வந்துள்ளது என்பார் நம்பி என்றார்.

எல்லாரும் உறுதியாக நம்பிச் சரணடைந்து உய்தற்குரிய அரிய பெரியவன் என்பதை இந் நாமம் சேமமாக விளக்கி நின்றது. விபீடணன் வந்து இராமனை அடைக்கலம் அடைந்து இருமை இன்பங்களையும் பெற்று அருமைத் துணைவனாய் நிற்கும் நிலையை இக் காண்டத்தில் தலைமையாகக் காணப்போகின்றோம் ஆதலால் அந் நிலைமை முன்னதாகக் கொஞ்சம் நெஞ்சம் தெளிய வந்தது. நம்பனை நாடி வரின் இன்ப நிலை முன் வரும்.

நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்

என இராமனையும் சீதையையும முன்பு இங்ஙனம் காட்டியருளினார். இந்த இருவரும ஒருவரை ஒருவா இங்கே கண்டு மகிழ நோநதுள்ளமையால அநதக காடசியின் மாடசியைக் கருதியுணர நம்பி எனனும் போ ஈண்டு ஆடசியா யமைநதது.

பிரியாக் காதலா பிரிய நேர்நதனா, அபபிரிவு பிரிநது ஒழிய இருவரும் மருவி மகிழ்நது வாழ ஈஙகு வநதுளளனா. அவ வுண்மை நுணமையாக நோக்கி புணர வநதது.

ஆண்மை உலகம் மேன்மை பெற வநதுள்ள இந் நம்பி பெண்மை புலகம பெருமை பெற வநதுளள அந நஙகையைப் பேணியருள இபபகுதியில போநதிருததலால அவவரவை ஓாநது கொளளுமபடி உறவுரிமையான போ ரணடு நோநது நினறது.

கொடிய பகைவனை அடியோடு வெனறு, தனது அருமை மனைவியைச் சிறை மீடடித, திருவயோததியை அடைநது, அரியணை அமாநது, மணிமுடி புனைநது, உலகம நலமுற இனிதுபுரநது, தரும நீதிகள எவவழியும தழைதது ஓஙகச செவவையாய ஆண்டு, யாண்டும ஆணை செலுததித திசைகள தோறும இசைகள பரவி ஒளிர, அரிய சககரவாததியாய நனகு வாழ இராமன இஙகு வநதுளளமையால நம்பி குடிவாழககை நனறே என மங கல வாழததாகக காபபுக கவியை இஙஙனம துதிததுக கொண டாா. துதி மொழியில அரிய பல விதி முறைகள் மருவியுளளன. பினனே நிகழவுளள சரித நிகழசசிகள முனனுரை மொழிகளில் இனனொளி வீசி மிளிாவது இனிமை சுரநது திகழகிறது.

இராமன இலங்கைமேல படை எழுசசி செயது தமபியுடன வீர கம்பீரமாய நடநது வநதது வெறறி நிலையமாய விளஙகி நின்றது. அனபு நலஙகள சுரநது ஆறறலகள நிறைநது எவவழியும யாணடும தனககு ஆவலாய ஏவல் புரிகினற வானர சேனை களோடு வந்து தென கடலின வட கரையில இம மான வீரன மருவியிருநதான அலைகளை நிலையாக வாரிக கொழிக்கின்ற ஆழியைக் கடநது மேலே செலல நோக்குள்ளமையால் அதறகு வேண்டிய ஆலோசனைகளை ஆராயநது நின்றன. எழுபது வெள்ளம் சேனைகளுடன இக கோமகன அநதக கடலின கரையில் தங்கியிருந்த பொழுது அங்கே நிகழநத காட்சிகளைக் கவி அழகு ததும்ப அதிசயமாக விளககியுள்ளார்.

ஈரம் இல்லா நிருதரோடு என்ன உறவுண்டு உனக்கு ஏழை
மூரல் முறுவல் குறிகாட்டி முகத்தே உலகை முடிப்பாயோ? (7)

இந்து வன்ன நுதற்பேதை இருந்தாள் நீங்கா இடர் கொடியேன்
தந்த பாவை தவப்பாவை தனிமை தக்கவோ எனக் களாந்து
சிந்துகின்ற நறுந்தரளக் கண்ணீர் ததும்பித் திரைத்தெழுந்து
வந்து வள்ளல் மலர்த்தாளின் வீழ்வ தேய்க்கும் மறிகடலே (8)

பள்ளி யரவின் பேருலகம் பசுங்கல் லாகப் பனிக்கற்றை
துள்ளு நறுமென் புனல்தெளிப்பத் தூநீர்க் குழவி முறைசுற்றி
வெள்ளி வண்ண நுரைக்கல்வை வெதும்பும் அண்ணல் திருமேனி
அள்ளி அப்பத் திரைக்கரத்தால் அரைப்ப தேய்க்கு மணியாழி. (9)

கொங்கைக் குயிலைத் துயர்நீக்கி இடையே யாகக் குற்றக் குறைமுற்ற
வெங்கைச் சிலையன் தூணியினன் விடாது முனிவின் மேற்செல்லும்
கங்கைத் திருநா டுடையானைக் கண்டு நெஞ்சம் களிகூர
அங்கைத் திரைகள் எடுத்தோடி ஆர்த்தது ஒத்த தணியாழி. (10)

இன்ன தாய கருங்கடலை எய்தி இதனுக்கு எழுமடங்கு
தன்ன தாய நெடுமானம் துயரம் காதல் இவைதழைப்ப
என்ன தாகும் மேல்விளைவென்று இருந்தான் இராமன் இகலிலங்கைப்
பின்ன தாய காரியமும் நிகழ்ந்த பொருளும் பேசுவாம் (11)

(கடல் காண் படலம்)

கடலின் காட்சிகளைக் குறித்து வந்துள்ள இந்தப் பாடல்கள் அதிசய கம்பீரங்களுடையன. உரைகள் தோறும் உணர்வு நலங்கள் சுரந்து உவமை நிலையங்கள் சிறந்து திகழ்கின்றன. கவியின் இனிய கற்பனைகள் மாந்தர்க்கு அரிய அற்புதங்களாய்ப் பெரிய விற்பனங்களை விளைத்து வருகின்றன. சரித நிகழ்ச்சிகள் உயர்வு நவிற்சிகளாய் ஒளி மிகுந்து மிளிர்கின்றன.

## கடல் கண்ட நிலை

எழுபது வெள்ளம் வானரங்கள் தென் கடலை அடைந்தன; வடமேரு முதலியன வானுற ஓங்கி எழுந்தபடியாய் இச் சேனைகள் இங்கே சேர்ந்து நின்றன. தனது அருமை மனைவியின் பிரிவினால் இரவிலும் துயிலாமல் மறுகியுள்ள அந்தத் தாமரைக் கண்களால் இராமன் அலைகடலை நோக்கி அயர்வுயிர்த்து நின்றான். தன்பால் பிரியமாய்ப் பள்ளி கொண்டிருந்த திருமால் தேவர்களுடைய வேண்டுகோளின்படி பிரிந்துபோய் அயோத்தியில் தசரத சக்கரவர்த்தியின் திருமகனாய் அவதரித்துச் சில ஆண்டுகளாக அயலே ஒதுங்கி யிருந்தான், மீண்டு இப்பொழுது விரும்பி

வந்துள்ளான்; மறுபடியும் உவந்து பழையபடியே பள்ளிகொண்டருளுவான் என்று கருதிப் பாயை உதறி விரித்துப் போட்டது போல நுரைகளையும் முத்துக்களையும் சிதறி இராமன் எதிரே அலைகள் கொழித்து நின்றன. கடலுக்கு அப்பால் இலங்கையில் சீதை அழுது தவித்திருக்க வடகரையில் இராமன் உழுவலன்போடு உருகியிருந்தான். நேற்றுப் பார்த்த திருமேனி இன்று மாறிய வேறுபடப் பிரிவுத் துயரால் மறுகியிருந்த இந்த வீர மூர்த்திமீது இளந் தென்றல் வீசி உள்ளங்கலங்கச் செய்தது. அலைமேல் தவழ்ந்து வந்த இளங் காற்று இத் தலைமகனுடைய பசிய கோலத் திருமேனியில் இனிய புன்னைப் பூக்களையும் நறிய சுண்ணங்களையும் வாரி வீசியது. திரைகளின் நுரைகளையும், சங்குகளையும், கொடிப் பவளங்களையும், முத்துக்களையும் முறையே நோக்கித் தனது அருமை மனைவியின் அழகிய அவயவங்களை நினைந்து நினைந்து இம் மான வீரன் மறுகி நின்றான். கரையில் நின்றமையால் அலைகள் பாய்ந்து வந்து இக் குலமகனுடைய கால்களில் தோய்ந்து தோய்ந்து சாலவும் பரிவோடு போந்து போயின. தனது இனிய மகளை உரிமையாக மணந்து கொண்ட அருமை மருமகன் மனைவியை அயலே இழந்து விட்டுத் தனியே வந்து தன் தலை வாசலில் தயங்கி நிற்பதைக் கண்டு மாமியார் மறுகி நொந்து தலையிலடித்து அலறிக் காலடியில் விழுந்து கதறி அழுவது போல அலைகடல் அங்கே நிலை புரிந்திருந்தது. சீதை இருக்கும் இடம் தூரம் இல்லை, இதோ கிட்ட உள்ளது, விரைவில் போய் சிறை மீட்டியருள் என்று இந்த அருந்திறலாளனை விழைந்து நோக்கி அந்தக் கருங்கடல் கைகளை எடுத்துக் கூவி ஆரவாரித்தது போல அலைகளை வாரிவீசி ஆதரவான உவகைகளை விளைத்து அன்புரிமைகள் தழைத்து நின்றது.

இன்னவாறான பெரிய சமுத்திரத்தை அரிய குண சமுத்திரமான இராமன் உரிமையோடு வந்து கண்டு உவந்திருந்தான். இவ்வீர வள்ளல் படையெழுச்சி செய்து தென்கடலை அடைந்த நிலையைக் கலையின் சுவையோடு கனிந்து நோக்கிப் பலவகைநிலைகளையும் உணர்ந்து நாம் உவந்து நிற்கிறோம்.

சேனைகளோடு வந்து தென்கடலை அடைந்திருக்கிற காவிய நாயகனைக் கவி இங்கே காட்டியிருக்கிற காட்சிகள் பரிவும் பண்

பும படிந்து அறிவு நலங்கள பெருகி யுள்ளன. கவியின் உணர் வொளிகள் கால தேசங்களை யெல்லாம அதிவேகமாயக் கடந்து அதிசயவிவேகங்களை வெளியெங்கும தெளிவாகவீசிநிற்கின்றன.

ஊழி திரியும காலத்தும உலையா நிலைய உயர்கிரி

என மேருமலையை யாரும அறிய இங்ஙனம கூறி யிருக்கின்றார. மலைகளும கடலகளும திசைகளும இசைகளும வானும வையமும நம கவியின வாய மொழிகளுக்கு ஆவலோடு ஏங்கி யுள்ளன. அவவுணர்வையக கவிய உலகம கூர்ந்து உணர்ந்து வருகின்றது. கலையின் சுவைகள அமுத அலைகளாய உள்ளன.

வடகடலும வடமலையும வடதிசையும வடபுலனும மேலே எழுந்து உயர, வானர வெள்ளங்கள தென கடலருகே சேரந்தன என்றது அவற்றின மிகுதிதகுதிகளை ஓர்ந்துகொள்ளவந்தது.

வடகோடு உயர்ந்தது, தென்கோடு சாயந்தது என்னுமபடி படைகள் இங்கே அடைந்திருக்கின்றன. அந்த அடைவை அதிசய நிலையில மதி தெளிய விளக்கினார.

ஒரு துலையை உயர்த்தி, ஒரு துலையைத தாழ்த்தி இருதலை களையும நேரே நிறுத்துககாட்டி வந்துள்ள தானைகளின வரம்பை உரம பெற வுணர்த்தி யிருக்கும திறம ஊன்றி உணர வுரியது.

பொங்கிய பரந்த பெருஞசேனை புறத்தும அகத்தும புடைசுற்ற

தெனகடல அருகே வந்து பரந்திருக்கும வானர சேனைகளை இராமன வந்தவாறு பாதுகாத்துப பேணி யிருந்தான என்பதை இந்த வாக்கியம நன்கு காட்டி யுள்ளது.

கரிய கோலத திருமேனியனை இவ வீர மூர்த்தியைப் புடைசூழ்ந்து வானரப்படைகள விரிந்து பரந்திருந்தன. அழகிய ஒரு மரகத மலையைத தழுவிச சூழ்ந்துள்ள பாற்கடலைப் போல் அப்படைக் கடல் எங்கும பொங்கி எல்லை கடந்து நின்றது

தனக்குத துணையாக வந்துள்ள அந்த வானரங்களை இந்த மானவீரன உள்ளன்போடு கருதி உரிமை பாராட்டியிருந்தான.

"கொடிய பகைவன் மீது படையெழுச்சி செயதுள்ளோம்; இடையே யாருக்கும் யாதொரு கேடும் நேர்ந்து விடலாகாதே!" என்று ஒவவொரு குரங்கையும கருத்தோடு இராமன செவ்வையாகக கருதியிருந்தான ஆதலால அகத்தும் சுற்ற என்றார.

வானரங்கள் புறத்தே சூழ்ந்து இராமனைக் காத்து நிற்கின்றன; அவற்றை அகத்தே சூழ்ந்து கொண்டு இம்மான வீரன் கூர்ந்து பேணியிருக்கிறான். தாங்கள் பூண்டுள்ள அன்புரிமையும் தலைவன் ஓர்ந்துள்ள ஆர்வ நிலையும் அதிசய நீர்மைகளாய்ப் பெருகி யுள்ளன.

உரிமையோடு அன்பு செய்பவர் உயர்வான ஆர்வ நலங்களைப் பெற்றுக் கொள்ளுகின்றனர். அன்பு ஆர்வமுடைமை என்னும் மானச நீர்மைகள் இவ் வானர வீரர்களிடம் மேன்மையாக ஓங்கி விளங்கி நிற்கின்றன. உரிமையுடன் உள்ளன்பு புரிகின்றவன் பிறருடைய உள்ளங்களையும் உயிர்களையும் கொள்ளை செய்து கொள்ளுகின்றான்.

சுக்கிரீவன் மூலமாய்த் தனக்கு ஏவல் செய்ய வந்த குரங்குகள் என்று கேவலமாக எண்ணாமல் யாண்டும் ஆவலோடு இக் கோமகன் அவற்றைப் பேணி வந்திருப்பது பெருந்தன்மையைக் காணியாகக் காட்டியுள்ளது.

புறம் சுற்ற, அகம் சுற்ற, புடை சுற்ற எனத் தனித் தனியே கூர்ந்து நோக்கி அந்தச் சேனைகளையும் இந்த வீரனையும் இங்கே ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிறோம்.

கங்குற் பொழுதும் துயிலாத கண்ணன் கடலைக் கண்ணுற்றான்.

கடலைக் கண்ட இராமனை உலகம் கண்டு கொள்ளும்படி இங்ஙனம் காட்டியிருக்கிறார். மனைவியைப் பிரிந்த வருத்தத்தால் இரவும் துயிலாமல் பரிதாபத்தோடு விழித்திருந்ததை விழி தெரிய வந்தது. கங்குல் = இரவு. இராத்திரி நேரம் எல்லாரும் உறங்குதற்குரிய காலம்; ஆதலால் அந்த நிசி வேளையிலும் இந்தக் கண்ணன் கண்ணுறங்காமல் கவலை கொண்டிருந்துள்ளான்.

இராமனுடைய கண்கள் தாமரை மலர்கள் போன்றன. அம் மலர்கள் இரவில் இதழ்கள் மூடிக் குவிந்திருத்தலும் பகலில் மலர்ந்து விரிந்து நிற்றலும் இயல்பு.

தமக்கு இனமாய் ஓரளவு ஒப்பாயிருந்த தாமரைகளும் அமைதியுடன் உறங்கியிருக்க இக் கோமகன் கண்கள் யாதும் துயிலாமல் அவலமடைந்திருந்தனவே! என்று கவலையுடன் கவி இங்கே இரங்கி யிருக்கிறார். காவிய நாயகனுடைய சோக நிலையை யாண்டும் ஞாபகமாய் நினைந்து உருகி வருகிறார்.

தேவியைப் பிரிந்து ஆவி அலமந்து கங்குலும் கண் துயிலாமல் கடுங் கவலையோடு இருந்த இரகு வீரன் அருந்திறலோடு அடாந்து நீட்டாந்து கருங்கடலை வந்து கண்டு நின்றான்.

தன் எதிரே இவ்வாறு வந்து நின்ற கார் வண்ணனைக் கண்டதும் கடலின் அதி தேவதை பெரு மகிழ்ச்சி அடைந்தது. பெருமான் மீளவும் தன் மேல் பள்ளி கொண்டருளுவான் என்று உள்ளம் களித்துப் பாயலை உதறி விரித்தது போல அலைகளைக் கொழித்து நின்றது. முன்னம் படுத்திருந்த பாயை உதறும் போது மலர்களும் முத்துக்களும் அயலே சிதறி விழுவது போல நுரைகள் திரைகளிலிருந்து புடையே துள்ளி வீழ்ந்தன.

சங்குகளும் சிப்பிகளும் எங்கணும் தரளங்களை உமிழ்ந்திருந்தன் அலைவாய்க் கரையில் ஒதுங்கிக் கிடந்த முத்துக்களைக் கண்டதும் இராமன் உள்ளம் உருகி மறுகினான். சீதையின் பல்லுகளைப் போல அவை தோன்றி நின்றன ஆதலால் இத தோன்றலுக்கு எல்லையில்லாத சோகங்கள் தோன்ற நேர்ந்தன.

சிவந்த பவளக் கொடிகளை அங்கே பார்த்தான் பார்க்கவே சீதையின் செவ்வாயிதழை நினைந்து இனைந்து நெஞ்சம் கரைந்தான். நன்கு சுவைத்துச் சுகித்தவன் ஆதலால் அச் சுவையின் நினைவு உயிரை வதைத்திருக்கிறது.

படி ஏழும் தலை மேல் கொண்ட கற்பினாள்.

எனச் சீதையை இங்கே கவி இப்படிக் குறித்துக் காட்டியிருக்கிறார் படி = உலகம் ஏழு உலகங்களும் தலை மேல கை கூப்பித் தொழுது துதிக்கின்ற விழுமிய கற்பரசி என்றது பிராட்டியின் அற்புத நிலையை உய்த்துணர வந்தது

அந்தப் பதிவிரதையின் உருவ எழிலும் பிரிவுத் துயரும் இப் பெருமானுடைய உள்ளத்தை உருக்கி யிருக்கின்றன. கண்ணை நினைந்தும் வாயை எண்ணியும் பல வரிசையைக் கருதியும் சொல்லை உன்னியும் உள்ளம் உருகியுள்ளது.

தூரம் இல்லை மயில் இருந்த சூழல் என்று மனமசெல்ல
வீர வில்லி நெடுமானம் வெல்ல நாளும் மெலிவான

சீதை இருக்கும் இடத்தை நெருங்கி விட்டோம்; கடல் கடந்தவுடன் நேரே கண்டு கொள்ளலாம் என்று உள்ளம் அவா

விதமுன்னுகிறது; மனம் அங்ஙனம் ஆவலூர்ந்து களிக்கும்பொழுது மானம் கொதித்தெழுந்து அதனை வாட்டி வதைக்கின்றது.

"தன் பெண்டாட்டியைப் பிறன் கவர்ந்து போனானே!" என்ற மானக் கொதிப்பு இவ்வீரக் குலமகனுடைய உள்ளத்தை நாளும் நீள எரித்துவருகிறது ஆதலால் நெடுமானம் என நேர்ந்தது.

கொடிய அவமானத்தை நினைந்து நினைந்து உள்ளம் கவன்றுள்ளமையால் உடல் மெலிந்து படலாயது நாளும் மெலிவான் என்றதனால் இந்த அழகனுடைய அவல நிலையை அறிந்து கொள்ளலாம். விழி துயிலாமல் அழி துயரடைந்துள்ளான்

யாண்டும் பழிபடாத சிறந்த குல வீரன் ஆதலால் ஈண்டு நேர்ந்த இழிபழி உள்ளத்தைக் கருக்கி உடலை உருக்கி உணர்வைக் கரைத்து உயிரை வருத்தியுள்ளது

மனம் செலல
மானம் வெலல

என்றது இங்கே ஊன்றி உணரவுரியது

பிரிந்த மனைவியை விரைந்து காணலாம் என்று மனம் நினைந்து மகிழ்ந்தது, அது அங்ஙனம் மகிழவே மானம் அதனை நோக்கி இகழ்ந்தது, பிரிவு நிலையில் பரிபவமாயுள்ளவளைக் காண விழைவது பிழை, அப் பதிவிரதையைப் பிரித்த கொடிய பாவியை அடியோடு அழித்து ஒழித்தபின் வெற்றித் திறலோடு காணவுரியவளை வீணே காண வேண்டும் என்று காதல் கொண்டுழல்வது பெரிய பிழையாம் என அரிய கடமைகளைக் குறித்துக் காட்டி உரிமையுடன் மானம் உருத்து நின்றுள்ளது

அந்த உள்ளப் போராட்டங்களின் உளவு தெரிய வந்தது.

துட்ட நிக்கிரகம், சிட்ட பரிபாலனம்.

என்றபடி தீமை செய்த இராவணனை முதலில் தொலைத்து ஒழித்து அதன் பின்பே சீதையைப் பேண வேண்டும் என்று மானம் இங்கே மனத்துக்கு நீதி போதித்திருக்கிறது.

ஆசை கொண்ட மனம் ஆவலாய் ஓடுகின்றது.

ஆண்மை கொண்ட மானம் பேராண்மையாய் வீறு மண்டி நிற்கின்றது. காதலும் வீரமும் நேரே தொழில் புரிந்துள்ளன.

மன நிலையும் மான நீர்மையும் இனிமையாய் ஈண்டு எண்ண வந்தன. மானச தத்துவங்கள் மதிநலம் சுரந்து விசித்திர கதிகளில் விளைந்திருக்கின்றன. தன்னலம் கருதாமல் கடமையைக் கருதிச் செய்து கரும பலனை மருவ வேண்டும் என்னும் மருமம் ஈண்டு வெளிப்பட்டுள்ளது.

வீர வில்லி என இராமனை இங்கே அழகாக விளக்கியிருக்கிறார். தன் தாரத்தைக் கவர்ந்து போன இராவணனைப் போரில் வென்று அரக்கர் குலத்தை வேரறுக்க வில் ஏந்தி வீர கம்பீரமாய் வந்து நிற்கின்றான் ஆதலால் அந்த நீர்மை நிலைமைகளை நினைந்து காண இங்ஙனம் வனைந்து கூறினார்.

கொடியேன் தந்த பாவை தவப்பாவை தனிமை தகவோ?

இராமனை நோக்கிக் கடல் இப்படிப் பரிவோடு வினவியிருக்கிறது. இலட்சுமி கடலில் தோன்றினாள், அந்தத் திருவின் அவதாரமாயச் சீதை பிறந்துள்ளாள் ஆதலால் தான் தந்த பாவை எனக் கடலரசி தனியுரிமை பாராட்டினாள். தனது அருமை மகளை மணந்து கொண்டு இராமன் உவந்து வாழ்ந்தான், இடையே பிரிந்து விட்டான், அந்தப் பிரிவுத் துயரோடு தன்பால் மறுகி வந்துள்ள மருமகனைப் பார்த்து மாமியார் இவ்வாறு துயர் கூர்ந்து மொழிந்தாள். தன்னுடைய செல்ல மகளை அயலே அல்லலடைய விட்டு இதுவரை தாமதித்திருந்தது கொடிய தவறு, முன்னமே விரைந்து வந்து மீட்டியிருக்க வேண்டும், இப்படி நாளைக் கடத்தி நின்றது நீதியாகாது எனத் தன் மகளுக்காகத் தாய் மறுகி வேண்டிய படியாய் இது மருவி வந்துள்ளது.

அருமையாகப் பெற்று வளர்த்துப் பேணிக் கொடுத்த மகளை இழந்து விட்டுப் பரிதாப நிலையில் தனியே வந்து துனி கூர்ந்து நிற்கின்ற மருமகனை நோக்கி மாமியார் மறுகிப் புலம்பியுள்ளது உறவுரிமைகள் சுரந்து பரிவும் பாசமும் பெருகி உலக உள்ளங்களைக் கரையச் செய்திருக்கிறது.

சிந்துகின்ற நறுந்தாரைக் கண்ணீர் ததும்பித் திரைத்தெழுந்து
வந்து வள்ளல் மலர்த்தாளின் வீழ்வதேயக்கும் மறிகடலே

இந்தக் காட்சியைக் கொஞ்சம் கண்ணூன்றிப் பாருங்கள். இராமன் அலைவாய்க் கரையில் நிற்கின்றான், அந்த நிலையில்

இக் குலமகனுடைய அடிகளில் வந்து பாய்ந்து அலைகள் தோய்ந்து போகின்றன. அந்த இயற்கை நிலையைக் கவி அற்புதமாகக் கற்பனை செய்து காட்டியிருக்கிறார்.

தன் மகளை மணந்துகொண்ட மணமகன் அவளை இழந்து விட்டுத் தனியே வந்து நிற்கிறானே! என்ற துயர மிகுதியால் ஓ! என்று அலறிக் கண்ணீர் சொரிந்து அழுது காலில் விழுந்து புலம்பியது போல் கடல் அலைகள் இராமன் அடிகளைத் தழுவி நின்றன எனக. முத்துக்கள் கண்ணீர்த் துளிகளாகவும், அலையோசைகள் அழுது புலம்பலாகவும் அமைந்திருந்தன.

வள்ளல் என்றது உள்ளதையெல்லாம் உவந்து உதவி எவர்க்கும் துயரத்தை நீக்கியருளும் சக்கரவர்த்தித் திருமகனிடம் கடல் இங்கே துக்கம் கூர்ந்துள்ள தொடர்பு தெரிய வந்தது.

உரிய அரசை இழந்தும், உற்ற மனைவியைப் பிரிந்தும், அல்லல் பல அடைந்தும், எல்லை கடந்து வருவதெல்லாம் உலகத்திற்கு நல்ல உதவி செய்யவே ஆதலால் அந்த உபகார வுண்மையையும் உயரிய வண்மையையும் நுண்மையாக வுணர்ந்து கொள்ள வள்ளல் என்னும் பேரை ஈண்டு வழங்கி யருளினார்.

கொங்கைக் குயில் என சீதையை இங்கே சுவையாகக் குறித்திருக்கிறார். செந்நிறத் திருமேனியளைக் கருநிறக் குயில் என்று கூறியது பேசி வருகிற சொல் இனிமை கருதி.

கருங்குயில் வண்ணன் மருங்கு பயின்றிருந்தமையால் செந்நிறமும் கருநிறமாய் மருவி மிளிர்ந்துளது எனக் கருதி மொழிந்துள்ளார். இராம சிந்தனையால் செந்திருவும் கருந்திருவாய்ப் பொலிந்து விளங்கியது.

வெங்கைச் சிலையன, தூணியினன.

என அந்த அழகனுடைய வீரக் கோலத்தை இந்த விழுமிய மொழிகளால் இங்ஙனம் நமக்கு விளக்கிக் காட்டியிருக்கிறார்.

சீதையைச் சிறை மீட்டுத் தேவரைத் துயர் நீக்கி நல்லோர் யாவரையும் காத்தருள வில் ஏந்தி அம்பு தாங்கி வெளியே வந்துள்ளான் ஆதலால் அவன் வரவு நிலையின் உறவும் உறுதியும் தெரிய வந்தது. வீர அழகு வெற்றி விளைய விழைந்து நிற்கின்றது.

இராமனைக் கண்டு பெரு மகிழ்ச்சி கொண்டு கைகளை மேலே தூக்கி அசைத்து ஆரவாரித்து அழைத்தது போல் அலைகளை வீசிப் பலவகையிலும் இன்பநிலையமாயக் கடல் அன்புபுரிந்து நின்றது. முன்பு மருவியிருந்த உரிமைகள் உவகை சுரந்துள்ளன.

இத்தகைய காட்சியைக் கண்டு உவகையடைந்து படைகளை அமர்த்தி இராமன் அங்கே அலைவாய்க் கரை அருகே தலைமையாய் அமர்ந்திருந்தான்.

தன்னைத்தாய் நெடுமானம் துயரம் காதல் இவை தழைப்ப

என்றது இராமன் அதுபொழுது மருவியிருந்த நிலைமை தெரிய வந்தது. மானச் சொறிப்பு, பிரிவுத் துயரம், வினையின் அயர்வு, மனைவியின் நினைவு இன்பாய உள்ளே குடிபுகுந்துள்ளன.

பகைவனைக் கொன்று தொலைக்கப் படையெழுச்சி செய்து கடல் அயலே வந்து இக்கோமகன் இங்ஙனம் தங்கியிருந்தான்.

கடலின் காட்சியை மாட்சியாகக் குறித்து வந்துள்ள இந்தப் பாசுரங்கள் உயர்ந்த முறையன; எந்த மொழியிலும் எத்தகைய காவியங்களிலும் காணமுடியாத கலையின் சுவைகளை இவை காட்டியிருக்கின்றன. சொல்லும் பொருளும் தொனிகளும் பல வழிகளிலும் எழில் ஒளி வீசி இன்ப நலங்கள் சுரந்துள்ளன. மெய்ப்பொறியாளரும் வியந்து புகழும்படி செம்மை நீர்மைகள் செறிந்து உண்மையுணர்வுகள் மிளிர்ந்து நிற்கின்றன.

"Roll on, thou deep and dark blue Ocean roll!
Ten thousand fleets sweep over thee in vain,
Man marks the earth with ruin-his control
Stops with the shore" (Byron)

"ஆழ்ந்து விரிந்துள்ள கரிய நீலக் கடலே! நீ அலைகளை ஓயாது வீசுக! பதினாயிரக் கணக்கான கப்பல் கூட்டங்கள் நாளும் உன்மேல் வீணே ஓடிக் கொண்டிருக்கின்றன, மனிதன் பூமியைப் பழுது படுத்தியிருக்கிறான், அவனுடைய அதிகார ஆற்றல்கள் உன்பால் செல்லா, அலைவாய்க் கரையோடு அவனை நிலையாய் நிறுத்தியிருக்கிறாய்!" என பைரன் என்னும் ஆங்கிலக் கவிஞர் கடலைக் குறித்து இங்ஙனம் பாடியிருக்கிறார்.

"Alone, alone, all, all alone,
Alone on a wide, wide sea" (S. T. Coleridge)

"எல்லாம் தனியாய எங்கும் ஏகாந்த வெளியாய்க் கடல் விரிந்து பரந்துள்ளது" என இது குறித்திருக்கிறது. இன்னவாறுன நிலைகளிலேயே கடலின வருணனைகள வந்துள்ளன. அவ்வுறை இந்தக் காவியப் பகுதியோடு எதிர் நோக்கின கடலின் எதிரே சிறு குட்டங்கள் போல சிறுமை யுறுகின்றன.

இந்தக் கடல் காண் படலம் தெய்வ மணம கமழ்ந்து, தத்துவ நலங்கள் சுரந்து, புத்துணர்வுகள் பொலிந்து, கலையின சுவைகள் கனிந்து, கற்பனைக் காட்சிகள் விரிந்து, அதிசயமான அற்புத நிலைகள் யாண்டும் பரந்து, 'விதிமுறைகள் பெருகி, விழுமிய நெறிகள் மருவி, எங்கும் அழகொளிகள் வீசி, எவ்வழியும் இன்ப விளைவுகள் பொங்கி விளங்குகின்றது

இந்த நீர்க்கடலைக் குணக்கடலாகிய இராமன கண்டான் ஆதலால் இரு பெரு நீர்மைகளையும் கவி ஒரு முகமாய் உவந்து கூற நேர்ந்தார். கடலின காட்சியில் கண்ணுானறவே கருத்துக்கள் கடலமடை திறந்த வெள்ளம போல பெருகி வந்துள்ளன.

இன்னதாய கருங்கடலை எய்தி என்றது முன்னம சொன்னவைகளையெல்லாம உன்னியுணர வந்தது. எண்ணங்களை வளர்த்து வருவது இனிய கலையாய்த் தழைத்து வருகிறது. உலகில இயற்கையாய்க் கிடந்த சலக கடல் காவியத்தில கலைக் கடலாய்க் கவித் தெழுந்துள்ளது. கவியின காட்சி உணர்வின சுவைகளாய ஒளி புரிகின்றன.

இராமன காண நேர்ந்தமையால கடல இவ்வாறு மகிமை பூண நேர்ந்தது. இராம தரிசனம யாருக்கும அரிய பல மேன்மைகளை அருளி வருகின்றது

மேல விளைவு என்னது ஆகும் என்று இராமன இருந்தான.

கருங்கடலின மருங்கு வந்திருந்த அந்த அருந்திறலாளனுடைய மன நிலைகளைக் கவி இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார்.' வினையாண்மைகள நினைவில நிகழ்ந்துள்ளன.

படைகளோடு இலங்கைக்குச் செலல வேண்டிய வகைகளை எல்லாம கருதிக் காரிய ஆலோசனைகளை வீரியமாய்ச் செய்து கொண்டிருந்தான் ஆதலால் அந்தச் செயலும் இயலும் தெரிய வந்தது. கரும வீரங்கள் கருத வந்தன,

பெரிய போர் வீரன் அரிய கருமக் காட்சிகளை மருமமாய் மருவி யிருக்கின்றன. போர் முறைகளில் கைதேர்ந்த உயர்ந்த இராசதந்திரி ஆதலால் நேர்முகமாய் எதிர்ந்துள்ள நிலைகளை யெல்லாம் இக் குலமகன் கூர்ந்து ஓர்ந்து குறிக்கொண்டுள்ளான்.

அன்பு நலம் கனிந்த தனது அருமைத் தம்பியும் உரிமை நண்பர்களும் உற்றுள்ள சேனைகளும் ஒருங்கே புடைசூழ இவ் வெற்றி வீரன் ஆண்டு விளங்கி யிருந்தான்.

பின்னர் தாய காரியமும் நிகழ்ந்த பொருளும் பேசுவாம்.

கவி கதையை நடத்திச் செல்லும் நிலையை இங்ஙனம் காட்டியருளினார். சரிதப் போக்கும் நோக்கும் உவகை நலங்களை ஊட்டி வருகின்றன. காவிய நடை சீவிய ஓவியமாய்த் தெளிந்து செல்லுகின்றது. மானச் சீர்மைகள் யாண்டும் சீர்மையாய்ச் சிறந்து செவ்வி நிறைந்து திகழுகின்றன.

தம்முடைய காவிய நாயகனை வானர சேனைகளோடு கொண்டு வந்து தென்கடலின் அருகே சேமமாக வைத்து விட்டு மேலே எதிரியினுடைய நிலைமைகளைக் கவி கூற நேர்ந்துள்ளார். இவரது ஓவிய சீர்மை உலகம் மகிழ ஒளி புரிந்துளது.

காரியமும் பொருளும் பேசுவாம்.

என்றது தாம் பேசப் போவதை நாம் யோசனையுடன் ஓர்ந்து கொள்ள வந்தது. சொல்வகை பொருள் நிலைகளைத் துலக்கியது. உள்ளத்தைத் தட்டி எழுப்பி உயர்ந்து செல்கிறார்.

அனுமான் தீயைக் கொளுத்திவிட்டு மீண்ட பின்பு இலங்கையில் நடந்த செயல்களையும், இராவணன் புரிந்த மந்திராலோசனைகளையும் பின்பு நிகழ்ந்தவைகளையும் முறையே கூறப் போகிறார் ஆதலால் அக் குறிப்புகளைச் சிறப்பாகக் குறித்து அருளினார். முன்னுரை இன்னுரையாய் எழில் சுரந்துள்ளது.

தொகுத்துச் சுட்டி வகுத்துக் காட்ட வருவதில் கவியினது இராச கம்பீரம் எழில் ஒளி வீசி விழி தெரிய வந்தது.

## இலங்கை புதிதாய்த் துலங்கியது.

இராம தூதனான அனுமான் இலங்கையை எரித்து வந்த பின் அந்நகர் பரிதாப நிலையில் மறுகியிருந்தது. தீ மூண்டெழுந்த

பொழுது மனைவிகளோடு விமானத்தில் ஏறி ஆகாயத்தில் ஒதுங்கி யிருந்த இராவணன் மீண்டு வந்து ஊரை நோக்கினான், உள்ளம் கொதித்தான்; நிலைமைகளை நினைந்து எள்ளி நகைத்தான். உடனே தெய்வத் தச்சனை வரும்படி பணித்தான் அவன் வந்து வணங்கி நின்றான். மந்திர முறையோடு பிரமனையும் கருதினமையால் அவனும் வந்தருளினான். நகரைப் பழையபடி அழகாக ஆக்கி யருள வேண்டும் என்று பிதாமகனை உரிமையோடு தொழுது வேண்டினான். தேவ சிற்பியை ஆவன செய்யும்படி அயன் தூண்டினான் சிருட்டி கர்த்தாவின் திருவருளை முன்னிட்டு விசுவகருமா அதிசய விநோதமாக இலங்கையை விரைந்து படைத்தான். அரிய அரண்மனைகளும் பெரிய மணிமாடங்களும் இனிய பூங்காவனங்களும் அகன்ற இராச வீதிகளும் யாண்டும் எழில் ஒளிகளை வீசி விழுமிய நிலைகளில் நகரம் மீண்டும் அரிய பல மகிமைகளோடு நீண்டு விளங்கி நிலவி நின்றது.

## இராவணன் உவந்தது.

எரிந்து கரிந்து இழிந்து கிடந்த இலங்கை சிறந்த தேவ லோகங்களும் வியந்து விழைந்து காணும்படி எவ்வழியும் திவ்விய சோதிகளை வீசி எழில் மிகுந்து விளங்கி நிற்பதை அரக்கர் வேந்தன் கண்டு அதிசயம் மீதூர்ந்து மகிழ்ந்து கொண்டான். தீயால் பாழான தனது நகரம் மீளவும் பொன்னொளி வீசி மேன்மையோடு அழகு சுரந்துள்ளதைக் கண்டதும் அவனுடைய உள்ளக் கொதிப்பெல்லாம் மாறியது, உவகை வெள்ளம் பொங்கி நின்றது.

> பொன்னினும் மணியினும் அமைந்த பொற்புடை
> நன்னகர் நோக்கினன் நாகம் நோக்கினான்
> முன்னையின் அழகுடைத் தென்று மொய்கழல்
> மன்னனும் உவந்துதன் முனிவு மாறினான்

எரியால் மாண்டுபட்ட இலங்கை மீண்டு புதிதாய்த் தோன்றி யுள்ளதைப் பார்த்து இராவணன் களித்து நின்ற நிலையை இது காட்டியுள்ளது. தேவ நகரங்கள் எவற்றினும் தன் நகர் தனி மகிமையடைந்துள்ளதாக அவன் நனி மகிழ்ந்துள்ளான். இந்திரன் நகரமாகிய அமராவதியையும், குபேரன் பட்டணமான

அளகாபுரியையும் இலங்கையோடு இணைத்து எதிர் நோக்கி உவமை நீங்கியது என அவன் உவந்திருக்கிறான்.

நன்னகர் நோக்கினான் நாகம் நோக்கினான்

அன்று அவன் நோக்கி நின்ற நிலைமையை என்றும் எவரும் நோக்கி மகிழ்க் கவி இங்ஙனம் காட்டியிருக்கிறார். தனது இராசதானிக்கு நிகராக அமரருலகங்களிலும் யாண்டும் இல்லை என அவனுடைய உள்ளத்தில் மிகவும் உவகை மண்டியுள்ளது. நாகம் = விண்ணுலகம். தன்னிகரில்லாத தனி ஆட்சி செலுத்தி வருதலால் அதற்குத் தக்க மாட்சியில் ஊரையும் அவன் சீர் தூக்கி நோக்கினான். ஒப்புக் காணப்பதில் மனிதனுக்கு ஓர் உவகையுள்ளது என்னும் நுட்பம் ஈண்டு உணர வந்தது. பிறருடையதிலும் தன்னுடையது பெரிது என்று எண்ணுவதில் மனிதன் பெரிய மகிழ்ச்சியை அடைகிறான். அயலை நோக்கி அளவு கண்டு களிக்கும் செயல் மானிட இயல்பாய் மருவியுள்ளது. அந்த மானச மருமம் இங்கே இராட்சச வேந்தனிடமும் வெளியாய் நின்றது.

காரில் உலாசமாயச் செல்லுகின்ற செல்வன் தெருவில் நடந்து போகிறவர்களைக் காணும்பொழுதுதான் களிப்பு மிக அடைகிறான். பிறரோடு அளவு கண்டு உளம் மிக மகிழும் பித்தம் மனித சித்தத்தில் வித்தக விநோதமாய் விரிந்துள்ளது.

இத்தகைய நிலையில் இராவணன் இந்திரன் நகரையும் தன் நகரையும் இணைத்து நோக்கி இன்பம் மிகப் பெற்றான்.

முன்னையின் அழகுடைத்து என்று முனிவு மாறினான்

புதிதாய் அமைந்த இலங்காபுரியைப் பார்த்து மன்னன் இன்னவாறு மகிழ்ந்திருக்கிறான். குரங்கு வந்து சுட்டுப் போனது ஓரளவு நல்லது ஆயதென அவன் உள்ளம் உவந்துள்ளமை உணர வந்தது. போந்த தீ என்பது இங்கு அறிய நின்றது.

எரியுண்ட பழைய இலங்கையினும் இதுபொழுது கண்ட புதிய நிலை அதிக அழகுடையது என அதிபதி வியந்து மகிழ்ந்திருத்தலால் அளவிடலரிய எழில் நலங்களோடு அற்புதம் ஒளி நிறைந்துள்ளமை தெளிவாய் நின்றது.

தேவரும் அஞ்சி அடங்கி ஏவல் புரிகின்ற தனது இராசதானியில் ஒரு குரங்கு அஞ்சாமல் புகுந்து தீயைக் கொளுத்திப்

போயதே! என உள்ளம் கொதித்திருந்தான்; அந்தக் கொதிப்பு இப்பொழுது நீங்கி அவன் உவப்பு மீதூர்ந்திருத்தலால் முனிவு மாறினான் என்றார். முனிவு மாறியதும் கனிவு மீறியதும் இனிய நகரின் எழுச்சியால் எழுந்தன.

கோபதாபங்கள் தீர்ந்து உவகை மீதூர்ந்து நின்ற மன்னன் பிரமதேவரை வணங்கிப் பூசித்தான். அவர் ஆசி கூறி அகன்று போயினார். அதன்பின் தெய்வத் தச்சனுக்குச் சிறந்த சன்மானங்களை அளித்து அவனைப் புகழ்ந்து அனுப்பினான்.

புதுமையாய் அதிசய சோதி வீசியுள்ள நகரம் முழுவதையும் ஒரு முறை விமானம் மீதூர்ந்து பார்த்து உவகை மீக்கூர்ந்து வந்தான். வேண்டிய காவல்கள் யாண்டும் நீண்டு நின்றன.

## மந்திராலோசனை

ஊரின் சீரை நோக்கி உவந்தவன் உரிய காரியங்களை விரைந்து செய்ய நேர்ந்தான். ஆட்சி முறைகளை ஆலோசித்தற்குரிய இராசசபை அதிசய மாட்சியாய் அமைக்கப்பட்டிருந்தது. பொன்னும் மணிகளும் எவ்வழியும் மின்னி விளங்கத் திவ்விய நிலையில் சிறந்திருந்த அந்த மணி மண்டபத்தின் இடையே உயர்ந்த சிங்காசனத்தில் இராவணன் அமர்ந்திருந்தான். மந்திரிகள் சேனாதிபதிகள் முதலிய உரிமையாளர் யாவரும் விநயமாய் வந்து அரசை வணங்கி அமர்ந்தனர். தம்பியரும் மக்களும் முன் வரிசையில் இரு பக்கங்களிலும் எதிரே இருந்தனர். நெருங்கிய உறவினரைத் தவிர வேறு எவரையும் அங்கே வரவிடவில்லை. பகை வகையினர் என்று கருதித் தேவர்கள் யாவரையும் அயலே ஒதுக்கி விட்டனர். அந்த ஆலோசனை மண்டபத்தைச் சூழ்ந்து நாலு திசைகளிலும் பெரிய போர் வீரர்கள் காவலாய் நின்றனர்.

அரிய அரச காரியங்களைக் குறித்துத் தங்கள் சக்கரவர்த்தி அதி இரகசியமாய் ஆலோசிக்க நேர்ந்துள்ளமையால் அயல் எவரும் அணுகி அறியாவண்ணம் அரக்க வீரர்கள் யாண்டும் நுணுகிக் காத்து அடலாண்மைகளை ஆற்றி வந்தனர்.

உற்ற சுற்றத்தார் மாத்திரம் உள்ளே புகுந்திருந்தனர். தன் வாழ்நாளில் இவ்வாறு சோகமான ஆலோசனையை இராவணன் செய்ததில்லை. யாண்டும் வெற்றி வீறோடு வாழ்ந்து வந்தவன்

ஈண்டு நேர்ந்துள்ள அழி துயர்களையும் இழிபழிகளையும் குறித்து உரிமையாளர்களிடம் உளவுகள் உரைத்து அளவளாவி ஆராய மூண்டுள்ளமையால் அவசியமாய் வேண்டியவர்களை மட்டும் ஆண்டு அழைத்துக் கொண்டான்.

*பண்டிதர் பழையவர் கிழவர் பண்பினர்*
*தண்டலின் மந்திரத் தலைவர் சார்கெனக்*
*கொண்டனன் இருந்தனன் கொற்ற ஆணையான்*
*வண்டொடு காலையும் வரவு மாற்றினான்* (1)

*ஆன்றமை கேள்வியர் எனினும் ஆண்டொழிற்கு*
*ஏன்றவர் நண்பினர் எனினும் யாரையும்*
*வான்துணைச் சுற்றத்து மக்கள் தம்பியர்*
*போன்றவர் அல்லரைப் புறத்துப் போக்கினான்.* (2)

*திசைதொறும் நிறுவினன் உலகு சேரினும்*
*பிசைதொழில் மறவரைப் பிறிதெனப் பேசுவ*
*விசையுறு பறவையும் விலங்கும் வேற்றவும்*
*அசைதொழில் அஞ்சின சித்திரத்தினே* (3)

இலங்காதிபதி மந்தணமாய் மந்திரம் புரிந்துள்ள நிலைகளை இந்தக் கவிகள் காட்டியுள்ளன. அந்த ஆலோசனை மண்டபத்தின் அருகே அந்நியர் யாரும் அணுகாதபடி வீரர்கள் வேல்களோடு வீறு கொண்டு நின்றுள்ள நிலையை நேரே கண்டவர் நெஞ்சம் கலங்கி அஞ்சி அகன்றனர். வண்டுகளும் பறவைகளும் விலங்குகளும் அசையாமல் அச்சமடைந்து சித்திரப் பதுமைகளைப் போல அடங்கி ஒடுங்கி நின்றன.

காலையும் வரவு மாற்றினான்.

என்றது இராவணனது அதிகார ஆற்றலை அளந்து காண வந்தது. கால் = காற்று. யாண்டும் எளிதே புகுந்து உலாவவல்ல காற்றும் ஆண்டு அணுகாமல் அயலே செயலிழந்து நின்றது.

பஞ்ச பூதங்களும் இலங்கை வேந்தனுக்கு அஞ்சி நடக்கும் பான்மையை இங்கே நெஞ்சம் தெரிய விளக்கினார்.

இன்னவாறு சுற்றும் பாதுகாப்புச் செய்து சுற்றத்தார் மந்திரிகள் முதலிய துணைவர்கள் புடை சூழ வெற்றி வீறுடன் அரியணையில் இராவணன் அமர்ந்திருந்தான். கண்களுக்குப்

பெரு விருந்தான அழகிய மங்கையர் இரு மருங்கும் வெண் சாமரைகளை விநயமாக வீசி நின்றனர்.

அரம்பையர் கவரியோடு ஆடும் தாரினன்.

சிங்காசனத்தில் வீற்றிருக்கிற இராவணனை இங்ஙனம் காட்டியிருக்கிறார். தேவ மங்கையர் ஆவலோடு ஏவல் செய்கின்றனர். அவர் ஒயிலாய் நின்று கவரிகளை வீசுகின்றனர். அதில் இருந்து எழுகின்ற மெல்லிய காற்று மன்னனுடைய மார்பில் அணிந்துள்ள மலர் மாலைகளை அசையச் செய்கின்றன. அந்தச் செயல் இயல்களைத் துலக்கி அவனது இன்பச் சிறப்பையும் அதிசய மாட்சியையும் இங்கே சுவையாக விளக்கியருளினார்.

தனது மந்திராலோசனையை எந்த அளவும் யாரும் அறியலாகாதென்று தேவர் யாவரையும் அயலே ஒதுக்கினன். அந்த மரபின் மங்கையர் சொந்தமாய ஊழியம் புரிவதுபோல் உள்ளே புகுந்து எல்லா இரகசியங்களையும் கேட்டு நின்றனர்.

தேவ சாதியைச் சேர்ந்தவன் ஆதலால் வாயுவையும் வரலாகாது என்று வரம்பு செய்திருந்தான். அவ்வாறு அவன் செய்திருந்தாலும் கவரி வழியே கால் புகுந்து அங்கே நிகழ்வதை நன்கு கேட்டுள்ளது. அரக்க இரகசியங்களைத் தேவ ரகசியம் நுணுகியறிந்து இனிது தொழில் புரிந்து வருகிறது.

## மன்னன் பேசியது

தன்னுடைய ஆட்சியில் நேர்ந்துள்ள அவல நிலைகளைக் குறித்து மந்திரிகளிடம் இராவணன் முதலில் விளக்கிக் கூறினன் "அன்புடையீர்! இப்பொழுது இங்கே நாம் கூடி ஆராய வந்துள்ளது போல எப்பொழுதும் நேர்ந்ததில்லை. அரிய பெரிய தேவ காரியங்களும் எளிதே நடந்து வர ஒளியோடு நீண்ட காலமாக நாம் உலகை ஆண்டு வந்துள்ளோம். இடையே ஈண்டு ஓர் இழிவு மூண்டது. அந்த இழி நிலையைக் குறித்து நாடி அறிய இன்று இக் கூட்டம் இங்கே கூடியுள்ளது. யாண்டும் வெற்றி வீறோடு விளங்கி வந்த வீர அரசு உற்ற பழியை நாணி உள்ளம் வருந்தி உறவினரிடம் உரையாடி முறை ஆற்ற நேர்ந்தது" என இன்னவாறு முன்னதாகச் சிறிது முகவுரை மொழிந்து பின்னர் பேச நேர்ந்தான். பேச்சில் மானத் துடிப்பும் வீரக் கொதிப்பும் மீறி எழுந்து வீறிட்டு வந்தன.

சுடடது குரஙகுஎரி கூறை யாடடக
கெடடது கொடிநகா, கிளையும நணபரும
படடனா, பரிபவம பரநதது எஙகணும
இடடுஇவ அரியணை இருநதது எனனுடல (1)

ஊறுகினறன கினறு உதிரம, ஒணணகா
ஆறுகினறிலது அனல, அகிலும நாவியும
கூறுமஙகையா நறுங கூநதலின சுறு
நாறுகினறது நுகாநதிருநத நாமெலாம (2)

மறறில தாயினும மலைநத வானரம
இறறில தாகியது எனனும வாாததையும
பெறறிலம பிறநதிலம எனனும பேரலால
முறறுவது எனனினிப பழியின மூழகினும, (3)

இராவணனுடைய வாய மொழிகள இவவாறு வெளி வந துளளன மனக் கடுபபும சினக குறிபபும மானக கொதிப்பும உரைகள தோறும ஓஙகி நிறகினறன இழிநத ஒரு விலங்கால் இலஙகை கலஙகி அழிய நோநததே! எனற கவலை அவனுடைய உளளததை மிகவும வாட்டியுளளது.

குரஙகு சுடடது, எரி கூறை ஆடட நகா கெடடது

தீயால விளைநதுளள கேடுகளை இபபடிச சுடடிச் சொல்லி யுளளான சினன ஒரு குரஙகு வைதத தீயால பெரிய இராச தானி முழுவதும நாசமாயது, நாமும மீசைகளை முறுக்கி உயர்ந்த போா வீராகளாய இஙகே யோசனைகளைச செயய வநது கூடி யிருககிறோம எனறு சிநதை நொநது இநதவாறு கூறியிருககிறான். அகில உலகங்களும அஞசி ஒடுஙகுமபடி எனறும ஆணை செலுததி வநத நான இனறு ஒரு கோணக குரஙகால மானம அழிநதவனாய இஙகே மநதிரிகளோடு பேச வநதிருககிறேன எனப பெருஙகவலையோடு பேசசை அவன தொடஙகியுளள மையை இதில நாம காடசியாய அறிநது கொள்ளுகிறோம். அடலாணமைகளை யிழந்து அவமானஙகளை அடைநதிருககிறோம் என உளளம நொநது பேசுகினறமையால உரைகள எளள லோடு இணைநது வநதன.

என உடல இவ அரியணை இருநதது.

எவ்வளவு மன வேதனையோடு அவன் வாயிலிருந்து இந்த வார்த்தை வந்துள்ளது! சிந்தனை செய்து பார்க்க வேண்டும். தன்னுடைய ஊரும் பேரும் அரசும் குலமும் ஒரு குரங்கால் இழிந்து அழியத் தான் உயர்ந்த ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பது பெரிய மானக்கேடாம் என் றுறுகியிருக்கிறான். உடல் என்றது உயிர் அற்ற சவம் எனக் குடல் கொதித்துக் கூறிய படியாய் வாய்மொழி மனக் கொதிப்பை வெளிப்படுத்தியது.

காட்டுக் குரங்கால் பங்கம் அடைந்துள்ள நான் உயர்ந்த சிங்கம் சுமந்த அணைமேல் சிறந்த வேந்தனாய் அமர்ந்திருக்க வேண்டுமோ? எனத் தன் நிலைமையை இகழ்ந்து மொழிந்திருக்கிறான். மான வீரங்கள் மறுகி நிற்கின்றன.

வேறு அரிய காரியங்களை யாதும் செய்யாது ஒழியினும் நம் ஊரைச் சுட்ட குரங்கைக் கொன்று தொலைத்தோம் என்ற அந்தப் பேரைக் கூடப் பெற்றிலோம் என்றால் நாம் உயிரோடு வாழ்ந்திருப்பது மிகவும் ஈனமேயாம் எனத் துயரோடு தோய்ந்து உரையாடியுள்ளான்.

மலைந்த வானரம் இறந்திலது

அந்தக் குரங்கு செத்தொழியாமல் வெற்றி வீரனாய்ப் போய் விட்டதே! என்று இப்படி வாய்விட்டு வருந்தியிருக்கிறான். அரக்கர் பலரைப் பொருது அழித்து இலங்கையைத் தீயைக் கொளுத்தி விட்டு வீர கம்பீரமாய் அனுமான் விரைந்து சென்றுள்ளான் ஆதலால் மலைந்த வானரம் என்றான். மலைதல் = எதிர்ந்து பொருதல். அவன் மலைவில் இவனுக்கு ஓர் மலைவு தோன்றியுளது.

எவ்வழியும் எழில் ஒளி வீசி யாண்டும் நறுமணங்கள் கமழ்ந்து கொண்டிருந்த ஊரில் பிணமலைகளைக் குவித்து இரத்த வெள்ளங்களைப் பெருக்கி எங்கும் தீயை வைத்து எரித்து எல்லாவற்றையும் பாழாக்கி ஒழித்து அரிய வெற்றியுடன் கெலித்துப் போயுள்ளான் என அனுமானது போக்கையும் போராற்றலையும் கருதி ஏக்கம் அடைந்திருக்கிறான்.

பழியில மூழ்கினும் என்றது இது வரையும் புகழோடு வாழ்ந்து வந்த தனக்கு என்றும் அழியாத அவமானம் வந்ததே என நிலைமைகளை நினைந்து அலமந்து கூறிய படியாம்.

நொந்துள்ள பழிகளை நேரே எடுத்துக் காட்டி இன்னவாறு இன்னலுழந்து தங்கள் மன்னர் பிரான் பேசிய மொழிகளைச் சபையிலிருந்த யாவரும் ஆவலோடு கேட்டு வந்தனர். அரசன் பேசி முடிந்ததும் சேனைத் தலைவன் எழுந்தான்.

## சேனாபதி பேசியது

இலங்கையிலுள்ள படைக்குழுக்களெல்லாம் தலைமை அதிபதியான சேனைத் தலைவன் முதலில் எழுந்து பேச நேர்ந்தான். பிரகஸ்தன் என்னும் பெயருடைய அவன் அரசை வணங்கி வரிசையோடு பேசினன்: "அரசர் பெரும! முன்னமே சில உறுதி மொழிகளைக் கூறினேன், சமுகம் அவற்றைக் கவனிக்கவில்லை. இளிவான எளிய மனிதனை ஒரு பொருளாக மதித்து மாயமானை ஏவி மறைவாய்ச் சென்று வஞ்சனை புரிய நேர்ந்ததே பெரிய பிழை, கரன் முதலிய நம் மரபினர் பலரையும் அழித்துத் தங்கையை மூக்கு அரிந்து அங்கபங்கம் செய்து விட்ட அந்தக் கொடியனை உடனே போய்க் கொன்று தொலைக்காமல் நன்றி பாராட்டி ஒதுங்கியிருந்ததனாலேதான் இந்தக் கேடுகள் வர நேர்ந்தன. தண்டித்து அடக்க வேண்டியவர்களிடம் தாட்சணியம் காட்டலாகாது. இரக்கம், பொறுமை, தருமம் என்பன எல்லாம் மனவுறுதி யில்லாத கோழைகள் பேசுகிற பிழைகளேயாம். தேவர்கள் யாவரும் அடி தொழ மூன்று உலகங்களையும் நீங்கள் இன்று ஆளுவது வீர வெற்றியால் வந்த பாக்கியமேயன்றி வேறு ஈர நீர்மையால் எய்தியதன்று. எதிரிகளை விரைந்து போய் அழிக்காமல் இவ்வாறு இங்கே ஆலோசனை செய்து கொண்டு நாம் அடங்கி நின்றால் குரங்கு மாத்திரம் அன்று கொசுவும் இலங்கையில் புகுந்து போராட நேரும், நமது வீர ஆடலை விரைந்து புரிவது நல்லது" என அவன் இங்ஙனம் கூறவே மகோதரன் எழுந்தான்.

## முதல் மந்திரி மொழிந்தது

தலைமை அமைச்சனான மகோதரன் எழுந்து மன்னனை நோக்கி இன்னுரை பகர்ந்தான். "மன்னர் பிரான் இன்று மனம் நொந்து மொழிந்த மொழிகள் என் உள்ளத்தை வருத்துகின்றன. ஒரு சிறு குரங்கு செய்து போயுள்ள சின்னச் செயலுக்கு இரங்கி இங்கே இன்னவாறு பெரிதாக நாம் ஆலோசனை செய்ய நேர்ந்தது நம் பகைவரான அமரருக்கு மிகவும் நகை விளைப்ப

தாம் தங்களுடைய அதிசய பராக்கிரமங்களையெல்லாம் மறந்து இழிந்த ஒரு விலங்கையும் மனிதரையும் வியந்து கொள்ள வந்தது வியப்பாயுள்ளது. உங்கள் ஆணையை அஞ்சி உலகங்கள் எல்லாம் ஒடுங்கி நடந்து வருகின்றன, ஒரு புல்லிய குரங்கு புரிந்த கலகத்தை நினைந்து நீங்கள் கவல்வது அவலமேயாம். அண்டங்கள் யாவும் அடிவணங்க ஆட்சி புரியும் மாட்சிக்கு இந்த ஆலோசனைக் காட்சி ஒரு தாழ்ச்சி என்றே கருதுகின்றேன்.

தேவரும் அடங்கினார் இயக்கர் சிந்தினார்,
தாவரும் தானவர் தருக்குத் தாழ்ந்தனர்,
யாவரும் இறைவர் என்று இறைஞ்சு மேன்மையர்
மூவரும் ஒதுங்கினர் உனக்கு மொய்ம்பினோய்! (1)

வெள்ளியங் கிரியினை விடையின் பாகனோடு
அள்ளிவிண் தொடவெடுத்து ஆர்த்த ஆற்றலாய்!
சுள்ளியில் இருந்துறை குரங்கின் தோள்வலிக்கு
எள்ளுதி போலும்நின் புயத்தை எம்மொடும் (2)

ஏற்றமென் பிறிதினி எவர்க்கும் இன்னுயிர்
மாற்றுறு முறைமைசால் வலியின் மாண்பமை
கூற்றும்நீ தன்னுயிர் கொள்ளும் கூற்றெனத்
தோற்றுநின் ஏவல்தன் தலையில் சூடுமால் (3)

மண்ணினும் வானினும் மற்றும் முற்றுநின்
கண்ணினில் நீங்கினார் யாவர் கண்டவர்
நண்ணரும் வலத்தினார் நண்ணின் நாயக
எண்ணுவது இவர்திறத்து எண்ணல் ஆகுமோ? (4)

மன்னனுடைய மகிமைகளை இன்னவாறு குறித்துக் காட்டி மகோதரன் உரைத்து நின்றான். "தேவர் முதல் யாவரும் அடங்கினர்; ஏவரும் கடவுளர் என்று எண்ணித் தொழுகின்ற மூவரும் ஒடுங்கினர், எமனும் தன்னுயிர்க்கு ஓர் எமன் எனக் கருதி உங்களை உன்னுந்தோறும் உள்ளம் நடுங்குகின்றான், சிவபெருமானை வெள்ளியங்கிரியோடு அள்ளியெடுத்த நீங்கள் இழிந்த சுள்ளியின் உறைந்து ஒளிந்து திரிகிற குரங்கை ஒரு பொருளாக உள்ளி இந்த மந்திராலோசனையைச் செய்யத் தொடங்கியது யாரும் எள்ளி இகழும்படியான பெரிய நிந்தைக்கே இடமாம். நம் ஊரில் தீயை வைத்துப் போன அந்த மாயக் குரங்கை விரைந்து போய்க் கொன்று அதன் தலையைக் கொண்டு வருக என்று ஒரு

அரக்க வீரனை உல்லாசமாய் ஏவி விட்டு எல்லாரோடும் சல்லாபமாய் உரையாடி மகிழ்ந்திருக்க வேண்டிய நீங்கள் மிகுந்த கவலையுடன் இங்ஙனம் வருந்தி ஆலோசிப்பது அருந்திறலாண்மைக்கு இழுக்காம். பெருந்தகைமைகளைப் பேணிப் போராசைக் காணியாகக் காத்திருங்கள், அடியேன் யாவும் பார்த்துப் பகைவரை அடியோடு அழித்து ஒழித்து அரிய சீதையோடு கடிது வருகிறேன்" என அவன் வார்த்தையை வார்த்து முடித்தான்.

சுள்ளியில் உறை குரங்கு என்றது எள்ளி இகழ்ந்து கொள்ள வந்தது. சுள்ளி = மரக்கிளை. உலர்ந்து காய்ந்த மரச் சுள்ளிகளில் தாவி யிருந்து ஆவி அலமந்து திரிகிற காட்டுக் குரங்கு. என இளிவாகக் காட்டுதற்கு இம் மொழியைக் கூட்டினான். எள்ளல் இழிவுகள் அரசன் ஏற்றம் அறிய வந்தன.

வெள்ளியங் கிரியினை விடையின் பாகனோடு
அள்ளிவிண் தொடஎடுத்து ஆர்த்த ஆற்றலாய்!

கைலாச கிரியை ஊக்கித் தூக்கிய அந்த அதிசயக் காட்சியை இங்ஙனம் துதிசெய்து ஞாபகப் படுத்தியிருக்கிறான். அந்தத் தகைய அற்புத வீரன் ஓர் அற்பக் குரங்கைக் குறித்து உள்ளம் கவன்று உறுதி சூழ்ந்து இத்தகைய நிலையில் ஆலோசிப்பது தகாது எனத் தன் தகுதியையும் மன்னன் தகுதியையும் மந்திரி இங்ஙனம் ஒருங்கே உணர்த்தி நின்றான்.

அவன் பேசி நின்றவுடன் அடுத்த மந்திரி எழுந்தான்

### வச்சிரதந்தன் உரைத்தது

சிறந்த தேக பலமுடைய இவன் அரசனை உவந்து வணங்கி உறுதி மொழிகளை உரைத்தான் "இலங்கேசுவரா! இங்கே கூடியிருப்பதைக் குறித்து நான் மிகவும் நாணுகிறேன். அரிய பல போர் முனைகளில் புகுந்து பெரிய வெற்றிகளைப் பெற்று வந்துள்ள என்னை இந்தச் சிறிய குரங்கின் மேல் ஏவி "விரைந்து கொன்று வா!" என்று ஒரு உத்தரவு கொடுத்து விடாமல் இத்தனை கூட்டத்தைச் சேர்த்து இவ்வளவு ஆலோசனைகளை உய்த்துணர்ந்து செய்வது எனக்கு வித்தக விந்தையாய்த் தோன்றுகிறது. எத்தனை தேவர்கள்! எத்தனை அசுரர்கள்! எத்தனை இயக்கர்கள்! எத்தனை கந்தருவர்கள் என் கையால் மாண்டுள்ளனர்!

ஒலவது நினையினும உறுதி ஓரகிலாம
வெலவது விருமபினும வினையம வேணடலாம
செலவதங கவருழைச சென்று சீரகெடக
கொலவது கருமமென றுணரக கூறினான (4)

இன்னவாறு பலவகை நிலைகளையும எடுத்து விளக்கித தன்னுடைய உள்ளக கிடக்கைகளை அவன உரைத்து முடித்தான.

அக்கட இராவணற்கு அமைந்த ஆற்றல

திக்கு யானைகளின தந்தங்களை ஒடித்து நின்றாய, கயிலையங கிரியை எடுத்து வந்தாய, அக்கைகைய அதிசய வீரனை நீ இழிவான மக்களையும, குரங்குகளையும யாவாக மதிக்கு இத்தகைய மந்திராலோசனையைச செயவது எத்தகைய விந்தை! இதனைச சிந்திக்குந்தோறும பித்த மயக்கமாய என சித்தம திகைக்கிறது என அவன மெத்தவும நகைத்திருக்கிறான

அக்கட என்பது அதிசய வியப்பாய இகழ்ச்சிக குறிப்பில வந்தது அம்மா! அடே அப்பா! என்னும வியப்பு மொழிகளைப போல இது இங்கு நேர்ந்துள்ளது அக்கட என்பது கன்னட பாஷையில வியப்புக குறிப்பாய வழங்கப்படுகிறது தெலுங்கு மொழியில சேய்மைச சுட்டாய இடத்தைக குறித்து வருகிறது

அக்கட = அங்கே

இக்கட = இங்கே

இங்ஙனம தெலுங்கின வழியாகவே இம மொழிக்குப பொருள கொள்ளலாம திக்கின கயங்கள, முக்கண்ணன மலை முதலியவுற்றை நிலை குலைத்த இராவணன ஆற்றல அந்த அளவில அங்கேதான செல்ல வல்லதோ? இங்கே மக்களிடமும குரங்கின பாலும செல்லாது போலும என எல்லாத வகையில அவன அசதியாடிய படியாம கயம = யானை

இராவணன தெலுங்கர் இனத்தைச சேர்ந்தவன என உலகம வழங்கி வருகிறது அவனுடைய மாமியினார வீட்டு மொழியாயத தெலுங்கே பேசும இயல்பினனாதலால அந்த மந்திரி பேச்சில இந்த வார்த்தை இடையே வந்துள்ளது எனச சரித்திர ஆராயச்சியாளர்கள ஆய்ந்து சிந்தனை செய்து வருகின்றனர

## அக்கட போ

இன்னும் ஒரு அக்கட தமிழில் வந்துள்ளது. ஒரு தெலுங்கன், பெரிய பணக்காரன், கொடிய உலோபி இனிய உபகாரி போல வெளியே பேசுவான். அவனிடம் ஏதேனும் பொருள் பெறலாம் என்று மருள் கொண்டு ஒரு தமிழ்ப் புலவர் அவன் மேல் நூறு பாடல்கள் பாடினார் பேர் ஊர் குலம் கோத்திரம் முதலியவற்றைப் பெருமையாகப் புகழ்ந்து பாடி அதனை ஒரு பிரபந்தமாகச் செய்து கொண்டார் எழுதி வைத்த ஏட்டோடு அந்தப் பாட்டுடைத் தலைவனிடம் போனார் புலவர் வந்துள்ள நிலைமையைக் கண்டு அவன் குலை நடுங்கினன் அவனுடைய இயல்பினை ஒரு சிறிதும் உணராமல் இவர் பாட்டைப் பாடத் தொடங்கினார். காது கொடுத்துக் கேட்டால் புலவர் ஏதேனும் கேட்பார் என்று பயந்து அடுத்த வீட்டுக்குப் போங்கள் என்று அவன் பதட்டமாய்ச் சொன்னான் அந்தச் சொல்லும் தமிழில் வரவில்லை. அக்கட போ என்று தன் தாய் மொழியே அவன் வாய் மொழியாய் வந்தது அந்தத் தெலுங்குச் சொல்லின் பொருளைத் தெரியாமல் முதலில் திகைத்து நின்ற புலவர் பின்பு தெரிந்தார் வருந்தி வெளியே வந்தார் தமிழருமை தெரியாத மடையனிடம் வந்தோமே! என்று தனது மடத்தனத்தை உணர்ந்து நொந்தார் உடனே அயலே இருந்த காளி கோயிலுக்குச் சென்றார் ஏட்டைக் கிழித்து எறிந்தார் அம்மையை நோக்கி ஒரு பாட்டைப் பாடினார் அந்தப் பாடல் அயலே வருகின்றது.

"பக்குவ மாகக் கவிநூறு பாடிப் பரிசுபெற
முக்கரணம் மெத்த பலகாலும் போட்டு முயன்றிடினும்
அக்கட போஎனும் லோபரைப் பாடி அலுத்துவந்த
குக்கனை ஆண்டருள் வில்வ வனந்துக் குயிலம்மையே!"

இந்தப் பாட்டில் வந்துள்ள அக்கட என்பதன் பொருளை அறிக திக்கயம் என்ற எதுகைக்கு ஏற்பக் கவிதை நோக்கில் கவியின் வாக்கு இங்ஙனம் வந்துள்ளது காவியம் முழுவதும் துருவி அறியின் இவ்வாறான அரிய பிரயோகங்கள் சிலவே காணலாம். அவை கால தேச நிலைகளை ஆராய்தற்குச் சாலவும் துணையாகின்றன. கவிஞர் மொழிகளில் காட்சிகள் ஒளிர்கின்றன.

"நாம் எளிதே எடுத்து உண்ணுதற்குரிய உணவுப்பொருள்கள் போலுள்ள சிறிய மனிதரைப் பெரிய பகைவராய்க் கருதி அயாவது பெரிய பிழை, விரைந்து சென்று அவரைக் கொன்று தொலைத்து வென்றி வீறோடு மீண்டு வந்து ஆண்டகைமையுடன் நாம் வாழவேண்டும்; யாண்டும் தாழ்ந்து நிற்கலாகாது" என்று துன்முகன் கூறி முடிக்கவே அடுத்த மந்திரி எழுந்தான்.

மாபக்கன் புகன்றது.

தனக்கு முன்னதாகப் பேசினவனுடைய உரைகளைக் கூர்ந்து கேட்டுவந்த இவன் அரசனை நோக்கித் தன் கருத்தை உரைத்தான் "ஒரு மனிதன் ஏவிய குரங்கு நம் புனித நகருள் புகுந்து பல கொலைகளை விளைத்து முடிவில் தீயைக் கொளுத்தியும் போயது, அதனைக் கொன்று தொலைக்காமல் நம்மவர் உல்லாச விநோதமாய வேடிக்கை பார்த்து நின்றமையால் அது வென்றி வீறோடு வெளியே விரைந்து மறைந்து சென்றது அதனால் அரக்கர் வலி குறைந்து போய் விட்டது? அக் குரங்கு மனிதரோடு மீண்டும் ஈண்டு வரும் என்றே எண்ணுகின்றேன். அவ்வாறு வராதொழியினும் நாம் விடாது பின் சென்று அந்த வானரத்தையும் நரரையும் கொன்று உயிர் குடித்துத் தின்று வருவதே நமக்கு வென்றி வாழ்வாம்" என அவன் பேசி நிறுத்தினான்

அதன்பின் பானுகோபன், யாககேது, பிசாசன், தூமாட்சன் முதலிய வீரர்கள் பலரும் எழுந்து தங்கள் தங்கள் கருத்துக்களைத் தெளிவாக எடுத்து உரைத்தார். யாவரும் அரக்கர்களுடைய பெருமைகளையே வியந்து புகழ்ந்து பகைவரை எளிதா இகழ்ந்து கூறி விரைந்து வினை புரிய வேண்டும் என்று வீம்பி நின்றார் வல்லமைகள் பேசிய அவர் எல்லாரையும் நில்லுங்கள் என்று கையமர்த்தி நிறுத்திக் கும்பகருணன் எழுந்தான்.

கும்பகருணன் குறித்தது.

மன்னன் தம்பி பேச எழுந்தவுடனே மந்திரிகள் எல்லாரும் அமைதியாய் அடங்கியிருந்தார். அண்ணன் எதிரே மரியாதையுடன் வணங்கி நின்று கும்பகருணன் கூறிய மொழிகள் அன்பும் அறிவும் ஆண்மையும் ததும்பி வந்தன "புண்ணியத் திருவோடு பொலிந்து விளங்குகின்ற அண்ணா! சின்னவன்

பேசுகின்ற சிற்றுரைகளில் குற்றங்கள் மிக இருப்பினும் பொறுத்துக் குணங்களை உணர்ந்து கொள்ள வேண்டுகிறேன் நீ உயர்ந்த குலத்தில் பிறந்தவன், பிரமாவின் மரபில் சிறந்து வந்துள்ளவன், அரிய வேதங்கள் ஆயிரங்களையும் ஓதி உணர்ந்தவன், பெரிய கலை ஞானி. தேவரும் தலை வணங்கி ஏவல் புரிய மூவுலகங்களையும் நிலையாய் ஆண்டு வருகிற அதிசய வீரன் அரசு முறைகளோடு தரும நீதிகள் யாவும் நன்கு தெரிந்தவன்

இத்தகைய உத்தம நிலைகளில் உயர்ந்துள்ள நீ பித்தரும் செய்யாத பெரிய பிழைகளைச் செய்திருக்கிறாய் கொடிய தீய நஞ்சை இனிய சுவை அமுதமா நெஞ்சம் துணிந்து நெடுந் தீமையை நீ செய்திருத்தலால் நமது இந்த அழகிய நகர் தீயில் மூழ்கி அழிய நேர்ந்தது அரக்கர் பலர் அழிந்து ஒழிந்தார் புல்லிய ஒரு குரங்கு இலங்கை புகுந்து பொல்லாத கொலைகளைச் செய்து சென்றது என்று சொல்லுவது புலையாம் அதிபதியான நீ விதிமுறை கடந்து ஒரு பதிவிரதைக்குப் படுதுயர் செய்துள்ளமையே இப் பதியும் அரக்கரும் பாழாவதற்குக் காரணமாயது நேரே கொடிய தீமையைச் செய்து விட்டு ஊர் தீயால் எரிந்து கரிந்தது, இராக்கதர் மாண்டு மடிந்தனர், பெரும் கீர்த்தியும் பிழைபட்டு அழிந்தன, பெரும் பழிகள் விளைந்தன என்று இவ்வாறு வெறும் கூச்சல் போடுவது வீணேயாம் இந்த மந்திராலோசனை மதி கேடுடையது, மானக் கேடானது காரிய காரணங்களை உணர்ந்து பாராமல் வீரியங்கள் பேசுவது வீணத்தன மேயாம் நேர்ந்துள்ள கேடுகளுக்கெல்லாம் நீங்களே காரணம், இவ் வுண்மையை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்'' என இன்னவாறு உரிமையோடு ஊக்கி உரைத்தான், மேலும் சில நீதிகளைக் குறித்து விளக்கி விரித்துப் பேசினன்

ஊறியம் அமைந்தநகர் தீயுண உலைந்தாய்!
கோவியல் அழிந்ததென வேறுஒரு குலத்தான்
தேவியை நயந்துசிறை வைத்தசெயல் நன்றோ
பாவியர் உறும்பழி இதிற்பழியும் உண்டோ? (1)

நன்னகர் அழிந்ததென நாணினை நயத்தால்
உன்னுயிர் எனத்தகைய தேவியர்கள் உன்மேல்

இன்னகை தரத்தர ஒருத்தனைமனை புறருள
பொன்னடி தொழுததொழு மறுத்தல புகழபோலாம் (2)

என்றுஒருவன் இல்லுறை தவத்தியை இரங்காய
வன்தொழிலினாய மறைதுறந்து சிறை வைத்தாய
அன்றுஒழிவதாயின அரக்கர்புகழ் ஆய
புன்தொழிலினால் இசை பொறுத்தல புலமைத்தோ? (3)

ஆசில்பர தாரமவை அஞ்சிறை அடைப்பேம்,
மாசில்புகழ் காதலுறுவேம், வளமை கூரப்
பேசுவது மானம், இடை பேணுவது காமம்,
கூசுவது மானுடரை, நன்று நம கொற்றம்! (4)

சிட்டர்செயல் செய்திலை, குலச்சிறுமை செய்தாய்!
மட்டவிழ் மலர்க்குழலி னாளை இனி மன்னோ
விட்டிடுது மேலினிய மாதுமவர் வெல்லப்
பட்டிடுது மேலதுவும் நன்று பழியன்றால் (5)

(இராவணன் மந்திரப் படலம்)

தமையனை நோக்கிக் கும்பகருணன் இவ்வாறு பேசியிருக்கிறான். அவனுடைய உள்ளக் கிடக்கையும் உணர்ச்சி நிலைகளும் உரைகளில் ஒளி வீசி நிற்கின்றன. எவ்வளவு தரும நீதிகளை உறுதியோடு இதில் அவன் உணர்ந்திருக்கிறான்! வார்த்தைகள் அவனது உள்ளத்தை வார்த்துக் காட்டியுள்ளன.

நெடிய தேக பலமுடையவன், பெரிய முரடன், பெருந் தீனியாளன், ஓயாது உறங்குபவன் என இன்ன வகையிலேயே கும்பகருணனை உலகம் எண்ணி வருகின்றது. அவனுடைய உண்மை நிலைகளை ஊன்றியுணரின் அரிய பல பெருந்தன்மைகள் அவன்பால் நிறைந்துள்ளமையைத் தெளிவாக எவரும் அறிந்து கொள்வர். அருந்திறலும் பெருந்தகவும் சிறந்து மிளிர்கின்றன.

காவிய வுலகில் அவனது சீவிய சரித்திரம் திவ்விய சோதிகளை வீசியுள்ளன. ஆண்மை வீரம் மானம் நேர்மை முதலிய நீர்மைகள் யாவும் அவனுடைய பான்மைகளாய்ப் படிந்திருக்கின்றன. எவ்வழியும் மேன்மைகள் மிகுந்து விளங்குகின்றன.

அண்ணனுக்கு இடித்து அறிவுறுத்தியிருக்கும் திண்மை உண்மையான நெஞ்சின் செம்மையை உலகம் அறிய உணர்த்தி

நிற்கின்றது. "மன்னா! பெரும! உன்னைத் தீ புகுந்து எரித்து விட்டதாக உணர்ந்து வருந்துகின்றாய், நீ புகுந்து செய்திருக்கும் தீமையை நினைந்து பார்க்கவில்லை. பார்த்தால் தீயுண்ட காரணத்தைப் பூரணமாக அறிந்து கொள்ளலாம். தன் செயலை எண்ணி நோக்காமல் அயலை இகழ்ந்து பேசுவது இழிந்த மயலேயாம். வேறு ஒருவனுடைய இனிய மனைவியை வலிந்து கவர்ந்து கொண்டு வந்து சிறையில் வைத்திருக்கிறாயே! இது எவ்வளவு பாதகமான செயல்! இதை விடக் கொடிய பழியும் பாவமும் வேறு ஏதேனும் உண்டா? பெரிய பழி பாவங்களான கொடிய தீவினையைச் செய்து கொண்டு நகரில் தீ விழுந்து விட்டதென்று மந்திரிகளைக் கூட்டி இந்தவாறு ஆலோசனை செய்வது நாணத்தக்க கோரமான கேடாம். தீய வினை தீயினும் தீயது; தன்னைச் செய்தவனைத் தப்பாமல் வந்து பிடித்து எவ்வழியும் நொந்து துடிக்கும்படி நோவுகளை விளைத்து முடிவில் அது அழித்து ஒழித்தே விடும். தீ தொட்ட இடத்தில் தொட்டபோது மட்டும் சுடும், தீவினை உயிர் புகுந்த இடமெல்லாம் விடாது தொடர்ந்து வெந்துயர் விளைக்கும். அந்தக் கொடிய தீமையின் விளைவை யாதும் சிந்தனை செய்து பாராமல் இனிய விநோதமாகச் செய்து கொண்டு இன்பமாய் வாழலாம் என்று எண்ணியிருப்பது இழி மடமையாம். பழிகேடுகளை உணர்ந்து திருந்தாவழி அழிவேயாம்.

உயர்ந்த குலத்தில் பிறந்த சிறந்த அரச குலத் தோன்றலான நீ இழிந்த பழியை நாணாதிருப்பது எனக்கு மிகவும் வியப்பாயுள்ளது. உன்னுடைய அருமை மனைவிமார் உன்பால் அன்பாய் இன்ப நலங்களைப் பருகி மகிழ ஆவலோடு மறுகி ஏங்கியிருப்ப அவர்களை யாதும் கவனியாமல் விலக்கி விட்டு வேறு ஒருவனுடைய மனைவியை விரும்பிப் போய்க் கெஞ்சி நிற்கின்றாய், அவள் சீறி இகழ்ந்து சினந்து வைகின்றாள். இழிவான அந்த வசைகளையெல்லாம் வாங்கிக் கொண்டு மேலும் மேலும் காதலிக்கின்றாய்; முடிவில் காலிலும் விழுந்து நெடிது பணிந்து தொழுதாய்! அவ்வாறு தொழுதும் "இழுதையே! தூரப்போ!" என்று அக் குலமகள் இழித்துப் பழித்து எள்ளி இகழ்ந்து தள்ளியிருக்கிறாள். இது எவ்வளவு இழிவான மானக் கேடு! இதனை உணரவில்லையே! மூவுலகும் அடிதொழ வாழ்கின்ற நீ

ஒரு பெண்ணின் அடியில் வீழ்ந்து தொழுததை எண்ணுந்தோறும் அண்ணா! என் நெஞ்சம் எரிகிறது. இலங்கை தீயால் எரிந்து கரிந்தது, என் நெஞ்சம் மானத்தால் எரிந்து கருகியது. அது மீண்டும் புதுப்பிக்கப்பட்டது; என் உள்ளம் பழைய படியே மாண்டு மடிந்துள்ளது. ஈண்டு நான் நின்று பேசுவது என் குலத்தின் நலத்தை நினைந்து கொண்டுள்ள வலத்தினாலேயாம்" என அக் கோமகன் குல மானத்தோடு தலைமையாய் நின்று பேசியுள்ள நிலைமைகள் அவன் நெஞ்சை வருத்தியுள்ளன.

வாய் மொழிகள் வயிரம் பாய்ந்து துயரம் தோய்ந்து உரிமை கூர்ந்து வந்திருக்கின்றன. முன்னவன் செய்துள்ள பிழைகளை உன்னி உணரும்படி நன்னயமாக நவின்றுள்ளான்.

உன் உயிர் அனைய தகைய தேவியர்கள்

என்றது மண்டோதரி, தானியமாலை முதலிய மனைவியர்களை. பேரழகும் பேரன்பும் உடைய தாரங்கள் அமளித் தலங்களில் தனியே கிடந்து தவிக்க நீ அயலவளை நாடி வெளியே போய் இழிவாய் அலமந்து உழலுவது அவமானமான அவலம் என நிலைமையை நினைவுறுத்தினான். ஐம்புல இன்பங்களும் ஆரத் தருகிற தேவியர்கள் பலர் அவ்வியனையராய் மேவியிருக்க நீ ஆவி தேய்ந்து அலமரலுறுவது என் ஆவியை வருத்துகிறது என்று தம்பி அன்புரிமையால் வெம்பி மொழிந்துள்ளான்.

காம வெறியனாய் அவன் பிதற்றி அலைவது குலத்திற்கெல்லாம் பெரிய கேடாம்; அக் கேட்டுக்கு அறிகுறியாய் முன்னதாக ஊர் எரிந்து நாசமாயது; இன்னும் தேர்ந்து திருந்தாமல் இருந்தால் அரக்கர் குலம் அடியோடு அழிந்தே போகும் என அழிவு நிலையை விழிதெரிய விளக்கினான்.

என்று ஒருவன் இல் உறை தவத்தியைச் சிறைவைத்தாய்
அன்று ஒழிவதாயின அரக்கர் புகழ் ஐய!

பிறனுடைய பத்தினியை இச்சித்து எடுத்து வந்து என்றைக்கு இலங்கையில் நீ சிறை வைத்தாயோ அன்றே அரக்கருடைய சீரும் சிறப்பும் பேரும் புகழும் ஒருங்கே அழிந்து ஒழிந்து போயின என இங்ஙனம் மொழிந்திருக்கிறான்.

குலம் முழுவதும் அழிவதற்கு நீயே வழி கோலியிருக்கின்றாய், அந்த அழிவு நிலையை விழியூன்றி நோக்கி விரைந்து பழி நீங்கி வாழ வேண்டும், இன்றேல் இலங்கை பாழாய் விடும், அரசர் குலம் அழிந்தே போம், இதனை உண்மையாகத் தெளிந்து கொள்ளுக என்று தெளிவுறுத்தினை ஐய! என்றது மரியாதை விளியாய் வந்தது.

அரச பெருமானே! நீ வரிசை குலைந்து உன் குலத்தை நாசம் செய்ய நேர்ந்துள்ளாய், அதனை ஓர்ந்து யோசனை செய்து பிழையிலிருந்து விலகிப் பிழைக்கும் வழியை இழைத்தருளுக என்று தெளித்தருளினான்.

தவத்தி என் சீதையை இங்கே குறித்திருக்கிறான்.

தவம் செய்த தவமாம் தையல் என்ற சீதையைக் குறித்து அனுமான் * முன்னம் இராமனிடம் சொன்னதை இங்கே இராவணனிடம் கும்பகருணன் இன்னவாறு கூறியிருக்கிறான்.

தனது கணவனையே நினைந்து உணவு நீரும் துறந்து பகலும் இரவும் ஓர் நிலையிலிருந்து பக்தி செய்து உருகி வருகிறாள். ஆதலால் இப் பத்தினி தவத்தி என நேர்ந்தாள்.

இத்தகைய அரிய தவமுடையாளை இழிவாக நச்சி நிற்பது பழியும் பாவமும் ஆதலோடு வழி முழுவதும் அழிவதற்கு ஏதுவுமாம் என அவனது இச்சையின் ஈன நிலையை நன்கு இழித்துக் காட்டும் பொருட்டு இப் பெயரை இங்கே வடித்துக் கூறினான்.

பொறி இன்பங்களை அனுபவிக்க [illegible] வெறி கொண்டுள்ளவன் பொறிகளை அடக்கி அரிய தவ யோக நிலையிலுள்ளவளை அவாவி நிற்பது அவலமேயாம் என்று அவனது புலையான ஆசையின் புலைய நிலையைப் புலப்படுத்தினான்.

தவமுடையாளது உள்ளம் நொந்ததினாலேதான் அல்லல்கள் நேர்ந்துள்ளன. குரங்கு வந்து தீயை வைத்ததாக இரங்கி யுளைவது தவறு, நீ செய்த கொடிய தீவினையே நெடிய தீயாய் மூண்டெழுந்து இலங்கையை இவ்வாறு கடித்து எரித்துள்ளது.

மூல காரணங்களைக் கருதியுணராமல் மூர்க்கமாய் முனைந்து திரிவது மூடமாய்க் கேட்டைத் தருகின்றது. இன்பமும் துன்பமும்

* இந் நூல் பக்கம் 3348, வரி 2 பார்க்க.

வினைகளிலிருந்து விளைந்து வருகின்றன. ஒருவன் செய்கிற நன்மை இன்பமாய் வருகிறது, தீமை துன்பமாய்த் தொடர்கிறது. கொடுமைகளைச் செய்து கொண்டு இனிமையாய் வாழ எதிர்பார்ப்பது இழி மடமையாம் என அறிவுறுத்தினான்.

புன் தொழிலினால் இசை பொறுத்தல் புலமைத்தோ?

இழிந்த பழிச் செயல்களைப் புரிந்து கொண்டு உயர்ந்த புகழை அடைந்து கொள்ள விரும்புவது அறிவுடைமையாகுமா? முழு மடமை அல்லவா அது! என இவ்வாறு வினை விளைவுகளை விளக்கிக் காட்டியுள்ளான். இசை = புகழ். உயர்ந்த பெரியோர்களால் மதித்துப் புகழ்ந்து பேசப் படுவது புகழ் என வந்தது. எத்திசையும் இசைப்பது இசை என அமைந்தது.

மேலோர்கள் வெறுத்து இகழ்கின்ற இழி செயல்களையே நீ விழைந்து செய்துள்ளாய்; அதனால் பழி துயரங்களே அனுபவிக்க நேர்ந்துள்ளன என்று பலன்களைத் துலக்கினான்.

சீதையை வலிந்து கவர்ந்து வந்ததும், அப் பதிவிரதையை விழைந்து நிற்பதும் பழிபாதகமான செயலெனப் பழித்திருக்கிறான். பழிகளை விழி தெரிய வைத்துப் புகழை நினைவுறுத்தினான்.

வன்தொழில், புன்தொழில் என அவனுடைய செயல்களைக் குறிப்பாக இகழ்ந்து உரைத்திருப்பது கூர்ந்து காண வுரியது.

பலர்க்கும் இதமான நல்ல காரியங்களைச் செய்பவரே புகழுக்கு உரியர்; தீவினையாளர் பழியையே அடைவார்; நீ செய்துள்ளது கொடிய தீமை; ஆதலால் நெடிய பழியே அடைய நேர்ந்தாய்! என வினை முடிவுகளை விநயமா விளக்கியருளினான்.

எல்லாரும் தன்னை வணங்கி வர வேண்டும், யாவரும் புகழ்ந்து போற்ற வேண்டும் என்றே யாண்டும் உள்ளம் துணிந்துள்ளவன் ஆதலால் அந்தப் புகழ் நிலையைச் சிந்தை தெளிய உணர்த்தினான். புகழைச் சுட்டிக் காட்டியது உய்த்துணரவுரியது.

புகழ் என்பது உயர்ந்த மனித வாழ்வின் சிறந்த பயனாயுள்ளது; புண்ணியத்தின் மணமாயுள்ள அதனைப் புண்ணியவான்களே அடைந்து கொள்ளுகின்றனர்; பாவகாரிகள் அதனை யாதும் காண முடியாது; அரிய பிறவிப் பயனான புகழை அடைய வில

யாதலால் அந்தப் பிறப்பு இழிவு மிக வுடையதாய் ஈனமடைந்து ஒழிகின்றது.

வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின். (குறள், 238)

புகழ் ஆகிய பிள்ளையைப் பெறவில்லையானால் உலகத்தில் தோன்றிய அந்த மனித வாழ்வு பழியுடையதே எனினும் இவ் விழுமிய மொழி ஈண்டு விழியூன்றி நோக்க வுரியது. புகழ் உடையவன் உடல் அழிந்து போனாலும் என்றும் நிலையாய் நின்று உலகில் அவன் பெயரை விளக்கி வருதலால் அது எச்சம் என வந்தது. எஞ்சி நின்று இனிமை செய்வது என்பதாம்.

“இசையிற் பெரியது ஓர் எச்சம் இல்லை.” (முது மொழிக் காஞ்சி) என்றார் கூடலூர்கிழார். பிள்ளை இல்லாதவன் மலடன் ஆகின்றான், இசை இல்லாதவன் வசையுற்று இழிகின்றான். அந்த மலடை விட இந்த மலடு நிந்தை மிக வுடையது.

உயிர்க்கு உறுதியான இந்த உயர்ந்த இசையை இழிந்த தொழில் புரிந்து இழந்து விட்டாயே! என அண்ணன் அது இழவை இவ்வண்ணம் எடுத்துக் காட்டித் தம்பி உள்ளம் நொந்து இங்கே உரையாடியிருக்கிறான்.

புன் தொழிலினால் இசை பொன்றியது என்றது தன் செயலை நினைந்து அவன் திருந்தி வர வந்தது. பலரும் வைது பழிக்கும் வசையிலிருந்து விரைந்து மீண்டு உய்தி பெறுக என உணர்த்தியருளினன். உணர்வுரை உரிமை யூர்ந்து வந்தது.

நல்ல செயலும் நல்ல சொல்லும் புகழை வளர்க்கின்றன.

தீய செயலும் தீய சொல்லும் அதனைக் கொல்லுகின்றன.

அரிய புகழை அடியோடு அழிக்கின்ற கொடிய தொழிலை விட்டு இனியனாய் உயர்க என இந்த மொழிகளைக் கூறினன்.

“At every word a reputation dies.” (Pope)

“ஒவ்வொரு சொல்லிலும் புகழ் அழிகிறது” எனனும் இது இங்கே அறிய வுரியது. புகழ் அழியச் செய்வது பழியாகின்றது.

தீய செயலால் புகழை இழந்தவன் தீயனாய் இழிந்து நோயுழந்து படுகின்றான்; நல்ல செயலால் நலம் பல வருகின்றன.

"O! I have lost my reputation, I have lost the immortal part of myself, and what remains is bestial" [Othello, 2-3]

"அநதோ! என கீாததியை இழநதேன, அழியாத நிலையது அழிநது போயது, இபபொழுது இழிநத மிருகமாயிருககிறேன" எனப புகழை இழநத ஒரு வீரன இஙஙனம வருநதியிருககிறுன

உயிரின ஒளியான புகழ அழியின அம மனித வாழவு பழியாயிழிகின றது. இழிநது வாழவதினும இறநது போவது நலலது.

பழி வளாககும பாவச செயலைப பறறி நிலலாதே, உடனே ஒழிய விடுக என உரிமையுடன உணாவு கூறினன மறுபடியும அணணனது திணணிய மன நிலையை எணணியறிநது அதி விநயமான முறையில மதி தெளியப் பேசினன.

ஆசில பரதாரமதை அஞசிறை அடைபபேம்;
மாசில புகழ காதல உறுவேம்,

அணணனேடு தனனையும சோததுத தனமைப பனமையில இனனவணணம பேசியிருககிறுன. சீதையைச சிறையில வைதத திருபபது பெரிய பாதகம என அவன உளளம துடிததிருபபது உரைகள தோறும துளளி வருகிறது.

ஆசு இல பரதாரம் எனறது சானகியின மாசிலலாத மனத தூயமையை மதிதது வநதது. ஆசு = குறறம. பரிசுததமான பதிவிரதையை இசசிதது உழலுவது படுகேடான பழியாம

இததகைய கொடிய பழிச செயலைச செயது கொணடு இனிய புகழையும நாம அடைய விருமபுகிறேம. இது எவவளவு மடமை! எததுணை மதியீனம! உயததுணர வேணடும என இகழச்சிக குறிபபோடு இடிததுக கூறியுளளான.

பிறனுடைய மனைவியை விருமபினவனைப பழி பாவஙகளே அடையும, புகழ புணணியஙகள அடையா. அடையாததை அடைய எண்ணுவதும, அடைநதிருபபதாக மகிழநதிருப்பதும அறிவீனமேயாம என அறிவுறுததினன

பகைபாவம அசசம பழிஎன நானகும
இகவாவாம இலலிறபபான கண (குறள, 146)

பிறன் இலலாளை நசசினவனைப் பகையும பாவமும அசசமும பழியும் விடாமல் பறறிக் கொளளும் என இது உணாத்தியுளளது.

பகையே பழியே பாவமே பயமே
  நாளும் இன்னல் கொடுக்கும்,
தகையார் பெருமை முழுதழிக்கும்,
  சார்ந்த பிறனில் விழைவொழிந்தோர்
தொகையார் அறமே பொருளின்பம்
  தோலாப் பெருமை யுடன்வாழ்வார்
நகையால் அதனைக் கனவிடத்தும்
  நவிற்றி யிடினும் தீங்காமே (விநாயக புராணம்)

பிறன் மனையாளை விழைவார்க்கு விளையும் பழி துயர்களும், விழையாதார்க்கு உளவாம் புகழ் உயர்வுகளும் இதனால் உணரலாகும். அயல்மனை விழையின் உயர்நலங்கள் எல்லாம் ஒழியும்.

வெற்பெடுத்து உயர்ந்த திண்டோள்
  இராவணன் விரகத் தெய்திப்
பொற்புடைச் சீதை நெஞ்சம்
  மெலிவுறப் புன்மை செய்து
கற்பெனும் கனலிற் பற்றக்
  கிளையொடும் கரிந்தான் என்னில்
அற்புடை யவர்க்குத் தீமை
  புரிவரேல் நரகின் ஆழ்வார் (கூர்ம புராணம்)

சீதையை விரும்பி இராவணன் குலத்தோடு நாசம் அடைந்துள்ள நிலையைக் குறித்துக் காட்டி உலகத்திற்கு இவ்வாறு இது நீதியைப் போதித்துள்ளது. நெறி வழுவின் நிலை அழிவாம்.

பரதார ஆசை பழி இழிவுகளை விளைத்துப் படுநாசங்களைச் செய்து விடும் ஆதலால் அந்த நீச இச்சையை நெஞ்சிலிருந்து விலக்கி விடுக என அண்ணனிடம் பாசம் மீதூர்ந்து கெஞ்சியிருக்கிறான். உரிமையாளன் உண்மையை உறுதியா உணர்த்துகிறான்.

குல மானமும் வீரமும் கும்பகருணன் உள்ளத்தில் தலைமையாய்க் குடி கொண்டுள்ளன. தன்னுடைய உயர்ந்த அரச குடிக்கு இழிந்த பழி நேர்ந்ததே என்று பலமுறையும் வருந்தியிருக்கிறான் விளைவுகளை விரைந்து தெளிய விளக்குகிறான்.

தமையனது காம ஆசையால் குல நாசம் நேர்ந்து விடும் என்று நெஞ்சம் நொடிந்து வருந்தியுள்ளமையால் யாதும் அஞ்சா

மல துணிந்து நின்று நிலைமைகளை நேரே எடுத்துக் காட்டிக் கடுமையாக வர்தாடி வருகிறான். வாத முறை நீதி போதனைகளோடு சாதுரியங்களும் கலந்து மிளிர்கின்றது.

பேசுவது மானம், இடை பேணுவது காமம்,
கூசுவது மானுடரை, நன்று நம கொற்றம்!

இந்த வார்த்தைகளில் பொதிந்து கிடக்கிற உணர்ச்சித் துடிப்புகளைக் கூர்ந்து பார்க்கின்றவர் அவனுடைய உள்ளக் கடுப்புகளை நன்கு ஓர்ந்து கொள்ளுவர்.

சிறந்த மானிகள் போலவும் உயர்ந்த வீரர்கள் போலவும் நாம் வீண் பெருமைகள் பேசி வெளியே மினுக்கி நிற்கிறோம், நமக்கு மானமும் கிடையாது, வீரமும் கிடையாது என்று மறுகியிருக்கிறான்.

மானம் வீரம் என்பன நிலை குலையாத உயர்ந்த நீர்மைகள், அந்தத் தலைமைத் தன்மைகளை உடையவர் இழிந்த புன்மைகளை விழைந்து நில்லார். இளிவு நேரின் மானமுடையார் உயிர் வாழ மாட்டார் ஆதலால் யாண்டும் அவர் நெறி வழுவாமல் ஒளியோடே ஒழுகி வருவார். மானிகள் வாழ்வு அவ்வாறு தானம் தவறாமல் ஞான மணம் கமழ்ந்து நடந்து வருகின்றது.

தன்னை வெறுத்து இகழ்கின்ற ஒருத்தியை இச்சித்து நச்சி அவளுடைய காலில் விழுந்து தொழுவது எவ்வளவு மானக்கேடான காரியம்! தகாத நிலையில் காம வெறியனாய் இழிந்து நின்று கொண்டு மானம் மிகவுடையனாய்த் தன்னை மதித்துக் கொள்ளுதல் மடமை என்பான் பேசுவது மானம், பேணுவது காமம் என்றான். மாறுபாடான நிலைகளைச் சுட்டிக் காட்டி நாண முறும்படி இங்ஙனம் கனின்று நின்றது அவனது குல மானத்தையும் குண நிலையையும் நேரே துலக்கியுள்ளது.

கூசுவது மானுடரை நன்று நம கொற்றம்!

இதில் அவனது வெற்றி வீரம் விளங்கி நின்றது.

இராச சபையுள் அண்ணன் எதிரே நின்று அவன் பேசி வருவதில் அரிய பல உண்மைகள் வெளியே தெரிய வந்துள்ளன. மனிதரை எவ்வளவு எளிதாக எண்ணி வந்துள்ளான் என்பதை இம் மொழியால் இங்கே தெளிவாக அறிந்து கொள்ளுகிறோம்.

இராம லட்சுமணர்கள் மனித உருவில் வந்திருந்தலால் மானுட சாதியை இங்ஙனம் இழுத்துப் பேசினன் தேவர்களையும் அசுரர்களையும் நடுங்கவென்று நெடுங்காலமாக அடுந்திறலாண்மைகளோடு வாழ்ந்து வந்துள்ளவன் ஆதலால் அந்த வீரச் செருக்கில் வீறு கொண்டு பேசியுள்ளான்.

தேவர் யாவரும் ஏவல் செய்ய மூவுலகங்களையும் ஆண்டு வருகிற நமக்கு மனிதர் எதிரியாய் மூண்டனர் அந்தப் பகைவரைக் குறித்து அஞ்சி நாம் ஆலோசனைகள் செய்யவும் நேர்ந்தோம். ஆ! நம்முடைய வீரப்பிரதாபம் தான் என்னே! எனக் கிண்டலாய்க் கிளர்ந்து பேசியிருக்கிறான் அவனுடைய குல வீரத்தைத் தலைமையாகக் கருதியுள்ளமை உரைகள் தோறும் ஒளி புரிகின்றது. வாய் வார்த்தைகள் உள்ளக் குறிப்புகளை உலகம் அறிய நேரே வார்த்துக் காட்டுகின்றன.

“நம்முடைய பேரைச் சொன்னாலும் நடுங்கி ஓடுகிற மானுடர் நம்மை மதிக்க நேர்ந்தனர் அவர் ஏவிய குரங்கு ஒன்று இங்கே துணிந்து வந்து நம் ஊரை அடியோடு தீயைக் கொளுத்தி எரித்துப் போயது, வீராதி வீரரென வீறுகொண்டிருந்த நாம் நீறுபட்ட இலங்கையை அரக்கரின் பிண நாற்றங்களோடு நேரே கண்டோம் ஊரைச் சுட்ட குரங்கு ஓடிப் போய் விட்டதே! அதனைப் பிடித்துக் கொல்லாமல் அயலே விட்டு விட்டோமே! மேலே என்ன விளையுமோ? இனி நாம் யாது செய்வது? என இங்கே எல்லாரும் கூடிப் பொல்லாத யோசனைகளைச் செய்ய வந்துள்ளோம், அரிய சேனைத் தலைவர்களும், பெரிய மந்திரிகளும் ஆன வீரங்களோடு தங்களுடைய உள்ளக் கிடக்கைகளையும் உறுதிப் பாடுகளையும் ஊக்கமாய்ப் பேசிமுடித்தனர்; உரிமையான தம்பி என்ற முறையில் நானும் காரிய சாதனைகளை வீரியமாய்ப் பேச நேர்ந்தேன், பேசிக் கொண்டேயிருக்கிறேன், கால வேற்றுமை எவ்வளவு அதிசய மாற்றங்களை விளைத்துள்ளது!” என உள்ளம் சலித்து அவன் உருத்துப் பேசியுள்ள நிலைகளை உரைகள் ஒலித்துக் காட்டுகின்றன.

அரிய பேராற்றலோடு யாரும் போற்ற நெடிது வாழ்ந்து வந்த தமக்குப் பெரிய இழிவுகள் நேர்ந்தன, சிறியரும் இகழ்ந்து பேச மூண்டனர்; இந்தப் பழி அவமானங்கள் வேறு வெளியி

பட்டனைத் திருப் பாண்டிக் கொடுமுடி
நட்டனைத் தொழ நம்வினை நாசமே" (2) (தேவாரம்)

திருநாவுக்கரசர் பாடியுள்ள இப் பாசுரங்களில் சிட்டர் சுட்டி நிற்கும் பொருளை அறிக.

'சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ"

"சிட்டன் மெய்ச் சிவலோக நாயகன்" (திருவாசகம்)

சிவபெருமானைச் சிட்டன் என இவை குறித்துள்ளன.

"சிட்டர்க்கு எளிய சிவமேயோ நீ வினையேன்
மட்டற்ற ஆசை மயக்கறவும் காணேனோ?" (தாயுமானவர்)

"சிட்டர்கள் துதிக்கிடு மகத்துவம்" (மதுரைக்கலம்பகம் 82)

இறைவனையே எண்ணி உருகும் புண்ணிய சீலர்களைச் சிட்டர் என இவை சுட்டியுள்ளன. இதனால் அதன் உயர் நிலை உணரலாகும். சிட்டர் கடவுளைக் கிட்டியுள்ளனர்.

"சிட்டர் தம் தனித் தேவனும் அதனில் தெரிந்தான்"
(இராவணன் வதை, 103)

இராமனை இது இங்ஙனம் குறித்துள்ளது.

தரும சீலங்கள் நிறைந்து மறுமை நோக்கோடு மருவியுள்ள பெரியோர்களைச் சிட்டர் என்று சுட்டியிருத்தலால் அவரது செயலும் இயலும் தெரிய வந்தன. இத்தகைய மேலோர்கள் யாவரும் புகழ்ந்து போற்றும்படியான உயர்ந்த பதவியிலுள்ள நீ இழிந்த செயலைச் செய்துள்ளது மிகவும் இரங்கத்தக்கது என வருந்தியிருக்கிறான்.

சிட்டருக்கு எதிர்மாறு துட்டர்.

கெட்ட காரியங்களைத் துடுக்காய்த் துணிந்து செய்வது துட்டர் இயல்பு ஆதலால் அதனைக் குறிப்பாகச் சுட்டிச் சொல்லினன். குலச் சிறுமை என்றது கருணையின்றிச் செய்யும் கொடுமையைக் குறித்து நின்றது.

சிட்டரைப் பரிபாலித்து வளர்த்தலும், துட்டரைப் பரிகரித்து ஒழித்தலும் அரசரது தலைமையான கடமையாம்; அத் தகைய பரிபாலன நிலையிலுள்ள அரசனே துட்டன் ஆயின் உலகம் எவ்வளவு துன்பங்களை அடையும்! அந்த அல்லல் நிலைகள் எல்லை

மீறிய பொழுது எல்லாம் வல்ல இறைவனே வந்து அப்பொல்லா அரசனை அடியோடு அழித்து ஒழித்து உலகத்தைக் காத்தருளுகிறான். அந்தக் காப்பு நிலை கடுகி வந்துள்ளது என்பது ஈண்டு நுணுகி உணர வந்தது.

மட்டவிழ் மலர்க் குழலினாளை மனனே!
விட்டிடுதி மேல் இனியம் ஆதும்.

சிறையில் வைத்துள்ள சீதையை உரியவனிடம் கொண்டு போய் விரைவில் விட்டு விடுவதே நல்லது, அவ்வாறு விடின் எவ்வகையிலும் இனியராய் நாம் உய்தி பெற்று வாழ்வோம் என இவ்வாறு உணர்த்தினான் உணர்வுரை உள்ளம் உருகி வந்துள்ளது.

தீய காரியத்தைச் செய்துள்ளமையால் கொடியவன், தீயவன் என உலகம் உன்னைப் பழித்துள்ளது, அந்தத் தீமையிலிருந்து நீங்கிவிடின் இனியவன், நல்லவன் என்பு புகழ்ந்து போற்றும் என்பான் இனியம் ஆதும் என்றான்

பிராட்டியை விட்டு விடுவதால் விளையும் பலனையும் நலனையும் இங்ஙனம் விளக்கிச் சொல்லினான் இனியன ஆவாய் எனத் தனியே பிரித்துக் கூறாமல் தன்னையும் சேர்த்துப் பன்மையில் கூறியது தானும் ஒரு பங்காளி என்பது இங்கு நன்கு காண வந்தது கொடியராய் இழியாமல் இனியராய் உயர அருளினான்.

தாம் பழிபட்டுக் குலத்தோடு அழிந்து பாழாகாமல் புகழ் பெற்று நலத்தோடு உயர்ந்து வாழ வேண்டும் என அதற்கு வேண்டிய வழியை விழிதெரிய ஈண்டுத் தெளிவாகக் காட்டினான்.

பிறர்க்கு அல்லல் செய்தவன் அல்லலும் பழியும் அடைந்து அழிந்தே ஒழிவான் தான் செய்த தீமையே தீவினையாய் வந்து ஒவ்வொரு மனிதனையும் பிடித்து உயிரை வாட்டி உருத்து வருத்துகிறது.

"Evil recoils upon the head of evil-doers"

"செய்த தீமை செய்தவன் தலையிலேயே மாறி விழுகிறது" என்னும் இது இங்கே அறிய உரியது வினைப் பயனை அனுபவியாமல் எவரும் தப்ப முடியாது

"செய்த தீவினை செய்தவர்க்கு எய்திடும்
ஐயம் இல்லை அரன் அருள் ஆணையே."

உறுதியான இந்த உண்மை நியதியை உணர்ந்து புன்மை நீங்கி நன்மை பெற வேண்டும். புன் தொழிலினால் இசை பெற முடியாது; வசையே உண்டாம் என அண்ணனுக்கு அறிவுறுத்தி இத் தம்பி பேசியிருப்பது ஈண்டு எண்ணியுணரத் தக்கது.

இன்னவாறு பல உறுதி நலங்களை உணர்த்தி வந்தவன் இறுதியில் தனது கருத்தை அறுதியிட்டு உரைத்தான்.

நான் குறித்தபடி சானகியை விட உனக்கு மனம் இல்லையானால் மானம் அழிந்து வீணே இங்கு தாமதம் செய்து இருக்கலாகாது விரைந்து கடல் கடந்து போய் இராமனோடு போராடி வானர சேனைகளையெல்லாம் நீறு செய்து யாவரையும் பற்றறத் தொலைத்து வெற்றி பெற்றே வர வேண்டும் என்று கும்பகருணன் கொற்றமுடன் கூறி முடித்தான்.

தம்பி கூறிய அறிவுரைகளையெல்லாம் மறந்து விட்டு இறுதியில் சொன்னதையே அவன் உறுதியாகப் பிடித்துக் கொண்டான். "நல்லது சொல்லினாய் தம்பி! உடனே நாம் போருக்குச் செல்ல வேண்டும், நம் படைகளையெல்லாம் ஆயத்தம் செய்க" என அவன் வீரத் துணிவோடு விரைந்தான்.

"நன்றுரை செய்தாய் குமர! நாணிது நினைந்தேன்
ஒன்றும்இனி ஆய்தல் பழுது ஒன்னலரை எல்லாம்
கொன்று பெயர்வாம் நம கொடிப்படையை யெல்லாம்
இன்று எழுதல் நன்றுஎன இராவணன் இசைத்தான்,"

இராவணனுடைய மன நிலை இங்கே தெளிவாய் வெளியாயுள்ளது. நீதி மொழிகள் யாதும் அவன் காதில் ஏறவில்லை. எதிரிகளைப் பொருது வெல்ல வேண்டும் என்ற அச் சொல்லே அவன் உள்ளத்தில் விரைந்து புகுந்துள்ளது. சிறந்த போர் வீரன் ஆதலால் போர் என்றவுடனே வீர வெறி மண்டி வீறு கொண்டு நின்றான். மானச நிலைமை மதி நலம் கடந்துள்ளது. பின்னவன் சொன்ன இறுதி உரைகளைக் கேட்டு முன்னவன் போருக்கு விரைந்து இசையவே அருகே இருந்த இந்திர சித்து இராச கம்பீரமாய் எழுந்து பேச நேர்ந்தான்.

## இந்திரசித்து இசைத்தது

அந்தச் சிறிய தந்தை பேசி முடிந்தவுடன் இந்தப் பெரிய மைந்தன் எழுந்தான் இராவணனுடைய தலைமைப் புதல்வனான

இக குலமகன் பேச நேர்நதவுடன அனைவரும் தலை நிமிர்ந்து கேட்டார். "அருமைத தநதையே! தாஙகள சேனைகளோடு எழுநது வானரஙகளோடு போர செயய மூணடது என்க்குப் பெரிய அவமானமாய நீணடது அமரருலகம முழுவதையும் ஒரு விலலால வென்ற தலைமகன அயலே இருககத தநதை சமருககுச சென்ருா என்ருல இது எவவளவு பெரிய நிநதை! இதனைச சிநதனை செயய வேணடுகிறேன ஈசனிடமிருநது பெறற அரிய பல திவவிய ஆயுதஙகள உளளன, பிரம பாசம இருககிறது, எவரையும எளிதே வெலல வலல பேராறறலுடைய நான போர ஆறறி வென்று உஙகளுககுப பெரும கீரததியும தரவிலலையானால யான பிளளையாயப பிறநதுளளமையால யாது பயன? வானமும வையமும வணஙக ஆணை செலுததி ஆளுகிற மான வீரரான நீஙகள இழிநத பனிதாகளோடும ஈனமான வானரஙகளோடும போர புரியபபோவது யாருககும நகையை விளைககும, நானே விரைநது சென்று வென்று வருகிறேன். சொனனபடி வெறறியை விளைதது வரவிலலையானால என்னை நீஙகள பெறறதனால எனன பயன? நானும பிறநதிருபபது பிழையாம" என உளைநது கூறி மேலும வீரோடு பேசினன.

முறறுமுதலா யுலகம மூனறும எதிரதோனறிச
செறறமுத லோரொடு செறுததெரா திறததும
வெறறியுன தாக விளை யாதொழியின எனனைப
பெறறுமிலை யானநெறி பிறநதுமிலன என்ருன (1)

யானை இலா, தோபுரவி யாதுமஇலா, ஏவும
தானைஇலா, நினறதவம ஒனறுமஇலா, தாமோர
கூனமுது கினசிறு குரஙகுகொடு வெலவார
ஆனவரும மானுடாநம ஆணமை அழகனறே? (2)

நீருமநில னுமநெடிய காலுமநிமிர வானும
பேருலகில யாவும ஒருநாள புடைபெயாததே
யாரும ஒழியாமை நரா வானரரை யெலலாம
வேரும ஒழியாதவகை வென்றலது மீளேன (3)

இநதிரசிதது இவவாறு வீரவாதம கூறியுளளான.

அவனுடைய உளளத துணிவும உறுதி ஊககஙகளும் போரு திறலகளும உரைகளில வெளி வநதுளளன. எதிரிகளை

மிகவும் ஏளனமாகவே எண்ணியிருக்கிறான். அமரர்களை ஒருங்கே அடக்கி வந்துள்ளவன் ஆதலால் அந்த வீரச் செருக்கு வீறு கொண்டுள்ளது. பகைவரை அடியோடு வென்று தொலைக்கத் தான் ஒருவனே போதும் என்று பெருமிதம் பேசி நின்றான்.

வெற்றி உன்தாக விளையாது ஒழியின் என்னைப்
பெற்றுமிலை, யான்நெறி பிறந்தும் இலன் என்றான்

தந்தையை நோக்கி மைந்தன் பேசியுள்ள இந்த வார்த்தைகளில் அவனது சிந்தையும் தீரமும் தெரிய நின்றன. உனக்கு எதிரிகளாய் நேர்ந்துள்ள பகைவரை வென்று தொலைத்து வீரப் புகழை விளைக்கவில்லையானால் நான் பிறந்திருத்தலால் என்ன பயன்? என்று இன்னவாறு இயம்பியுள்ளமையால் பிதாவுக்குப் பிள்ளை செய்ய வேண்டிய கடமையை உள்ளம் தெளிய உணர்த்தி நின்றான். வீர மகனது தீர நிலை தெரிய வந்தது.

மாறானவர் யாராயினும் அவரை வேரற அழித்து வெற்றித் திருவோடு விரைந்து வருவேன், பகைமேல் என்னைத் தனியே அனுப்பியருளுங்கள் என்று அமராடலை ஆவலோடு வேண்டியிருக்கிறான். போராசை பேராசையாய்ப் பெருகி நின்றது.

வீரத்திறல் புரிந்து வெற்றியை நான் விளைக்கவில்லையானால் நீ என்னைப் பெறவும் இல்லை, நான் உனக்குப் பிறக்கவும் இல்லை என்றது மான வீரங்களோடு மருவி வந்த ஆண் மொழியாம். உள்ளத் திறல் உரையில் துள்ளியுள்ளது.

என்னை நேரே நீ பெற்றிருப்பதும், உனக்கு நெறியே நான் பிறந்திருப்பதும் உண்மையானால் வீரத்திறலும் வெற்றி விளைவும் யாதும் யாண்டும் எனக்குப் பிழைபடா, உறுதியாய் வென்று மீளுவேன், விரைவாய் அனுப்பியருள் என்று வேண்டியபடியாம்.

யானை இல்லை, தேர் இல்லை, குதிரை இல்லை, வேறு சேனைத் திரள்கள் யாதும் இல்லை, வெறும் கூனக் குரங்குகளோடு கூடியுள்ள ஈன மனிதர் இருவரைப் பொருது தொலைக்க இந்த மந்திராலோசனை நடக்கிறது, இந்திராதி தேவர்களை யெல்லாம் வென்ற இந்திரசித்தும் உடன் இருக்கிறான், என்னே நம் ஆண்மை! என்னே நம் மேன்மை! என்னே நம் வீரம்! என இன்னவாறு அன்னவன் அசதியாடி நின்றான். பின்னரும் மன்னனை நோக்கி மன்னிய திறலகளை ன்னயமாய நவின்றான.

பஞ்ச பூதங்களால் நிறைந்த இந்த உலகம் முழுவதும் அஞ்சி நடுங்கும்படி செய்து குரங்குகள் என்ற பேரே யாண்டும் இல்லாமல் வேரோடு கருவறுத்து அம் மானுடரை அடியோடு அழித்து வெற்றிக் களிப்புடன் விரைந்து வருவேன், விடை தருக என்று தந்தையை அடி பணிந்து அம் மைந்தன் முடி வணங்கி அதிசய நிலையில் நின்றான்.

தன்னுடைய வீரப் பிரதாபங்களைப் பெருமிதமாயப் பேசி வீறுகொண்டு நின்ற இந்திரசித்தின் நிலையைக்கண்டு விபீடணன் நெஞ்சம் வருந்தினன். நேரே எழுந்தான். அவனை ஆதரவோடு நோக்கிச் சில அறிவுரைகளைப் பரிவு கூர்ந்து கூறினன்.

## வீடணன் விளம்பியது.

"அப்பா இந்திரசித்து! உலகநிலை தெரியாமல் இந்தப் பெரிய இராச சபையில் உன் மனம் போனபடி பலவாறு நீ பேசநோந்தாய்! எதையும் எண்ணி ஆராய்ந்து நிலைமைகளை நிதானித்து நீர்மையோடு பேசுவதே சீர்மையாம். உயர்ந்த அரசர் குடியில் பிறந்து தலைமை வாய்ந்துள்ள சிறந்த குலமகன் நீ நெறிமுறைகளைக் கூர்ந்து ஆராய்ந்து தோர்ந்து தெளிந்து செம்மையாகப் பேச வேண்டும். தீய காரியங்களைச் செருக்கிச் செய்தவர் தீயராய் இழிந்து அழிவரே அன்றி தூயராய் உயர்ந்து கொள்ள முடியாது நல் வினையாளரே நலம் பல பெறுகின்றார் தருமமும் தவமுமே எவருக்கும் உறுதி நலங்களை உதவி வருகின்றன. நீ இந்திரனை வென்று வந்தது எந்த வலியினால்? அதனைச் சிந்தனை செய்து பார்! நீ உரிமையோடு செய்த அரிய தவத்தினாலேயே அதிசயமான ஆயுதங்களைப் பிரமதேவன் உனக்கு உவந்தருளினார். அந்தத் தெய்வ பலத்தால் தேவர் முதல் யாவரையும் வெல்ல வல்லவனாய் நீ விளங்கி நிற்கின்றாய். நல்ல நெறியில் கிடைத்த சக்தியைத் தீயவழியில் செலவிடின் தீமையே விளைந்து வரும், வரவே அவன் தீயனாய் இழிந்து விரைந்து அழிந்து படுவன். வீரச் செருக்கால் யாரையும் இகழ்ந்து பேசலாகாது. நீ இங்கே பேசியது பெரிதும் பிழைபாடுடையது. நேர்ந்துள்ள நிலைகளை யாதும் ஓர்ந்துணராமல் சிறுபிள்ளைத்தனமாய் உள்ளம் துணிந்து உரைத்து நின்றாய். கருதாத உரைகள் விருதாவாகின்றன.

"கருததிலான கணணிலான ஒருவன கைககொடு
திருததுவான சிததிரம அனைய செபபுவாய!
விருததா மேதகையவா வினைய மநதிரதது
இருததியோ இளமையால முறைமை எணணிலாய! (1)

பிளளைமை விளமபினை பேதை நீ எலா
ஒளளிய புதலவனை உரபபி எனறுரை
எளளலை யாமெனின இயமப லா றறுவென
தெளளிய பொருளொடு அரசு செபபினை" (2)

துடுககோடு பேசிய இநதிரசிததை வாயடககி வீடணன இஙகே பேசநோநதுளள அருமைக காடசியை நாம உவநது காணகினறோம. இளவரசன எனபதையும மதியாமல மறுதது அறிவுறுததி யிருககிறான. பிளளை எனனும உரிமை அனபோடு பேசசுகள பெருகி வநதுளளன.

நோநதுளள பகை நிலைகளின அபாயஙகளை ஒரு சிறிதும ஓாநது உணராமல வாலிப வீறறோடு இநதிரசிதது பேசியுளளதை இகழநது கூறினான. நரரையும வானரஙகளையும வேரோடு கொனறு தொலைதது வெனறியோடு விரைநது வருவேன எனத தநதை எதிரே அமமைநதன கூறியதை விநயமாய மறுததுரைத தான. மறுபபுரைகள குறிபபுகளோடு கூாநது வநதன.

கருததிலான கணணிலான ஒருவன கைககொடு
திருததுவான சிததிரம அனைய செபபுவாய!

எணணும திறமும இலலை, கணணும இலலை, அததகைய குருடன ஒருவன கையால எழுதிய சிததிரபபோல உளளது நீ இபபொழுது இஙகே வாயால பேசியது என இபபடி ஒரு ஒப புமையை எடுததுககாடடி இடிதது அறிவுறுததினான. அறிவில லாத குருடடு மடையனைப போல வழி நிலை தெரியாமல உளறி யிருககிறான என இவவாறு விழி தெரிய விளககினான.

எதிரியாய மூணடு வநதுளள இராமனது மகிமையை ஒரு சிறிதும உணராமல மனிதன என எளிதாக எணணி அவன களி மீதூாநது பேசியது முழு மடமை என இவன ஏசி யிருககி றான. விழுமிய விவேகி வேதனையடைநதுளளான.

வீரத தருககால ஆளை இனம தெரியாமல மீளிமையோடு கூறினான 'ஆதலால கணணிலான என இவ வணணம உரைத தான. 'குருட்டுததனமாய உளறினாய' எனக கூறிய படியாம.

"எண்ணி லாததோர் பாலகன் என்னை வெல்வன் என்கை
விண்ணி லாதவன் தன்னோடு கனிஎன வெஃகிக
கண்ணி லாதவன் காட்டிடக் கையிலா தவன் போய
உண்ணி லாதபே ராசையால் பற்றுமா றொக்கும்"

(கந்த புராணம்)

சூரபன்மன் இவ்வாறு கூறியிருக்கிறான் தன் குலத்தை வேரோடு கருவறுக்க வந்துள்ள முருகப்பெருமானை இளைய பாலகன் என்று எளிதாக எண்ணி அந்த அசுர வேந்தன் இவ்வண்ணம் மொழிந்துள்ளான் இதில் வந்துள்ள சொல்லும் பொருளும் இங்கே சிந்திக்கவுரியன கருத்தும் கண்ணும் இல்லான் திருத்திய சித்திரம்போல இந்திரசித்து பேச்சு விருத்தமாயிருந்ததென்றதும் இந்தக் கவியில் வந்துள்ளதும் பொருத்தமுற்றிருக்கின்றன ஒப்புரைகள் நுட்பமாக உணர வுரியன

வீரச்செருக்கால் வீறுகொண்டுள்ள இந்திரசித்துக்குச் சிறிய தந்தை இங்கே அறிவு நலங்களை உறுதியோடு போதித்திருக்கிறான் "தீமை செய்வதால் எவரும் மேன்மை அடையமுடியாது நன்மையே எல்லா மேன்மைகளையும் இன்பங்களையும் இனிது நல்கிவரும் உள்ளம் புனிதமாய் எவ்வுயிர்க்கும் இதங்களைச் செய்தவரே திவ்விய கதிகளை அடைகின்றனர்

தன் உயிர்க்கு இன்பத்தை விரும்புகிறவன் எவ்வழியும் யாண்டும் யாருக்கும் யாதொரு துன்பங்களையும் செய்யலாகாது. செய்தவினைகளின் படியே பயன்களும் விளைந்து வருகின்றன.

நல்வினையாளர் நல்லவராய் இன்பங்களை நுகர்கின்றனர்
தீவினையாளர் தீயவராய்த் துன்பங்களைத் துய்க்கின்றனர்

இந்த இருவகை வினைகளிலிருந்து முழுதும் விலகினவரே பிறவி தீர்ந்து பேரின்ப வீட்டை அடைகின்றனர். நித்தியானந்தமான அந்தப் புனித முத்தியைப் பெறுவதே பிறவிப் பெரும் பயனாய் மருவியுள்ளது. அத்தகைய உத்தம நிலையை அடைதற்குச் சித்தசுத்தி முதலில் வேண்டும். அவ்வுள்ளத்தூய்மை எல்லாவுயிர்களுக்கும் இரங்கி யருளுகிற சீவகாருணியத்தால் மேவுகின்றது. அன்பும் அருளும் இனிய தவநீர்மைகளாய் இன்ப நலங்களை அருளுகின்றன. மூவுலகங்களையும் ஆளுகின்ற இந்த மேலான அரச வாழ்வை நாம் அடைந்திருப்பது எதனால்? உனது தந்தை செய்துள்ள அரிய தவத்தினாலேயாம். இதனை

நனகு நீ சிநதனை செய்து கொளள வேணடும." என இஙஙனம அமமைநதனை நோககி அறிவுரைகளகூறி விடடுப பினபு அவனது தநதையை நோககி இம மதிமான பேச நேரநதான.

"அரசா பெரும! மாடசிமை தஙகிய உனனை எனஅணணன எனறு உலகம சொலலிவருகிறது. நான உனனைத தநதை தாய குரு, தெயவம எனச சிநதனை செயது நாளும வநதனை புரிநது வருகிறேன. இநதப பெரிய மநதிராலோசனை சபையில அடியேன நெஞசில நினைநதுளள சில எணணஙகளைச சொலலு கினறேன, சிறநத கலவியறிவும உயாநத சொல ஆறறலும எனககு இலலை ஆயினும உளளம தெரிநததை உரிமையோடு உரைகக நேரநதேன, பொறுமையுடன கேடடருள வேணடு கிறேன" என இவவாறு வணஙகி நினறு இககுணவான அரிய பல குறிபபுகளை ஆவலோடு உரைததான பணபாடு நிறைநத நணபுரைகள அனபு நலம கனிநது அறிவுமணம சுரநது செறி வோடு வெளி வநதுளளன கருதி ஓாநது பெரிதும சிநதனை செயயவுரியன சில அயலே வருகினறன.

எநதைநீ யாயுமநீ எமமுன நீதவம
வநதனைத தெயவமநீ மறறும முறறுநீ
இநதிரப பெருமபதம இழககினறுய என
நொநதனென ஆதலின நுவலவதாயினேனன. (1)

கறறுறு மாடசி என கணஇன றுயினும
உறறுறு பொருளதெரிநது உணாதல ஓயினும
சொறறுறு சூழசசியின துணிவு சோரினும
முறறுறக கேடடபின முனிதி மொயமபினோய! (2)

கோனகா முழுவதும நினது கொறறமும
சானகி எனுமபெயா உலகின தாயென
ஆனவள கறபினல வெநத தலலதோா
வானரம சுடடதென றுணாதல மாடசியோ? (3)

எணபொருடடு ஒனறினினறு எவரும எணணினல
விணபொருடடு ஒனறிய உயாவும மீடசியும
பெணபொருடடு அனறியும பிறிதுண டாமெனின
மணபொருடடு அனறியும வரவும வலலதோ? (4)

ஏறிய நெடுநதவம இழநத எலலைநாள
ஆறிய பெருஙகுணதது அறிவன ஆணையால்

கூறிய மனிதாபால் கொறறம கொளளலே
வேறினி அவாவயின வெனறி யாவதோ? (5)

மீனுடை நெடுஙகடல இலஙகை வேநதனமுன
தானுடை நெடுநதவம தளாநது சாயவதோா
மானுட மடநஙதயால எனனும வாயமொழி
தேனுடை யலஙகலாய இனறு தீாநததோ? (6)

மேலுயா கயிலேயை வெனற மேலேநாள
நாலுதோள நநதிதான நவினற சாபததால்
கூலவான குரஙகினுல குறுகுங கோளது
வாலிபால கணடனம வரமபில ஆறறலாய! (7)

தீயிடைக குளிததஅத தெயவக கறபினள
வாயிடை மொழிநதசொல மறுகக வலலமோ?
நோயுனககு யானஎன நுவனறுளாள அவள
ஆயவள சீதைபணடு அமுதில தோனறினள (8)
(இராவணன மநதிரப படலம)

தனனுடைய அணணன் உளளம திருநதி உணாவு தெளிநது உயயும்படி விபீடணன பேசியுளளதை இபபாசுரஙகள காட்டியுளளன பல இதிகாசஙகளேயும அனுபவநிகழசசிகளேயும நினேவூட்டி அரிய தரும நீதிகளே இனிது போதித திருககிறுன. மரியாதையும வணககமும உறவுரிமையும உரைகளில ஊடுருவி நிறகின்றன. உறுதி நலஙகள உளளப பரிவோடு மருவி வநதுள்ளன.

"அணணு! எனககுத தாயும தநதையும தெயவமும நீயே உழுவலனபுடன நாளும உனனே நான தொழுதுவருகிறேன, நீ யாணடும சுகமாய வாழ வேணடும எனறே யான கனவிலும் நனவிலும கருதி யிருககிறேன. சில காலமாக நீ செயதுவருகிற செயல்கள என உளளததை வாட்டிவருகினறன. அரிய அரச பதவியை இழநது அடியோடு அழிநது போக நோநதுளளோமே! எனறு வருநதி யுளேகினறேன. அமரரும அடிதொழ வாழுகின்ற உனது இனியவாழவு கொடிய பழிவாயப படடுப பாழாகி வருவதை நோககி நாளும நான அழுது தவிததிருககிறேன. நேரே தெரியப படுததமாடடாமல நெஞசம கலஙகி நெடிது மறுகி யுளளேன. இனறு மநதிராலோசனேககு அழைத்தமை

யால் வந்தேன்; மந்திரிகள் பேசிய பேச்சுகளைக் கேட்டேன்! சிந்தை துணிந்து நானும் சில சொல்ல நேர்ந்தேன். சிறந்த கலையறிவும், தெளிந்த உலகஞானமும், உயர்ந்த பேச்சு வன்மையும் இல்லாதவனாயினும் அன்புரிமையினால் சில உண்மைகளை எண்மையாகச் சொல்லுகிறேன்! பிழைகளைப் பொறுத்து முழுதும் கேட்டு உறுதி நலனை ஓர்ந்து கொள்ள வேண்டுகிறேன். குரங்கு வைத்த தீயினால் நமது இலங்கை எரிந்து போனதாக நினைந்து வருந்துவது தவறு சீதையின் கற்புத்தீயே இப்படிச் சுட்டெரித்து ஊரைக் கரிக்கோட்டை ஆக்கி யிருக்கிறது. ஒரு உத்தமியின் உள்ளக் கொதிப்பால் எத்தனை இழவுகள் நேர்ந்துள்ளன! ஒன்றையும் உய்த்துணராமல் உள்ளம் தருக்கி மேலும் மாறுபாடாய் வீறு கொண்டு நிற்பது விபரீதமேயாம் விண்ண வரும் வியந்து காண உயர்ந்த வாழ்வுகளை ஒருவன் அடைந்திருந்தாலும் எண்ணம் இழிந்ததாயின் அவன் இழிந்தவனேயாவன். நெறி கடந்த ஆசையால் எவரும் நீசராய் இழிந்துபடுகின்றனர். மண்ணாசையும் பெண்ணாசையும் சீவர்களை மண்ணாக்கி மடித்து வருகின்றன. பொல்லாத நசை எவரையும் புலைப்படுத்தி விடும் விதி மூண்டு வரும்போது மதி மாண்டு போகிறது யாராலும் வெல்ல முடியாதபடி அரிய பல வரங்களை நீ அடைந்த பொழுது மனிதரை எளிதாக மறந்து விட்டாய்! ஓர் மானுட மடந்தையால் இலங்கை பாழாம் என வானுயர் மொழி ஒன்று வளர்ந்து வந்துள்ளது. வானரங்களால் அழிவு நேரும் என்று நந்தியின் சாபமும் நேர்ந்திருக்கிறது முன்னம் நிகழ்ந்த சாப விளைவுகள் மூண்டு வந்து எதிரே நீண்டு நிற்கின்றன. அழிவான கெடுகுறிகளை விழி தெரியக் கண்டும் தெளிவடைந்து திருந்தாமல் களிமிகுந்திருப்பது கழிபேரிழிவாம். காலதேச நிலைகளையும் வினைவிளைவுகளையும் விரைந்து தெளிந்து உய்தி நெறிகளைச் செய்து கொள்ள வேண்டும், நேர்ந்துள்ள கெடுகுறிகளை நினைந்து உணராமல் நெஞ்சம் செருக்கி ஆரவாரங்களைச் செய்வது கொடிய அவலமேயாம்" என இவ்வாறு விபீடணன் உணர் வுரைகளை உறுதியோடு கூறினன்.

உள்ளப்பரிவும் உரிமையும் உரைகளில் பெருகி வந்திருக்கின்றன. அரசுக்கு நேர்ந்துள்ள அவல நிலைகளை நினைந்து கவலையடைந்து உள்ளம் வருந்தி யுள்ளமையால் அண்ணன்

திருந்தி உய்யும்படி பல உணர்வு நலங்களை அதி விநயமாய்ப் பரிந்து பேச நேர்ந்தான். நிலைமைகள் சிந்தை தெளிய வந்தன.

இந்திரப் பெரும்பதம் இழக்கின்றாய்! என
நொந்தனென் ஆதலின் நுவலவந்தாயினேன்

இராவணன் எதிரே நின்று விபீடணன் பல நீதி மொழிகளைப் பேச நேர்ந்ததற்குக் காரணத்தை இது காட்டி நின்றது. மந்திரிகள் முறையில் ஆலோசனைகள் சொல்ல வரவில்லை, சிந்தை நொந்தே தமையனிடம் தம்பி பேசியிருக்கிறான் என்பதை இந்த வாசகத்தால் எளிதே தெரிந்து கொள்கிறோம். உரிமை யுள்ளம் உளைந்து துடித்துள்ளது. பேசுகின்றவனுடைய நிலைமை நீர்மைகளை முன்னதாக அவன் பேச்சில் விளக்கிக் காட்சிப்படுத்தியிருப்பது கலையின் மாட்சியாய்க் கனிந்து மிளிர்கின்றது. மானச தத்துவங்களை வையம் காணக் கவி வழங்கியிருக்கிறார். எத்தனையோ உயர்ந்த உணர்வுகள் எளிதே தெளிவாக வெளி வந்திருக்கின்றன. இந்திரனை முந்துற வைத்தது அந்தரம் தெரிய வந்தது.

முடியரசாய் வாழ்ந்து வருகிற தன்னுடைய குடி வாழ்வு அடியோடு அழிய நேர்ந்துள்ளது என விழிதெரிய மொழிய நேர்ந்தான் ஆதலால் அண்ணன் எதிரே தம்பி இவ்வண்ணம் துணிந்து கூறினன். தன் மாட்சி நலனையும் ஆட்சி நிலையையும் காட்சிப்படுத்தி மாட்சிமையாக மதியூட்டியிருக்கிறான்.

தேவராசனை இந்திரனும் தலைவணங்கி நிற்கும்படி தலைமையோடு நிலவியுள்ளமையால் அந்த நிலைமையை நினைந்து சிந்திக்கும்படி இந்திரப் பெரும்பதம் என்றான்.

இராவணன் ஆண்டு வருகிற அரசபதவியின் மகிமையைக் கண்டு இம்மொழியால் உணர்ந்து கொள்ளுகிறோம். இத்தகைய திவ்விய சம்பத்து நாசமடையும்படி நீச நிலையில் நிமிர்ந்துள்ளாயே! என்று நெஞ்சு நொந்து பேச நேர்ந்தான்.

இழக்கின்றாய்! என்றது இலங்காதிபத்தியம் நாளும் இழிந்து வருதலை உணர்ந்து கொள்ள வந்தது. ஊரில் தீ விழுந்துவிட்டது என்று சபை கூட்டி ஆலோசனைகள் புரிகின்றாய்! உன் அரசே எரிந்து பாழாகி வருகின்றதே! அதனை அறியாமல் இருக்கின்றாயே! என வயிறெரிந்து கூறியிருக்கிறான்.

இழவுநிலையை விழிதெரிய விளக்கியது உளவுதெரிந்து உய்ய.

இளையவனுடைய அறிவுக்காட்சியில் கண்டதை மூத்தவனுக்கு இங்ஙனம் தெரியக் காட்டினன். சீதையைக் காதலித்த பாவத் தீயால் இராவணனுடைய செல்வம் பத்தி குலம் முதலிய எல்லா நலங்களும் அழிவடைந்து வருகின்றன, அந்த அழிவு நிலையை இங்ஙனம் ஒரு மொழியால் விநயமாக உணர்த்தினன். அரிய அரச பதவியை இழந்து வறிதே அழிந்துபோக நேர்ந்துள்ளாய் என்பான இழக்கின்றாய்! என நிகழ்காலத்தால் கூறினன். பின்னே நிகழ நேர்ந்துள்ளதை முன்னதாக உணர்ந்து அண்ணன் விரைந்து திருந்தி உய்யவேண்டும் என்னும் ஆதிரத்தோடு பேசுகின்றான் ஆதலால் காலவேகம் கால்மாறி வந்தது. அவனது அழிவுநிலை இவன் விழி எதிரே தெளிவாக விளங்கி யுள்ளமையால் அது ஒளியாமல் மொழி வழியே எளிதாய் வெளி வந்தது.

நீதியும் நெறியுமுடைய உயர்ந்த மதிமான் உள்ளம் உளைந்து உரையாடி வருகிறான் தன் குடிக்கு நேர்ந்துள்ள கேடுகளை அண்ணன் எண்ணி யுணரும்படி இரங்கி நின்று எடுத்துக் கூறுகின்றான். அவல நிலைகள் கவலைகளை விளைத்திருக்கின்றன.

தீயால் ஊர் அழிந்தது என்று உள்ளம் கவன்று உறுதி நாடி அவன் மந்திராலோசனை செய்வதை இவன் எண்ணி இகழ்ந்து ஏதுக்களை விளக்கிப் போதித்தருளினன்.

சானகி கறபினால் வெந்தது அல்லது ஓர்
வானரம் சுட்டது என்று உணர்தல் மாட்சியோ?

இலங்கைமா நகரம் தீயினால் எரிந்து நாசம் அடைந்ததற்கு உண்மையான காரணத்தை அண்ணன் உணர்ந்து கொள்ளும்படி விபீடணன் இவ்வண்ணம் செவ்வையாக உணர்த்தியிருக்கிறான். குரங்கு சுட்டதால் ஊர் எரிந்து போயது என்பது மடமையாம்; கற்புத் தீயால் அது அழிந்துள்ளது என அழிவின் உண்மையைத் தெளிந்து கொள்ளச் செய்தான்.

சீதை என்னுமல் இங்கே சானகி என்றது சனக மன்னனுடைய ஞான சீலங்களும் மான வீரங்களும் மருவி வந்துள்ள உரிமை தெரிய. பிறந்த குலமும் புகுந்த குடியும் உயர்ந்த பண்பாடுகளுடையன, சிறந்த புண்ணியங்கள் நிறைந்த அந்தப் புனிதவதியின் உள்ளம் நோகும்படி அல்லல் செய்திருப்பதே

அழிவாய மூணடுளளது என அவன தெளிவாய உணர்ந்து கொளளுமாறு அவல நிலையை விழிதெரிய விளககினன்.'

இனிப் குணவதிககு நீ இனனல இழைததுளளாய்; அந்தத தீமை கொடிய தீயாய மணடி இலஙகையை எரிததுளளது, இநத அளவில உணாநது தெளிநது அநத உததமியைச் சொநத நாயகனிடம சோதது விடுதல நலமாம, மேலும தீமையில் தாம தித்திருநதால நம குலம அடியோடு நாசமாயப போயவிடும் என று நிலைமையை நெஞசம தெளிய நினைவுறுததினை.

ஓா மானுட மடநதையால இலஙகை வேநதன மாணடு படுவான எனறு பணடு மூணடு நினற வாயமொழி ஈண்டு இனறு பலனுககு வநதுளளது. சில காலமாகக கெடு குறிகள பல நம் நாடடில கிளாநது தோனறி வருகினறன இராம பததினியைச சிறையில அடைதது வைததநாள தொடஙகி இத தேசததை நாசஙகள தொடாநது கொணடன. தீச வேலைகளைச் செயதவா எவராயினும அவா நீசராயிழிநது நாசஙகளை அடை கினறனா. உறுவதை உணராமல உளளத திமிரால ஊககி நிற பது பெரிதும எளளத தககதே

இவவாறு உறுதி நலஙகளை உரிமையுடன உரைதது வநத வன பழைய வினை விளைவை எடுததுக காடடி இனிது உணாததி னன. ஆதரவான சாதனைகளோடு போதனைகளைப போதித்தான.

## வேதவதி

வேதவதி எனபவள பேரழகி. உயாநத குண நலஙகள் நிறைநதவள. குசததுவசன எனனும முனிவனுடைய அருமைத திருமகள பருவம எயதி உருவ நலம கனிநது எழில சுரநது நினற அக குலமகளை இராவணன் ஒருநாள தனியே கணடான். காதல மீக கொணடான. கலநது களிகக அலநது விழைநதான். அவள இகழநது வெறுதது ஒதுஙகி நினறுள. இவன் நெருஙகி நினறு தனது பெருமித நிலைகளை வியந்து கூறினன்: "நான புலத் திய முனிவா மரபினன; குலததில உயாநதவன. மூன்று உலகங் களையும ஒருஙகே ஆளுகினறேன. தேவாகளும எனககு ஏவல் செயகினறனா. பெரிய சககரவாததியாகிய எனனை மணந்து கொணடு, இலங்கை அரசியாய் நீ இனப போகஙகளை நன்கு அனுபவிககலாம" என்று, இஙஙனம நயநது மொழிநதான்.

"இலஙகை மனனன இராவணன எனபெயா
புலனகள வெனற புலததியன பௌததிரன
கலஙகல சிநதைதன காதலியாயத தாா
தலஙகளுககுத தலைவியும ஆகெனருன"
(உததர காணடம)

கலவியை விழைநது இவவாறு இவன கூறிய ஆசை வாாத தைகளைக கேடடும அவள யாதும இசையாமல மோதி முனிந தாள மேலும இவன நசசி நெருஙகினன அபபருவ மஙகை அசசமடைநது அயல அகனருள இவன விரைநது போய அவளுடைய கையைப பிடிததான அவள கடுதது உதறி அடுதது எரிநது கொணடிருநத காடடுத தீயில பாயநதாள அவ வாறு அவள நெருபபில பாயுமபொழுது வயிறெரிநது வைதாள

வாடா மலரோன வரசசெருககால மறறுளளை நீ
கூடாதன சொலலிக கூசாது தீணடினையால
ஏடா உனககும இலஙகைககும உனகிளைககும
கேடாகத தோனறுவேன எனருள கிளாசிநததாள (1)

வானோா மகிழநது மலாமாமழைபொழிய
ஏனோாகள எலலாம இனிபபிழைததோம எனறியமபக
கானோா அருநதவததோா கணடு வியபபெயதத
தேனோா மொழிமடவாள செநதழலின முழுகினள (2)

அநதக கனனியின மனநிலையும மதிமாணபும நிறைகாத துளள நீாமையும இதனுல இனிது புலனும தனனை இலஙகை வேநதன தீணடி விடடான எனறு உளளம துடிதது அவனை எளளிச சபிதது எரியில வீழநது மாயநதிருககிருள

"ஏடா உனககும இலஙகைககும உனகிளைககும
கேடாகத தோனறு வேன"

என்று வெகுணடு கூறித தழலில் முழுகி மாணடு போன அநத மாதவன மகளே சீதையாய மீணடு வநது பிறநதிருககிருள

"வனனி யிடைமுழுகி மாதவததால மாசசனகன
தனனுடைய வேளவித தரணியிடை வநதுதிபப
அனனவளை முனனுள அமிழதிற பிறநதாளைப
பொனனெனனிசோ பூணிணைய விலலிறுததுக கைபபிடிததாய!"

என இனனவாறு இராமபிரானிடம அகததிய முனிவா பினனும

இனிது விளக்கியிருக்கிறார். திருமாலிடம் பேரன்புடையளாய அம்மங்கை பெருகியிருந்தமையால் மறுபிறவியில் திருவினோடு வோடு கலந்து இந்த அவதார மூர்த்தியை மருவி மகிழ்ந்தாள். கருதிய படியே யாவரும் உறுதி நலங்களை அடைந்து வருகின்றனர். முன்னம் ஆசைகொண்டு மோசம்போன இராவணன் மீண்டும் தீண்டு நாசமடைய நேர்ந்துள்ளான். புனிதமான அந்தப் புண்ணிய வதியை முன்பு தீண்டிச் சாபத்தைப் பெற்றான்! இன்று தீண்ட முடியாதவனாய்த் திண்டாடித் தியங்கி மன்றாடி மயங்கி மறுகி அலைந்து மாண்டுபட மூண்டு உழலுகின்றான். நெடிய வாழ் நாளைப் பெற்றவன் கொடிய காமநோயால் முடிய நேர்ந்திருக்கிறான். பழகிய வாசனைகளும் வினையின் விளைவுகளும் விசித்திர கதிகளில் வேலைசெய்து வருகின்றன.

அரசுரிமையைப் பெற்று திக்குவிசயங்கள் செய்யநேர்ந்த போது வேதவதியைத் தீண்டி இராவணன் ஏதமடைந்து வந்ததை விபீடணன் நன்கு அறிந்திருந்தான். ஆதலால் அதனை இங்கே எதிர் எடுத்துக் காட்டினான். காட்டியிருக்கும் காட்சி உணர்வு நலங்களை ஊட்டி ஒளிசெய்ய வந்தது.

தீயிடைக் குளித்த அத் தெய்வக் கற்பினாள்
வாயிடை மொழிந்த சொல் மறுக்க வல்லமோ?

வேதவதி வேதனையோடு தீயுள் மூழ்கும்பொழுது வாய் திறந்து சொன்ன சொல்லை இன்னவாறு உன்னி உணரச்செய்தான். குளித்த என்றது நீருள் மூழ்கியதுபோல அவள் நெருப்புள் மூழ்கி மறைந்துள்ள நிலைமை தெரிய வந்தது. காம இச்சையோடு தன் உடலைத் தீண்டி விட்டானே! என்று உள்ளம் துடித்து உடனே அவள் உயிரைவிட்டு மாண்டு போயிருத்தலால் தெய்வக் கற்பினாள் என்றான்.

வீடணன் நல்ல நீதிமான் ஆதலால் நெறியுடையாரை உரிமையோடு உவந்து புகழ்ந்து பேசிவருகிறான். "ஆசைமீதூர்ந்து நீ தொட்டாய்! அப்பொழுதே அவள் ஆருயிரைவிட்டாள் சாக நேர்ந்த சமயம் அவள் சாபமிட்டது நம்மைச் சும்மா விடுமா? அந்த தெய்வக் கற்பினள் அன்று வைத வைவை நினைந்து என்றும் நான் உளைந்து வருகிறேன். விளைவுகளை உணர்ந்து திருந்தாமல் வெய்ய துயரங்களை மேலும் மேலும் செய்து வருவது

ஐயோ! அண்ணா! அடியோடு நாம் அழியவே நேரும்; முடிவு தெரிந்து விரைந்து இரங்கியருளுங்கள்!" என்று பரிந்து வேண்டினான். பரிவெல்லாம் உரிமை தோய்ந்து உறுதி சூழ்ந்துள்ளன.

உனக்கு யான் நோய்

என்றது அந்தத் தூயவள் மாயும் போது சொன்ன வாய் மொழியை இங்ஙனம் குறிப்பாகச் சுட்டிக் காட்டியது கூர்ந்து ஓர்ந்துகொள்ள வந்தது. "அடே! இராவணா! உனக்கும், இலங்கைக்கும், உன்குலத்துக்கும் கேடாக வந்து நான் தோன்றுவேன்" என்று கோபாவேசமாய் அவள் கூறிய வாய்மொழியை நோய் என்னும் ஒரு சொல்லால் மருமமாய் உணர்த்தினான்.

மந்திரிகள் முதலாகப் பலர் குழுமியுள்ளமையால் அந்த நிந்தை மொழியை இந்த முறையில் அவன் சிந்தை தெளியச் சொன்னான். அண்ணனுடைய தலைமைத் தன்மைக்கு இழுக்கு நேராதபடி நிலைமையை விழுப்பமுடன் விளம்பியருளினான்.

ஆயவள் சீதை.

அன்று தீயுள் மாய்ந்த அந்த வேதவதியே சீதையாய் இந்த உருவில் இங்கே வந்துள்ளாள். திருவின் அமிசமாய் அவதரித்துள்ள இப் பெண்ணரசி விண்ணரசு உய்யச் சிறை புகுந்திருப்பதாகத் தேவர்யாவரும் உள்ளம் மகிழ்ந்திருக்கின்றார். இந்திரன் முதலிய எல்லாரும் இலங்கை அடியோடு நாசமடைந்து போம் என எதிர் பார்த்து நிற்கின்றனர். நிலைமையை ஒரு சிறிதும் உணராமல் நெஞ்சம் திமிர்ந்து நிற்பது நெடிய துயரமாம். கொடிய நாசங்கள் விளைய நேர்ந்திருக்கின்றன. விளைவுகளை ஓர்ந்து திருந்தாமல் இங்கே மந்திராலோசனைகளைச் செய்து கொண்டு மனம் களித்திருப்பது மதிகேடேயாம் என மதி நலம் உரைத்து மேலும் விதி முறைகளை விரித்து விளக்கினான்.

## வந்துள்ளவன் நிலை.

"சீதை நாயகனாய் வந்துள்ள இராமனது சீர்மை நீர்மைகளை நாம் கூர்மையாக ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். எதிரி என்று எளிதாக எண்ணின் அது பழியும் பாவமும் பண்ணிய படியாம். அவனுடைய பிறப்பும் சிறப்பும் அளவிடலரிய மகிமைகளையுடையன. அவன் பெரிய சக்கரவர்த்தித் திருமகன்.

இந்திரன் பகைவனாகிய சம்பராசுரனை வென்று வானுலகத்தை வாழவைத்தருளிய அந்தத் தசரத மன்னனுடைய இனிய குலம் மனுவின் முதலாக மாண்பு மிகப் பெற்றது. பகீரதன், சகரன், பிருது, ககு, மாந்தாதா முதலிய முடிமன்னர்கள் நெடிதோங்கிப் படியெங்கும் ஒளிசெய்துள்ள விழுமிய குடியில் இராமன் அவதரித்துள்ளான். முழுமுதல் பரமனே மனித உருவில் அக்குல மகனாய் உலகில் வந்துள்ளான் என அமரரும் முனிவரும் கருதி மகிழ்ந்து உறுதிசூழ்ந்துள்ளனர். தீயவர் நாசமடைந்து ஒழியவும் நல்லவர் தேசுமிகுந்து வாழவுமே அக்கோமகன் தோன்றியிருக்கிறான் என ஆன்றோர் யாவரும் தேர்ந்து தெளிந்து நிற்கின்றார். அழகு அறிவு ஆற்றல் முதலிய நிலைகளில் எவரும் தனக்கு நிகரில்லாதபடி அப்பெருமான் உயர் நிலையில் ஒளி மிகுந்துள்ளான். கலைகள் பலவும் அவனிடம் வந்து குடி கொண்டுள்ளன. அரிய வில்லாளி. பெரிய போர் வீரன். அகில மங்கள குணகண சொரூபியான அந்தப் புனித மூர்த்தியைக் கண்டவர் மனித இனத்தை வாழ்த்தி மகிழ்ந்து வருகிறார் அசகாய சூரன் என அவனை அமரர்யாவரும் துதி செய்து தொழுகின்றார். அவனுடைய பாணங்கள் அகில வுலகங்களையும் ஒருங்கே வெல்ல வல்லன. கடல் கடந்த வாலியின் உடல் கடந்து உயிருண்டு போன அந்த ஒரு வாளியை வீரவுலகம் இன்றும் வியந்து தொழுது வருகின்றது. கோதண்ட பாணியான அவ் வீர வள்ளல் நாளும் தென்திசை நோக்கி வந்து கொண்டிருக்கிறான். கானகம் கடந்து வருகிற அம்மான் வீரனால் வானகம் குடியேறி வாழும்; அரக்கர் குலம் அடியோடு மாளும் என ஞானமுனிவர்கள் கூறி மகிழ்கின்றனர். சானகியை நீ எடுத்து வந்தது முதல் நாசமான கெடுகுறிகள் பல இங்கே தோன்றியிருக்கின்றன. நமது நிலைமையை நினைந்து தேவர்கள் களித்து வருகின்றனர். முன்னர் அஞ்சி ஒடுங்கி நின்றவர் எல்லாரும் இப்பொழுது அச்சம் தீர்ந்து உச்ச நிலையில் உலாவித் திரிகின்றனர் உறுதி நலனை உணர்ந்து விரைந்து திருந்தியருளுக; அயர்ந்து நின்றால் கொடிய அழிவுகள் கடிதில் நேர்ந்து விடும்; முடிவு நேருமுன் விடிவு காணுக” என இவ்வாறு விளிவுகளை விழிதெரிய மொழிந்தருளினன்.

பலவகை நிலைகளையும் காரிய விளைவுகளையும் கருதி உணரும்படி இராவணன் எதிரே வீடணன் உறுதிகூறிவருவது உரிமை

கூர்ந்து வருகிறது. நேர்ந்துள்ள பகைவரின் பான்மை மேன்மைகளை ஓர்ந்து தெளியுமாறு உரைத்துள்ள உணர்வுரைகள் உயர் நலங்களுடையன. இருவரும் ஒருவரும் எதிர் இலாதார் இராம லட்சுமணர்களைக் குறித்து இவ்வாறு உரைத்திருக்கிறான்.

எந்த வகையிலும் யாரும் ஒப்பில்லாதவர் என அவரது உயர்ந்த உத்தம நிலைகளை வித்தக விநோதமாய் உணர்த்தியுள்ள நுட்பம் உய்த்துணர வந்தது.

அவரது உருவ எழிலை நோக்கின் அழகின் அதிதேவதையான மன்மதனும் எதிரே இழிவுற நோக்கினான். அறிவு சீலங்களிலும் அதிசய நிலையினர். வீரத்தில் எவரும் தமக்கு நிகர் இல்லாதவர். ஒருவரும் என்றதில் உள்ள உம்மை அமரர் முதலிய அனைவரையும் அடக்கி நின்றது. அவரது அரிய பல வெற்றி நிலைகளை ஒரு முற்று உம்மையால் உய்த்துணர வரைந்தான். எவரும் எதிரிலாத அவரை எதிரி ஆக்கி நாம் எதிர்த்து நிற்பின் அதனால் நம் குலம் அழிந்தே போம் எனக் குறிப்பித்தான்.

முனிவரும் அமரரும் முழுதுணர்ந்தவர்களும் முற்றும் மற்றும் நினைவரும் தகையர், நம் வினையினால் மனிதராய் எளிதுநின்றார்

பகைவராய் மருவி வந்துள்ளவரது வகைகளை இவ்வாறு வகுத்துக் கூறினான். முனிவர் என்றது மன்னு சீலர்களான இருடிகளை. மகரிஷிகளும் அறிய முடியாத மகான்கள் என்றது அவரது அரிய மகிமைகள் தெரிய வந்தது.

முனிவர்கள் தேவர்கள் தத்துவஞானிகள் முதலிய மேலோர்கள் யாவராலும் இன்ன நிலையினர் என யாதும் எண்ணி உணர முடியாத நுண்ணியர் என அந்தப் புண்ணியரை இவ்வண்ணம் கண்ணியமாய்க் காட்டியருளியது கருதியுணர வுரியது.

மனதால் நினைக்கவும், அறிவால் அறியவும் அரியர் என்றதனால் அவரது நீர்மையை வாயால் பேசி அறிய மூண்டது பெரிய பேதைமையாம் என்பது பெறப்பட்டது. முழுதும் உணர்ந்தவர்களாலும் சிறிதும் உணர முடியாது என்பது அவருடைய அரிய பெரிய நிலைமையும் தலைமையும் ஓரளவு ஓர்ந்து கொள்ள வந்தன.

தேவர் முதல் யாவராலும் அறியமுடியாத அவர் மனிதராய் ஈண்டு வந்தது ஏன்? என வினவின், அதற்கு உறுதியான விடையை இறுதியில் அதி வினயமாய்க் குறித்தான்.

நம் வினையினால் மனிதராய எளிது நின்றார்.

அமரரும் அறிய அரிய அவா அனைவரும எளிதே காண மனித வுருவில மருவி இவவுலகில வநதுளள உளவு தெரிய இது உணாததி நினறது. வினையின விளைவுகள நினைவு கூர வநதன.

பாவகோடிகளை நீககிச சீவகோடிகளைக காபபாறறத தேவ தேவனை பரமனே ாணடு அவதரிதது வநதிருக்கிறான் என இராமனது வரவை இராவணன கருதி யுணருமபடி விபீடணன் இங்கே விததக விநயமாய விளககி யிருககிறான.

யாவரும அறியாத அநத ஆதிமூலபபொருள நாம செயத தீவினையினாலேதான எலலாரும காண இநத மானுட வுருவில் எளிதே வெளிவநதுளளது எனபான நம் வினையினால என்றான். தன்னையும உடபடுததித தனமைப பனமையில நம என்றது அணணனூ உரிமையுடன உளளம திருநதி உயதிகாண. கிழமை தழுவிக கேணமையுடன அவன மேனமை பெற இங்ஙனம் சீர்மையுடன மொழிநதது இவனது பானமை தெரிய வநதது.

அமரா செயத புணணியமும அரககா பணணிய பாவமும் ஒருஙகு கூடி நினறே இராமனைப பிறககச செயதது எனனும பேருண்மையைப இபபேரறிவாளனும ஓரளவு உரைததருளினன.

“விரிநதிடு தீ வினைசெயத வெவவியதீ வினையாலும
அருஙகடையின மறைஅறைநத அறமசெயத அறததாலும
இருஙகடகக கரதலதது இவ எழுதரிய திருமேனிக
கருஙகடலைச செஙகனிவாயக கவுசலை எனபாள பயநதாள.”

சனகனிடம் விசுவாமிததிரா இனனவாறு கூறியிருககிறாா.

கோசலை பெறறிருககிற பேறறையும, இராமன பிறநதிருக் கிற பிறபபையும இதில உணாநது வியநது உவநது நிறகிறோம. இநதக கவி எவவளவு சுவைகளை யுடையது! எததனை நுண் பொருளகள தோயநதிருககினறன! தததுவ நிலையமான விததக வசனங்களில விரிநத வுணாவு நலஙகள சுரநது மிளிாகினறன. உள்ளம ஊன்றி ஓாநது கூாநது உணாநது கொளள வேணடும.

எழுதரிய திருமேனிக் கருஙகடல என இராமனை முனிவா மனம் மகிழநது வனைநது காட்டியிருககுமகாடசி நாளும நினைநது நினைந்து நெடிது நோக்கி எவரும உவநது திளைக்க ஒளி பெற றுளளது. மகான வாயமொழி மகிமைகளை வெளி செயதது.

தீயவர் நாசமாய் அழிந்து ஒழியவும், நல்லவர் சேமமாய் உவந்து வாழவும் இராமன் பிறந்தான என்னுமல் தீவினையையும் நல்வினையையும் பாவனைக்குக் கொணர்ந்தது மாதவரின் சிவ தயையையும் மேதகவையும விளக்கி நிற்கின்றது.

கொடிய பாவங்கள் அடியோடு அழியவும், இனிய தருமங் கள் நெடிது நிலவவும அக கோமகன் இப பூமியில தோன்றி ளுன் என்றமையால் அவனது தோற்றமும் ஏற்றமும் ஊற்ற மாய் ஓர்ந்து கொள்ள வந்தன. அரிய பிறவியில் வந்தவன உரிய உறவுகளில் மருவி ஒளி புரிந்து வருகின்ருன்

"அரக்கர் பாவமும அல்லவர் இயற்றிய அறமும
துரக்க நல்லருள துறந்தனள்"

என இரக்கம இன்றிக கைகேசி இராமனைக் காட்டுக்கு அனுப்பிய காட்சியைக் கவி அங்கே காட்டியருளினர். அந்த இடங்களதோறும நினைவுறுத்தி வருகிருர். அந்த முறையில் விபீடணன வாக்கில வைத்து இங்கே இவவாறு வலியுறுத்தினர.

அரச பதவியைத துறந்து இராமன் காட்டுக்கு வந்தது அரக்கர் குலத்தை அழித்து அறத்தை நிலை நிறுத்தவே என்பது நேரே தெளிய நேர்ந்தது.

நம்வினையினல என விடணன விநயமாயச சொல்லியிருப பினும அவன நினைவில நினையாத பொருள இதில இனிது மருவி யுள்ளது. கருமமும தருமமும் கருதி யுணர வந்தன.

இராவணன செய்த தீவினையினலும, விபீடணன செய்த நல்வினையினலும இராமன காடு கடந்து தென்திசையை நாடி வருகிருன என்பது அவனுடைய வாயமொழியில ஊடுருவி நின்றது. தருமவான உரை மருமமாய மலர்ந்தது.

தீவினையாளர் திருவிழந்து மாளவும, நல்வினையாளர் திரு வடைந்து வாழவும அப்புனிதன் உருவடைந்து வருதலை அனுப வங்களால் நாம் இனிதறிந்து வருகின்ருேம். அரக்கர் குலம அடியோடு அழிந்து படவும, விபீடணன் முடிசூடி அரசாள வும மூண்டு வருதல கண்டு வெளியாய நின்றது

வில் ஏந்தி இங்கே மனிதராய வருகிறவர் முனிவரும அமர ரும் அறியமுடியாத தனி நிலையினர் என அவரது அதிசய மகி

மைகளைத் துதி செய்து கூறி மேலும் வீர பராக்கிரமங்களை வித்தக விநயமாய் உய்த்துணர வுரைத்தான்.

அகில வுலகங்களோடு சிருட்டி கருத்தாவாகிய பிரமாவையும் ஒரு கொடியில் படைப்பேன் என்று பொங்கி எழுந்த தவ ராஜ சிங்கமாகிய விசுவாமித்திர முனிவர் உவகை மீதூர்ந்து இராமனுக்கு உரிமையுடன் அரியபல திவ்விய ஆயுதங்களை உதவியிருக்கிறார். ஈசனிடமிருந்து பெற்ற தேசுடைய தெய்வப் படைக்கலன்களைக் கோசிகர் ஆசையோடு தாசரதிக்குத் தந்தருளினர். அந்த மாதவர் கையிலிருந்து இந்த மான வீரன் கைக்கு வந்துள்ள போர்க்கருவிகள் யாருக்கும் அளவிடலரியன. மந்திர முறைகளோடு கூடிய அந்த அம்புகள் அதிசய ஆற்றல்களுடையன. எல்லா உலகங்களையும் ஒல்லையில் அழிக்க வல்லன.

இமைப்பளவில் எவ்வுலகும் யாவும் நாசமுற்றிட நடப்பன.

இராமனுடைய பாணங்களின் வலி நிலைகளை இங்ஙனம் தெளிவாக உணர்த்தியுள்ளான். அம்புகளுடைய அற்புத ஆற்றல்கள் நமக்கு மிகவும் அதிசயங்களை விளைத்து நிற்கின்றன.

கண்ணை இமைத்து விழிக்குமுன் மண்ணுலக்

ஆலகங்களையும் அண்ட கோடிகளையும் அடியோடு நீறாக்கி விரைந்து மீளும் என்பான் இமைப்பு அளவில் எவ்வுலகும் யாவும் நாசமுற்றிட நடப்பன என்றான். ஈசனிடமிருந்து வந்தன, நாச வேலைகளில் முந்தி நின்றன. அளவிடலரிய அதிசயங்களுடைய அழிவு கருவிகள் அந்த வீரன் கையில் உள்ளன என்று இந்த விவேகி இங்ஙனம் விளக்கியது அண்ணன் சிந்தை தெளிந்து தீமை நீங்கி நன்மையோடு வாழ.

## அணு குண்டும் இராம பாணமும்.

இக் காலத்தில் தோன்றியுள்ள அணுகுண்டையும் முற்காலத்திலிருந்த இராமபாணத்தையும் ஈண்டு இணைத்து எண்ணி இயல் செயல்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள நேர்ந்துள்ளோம். அணுகுண்டு என்னும் பேரைச் சிலகாலமாக நாம் கேட்டு வருகிறோம். புதிய கேள்விகள் அதிக பயங்கரங்களை விளைத்து வருகின்றன. அண்டம் கலங்கச் செய்யும் கருவிக்கு அணுகுண்டு என்று பெயர் வைத்திருப்பது இயற்கை விநோதமாயுள்ளது.

"ஒரு அணு குண்டை வீசினால் நானூறு மைல் சுற்றளவி லுள்ள சீவராசிகள் யாவும் நாசமாய் மடிந்துபடும்; மரம் கொடி செடி முதலிய தாவரங்களும் அடியோடு அழிந்துபோம். யாண்டுகள் பல கழிந்தாலும் மீண்டும் ஒரு பூண்டும் ஆண்டு முளைக்காது; என்றும் சுடுகாடாகவே அந்த இடம் படுநாசம் அடைந்திருக்கும்" என யாண்டும் பறை சாற்றுகின்றனர். இத்தகைய கொடிய நாசகாரிகளை விளைத்துக் கொள்வதிலேயே இது பொழுது தேசங்கள் விரைந்து நிற்கின்றன. "எங்களிடம் அணுகுண்டுகள் உள்ளன" என்று ஒவ்வொரு தேசத் தலைவரும் வெவ்வலிகளை விரித்து விளக்கித் தெவ்வர்களை அச்சுறுத்தி வருகின்றனர். அவருள் அமெரிக்க அதிபதியும், ரஷியத் தலைவரும் முன்னணியில் மூண்டு நிற்கின்றனர். நாசங்களையும் நீசங்களையும் வளர்த்துக் கொண்டு தங்கள் தேசங்களைப் பாதுகாத்து வருவதாக அவர் பேசி வருவது பெரிய அதிசயமாய்ப் பெருகிவருகிறது. மெய்ஞ்ஞான வுணர்வு இல்லாத இந்த விஞ்ஞான அறிவு தோன்றியிருப்பதைவிடத் தோன்றாமல் ஒழிந்திருந்தால் உலகத்திற்குச் சேமமாய் அமைந்திருக்கும். "பிறிதின் நோய் தன் நோய் போலப் போற்றாவழி அந்த அறிவினால் ஆகுவது உண்டோ?" (குறள் 315) என்று தேவர் வினவியிருப்பது இங்கே சிந்தனைக்கு உரியது. அருளும் அன்பும் தோயாத அறிவு மருளும் கொடுமையுமே மருவியிருக்கும். ஆதலால் அந்த அறிவால் எவ்வழியும் வெவ்விய துயரங்களே விளையும், யாண்டும் அது அழிவையே உண்டாக்கும்.

கொடுமை தோய்ந்த கூரிய விஞ்ஞானத்தினும் இனிமை தோய்ந்த நேரிய அஞ்ஞானம் சீரிய பேனமையாய்ச் சிறந்து திகழ்கின்றது. சீவதயை சேராதது பாவமய மாகிறது.

நீதி முறைகளைத் தழுவியெழுந்த பொழுது அழிவு வேலை தருமமாய் மருவி வருகிறது, அவ்வாறு தழுவாத வழி அது பழி பாதகமாய் விளைகிறது. களைகளைக் களைந்து நீக்கிப் பயிர்களை வளர்ப்பதுபோல தீயவர்களை அழித்து ஒழித்து நல்லவர்களைப் பேணியருள வில் எடுத்தமையால் இராமன் வீர வள்ளல் என்ப பேரும் புகழும் பெற்றுப் பெருமகிமை யுற்றுள்ளான்.

தன் நாட்டில் உள்ளவர்கள் பொல்லாதவர்களால் யாதும் அல்லல் அடையாதபடி பாதுகாத்தருளுவதே சிறந்த அரசனுடைய உயர்ந்த ஆட்சிக்கும் மாட்சிக்கும் அடையாளமாம்.

இநநாளில இநநாடடில எஙகணுமே
'பகைதீமை எழுநது பொஙகி
எநநாளும எநநாடடும யாணடுமே
காணுத இடாகள ஓஙகி
அநநாளில் வாழநதவாகள யாருமே
அறியாத அவஙகள நேரே
நநநாளில காணகினறோம நலமகணடு
நாமமகிழும நாளஎந நாளோ? (1)

தாயிருகக மனைவிஅழ நத தனயாகளைக
கொலகினறா, தழுவி அனபாயச
சேயிருககத தாயாதமைச சீறிவதை
செயகினறா, தீமைபொஙகிப
பேயிருககும சுடுவனமபோல நாடெஙகும
பழிகளமாயப பெருகி அநதோ
தீயிருககும நெஞசோடு தேசமககள
திரிகினறா தீமை எனனே! (2)

தஙகளுயா மானததைத தாமகாககக
மாடடாமல தவிததது நொநது
மஙகையாகள மணமடிநது வனகொலையாய
மாளகினறா, மதிபபும கறபும
பஙகமுற வாழவதினும படுசாவே
இனியதெனப பதைததுச சாகும
தஙகையரை நோககணடும சிஙகமென
வாழகினறோம தகைமை நனறே! (3)

மாதவாகள அருநதவமும மஙகையாதம
பெருஙகறபும மனனன காபபால
ஆதரவாய அமைநதுவரும, அவைபழுதாய
அவலமடைந தழியின அநத
ஏதமுறு நாடுமழை இலலாமல
எவவழியும இழிவே கணடு
பாதகமாய அழியுமெனற பழமொழியைப
பாராளவாா பாரா அநதோ! (4)

கொலையிலே கொடியவரைக கொனறொழிததலை
 பைஙகூழுககுக களைகளைநது
நிலையிலே அதைவளாககும நீரமைஎன
 அரசுககு நேரமை யாகத
தலையிலே அமைநதிருககும தனிநீதி
 தனையுணாநது தறுக ணேறு
புலையிலே புகுவாரை அடியோடு
 போககாரேல பூமி எனனும? (5)

நீதிககு நிலையமாய நிறையருளுககு
 உறைவிடமாய நேரமை வாயமை
போதிககும தருமஞசுண புனிதனும
 ரகுராமன போரவில வாஙகிப
பேதிககும பொலலாத அரககாகுலம
 இலலாமல போததெறிநதான
மாதிககும புகழுகினற மகிமையொடு
 நினறுளளான மனனா ரேறே. (6)

எலலாககும ஒருபடியாயக கடவுளேபோல
 கருணைசெயயாா, எவாககும அனனா
சொலலாலும செயலஇயலும அயலளநது
 தெளிவாகச சீரமை செயவாா,
பொலலாரைப புலையொடுககிப புலமியரைத
 தலைஅடககிப புனித மான
நலலாரைப பேணுதாா நாடாடசி
 புரிவதெலலாம நாச மாமே. (7)

கண்ணை இமை காப்பதுபோல காசினியில்
 யாவரையும கருதி நோககி
மண்ணையினி தாகமுனனம மனனர்பலர்
 ஆண்டுவநதாா, மகிமை வாயநத
புண்ணியமா பூமினனும இநதியா
 இபபொழுது பொலிவு குன்றி
எண்ணியுயா ஒளியின்றி இருள்கள்நிறைந்
 துள்ளதே இன்பம் என்றோ? (8

(இந்தியத்தாய் நிலை)

இன்றுநான்று நமது நாட்டு நிலைமை நினைந்து அறிஞர் பலர் இவ்வாறு உள்ளம் உளைந்துள்ளனர். தலைமையான பாதுகாப்பு முறைகள் தகுதியாக அமைந்த போதுதான் அந்நாடு சிறந்த நிலைமைகளில் உயர்ந்து நிரந்தரமாய் நிலவி விளங்கும். தீமைகளை விரைந்து ஒழித்து நன்மைகளைப் புரந்து வருவதே அரச நீதியின் தலை சிறந்த கடமையாம் ஆட்சி மாட்சியுற வேண்டுமாயின் அது நல்ல காட்சிகளைக் கருதி யுணர்ந்து உறுதி புரிய வேண்டும்.

அழிவுக் கருவிகள் பெருகி வருதல் போல அநீதிகளும் முறுகி வருகின்றன. நீதி முறையோடு மருவிவரின் அந்த அழிவு வேலை விழுமிய மகிமையாய் ஒளி பெறுகின்றது.

எவ்வுலகும் நாசமுற நடப்பன என இராமபாணங்களை வீடணன் வியந்து புகழ்ந்து உவந்து குறித்தான். தரும நீதிகளோடு தழுவி வருதலால் அவை பெருமை மிகப் பெற்றன. அணுக்குண்டு அங்ஙனமின்றிக் கொடிய நாசமே செய்தலால் அது படு நீசமாய் நின்றுள்ளது தீமைகள் நீங்கி நன்மைகள் ஓங்கி வர வேண்டும்.

வீடணன் நல்ல நீதிமான் ஆதலால் தமையனுக்குத் தக்க வாறு புத்திமதிகளைப் போதித்து வருகிறான். எதிரியினுடைய நீர்மை சீர்மைகளைக் கூர்மையாக ஓர்ந்து கொள்ளும்படி குறித்து மொழிகின்றான் "அரக்கர் செய்கிற தீமைகளைப் பொறுக்க முடியாமல் உலகம் மறுக்க முற்றிருத்தலால் சக்கரவர்த்தித் திருமகனான இராமன் உக்கிர வீரமாய் நம மீது உருத்து வருகிறான்; அவனுடைய ஆயுத பலங்கள் அதிசயங்களை யுடையன" என இங்ஙனம் துதி செய்து சொல்லினான்.

அம்புகளின் அதிசயம்

நாவினால் உலகை நக்கிடுவ, திக்களவிட்டுருகிய,நாளும்
மேவு தீவிடம் உயிர்ப்பன, வெயிற்பொழி எயிற்றன, அவிரா
ஆவமாம் அரிய புற்றுறைவ, முற்றறிவருக்கு அழிவுசெய்யும்
பாவகாரியர் உயிர்ப் பதமலால் இரைபெறு பகழி நாகம் (1)

மாதவர் மகிழ்ச்சி

சொல்லரும் பெரியமாமுனிவரென்பவர்கள் தமதுணையிலாதார்
எல்லாரும் பெரியதோள் இருவரே தமரொடும் உலகம் யாவும்
வெல்வரென்பது தெரிந்தெண்ணினார் திருந்தார்வோர் முற்றதலுமவிக

கொலவாரென்றுணாதலால அவரைவநதணைவதோரியையபுகொண்டார்

## தேவாகளின திமிர்

துஞசுகின் றிலாகளால இரவுநன் பகலும நிற சொலல ஓலகி
நெஞசுநின் றயருமஇந நிருதா போ சனகியாம நெடிய தாய
நஞ்சுதின றனாகளதாம நணணுவாா நரகமென றெண்ணி நமமை
அஞ்சுகின் றிலாகள நம அருளலால சரணிலா அமரா அமமா! (3)

## பகைமையாளா பாாவை

சிநதுமுந துலகினுககு இறுதிபுககு உருஒளிதது உலைதல செயவாா
இநதுவின் திருமுகதது இறைவிநம உறையுளாள என்ன லோடும
அநதகன் முதலினோா அமரரும முனிவரும பிறரும அஞசாா
வநதுநம நகரமும வாழவையும கணடுகண்டு அகலவா மன்னோ. (4)

இராமனோடு பகைமை மூணடபின்பு இலங்கையில் நிகழ்ந துளள நிகழசசிகளையும முனனம அஞசி ஒடுஙகி அடஙகி யிருநத தேவாகள இபபொழுது அசசம யாதும இனறி உச்ச நிலையில் உலாவி வரும திறஙகளையும இஙஙனம எடுததுக காட்டியிருக் கிறான. உரிமை யுரைகள உள்ளம திருநதி உறுதி காணுமபடி மருவி வநதுள்ளன இராம லக்குவருடைய அம்புப் புட்டில்க ளாகிய புறறுகளில பாணஙகளாகிய பாமபுகள உறைநதிருக் கின்றன. அவை நாவினுல உலகஙகளை நக்கி நாசப்படுதத வல லன; திக்குகளைத தீயப்பன; கொடிய விடஙகளைக் சக்குவன, ஒளி பொழிகினற பறகளையுடையன, பாவிகளுடைய உயிாகளை யே இரையாக உணணுவன என உருவகம செயது உரைததிரு க்கும் அருமைகள கருதி யுணர வுரியன. எதிரியின நிலைகளையும் வலிகளையும் போாக கருவிகளின அதிசய மகிமைகளையும தெளி வாக உரை செயதருளினன.

பாவ காரியா உயிாபபதம அலால இரைபெறு பகழிநாகம்.

தீவினைகளைச செயகினற பாவிகளின ஆவிகளையே இரை யாகக கொளளுமலலது வேறு ஒனறையும உணணுது என இராமபாணததின தனமையை இவவாறு உணாததியருளினன. பாம்பு காறறைப பருகும இயலபினது, இநதப பகழி நாகம் அரககா உயிாக காறறை உணணும என இயறகை நிலையை எண்ண வுரைததான. அறிவுரைகள உறுதி தெரிய வநதன.

உயிர்ப்பதம் = உயிர் ஆகிய உணவு. பதம் = சோறு.

அரக்கர் குலம் பாவத்தின் வாய்த்த தேரையாய் இராமபாணத்தின் எதிர்ப்பட்டு அழிந்து ஒழியும் என்பது உணர்ந்து கொள்ள வந்தது. பாவ காரிகளின் ஆவிகளை உண்ணுதற்கு அம்புகள் அவாவியுள்ளன என்றதனால் அவரது அழிவு நிலைகளை விழி தெரிய நேர்ந்தனன்.

சனகியாம் நஞ்சு தின்றனர் நரகம் நண்ணுவார்.

தங்களுக்கு அஞ்சி அடங்கி ஏவல் புரிந்திருந்த தேவர்கள் இவ்வாறு எண்ணி இப்பொழுது அஞ்சாமல் திரிகின்றனர் என அமரர் நிலைமையைத் தமையன் அறிய உரைத்தான். நஞ்சு தின்றவர் தாமாக இறந்து படுதல் போல சீதைக்குத் துயர் செய்த வரும் உயிர் மாய்ந்து ஒழிவர் என்பது உணர வந்தது. உத்தமக் கற்பரசியின் உள்ளம் துடிக்கச் செய்த பாவத்தால் இராவணன் உயிர் துடித்து அழிய நேர்ந்துள்ளான் தமையன்; அந்த அழிவு நிலையைத் தம்பி பரிவோடு தெளிவுறுத்தினன். இம்மையில் பழியும் துன்பமும் அடைந்து மறுமையில் நரகமும் அடைவன் என்றது செய்துள்ள பாவத்தின் வேகம் தெரிய வந்தது.

தலைவன் ஒருவன் செய்த பாவத்தால் அரக்கர் குலம் முழுவதும் நாசமடைய மூண்டுள்ளமையால் அந்தக் கேட்டைக் கிளர்ந்து காட்டினன். நேர்ந்துள்ள அழிவுகளை ஓர்ந்து உணராமல் நெஞ்சம் களித்திருப்பது நெடு மூடமாம் எனக் கடுமையாக இகழ்ந்து கூறினன்.

அமரர் நம்மை அஞ்சுகின்றிலர்கள்.

முன்னம் நமக்கு அஞ்சி ஊழியம் புரிந்து வந்த தேவர்கள் சில காலமாக அந்த அச்சம் நீங்கி நம்மை அவமதித்துத் திரிகின்றனர்; அமரர் இவ்வாறு திமிரி நடப்பது சீதை இலங்கை புகுந்தது முதல் தொடங்கியுள்ளது.

நஞ்சு தின்றவன் விரைந்து இறந்து படுவான் என நினைந்து அவன் சாவதை ஆவலோடு பார்த்து நிற்பது போல் அமரர் உன்னை நோக்கி நிற்கின்றனர் என்பது பகைமையாளரின் பான்மை தெரிய உரைத்தான். நாளும் நாசமடைந்து கொண்டே இருக்கின்றாய்! அந்த நீச நிலையை உணர்ந்து கொள்ளவில்லையே என்று பாசம் மீதூர்ந்து பரிந்து பேசியிருக்கிறான்.

நம் அருள் அலால் சரண் இலா அமரர்

என்றது அரசரது தலைமையும் அமரரது நிலைமையும் ஒருங்கே அறிய வந்தது. அரக்கர்களுடைய தயவை எதிர் பார்த்து அடிமைகளாய் அமரர்கள் உயிர் வாழ்ந்து வருதலால் இவ்வண்ணம் உரையாட நேர்ந்தான். நமக்கு ஊழியம் செய்து வருகிற அமரர்கள் பழைய நிலைமையில் இல்லை; புதியராய் அவர் தலைமை எய்தி உள்ளனர், அவ் உண்மையை உணராமல் ஊனமுற்றிருப்பது புன்மையாம் என்பது புத்தி புகட்டியது. உய்த்துணர்ந்து உய்தி காண. உரைகள் உள்ளம் தெளிய வருகின்றன.

நம்மையே தஞ்சம் என்று நாடியிருந்தவர் நமக்குக் கேடு சூழ்ந்து பீடும் பெருமையும் பெற்றுப் பெருகி நிற்கின்றனர், அந்த நிலைமையை உணர்ந்து தெளிந்து நம் தலைமையைப் பேணிக் கொள்ள வில்லையானல் நம் அரசகுடி வரிசை குலைந்து அடியோடு அழிந்தே போய் விடும் என்று முடிவு தெரிய உரைத்தான்.

பகையாளிகளுடைய உயர்வை எடுத்துக் காட்டினுல் உள்ளம் திருந்தி அண்ணன் விரைந்து பயன் படுவான் என்று கருதி இவ் வண்ணம் விநயமாக இத் தம்பி இனிது மொழிந்தான்.

எவ் வகையினுலாவது தமையனுடைய உள்ளத்தைத் திருத்தி நல்ல வழிக்குக் கொண்டு வந்து நலம் பல காண வேண்டும் என்று வேணவாவோடு வீடணன் விளம்பி வருகிறுன்.

தன் குலத்துக்கு நேர்ந்துள்ள குடிகேடுகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளும்படி குறித்து வருவதில் அரிய பல மருமங்களை வெளிப்படுத்தி யுள்ளான். யாவும் சிந்தை தெளிய வந்துள்ளன.

அந்தகன் முதலினோர் வந்து கண்டு அகலவர்.

“எமன், இமையவர் முதலிய நமது எதிரிகள் கூட்டங்கள் இரவு வேளைகளில் கரவாய் வந்து நம் நகருள் புகுந்து நிலைமை களைத் தெருவி ஆராய்ந்து மருமமாக வெளியே போகின்றனர். இவ்வகை அஞ்சி அலமந்து நின்றவர் அஞ்சாமல் துணிந்து வந்து ஒற்றறிந்து உலாவிச் செல்லுவது அவருடைய உள்ளக் களிப்புகளையும் காரிய சித்திகளையும் நன்கு காட்டியுள்ளது. அந்த நிலைமைகளை நாம் கண்டு தெளியாமல் கண்மூடி 'இருப்பது கழி பேரிழிவாம்” என இவ்வாறு உறுதியுணர வுரைத்தான்.

"காலனும் * வெருவி ஓடும் அரக்கர்தம் வெம்பதி."

என இலங்கை என்றும் உயர்ந்த வீரச் சிறப்போடு ஒளி மிகுந்து வந்துள்ளது அந்த அதிசய நகருள் இப்பொழுது யாதும் அஞ்சாமல் அந்தகன் முதலாயினோர் சிந்தை களித்து வந்து போகின்றனர் என்று பெரிய நிந்தையை நினைவுறுத்தி நின்றது.

"முன்னமிருந்த நமது மேன்மையான நிலைமைகள் எல்லாம் மாறி எவ்வழியும் கீழ்மைகள் தோய்ந்து வருகின்றன. அவகேடுகளுக்கான அவலக் குறிகளே எங்கும் காணப்படுகின்றன. பின்னே விளைகின்ற கொடிய கேடுகளுக்கு உரிய அடையாளங்களைக் கண்டு என் உள்ளம் மறுகி வருந்தி உருகி வருகிறது.

கரன், திரிசிரா, வாலி முதலிய அசகாய சூரர்களை அதிசய மாயக் கொன்று தொலைத்து வென்றி வீறோடு மேலேறி வருகிற அந்த வீர மூர்த்தியான இராமனை மனிதன் என எளிதாக எண்ணிக் களிமிகுந்திருப்பது இழிவான மடமையாம். அழிவு நிலைகளை அறிந்தும் தெளிவு கொள்ளாமல் செருக்கி நிற்பது கொடிய தீவினை என்றே கருதுகின்றேன். குடிகேடுகள் நேர்ந்துள்ளனவே! என்று நெடிது கவன்று நெஞ்சம் துடித்து முடிவுகளை ஓர்ந்து நிற்கின்றேன். நமது குல விரோதிகளான தேவர்கள் வானர சேனைகளாய் இராமனோடு சேர்ந்துள்ளனர். தேர்ந்த மேலோர் சூழ்ந்துள்ள இவ்வுண்மையை நாம் ஓர்ந்து உணர்ந்து உறுதி நலங்களை ஆய்ந்து கொள்ள வேண்டும்.

எவ்வளவு படைகள் திரண்டு வந்தாலும் நாம் செவ்விய நீதியோடிருந்தால் நமக்கு யாதொரு தீதும் நேராது. தருமமே எவ்வழியும் திவ்விய மகிமைகளை அருளி வருகின்றது. பாவச் செயல் படுகேடுகளை விளைத்து விடும்; ஆதலால் அதனை விலக்கி விடுவதே நல்லது. திசைகள்தோறும் இசைகளை வளர்த்து விசய வென்றிகளோடு விளங்கி வந்த நீங்கள் ஓர் வசையுள் வீழ்ந்தமையால் வையம் முழுவதும் வைது பழிக்கின்றது. வெய்ய துயர்களும் விளைந்திருக்கின்றன. ஐயனே! உய்தியை நாடி அந்த உத்தமியை வெளியே விட்டருளுங்கள்!" என அவ் வுத்தமன்

* இந்நூல் பக்கம் 2891, வரி 20 பார்க்க.

இவ்வாறு உளைந்து வேண்டி உறுதிகள் நாடினன். இறுதியில் நோவதை அறுதியிட்டு மொழிந்தான்.

இசையும் செல்வமும் உயர்குலத் தியற்கையும் எஞ்ச
வசையும் கீழ்மையும் மீக்கொளக் கிளையொடு மடியாது
அசைவில் கற்பின்அவ் அணங்கைவிட் டருளுதி இதன்மேல்
விசையம் இல்லெனச் சொல்லினன் அறிஞரின் மிக்கோன்.

முடிவில் இங்ஙனம் முடிவு கூறித் தன் வார்த்தையை விடணன் முடித்திருக்கிறான். பேசி வந்துள்ள மொழிகள் அவனுடைய அறிவு நலங்களையும் குண
தெளிவாக விளக்கியுள்ளன. தன் குலத்திற்குக் கேடு நேர்ந்திருத்தலை நினைந்து வருந்தி நெஞ்சம் கலங்கி அண்ணனுக்கு அவன் உண்மையறிவுகளை உணர்த்தி விருப்பத்தில் உரிமைகள் தோய்ந்து நிற்கின்றன

சிறையிலிருந்து சீதையை விரைந்து வெளியேற்றி விடுக, அவ்வாறு விடவில்லையானால் எவ்வாற்றானும் நாம் உய்ய முடியா

சிறந்த கீர்த்தியும், நிறைந்த செல்வமும், உயர்ந்த குல மேன்மையும் ஒருங்கே இழந்து பழியும் இழிவும் படிந்து குடி அடியோடு அழிந்து போகாமல் தெளிந்து ஆலோசித்து நல்ல வழியில் நடந்து கொள்ளுக என உள்ளம் துணிந்து இங்ஙனம் சொல்லியருளினன் மனம் திருந்தி வரும் வழிகளை நாடி மதி நலங்களை மொழிந்திருக்கிறான்

இசையை முதலில் குறித்தது கீர்த்தி பிரதாபங்களில் இலங்காதிபதி பேராவல் கொண்டிருத்தலால் அது போந்து அழிந்துள்ள நிலைகாண வந்தது. இசை = புகழ். வசை = பழி.

இசையும் மேன்மையும் தொலைந்தன.

வசையும் கீழ்மையும் வளர்ந்தன.

இந்த நிலையில் வாழ்ந்திருப்பது வாழ்வா? சிந்தனை செய்து திருந்தி உய்க என நிந்தனைகளை நினைவுறுத்தி வந்தனைகளோடு போதனைகளைச் செய்து வருகிறான். எப்படியாவது அண்ணன் சீர்திருந்திச் சிறப்போடு வாழ வேண்டும் என்னும் விருப்பத்தால் உறுதி நலங்களை உரிமையுடன் உரைத்தருளுகின்றான்.

கிளையோடு மடியாது என்றது சுற்றமும் குலமும் அடியோடு அழிந்து போக மூண்டுள்ள அவல நிலை தெரிய. குலத்தோடு அழிந்து போகாமல் நலத்தோடு தெளிந்து வாழுக என நலமறிவு பொழிந்து நிற்கின்றான். அழிகேடான பாவ வினைகளை விழி தெரிய வெளிப்படுத்தினான். மூண்டுள்ள அழிவிலிருந்து விலகி நின்றாலன்றி நீண்டு வாழ முடியாது என்பதை நினைவுறுத்தினான்.

அசைவு இல் கற்பு என்றது சீதையின் அற்புத நிலையை வியந்து வந்தது. இக் குலமகள் நிறைகாத்து நிற்கும் நீர்மை நித்திய சித்தியாய் நிலவியுள்ளது. உத்தம பத்தினியின் உள்ளத் திண்மையை உய்த்துணர வுரைத்தான்.

அசையாத வெள்ளி மலையை அடியோடு அசைத்து எடுத்த இராவணன் இவளது உள்ளத்தை யாதும் அசைக்க முடியாமல் அலமந்து அயர்ந்து நிற்கின்றான். அந் நிலைமையைப் பல முறையும் நேரே அறிந்துள்ளவன் ஆதலால் "அசைவில் கற்பு" என அதிசயம் மீதூர்ந்து வீடணன் இங்கே துதிசெய்து நின்றான். உண்மைப் பெண்மையின் திண்மை தெரிய வந்தது.

அணங்கு என்னும் சொல் பேரழகுடைய தெய்வப் பெண்ணையும், ஆசை நோயையும் குறித்து வரும். இராவணனுடைய உள்ளத்தை உருக்கி உயிரை வருத்தி வருதலால் அந்தத் திவ்விய எழிலுடையாளை அவ் அணங்கு என்று சுட்டியுரைத்தான்.

"தெய்வமும் தெய்வத்து உவமைசொல் மாதரும்
மையல் நோயும் வருத்தமும் கொலையும்
அழகும் ஆசையும் அணங்கு என்றுமே." (பிங்கலந்தை)

அணங்கு குறித்து நிற்கும் பொருள்களைப் பிங்கல முனிவர் இங்ஙனம் விளக்கியிருக்கிறார். அற்புத அழகியை அவலமாய் அவாவி ஆவி தேய்ந்து பாவியா யிழிந்து அழிந்து வருகின்றான். அந்த அழிவு நிலையை இந்த மொழியால் விழி தெரிய வைத்தான்.

"அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்கு ஆயினள்தான் பிறந்த ஊர்க்கே" (புறம்)

மருதனிளநாகனார் என்னும் சங்கப் புலவர் கூறியுள்ள இது இங்கே அறிய வுரியது. மகா பதிவிரதையான சீதையைத்

நீயாக நினைந்து விரைந்து நீக்கியருள, இல்லையேல் மிகுந்த பழி துயரங்களை யடைந்து அரக்கர் குலம் அடியோடு அழிந்தே போகும் என முடிவு நிலையைத் தெளிவாக வுரைத்துத் தன் பேச்சை விபீடணன் முடித்தருளினன்.

அறிஞரின் மிக்கோன் என்றது அவனுடைய மதி மாண்புகளை மதித்து வந்தது. நன்மை தீமைகளை ஓர்ந்து உணர்ந்து நல்ல நீதிகளைச் சொல்லியருளினமையால் இங்ஙனம் ஒரு பெயரைக் கவி அவனுக்குச் சூட்டியருளினர். மேலான ஞான சீலர்களும் வியந்து காணும் வித்தகமுடையவன் என்பது உய்த்துணர வந்தது. இத்தகைய புத்திசாலியைப் பித்தன் என இகழ்ந்தான்.

## இராவணன் எள்ளி நகைத்தது.

உறுதியுண்மைகளை உரிமையுடன் வீடணன் கருதியுரைத்தும் அவ்வுரைகளை ஒரு சிறிதும் உணராமல் பெருநகை செய்து இராவணன் பிழைபடப் பேசினன். எள்ளிச் சிரித்து எதிர் உரையாடியது அவனது உள்ளச் செருக்கை உலகறிய உணர்த்தியது.

கேட்ட ஆண்டகை கரத்தொடு கரதலம் கிடைப்பப்
பூட்டி வாய்தொறும் பிறைக்குலம் வெண்ணிலாப் பொழிய
நாட்டம் தீயெழ நலந்திகழ் ஆரமும் மார்பும்
தோட்டங்களும் குலுங்கநக்கு இவையிவை சொன்னன.

இச்சை நல்லன உறுதிகள் இசைக்குவன் என்றிய
பிச்சர் சொல்லுவ சொல்லினை என்பெரு விறலைக்
கொச்சை மானுடர் வெல்குவர் என்றனை குறித்தது
அச்சமோ அவர்க்கு அன்பினோ யாவதோ ஐயா! (உ)

நங்கு மானுடப் பசுக்களுக்கு இல்லவரம் என்றிய
தீங்கு சொல்லினை திசைகளை உலகொடும் செருக்கால்
தாங்கும் யானையைத் தள்ளிஅத் தழல்நிறத் தவனை
ஓங்கல் தன்னொடும் எடுக்கவும் வரங்கொண்டதுண்டோ?

மனக்கொ டன்றியும் வறியன வழங்கினை வானோர்
சினக்கொடும் படை செருக்களத்து என்னைஎன் செய்த?
எனக்கு நிற்கமற்று என்னொடிங் கொருவயிற் றுதித்த
உனக்கு மானுடர் வலியராம் தகைமையும் உளதோ? (ஈ)

நந்தி சாபத்தின் நவையடுங் குரங்கெனின் நம்பால்
வந்த சாபங்கள் எனைப்பல அவை செய்த வலியென்?
இந்தி ராதியர் சித்தர்கள் இயக்கர்நம் இறுதி
சிந்தி யாதவர் யாரவர் நம்மைஎன் செய்தார்? (௫)

அரங்கில் ஆடுவாற் கன்புபூண் டுடைவரம் அறியேன்
இரங்கி யானிறப் என்வலி அவன்வயின் எய்த
வரங்கொள் வாலிபால் தோற்றனன் மற்றும் வேறுள்ள
குரங்கெல்லாம் எனை வெல்லும் என்று எங்ஙனம் கோடி.(௬)

நீல கண்டனும் நேமியும் நோன்னறு பொரினும்
ஏலும் அன்னவ ருடைவலி அவன்வயின் எய்தும்,
சால அன்னது நினைந்தவன் எதிர்செலல் தவிர்ந்து
வாலி தன்னையும் மனிதனும் மறைந்துநின்று எய்தான்.(௭)

ஊன வில்லிறுத்து ஓட்டைமா மரத்துள் அம்புஓட்டிக்
கூனி சூழ்ச்சியால் அரசிழந்து உயர்வனம் குறுகி
யானிழைத்திட இல்இழந்து இன்னுயிர் சுமக்கும்
மானுடன்வலி நீஅலாது யாருளர் மதிப்பார்? (௮)

வீடணனை நோக்கி இராவணன் இவ்வாறு கூறியிருக்கிறான். அருமைத் தம்பி போதித்த புத்திமதிகளை ஒரு சிறிதும் மதியாமல் இகழ்ந்து சிரித்து அரியணையிலிருந்து அவன் மறுத்துப் பேசியுள்ள காட்சிகளைக் கவிப் படங்களில் கண்டு வியப்பு அடைந்து நிற்கிறோம்.

ஆரமும் மார்பும் தோள் தடங்களும் குலுங்க நக்கு

என்றதில் அவனுடைய இராச கம்பீரங்கள் துலங்கியுள்ளன. அதிகாரச் செருக்கும் வீர மமதையும் எவரையும் மதியாமல் எதையும் எளிதா எண்ணச் செய்திருக்கின்றன.

தன்னை விட எவரும் எவ்வழியிலும் யாண்டும் சிறந்தவர் இல்லை என்பதை அவனுடைய ஒவ்வொரு மொழியும் உலகம் அறியத் தலைமையாய் வெளி செய்திருக்கின்றது.

“எனக்கு நல்ல உறுதி நலங்களை நீ சொல்லுவாய் என்று நான் மிகவும் எதிர்பார்த்திருந்தேன். வெறி கொண்ட உபத்திய காரன் பிதற்றியது போல பிதற்றுகின்றாய். எனது வீரப் பிரதாபத்தை அறவே மறந்து அற்பமான மனிதரை இன்று நீ வியந்து

புகழ்ந்தது நான் என்றும் காணாத வியப்பாய் நின்றது. நெஞ்சம் அஞ்சி நிலை குலைந்து புலம்பி யுளளாய் என்று தெரிகின்றது. மனிதரை வெல்லுதற்கு நான வரம பெற வில்லை என்று வாத முறையில் பேசினாய்! இது எவவளவு மதியீனமான வார்த்தை? திக்கு யானைகளை வென்று தொலைககவும, வெள்ளியங்கிரியை வேரோடு எடுககவும நான வரம் வாங்கியதுண்டோ? மூன்று உலகங்களும அஞ்சி நடுங்கி அடங்கி ஒடுங்கி ஏவல செய்து வர நான் ஆட்சி புரிந்து வருகிறேன; எனது மாட்சியை ஒருசிறிதும உணராமல் ஏதோ மனம கலங்கி மதி மருண்டு பேசியிருககி றாய்; உன் பேச்சுகள் புதிய அதிசயங்களாயப் பொங்கி நிற் கின்றன். குரங்கால் அழிவு நேரும என்று எவனோ நந்தி சாபம தநதான என்று ஓர் விநதையாக எடுததுக் காட்டினாய்! என்னு டைய ஆளுகையில் அடங்கி வாழ்நது வருகிற தேவாகள யாவ ரும் நாளும் வைது வருகிறாாகள், அநத வசவுகளால் யாது நோநதது? அரிய பல நிலைகளில உயாந்து பெரிய தலைமையில சிறநது விளங்குகிறவன்மேல சிலா பொறாமையால் பழிகள் பேசுவாா அமரா கநதருவா சிததா விஞ்சையா முதலிய தேவ கணங்கள நமமுடைய ஆட்சி மாட்சிகளைக கண்டு அழுககாறு கொண்டு திரிகின்றன, நமமை நேரில கணட போது காலில விழுநது பணிகின்றன, காணாத இடததில வீணை பழிமொழி களை விளைதது வருகின்றன, அநதப பழிமொழிகளை நாம பொரு ளாக எண்ணலாமா? எதிரிகள எவராயினும அவா பலம தன பால வநது சேருமபடி வாலி வரமபெற்றிருநதான, அநத நிலை மை தெரியாமல நேரே போனமையால மாறுயப பிழை நோந தது, வேறே எநத இடததில யாா என எதிா நின்று பிழைத தாா? எனது அதிசய மகிமைகளையெல்லாம இகழ்ந்த படியாய் மனிதனை இங்கே நீ துதிசெயது புகழ்நதாய! நீ வியந்து புகழ்நத அநத மானுடன ஓா இழிநத பேதை என்பதை உணாநது கொள்ள ளாமையால ஈனமாய உவநது பேசினாய்! நீ ஒரு ஞான சூனி யன என்பதை இன்று இநத இராச சபையில நின்று பேசி நன்று காட்டினாய்! முன்னமே ஒடிநது போயச சொத்தையா யிருநத வில்லை ஒடிதது, பொள்ளலான மரங்களை அம்பைச் செலுததித தன்னைப பெரிய ஒரு வில்லாளி என்று உலகம சொல்லுமபடி பாவனை காட்டி வெளி வேடம கொண்டு திரிகிற

## 7. இராமன்

அந்த இராமனுடைய மதிகேடுகளை நினைந்தபோதெல்லாம் எனக்குப் பெருஞ் சிரிப்புகளே வருகின்றன. ஒரு கூனக் கிழவி செய்த சூழ்ச்சியால் அரசினை இழந்தான், நாட்டிலிருந்து வாழ முடியாமல் காட்டுக்கு வந்தான்; வந்த இடத்தில் நான் செய்த ஒரு தந்திரத்தால் பெண்டாட்டியைப் பறி கொடுத்தான்; பேதையாயிழிந்து திண்டாடித் தியங்கிக் காடும் மலையும் கடுகி அலைந்து சாகமாட்டாமல் உழன்று திரிகின்ற அந்த மூட மனிதனை நாடு முழுவதும் இகழ்ந்து சிரிக்கின்றன, நீ ஒருவன்தான் அவனைப் புகழ்ந்து பேச நேர்ந்தாய், உனக்கு ஏதோ மதிகேடு நேர்ந்துள்ளது என்று கவலுகின்றேன்'' என இவ்வாறு இராவணன் வீடணனை நோக்கி ஏளனமாயக் கூறினான்.

மதிநலம் கூறிய மதிமானை மதிகேடன் என்று இகழ்ந்து அரக்காபதி பேசியிருப்பது அதிசய விநோதமாய்ப் பெருகியிருக்கின்றது. கெடு மதியாளன் கடுமொழி யாடினான்.

பிச்சர் சொல்லுவ சொல்லினை

வீடணன் பேசிய பேச்சுக்களை இராவணன் இவ்வாறு ஏசியிருக்கிறான். பிச்சர் = பித்தர். பொறி கலங்கிய பித்தர்கள் பிதற்றிய பிதற்றல்களைப் போல் நீ இங்கே பிதற்றியுள்ளாய்! எனத் தம்பியை எள்ளி இகழ்ந்தது அவனுடைய உள்ளத் துணிவையும் உறுதி நிலையையும் உணர்த்தி நின்றது.

இராமப் பித்து தலைக்கேறியுள்ளமையால் விபீடணனைப் பித்தன் என்று இராவணன் குறிப்பாக இகழ்ந்து கூறினான். அந்த இகழ்ச்சி மொழி புகழ்ச்சி ஒளியாயப் பொலிவெய்தி நின்றது. பித்தின் நிலை உய்த்துணர வந்தது.

கோசலை மானுடா என்றது மனித சாதியை அவன் எவ்வாறு கருதியிருக்கிறான் என்பது தெரிய வந்தது. தேவர்கள் எல்லாரையும் அடக்கி ஆளுகின்றான் ஆதலால் மானுடரை மிகவும் ஈனமாக எண்ணினான். செல்வத் திமிரும் ஆட்சி மமதையும் ஆடலாண்மையும் மிடல் கொண்டுள்ளமையால் மனிதரை எவ்வழியும் எளிதாகவே கருதிப் பழகி உறுதி பூண்டு வந்துள்ளான்.

இரண்டுகால் மிருகங்களாகவே மனிதரை அவன் எண்ணி இகழ்ந்திருப்பது மானுடப் பசுக்கள் என்றதனால் அறிய வந்தது.

விண்ணுலக வாசிகளும் வியந்து தொழுது ஏவல் செய்ய மேவியுள்ள அவனது மேலான தலைமைக்கு மண்ணுலக வாசிகள நிலைமை யாண்டும் கீழாகவே தோன்றி யுள்ளது.

பரம பொருளே மனித உருவில் இராமனாய் மருவி வந்துள்ளான என்பதை தம்பி பெருமையாகப் புகழ்ந்து கூறினை ஆதலால் அந்த மனிதசாதியை இராவணன் இவ்வாறு இகழ்ந்து பேசினன்.

மறுப்புரைகளில் அவனுடைய வெறுப்புகள் வெளிவந்துள்ளன. உள்ளச் செருக்குகள் உலகம் காண நின்றன.

பல வகைகளிலும் தலை சிறந்துள்ளதாகத் தனது நிலைமைகளை வியந்து புகழ்ந்து வீறு கொண்டு நிற்கின்றான். தன் மேன்மைக்கு மாறாக யாரும் யாதும் செய்ய முடியாது என்னும் செருக்கிலிருத்தலால் தெய்வங்களையும் கூசாது பேசுகின்றான்.

தனக்கு முன்னம் நந்தியால் நேர்ந்துள்ள சாபத்தைக் குறித்துத் தம்பி ஆபத்தை உரைத்தான். "குரங்குகளால் இலங்கை அழிந்துபடும், உனக்கு அவற்றால் கேடு உண்டாம் என்பது பண்டு நேர்ந்த சாபம். அதற்கு அறிகுறியாக வாலி வாலால் கட்டுண்டு அவமானம் அடைந்தாய்! இப்பொழுது அவ் கேடுகள் மூண்டுள்ளன, இந்த அபாய நிலையைத் தப்பி உபாயந் தேடி உய்ந்துகொள்" என இளையவன் பரிவு கூர்ந்து உறுதி கூறவே அவன் விளைவுகளை விளக்கிக் காட்டினன்

நீல கண்டனும் நேமியும் நோனின்று பொரினும்
ஏலும் அன்னவர் உடைவலி அவன்வயின் எய்தும்

வாலியின் அதிசய மகிமையை இவ்வாறு துதி செய்து சொல்லினன். நீலகண்டன் என்றது சிவபெருமானை.

அகில உலகங்களையும் அழிக்க மூண்டெழுந்த கொடிய ஆலகால விடத்தைத் தடுத்து நிறுத்தி எடுத்து வாய் மடுத்துக் கண்டத்தில் அடக்கிச் சீவகோடிகளைக் காத்தருளிய தேவதேவன் என்பான் நீலகண்டன் என்றான். ஆலத்தை எதிர்த்து அடக்கிய அவனும் வாலி எதிரே வரமுடியாது; வரின் அவன் வலி பாதி இவனிடம் வந்து சேரும்; அத்தகைய அதிசய வரபலமுடையவன் எனது வலி நிலையை உணர்ந்து வியந்து என்னோடு உறவு கொண்டாடி உரிமை பூண்டிருந்தான். என்னுடைய

அருமை நண்பனான வாலியின் எதிர்வர அஞ்சியே வஞ்சகமாய் மறைந்து நின்று இராமன் அவனைக் கொன்று தொலைத்தான்.

கொலை பாதகஞ் செய்தலைத் தலை மறைவாய் ஒதுங்கியிருந்து செய்த அவனை அரிய நீதிமான் என்றும், பெரிய போர் வீரன் என்றும் நீ பிழையாகப் பிதற்றுகின்றாய்! உயர்ந்த வீரக் குடியில் பிறந்த உனக்கு இப்படி இழிந்த பேடிகளைப் புகழ்ந்து கூறும் ஈனப் புத்தி எப்படி வந்தது?

மகா வீரனான இலங்கை வேந்தன் உடன்பிறந்த தம்பி மதி கலங்கிப் பித்துப் பிடித்துள்ளான் என்று உலகம் உன்னை எள்ளி இகழுமே! என்று நான் உள்ளம் வருந்தி உளைந்து நிற்கின்றேன்.

அச்சகாய சூரன் என்று அந்த மனிதனை நீ புகழுகின்றாயே! இது எவ்வளவு மதியீனம்! அமரரும் அடிவணங்கும் உயர் குடியில் பிறந்தும் குலமானம் இல்லாமல் ஈனமானுடனை ஏத்த நேர்ந்தது நமக்குக் கொடிய அவமானமேயாம். அரக்கர் குலத்திற்கு நெடிய இழிவுகளாய உனது மொழிகள் இன்று வெளி வந்துள்ளன. நாம் தின்ன உரிய சின்னமனிதனைப் பென்னம் பெரிய வீரன் என்று பெருமையாகப் பிதற்ற நேர்ந்தாய்.

என்ன மகிமைகளைக் கண்டு அவனை இன்னவாறு பன்னிப் புகழுகின்றாய்? யாரும் வளைக்க முடியாத தெய்வச் சிலையைக் கை வைத்து ஒடித்தான் என்று கருதி மயங்கிப் பெரிதும் வியந்து பேசுகின்றாயோ? வஞ்சச் சூதுகளைச் செய்து காட்டிப் பெரிய போர் வீரன் போல உலகத்தை அவன் ஏமாற்றி நிற்கின்றான்.

அந்த வில் முன்னமே ஒடிந்துபோயிருந்தது. ஊனமடைந்து கிடந்த அதனை இவன் எடுத்து வளைத்தான், அது தானாக ஒடிந்து வீழ்ந்தது; இவன் ஒடித்து விட்டதாகக் கோசிக முனிவன் உலகம் அறியத் தொடுத்து விட்டான். எல்லாம் கபட நாடகங்களாகவே இவன் நடித்து வருகிறான்.

ஏழு மராமரங்களையும் ஒரே பாணத்தால் ஊடுருவ எய்தான் என நாட்டியப் பறைசாற்றப் படுகின்றதே, அதன் இரகசியத்தை நீ அறிந்தாயா? அந்த மரங்கள் மிகவும் பழமையானவை; நெடுங்காலமாய் முதிர்ந்து நின்ற அவற்றுள் பொந்துகள் பாய்ந்திருந்தன, அந்தத் துளைகள் வழியே அம்பைச் செலுத்தினான்,

அது அயலே போய் விழுந்தது. இந்திரசாலமாய மாய வித்தை களைச் செய்கிற பெரிய தந்திர சாலியுமல்லன்; சுத்தப் பேதை.

கூனி சூழ்ச்சியால அரசு இழந்தான

யான இழைததிட இல இழந்தான

இராமன் ஒரு மதிகேடன் பேதை என் இங்ஙனம் ஏது வோடு எடுத்துக் காட்டினன். உரிமையாயக் கிடைதத அரச திருவைப் பேணத தெரியாமல பிழையாய் இழநதான. புதுமை யாய மணநத மனையாளை வைதது வாழ மாட்டாமல மதியீன மாயக கைவிட்டான். நாடு விட்டுக் காடு வநதும கேடு விடா மல் அவனைக் கூடி வநதது. மாடு மாதிரி திரிநது வருகிறான்.

உடலில் ஊனமுளள ஒரு கூனக கிழவியும அவனை மதிக்க வில்லை; ஈனமாக எணணி இகழநதிருககிறாள, அவளால அவமா னமடைநது நாட்டில இருகக முடியாமல் வெளியேறிக காட டுககு வநதிருநதான. அஙகே நமது மாமன மாரீசன செயத ஒரு சிறிய மாயததால அப பேயன வெறியனாயப பினனே போ னான. பெணடாட்டி பறி போயினள். திணடாடித திரிகிறான.

இன உயிர சுமக்கும் மானுடன.

என்றது துயர நிலையமாய் இராமன் உயிர வாழநதிருககி றான் என்பதைத் தமபி உணராநது கொளள வநதது. அவனைப பெருமையாய மதிததுள்ள அந்த மதிபபை இழநது மனம திரும்பி வர இங்ஙனம பலவாறு இகழநது கூறி வருகின்றான.

அரசை இழநது அபலையாய் வந்தவன பினபு பெணடாட டியையும பிரிநது பேயனாய அலைகின்றான். மனைவிமேல் கொ ண்ட மையல் நோயால மதி மருண்டு புலமபித திரிகிறான. துய ரம் தாங்க மாட்டாமல் உயிரையும மாயககத துணிநதான. அது வும் முடியாமல் நடைப் பிணமாய இழிநது உழலுகின்றான்.

இப்படிப்பட்ட மதிகேடனை நீ மதிததுத துதிததது எனக்கு மிகுந்த வருத்ததைத தந்தது. இனி இவ்வாறு பேசாதே; நிலை மையை உணர்ந்து நம் தலைமையைத தெளிநது கொள் என்று தருக்கி யுரைததான்.

இராவணன் இவ்வாறு இகழ்ந்து கூறவே மீண்டும் வீட ணன் வினயமாய் அவனை வேண்டி மொழிந்தான். மூண்டுள்ள

முடிவு நிலைகளைத் தெரியாமல் நீண்டு செருக்கி அண்ணன் நிமிர்ந்திருக்கின்றானே! என்று நெஞ்சம் கவன்று மறுபடியும் இத்தம்பி அன்புரிமையுடன் அறிவு நலங்களை யுரைத்தது பரிவும் பணபும படிந்து வந்தது. பல வழிகளினும் பரிந்து பாடுபடுகிறான்.

## மறுகி வேண்டியது

"நிருதா குலபதியே! ஈருவி யுள்ள நிலைகளைக் கருதியுணர வேண்டுகிறேன். நெடுங்காலமாக நமக்கு அடங்கிப் பகைமை மனப்பான்மையோடு ஏவல்புரிந்து வருகிற தேவர்கள் ஒருமுறை ஒருங்கு திரண்டனர். நமது ஆட்சியை அழித்தொழிக்கச் சூழ்ச்சிகள் புரிந்து தேவதேவனை திருமாலிடம் சென்றனர். உழுவலன் போடு தொழுதுநின்று நம்மீது பழிகள் பலகூறினர் "எம் பெருமானே! அரக்கர் செய்கிற கொடுமைகள் அளவிடலரியன, யாண்டும் அநீதிகளே நீண்டுள்ளன, புண்ணிய நிலைகளும் பூதலமும் புலையடைந்திருக்கின்றன, விரைந்து காத்தருள வில்லையானால் உலகங்கள் நிலைகுலைந்து போம்" என இன்னவாறு பன்னி முறையிட்டனர். அமரர்கள் மறுகி மொழிந்த இந்த முறை யீடுகளைக் கேட்டதும் திருமால் கருணை புரிந்து காத்தருளுவதாக உறுதிமொழி தந்தார். அந்த ஆதிமூலப் பொருளே மனிதவுருவில் இராமன் என இந்த வாறு இங்கு வந்துள்ளது. அரிய தேவரகசியத்தைக் கூர்ந்து ஓர்ந்து குறிப்போடு சொல்லுகிறேன். தாங்கள் தேர்ந்து தெளிந்து திருந்தி வாழ வேண்டும்" என இவ்வாறு வீடணன் வணங்கி வேண்டினான்.

> தன்னின் முன்னிய பொருளிலா ஒருதனித் தலைவன்
> அன்ன மானுடன் ஆகிவந்து அவதரித் தமைந்தான்
> சொன்ன நம்பொருட்டு உம்பர்தம் சூழ்ச்சியின் துணிவால்
> இன்னம் ஏகுதி போலுமென்று அடிதொழு திரந்தான்.

உம்பர்சூழ்ச்சியால் ஒரு தனித்தலைவன் மனிதனாய் இம்பர் வந்துள்ளான்; அவனோடு மாறு கொண்டு நின்றால் நம் குலம் வேரோடு அழிந்து போய்விடும்; இதனைத் தெளிந்தருள் என்று தம்பி இங்ஙனம் தெளித்தருளினான்.

தேவர் வேண்டுகோளுக்கு இரங்கித் திருமாலே இராமனாய் ஈண்டு வந்துள்ளான் என்று வீடணன் இவ்வாறு கூறவே இராவணன் சினந்து சீறிச் செருக்கோடு விரைந்து பேச, நேர்ந்

தான். அவனுடைய பேச்சுகள் பெருமித நிலைகளில் பெருகி வந்துள்ளன. அயலே வருகிற கவிப்படங்களைக் கருதிக் காணுக.

இந்திரனைத் தளை இருஞ்சிறை இட்டநாள், இமையோர்
தந்தி கோடிறத் தகர்த்தநாள் தனியான முன்னம்
வந்த போர்தொறும் துரந்தநாள், வானவருலகைச்
சிந்த வென்றநாள், சிறியன்கொல் நீ சொன்ன தேவன் (1)

சிவனும் நான்முகத்து ஒருவனும் திருநெடு மாலாம்
அவனும் மற்றுள அமரரும் உடனுறைந் தடங்கப்
புவனம் மூன்றுமயான ஆண்டுளது ஆணடவப்பொருவில
உவனி லாமையி லோவலி ஒதுங்கியோ உரையாய்! (2)

ஆயிரம் பெருந் தோள்களும் அத்துணைத் தலையும்
மாயி ரும்புவி உள்ளடி அடக்குறும் வடிவும்
தீய காலவும் சிறிதென நினைந்துநாம் தினனும்
ஓயு மானுட உருவுகொண் டன்னகொலாம் ஒருவன் (3)

பித்தன் ஆகிய ஈசனும் மாலுமென பெயர்கேட்டு
எய்த்த சிந்தையர் ஏகுழி ஏகுழி எல்லாம்
கைத்த ஏற்றினும் கடவிய புள்ளினும் முதுகில
தைத்த வாளிகள் நின்றுள குன்றினவீழ் தடித்தின (4)

வெஞ்சி னந்தரு போரிலென னுடனெழ வேண்டா,
இஞ்சி மாநகர் இடமுடைத்து ஈண்டினி திருத்தி
அஞ்சல் அஞ்சலென றயலிருந் தவர்முகம் நோக்கி
நஞ்சின வெய்யவன் கைஎறிந் துருமென நக்கான் (5)

மனிதனாய் வந்துள்ள இராமன் திருமாலின் அவதாரம் என்று தம்பி மகிமையாயப் புகழ்ந்து சொல்லவே இராவணன் இவவாறு வீர கம்பீரமாய எதிர் மொழி தந்தான் "அப்பா விபீடணா! ஆதி மூலப்பொருள் நம்மை அடக்கி ஒடுக்கி அமரருக்கு அருள் புரியும் பொருட்டு மனித உருவில் மருவி வந்துள்ளது என்று நீ பெருமையாய்ப் பேசினாய்; அறிவு கெட்டு உளறுகின்றாய்! ஆனாலும் உனக்கு ஓரளவு உறுதி கூற விரும்புகிறேன். வானவர் உலகத்தைச் சிதைத்து இந்திரனைச் சிறை பிடித்துத் திசைகள்தோறும் வென்று வெற்றிப் பிரதாபத்தோடு கொற்றக் குரிசிலாய் அரியணையில் நான் விளங்கி யிருந்தபொழுது அவன் இருக்கவில்லையோ? ஒரு வேலை இன்னப் பயனாயிருந்தானோ? இப்பொழுது பெரிய வீரனாய்ப் பெருகி என்னோடு போராட

வந்துள்ளானே? முததேவா என்று எத்தேவராலும் போற்றி வருகின்ற அநதத திரிமூர்ததிகளும் என்னை என்ன செயயமுடியும்? மூனறு உலகஙகளையும் தனி நிலையில் நின்று நான் ஆண்டு வருகினறேன்; என்னுடைய ஆட்சியில் எனக்கு மாறாக யாரும் யாண்டும் தலை நீட்டியதில்லையே. மாறுபட்டு என்னோடு போராடியபோதெல்லாம அவா புறங்காட்டிததானே ஓடியிருக்கிறார். என்னுடைய பாணஙகள பாயநத புண்களின தழும்புகள அவருடைய வாகனங்களின முதுகுகளில இன்றும உளளனவே. வெள்ளியஙகிரியை வேரோடு எடுததவீரன என்று எலலாரும் என்னை உள்ளி யுளைநது உள்ளம் திகில கொணடுள்ளாரே. பல்லாயிரம் தோளகளுடையனுய உலகம முழுவதையும ஓரடியில் அளநத அநதப பெரிய வடிவிலிருநது வெல்ல முடியாதவன இநதச்சிறிய மனிதனுய இஙகே என்னை வெனறு கொளள வநதுளளானா? உன அறிவு நனறு! நனறு! முழு மடையனினும கழிமடையனுய இஙகே நீ உளறியுளளாய! இலஙகையில தீ விழுநததை நினைநது உன உளளம் கலஙகி யிருககிறது என்று கருதுகினறேன. போருககு அஞ்சிப புலமப நோநதாய! உன நெஞ்சில் வீரம் இலலை. போா மூணடால எனககு நீ யாதும உதவி செயய வரவேணடாம, கோட்டை கொததளஙகளோடு நமது அரணமனைகள பல மிகவும விசாலமா யிருககினறன யாதும பயபபடாமல ஒரு மூலையில பதுஙகி ஒதுஙகி யிரு, விரைநது போ!" என்று இஙஙனம அவன சினந்து சீறி இகழநது கூறினுன்.

இராவணனுடைய உளளத தருககுகளையும உறுதி ஊககங்களையும உரைகள தோறும உணாநது வருகிறோம். தேவாகளையும தேவதேவரான மூவரையும அவன வெனறிருபபதாக வீறு கொணடு பேசியிருக்கிறான். பேசசெல்லாம பெருமித நிலைகளைப் பெருக்கிக் காட்டி வரமபு மீறி வெளி வநதிருககினறன. இராமன் தெயவ அவதாரம என்று வீடணன் வியநது புகழநதமையால் தேவதேவாகளை எல்லாம ஏகமா இராவணன் இகழ்ந்து பேச நோநதான. மானச தததுவஙகள் மதி யூகமாய உயத்துணரத் தக்கன. அளவிடலரிய வரபலங்களோடு அதிசய நிலையில் நெடிது வாழ்ந்து வநதவன் ஆதலால் அந்த வீரச் செருக்கு யாண்டும் வீறு கொண்டு நீண்டு வந்துளளது.

இஞ்சி மாங்கா இடம உடைதது,

அஞ்சல், அஞ்சல்!

தனக்கு உறுதி நலங்களை உரிமையுடன் கூறிய தம்பியை நோக்கி இராவணன் இவ்வாறு கிண்டலாகக் கேலி செய்திருக்கிறான். இஞ்சி=மதில். அரண் சூழ்ந்த இலங்காபுரி பெரிதும் விசாலமாயுள்ளது; நீ யாதும் கலங்காமல் ஒளிந்திருக்கலாம் என இகழ்ந்திருக்கிறான். எள்ளல் மொழிகள் உள்ளம் உளைய வுற்றன.

வானர சேனைகள் சேர்ந்திருக்கின்றன; இராமன் அரிய போர் வீரன், அவனுடைய அம்புகள் அதிசய ஆற்றல்கள் வாய்ந்தன என எதிரி நிலைகளை வீடணன் தெளிவுறுத்தினன் ஆதலால் அவனை இவ்வாறு இராவணன் இளிவுறுத்தினன்.

பகைவரோடு நான் போராட நேர்ந்தபோது எனக்கு நீ யாதும் துணை புரிய வேண்டியதில்லை, உனக்கு ஒரு துயரமும் நேராமல் ஒதுங்கி மறைந்திருத்தற்கு ஊர் பெரிதாய் விரிந்துள்ளது; உள்ளத்தில் யாதும் பயமில்லாமல் பதுங்கி யிருக்கலாம் என இங்ஙனம் கேலியாக இகழ்ந்து பேசியிருக்கிறான்.

அஞ்சல்! அஞ்சல்! என்றது வீடணனை மிகவும் அவமானப் படுத்திய படியாய் அடங்கொண்டு வந்துள்ளது.

சண்டை மூண்டுவிடும் என்று பயந்தே தன்னைச் சமாதானப் படுத்துவதாக அவன் தருக்கி எண்ணி யுள்ளமையால் இங்ஙனம் அவமானப்படுத்தி இழிவாகப் பழித்துப் பேசினன்.

அஞ்சாத வீரக் குடியில் பிறந்தவனை அச்சச் சொல்லால் இப்படி இளித்துச் சொன்னது கொடிய பழியாய்க் கலித்து வந்தது. சுடு சொல் அடு துயரை ஆற்றி நின்றது.

நஞ்சின் வெய்யவன் கை எறிந்து உருமென நக்கான்.

நீதி மொழி கூறிய வீடணனை எள்ளி இகழ்ந்து இராவணன் இளித்துச் சிரித்திருக்கும் நிலையைக் கவி இங்ஙனம் நமக்குத் தெளித்துக் காட்டி யிருக்கிறார்.

சிங்காசனத்தில் இராச கம்பீரமா யிருந்துள்ளவன் கையோடு கையைத் தட்டி பெருஞ் சிரிப்புச் சிரித்திருத்தலை இங்கே நாம் குறுஞ் சிரிப்போடு கூர்ந்து பார்க்கிறோம்.

தன் தம்பியை இகழ்ந்து கூறிச் சபையி லுள்ளவர்களை உவந்து நோக்கிப் பேரொலி செய்து அவன் நகைத்திருக்கிற

நகை வகையை உரும் என நக்கான் என ஒரு தொகை மொழியால் சுட்டியுரைத்தார். உரும் = இடி. கையைத் தட்டிக் கெக்கலி கொட்டிக் கேலி செய்து மேட்டிமையாய் இகழ்ந்து நகைத்த துள்ளமையைக் கிளர்ந்து காட்டினர். மகிழ்ச்சிச் சிரிப்புக்கும் இகழ்ச்சி நகைப்புக்கும் வேறுபாடு காண வந்தது.

பிறர் அவமானமடைந்து வருந்தும்படி பரிகசித்துச் சிரிப்பது கொடிய தீமை ஆதலால் அதனை உருவ நிலையை உரும் என உணர்த்தினர். நல்லவன உள்ளம் மறுகும்படி அப் பொல்லாதவன் எள்ளி நகைத்திருப்பதில் கொடுமையும் கடுமையும் குடிபுகுந்துள்ளன.

"There was a laughing Devil in his sneer" (Byron)

"அவனுடைய பரிகாசத்தில் ஒரு சிரிப்புப்பேய் இருந்தது"

என்று பைரன் என்னும் ஆங்கிலக் கவிஞர் தமது நூலுள் இங்ஙனம் கூறியுள்ளார். கவிகள் சுட்டிக் கூறும் நிகழ்ச்சிகள் உணர்ச்சி நிலைகளை விளக்கி வருகின்றன.

நஞ்சின வெய்யவன் என இராவணனை இங்ஙனம் குறித்தது அவனுடைய கொடிய தீமைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தது. உயிரினங்களுக்குத் துயரினங்களையே விளைத்து வருபவன் ஆதலால் அவனது நிலைமைகளை நெஞ்சம் தெளிய வுரைத்தார்.

நெஞ்சம் கொடியனாய் நீச நிலைகளில் நிமிர்ந்து நாச வேலைகளைத் துணிந்து செய்து வருதலால் நஞ்சு என நேர்ந்தான். இன உருபு எல்லைப் பொருளில் வந்தது.

நஞ்சு உயிர்க் கேடு செய்வது; அஞ்சத்தக்கது; ஆயினும் அதனை நீக்குதற்கு மருந்துகளும் மந்திரங்களும் உள்ளன. வெய்யநெஞ்சனான இந்த நஞ்சன் எவ்வகையிலும் யாதும் திருந்தாமல் வெவ்விய வழிகளிலேயே விரிந்து நிற்றலால் அதனினும் கொடியவனாயினன்.

"கடிக்கும் வல் அரவும் மந்திரம் கேட்குமே! நீ யாதொன்றும் கேளாமல் தீமையிலேயே களித்து நிற்கின்றாயே!" எனச் சீதை முன்னம் இராவணனைப் பழித்துள்ளதும் ஈண்டு எண்ணத்தக்கது. நல்ல நீதிமானான வீடணன் கூறிய இனிய அமுத மொழிகளைக் கேட்டும் உள்ளம் திருந்தாமல் தீமையிலேயே செருக்கி நிற்கின

முன் ஆதலால் நஞ்சின் வெய்யவன் என அவ வெஞ் செயலா ளனை இங்ஙனம் நெஞ்சம் தெரிய வுரைத்தார்.

"நஞ்சு அனையான்" (உருக்காட்டு, 17) என அங்கே வைதேகி வாய் மொழியாய் வந்தது; இங்கே கவிக் கூற்ருய் அமைந்தது. சுட்டியுள்ள குறிப்புப் பெயர்கள் உய்த்து நோக்கி உறுதி நலங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள நேர்ந்தன.

நெஞ்சம் தீயதாயபோது அந்தமனிதன நஞ்சமாகினமுன; அவனை யாவரும் அஞ்சுகின்றனர். அவனது அழிவு நிலையை எவ்வழியும் விழைவு கூர்ந்து நிற்கின்றனா. அந நிலைமை ஈண்டு நுணுகி யுணர வந்தது.

## மீண்டும் வீடணன் வேண்டி நின்றது.

தான் கூறிய உறுதி நலஙகளையெல்லாம ஒரு சிறிதும மதி யாமல் தனனை இகழ்ந்து சிரிதத தமையனை மறுபடியும வணஙகி வீடணன மறுகி வேண்டினன். "அண்ணு! தாங்கள அநியாய மாய் அழிநது போக மூண்டு நிறபதை நினைநது நினைநது என நெஞசம கரைநது படுகினறது. அரசதிரு, ஆறறல் முதலிய வரிசைகளால் உயாநதிருததலால் எவரையும எளிதாக எணணி எலலை மீறிப் பேசுகிறீாகள. கழிபெருஞ செருககு அழிவின அறிகுறி. அகஙகார ஆணவங்களால அழிநது ஒழிநதவா பலர். அளவிடலரிய அதிகார நிலைகளில் தலை சிறந்திருநதவரும நெஞ சத தருககால நெடுந துயரடைநது மாணடு மடிநதுளளனா. அவருள ஒருவனை ஈண்டு எடுததுச் சொல்ல விருமபுகிறேன, சிறிது செவி சாயததருளுங்கள" என்று விநயமாய முதலில் வேண்டிக கொண்டு மேல் விளம்ப நோர்தான.

## இரணியன் கதை

இரணியன் என்பவன் அசுர குலச் சக்கரவாததி. அதிசய நிலையினன். அரிய பல வர பலஙகளை யுடையவன். அறபுத ஆறறல்கள அமைந்தவன். அண்டகோடிகளை எலலாம் ஏக போகமாய் ஆண்டு வந்தவன். அவனுடைய தன்மை வன்மை தலைமை நிலைமைகள் முதலிய வகைகளையெல்லாம் தெளிவாக விளக்கித் தமையனுக்குப் புத்தி புகட்ட நேர்ந்த தம்பி அந்தச் சரித்திரத்தை விசித்திர வகையில் விரித்து உரைத்திருக்கிறான்.

தனது அரிய ஞான போதனைக்கு இனிய சாதனமாகக் கதை யைச் சுவையாகத தொகுததுச் சொல்லியுள்ளான். அந்த அசுர சக்கரவாததியின இதிகாசம அதிசய கமபீரமாய் எழுந்துள்ளது. காவியச்சுவை தோயநது வந்துளள அவ வீர சரிதம் இராம காவியததுள் ஓா திவவிய சீவிய வுலகமாயத தேசுமிகுந்து திகழ் கினறது. அறபுத நிலையமான அக்காட்சிகளை அயலே காண வருகிறோம.

வேதம கணணிய பொருளஎலாம விரிஞசனே ஈநதான,
போதம கணணிய வரமவன தரககொணடு போநதான,
காதும கணணுதல மாலயன கடைமுறை காணப
பூதம கணணிய வலியெலாம ஒருதனி பொறுததான. (1)

எறறை நாளினும உளனஎனும இறைவனும அயனும
கறறை யஞசடைக கடவுளும காததளிதது அழிக்கும
ஒறறை அணடததின அளவிறே இதனபுறத துலவா
மறறை அணடமும தனபெய ரேசொல வாழநதான. (2)

பாழி வனதடந திசைசுமநது ஓஙகிய பணைககைப
பூழி வனகரி இரணடிரு கைகொடு பொருததும,
ஆழம காணுதறகு அரியவாய அகனற பேராழி
ஏழும தனனிரு தாளள வெனககடந தேறும (3)

நிலனும நீருமவெங கனலொடு காலுமாய நிமிாந்த
தலனுள நீடிய அவறறுளத தலைவரை மாறறி
உலவுங காறறொடு கடவுளா பிறவுமா யுலகின
வலியும செயகையும வருணனதன கருமமும மாறறும (4)

மரபின மாபெரும புறககடல மஞசனம மருவி
அரவின நாடடிடை மகளிரோடு இனனமுது அருநதிப
பரவும இநதிரன பதியிடைப பகறபொழுது அகறறி
இரவின ஒலககம நானமுகன உலகததுள இருககும. (5)

மருககொள தாமரை நானமுகன ஐமமுகன முதலோா
குருககளோடு கறறு ஓதுவது அவனபெருங கொறறம,
சுருககநானமறை தொனறுதொடடுரைதொறும தோனறு
இருககும தெயவமும இரணிய னேநம எனனும. (6)

மயரு மனனெடும சேவடி மணணிடை வைபபின
அயரும வானெயிறறு ஆயிரம பணநதலை அனநதன;

உயருமேல் அண்ட முகடுற தன முடியுற உயரும
பெயருமேல நெடும பூதஙகள ஐநதொடும பெயரும. (7)

பெணணில பேரெழில ஆணினில அலியினில பிறிதும
உண்ணிறகும உயிா உளளதின இலலதின உலவான,
கணணிற காணபன கருதுவ யாவினும கழியான,
மணணிற சாகிலன, வானிலும சாகிலன வரததால (8)

தேவ ராயினா ஏவரும திரிதரும இயககா
யாவ ராயினும எணணவும நினைககவும இயனற
கோவை மாலஅயன மானுடன யாவரும கொலல
ஆவி தீாகிலன ஆறறலும தீாகிலன அனையான. (9)

நீரில் சாகிலன, நெருபபினும சாகிலன, நிமிாநத
மாரு ததநதினும மணணினமற றெவறறினு மாளான,
ஓரும தேவரும முனிவரும பிறாகளும உரைபபச
சாரும சாபமும அனையவன தனைசசெனறு சாரா (10)

உளளிற சாகிலன, புறததினும உலககிலன, உலவாக
கொளளைதெயவவான படைககலம யாவையுமகொலலா,
நளளிற சாகிலன, பகலிடைச சாகிலன, நமனா
கொளளச சாகிலன, ஆரினி அவனுயிா கொளவாா? (11)

பூதம ஐநதொடும பொருநதிய உருவினால புரளான,
வேதம நானகினும விளமபிய பொருளகளால விளியான,
தாதை வநதுதான தனிகொலை சூழினும சாகான,
ஈது அவனநிலை எவவுல கஙகடகும இறைவன (12)

(இரணியனவதைபபடலம)*

இரணியனுடைய பெருமித நிலைகளைக் குறித்து வநதுளள இந்தப்பாசுரங்களைக் கூர்ந்து பார்ப்பவர் அரிய பல அறபுத நீர மைகளை நன்கு ஓர்ந்து கொள்ளுவர். காவிய கதியில கமபீரமாயக் கலிதது வந்துள்ள இநதச் சீவிய சரிதம் ஓவியக் காடசியாய ஒளிசிறந்து மிளிர்கின்றது. கவி வரைந்து காட்டியுள்ள காட்சி களையும் மாட்சிகளையும் கருதிநோக்குந தோறும் பெரிய அதிச யங்கள் பெருகி வருகின்றன. கவிகளைக் கருத்தூன்றிப் படிததுச் சுவைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும். ஓதி ஓதி யுணருந்தோறும் உணர்வின்பம் சுரந்து வரும் ஆதலால் அந்த இன்பப் பெருக் கை நுகர்ந்து மகிழ்க. அறிவின் ஆனந்தம் அதிசய முடையது.

“பிரமாவினால் அரிய பல வரங்களைப் பெற்றவன். வேதம் முதலிய கலைஞானங்களை நன்கு தெளிந்தவன். பஞ்சபூதங்களினும் மிஞ்சிய வலியினன். அகில அண்ட கோடிகளையும் உரிமையாக வுடையவன். அதிசய நிலையினன். திசையானைகளின் கைகளைப் பிடித்து இழுத்து ஒன்றோடொன்று பிணைத்து நோக்கும் பேராண்மையாளன். ஆழ்ந்த அலைகடலும் தன் தாள் அளவாகத் தாழ்ந்து நிலைகுலையச் செய்தவன், அண்டத்துக்கு அப்பாலுள்ள தெய்வ கங்கையில் நீராடும் நீர்மையன், சீரிய விமானங்களில் ஏறிச் சூரியசந்திர மண்டலங்களில் வீரியமாய் உலாவி வருபவன். தான் கருதியபடியே எதையும் செய்யவல்லவன். தேவகந்தருவர் யாவரும் ஆவலோடு ஏவல்புரிய பேரான நிலைமையில் மேவியுள்ளவன். தேவதேவரான மூவரும் தனது காவலில் கால் இடாமல் கைசெய்து வந்தவன். எவ்வுலகத்தவரும் தன் பெயரையே திவ்விய மந்திரமாக ஓதிவர உயர்ந்து நின்றவன். காலையில் பெரும்புறக்கடலில் நீராடி, அதன்பின் அழகிய நாகலோகத்தில் உணவுண்டு, உச்சிப் போதில் தேவலோகத்தில் இந்திரன் வந்தனை செய்யத் தங்கி, மாலையில் சத்திய லோகத்தில் பிரமனோடு உவகையுரையாடி, இரவில் தனது இராசதானிக்கு விமானம் ஊர்ந்து வருபவன். அமரரும் அசுரரும் ஒருங்கு திரண்டு பண்டு பாற்கடலைக் கடைந்த போது மத்தாகக் கொண்ட அந்தப் பெரிய மந்தர மலையைச் சிறிய எந்திர தண்டமாக எளிதே கைக்கொண்டவன். சூரியன் உதிக்கின்ற உதயகிரியும் அத்தமன மலையும் அவனுடைய காதின் குண்டலங்களாய்ச் சோதி கொண்டு நின்றன. தேவர்கள் முதல் யாவரும் இரணியாயநம என நாளும் ஓதிவர அவன் ஒளிபுரிந்திருந்தான். மண்ணுலகமும் விண்ணுலகமும் பஞ்ச பூதங்களும் அவன் எண்ணிய படியே இயங்கி வந்தன. எந்தச் சீவராசிகளாலும் யாண்டும் எவ்வகையிலும் யாதொரு இடையூறும் தனக்கு நேராதவாறு நித்திய நிலையில் அவன் நிலைத்திருந்தான். பகல் இரவு சந்தி அந்தி முதலிய எந்த வேளையிலும் எவ்வழியும் அழிவு காணாத திவ்விய சீவியனாய்ச் சிறந்து வாழ்ந்து வந்த அந்த அதிசய மன்னனுடைய மதிநலங்களும் மகிமைமாண்புகளும் யாவராலும் யாதும் அளவிடலரியன. அத்தகைய பெருமித நிலையில் பெருகியிருந்த அவன் உருவழிந்து இருந்த இடமும் தடந்தெரியாமல் அழிந்து போனான். அந்த

அழிவு அவனுடைய அநீதியால் நேர்ந்தது. தருமநீதி தவறின் யாவராயினும் அவர் அடியோடு அழிந்தே போவர். இந்த நித்திய வுண்மையைத் தெளிந்து உத்தம நெறியில் சித்தம் திருந்தி நீங்கள் உய்ய வேண்டும்" என விடணன் கைகள் குவித்து இராவணனுக்கு உறுதி நலங்களை ஈண்டு இவ்வாறு உரைத்து நின்றான். புத்தி போதனைகள் தத்துவ நோக்கோடு உய்த்துணர வந்தன.

செல்வம் கல்வி அறிவு ஆற்றல் வீரம் முதலிய நிலைகளில் இராவணனைவிட இரணியன் எவ்வளவோ உயர்ந்தவன். எவரும் நிகரில்லாதபடி அவ்வளவு உன்னத நிலையில் உயர்ந்திருந்த அவன் தேவகோபத்தால் அடியோடு அழிந்து ஒழிந்தான் என அண்ணனுக்கு அறிவு ஊட்ட இவ்வுண்மை அதிசயமாய் எடுத்துக் காட்டினான். மேலும் தொடுத்துப் பேசினான்.

கண்ணில் காண்பன கருதுவ யாவினும் கழியான;
மண்ணில் சாகிலன்; வானிலும் சாகிலன்.

இரணியன் எவ்வழியும் சாகா வரம் பெற்றுள்ள நிலைமையை இவ்வாறு பலவகையிலும் தெளிவுறுத்தினான். கண்ணால் காணப்படுகின்ற பொருள்கள் எவற்றாலும் அவனுக்கு அழிவு இல்லை என்றது அவனது நிலையான வாழ்வின் தலைமையை உணர்ந்து கொள்ள வந்தது. கல் மண் இரும்பு முதலிய தாதுக்களாலும், மரம் கொடி முதலிய தாவரங்களாலும், பாம்பு புலி கரடி முதலிய பிராணிகளாலும், நெருப்பு நீர் காற்று முதலிய பூதங்களாலும், மனிதர் தேவர் முதலிய யாவராலும் யாண்டும் அவனுக்குச் சாவு இல்லை என்பதை வலியுறுத்த எல்லா இனங்களையும் சுட்டி யுரைத்தான். அகில சராசரங்களாலும் அழிவில்லை என்பான் உயிர் உள்ளதின் இல்லதின் உலவான என்றான.

சாரும் சாபமும் அன்னவன் தன்னை சென்று சாரா.

தேவர் முனிவர் முதலிய யாவருடைய சாபமும் அவனிடம் செல்லாது என்பதை இவ்வாறு சொல்லியருளினான். தபசிகள் கோபித்துச் சபித்தால் அந்தச் சாபம் எவரையும் விரைந்து அழித்துவிடும்.

குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. (குறள்

அரிய மாதவருடைய பெரிய மகிமையை இது விளக்கியுள்ளது. அருந்தவர் வருந்தி நினைத்தால் சிறந்த திருவோடு உயர்ந்துள்ள அரசனும் அடியோடு அழிந்து போவான் என்றமையால் அவரது அற்புத நிலை அறியலாகும். இத்தகைய மாதவர் சாபமும் இரணியனை கிட்ட நெருங்காது என்பான் சாரா என்றான். எங்கும் சாராது தன் ஆற்றலை ஆற்றி வரும் அருந்தவர் சாபமும் இங்கே இவன்பால் ஏற்றமிழந்து இழிந்துபடும் என்பது தெளிந்துகொள்ள வந்தது. அடையும் உம்மையும் சாபத்தின் உயர்வை உணர்த்தி நின்றன. யாராலும் எவ்வகையாலும் அழிவில்லாத விழுமிய நிலையினன் என அவனை நம் விழி தெரிய வைத்திருக்கும் வித்தக நிலை உய்த்துணர வுரியது. குறித்துக் காட்டும் பெயர்கள் சிறப்புகளை யூட்டிச் சீர்மை நீர்மைகளை நீட்டி அவனுடைய மேன்மைகளை விளக்கி நிற்கின்றன.

கண்தலம் பசும்பொன்னனவன் முன்னவன்

என இரணியனை இன்ன வண்ணம் நமக்குக் காட்டியிருக்கிறார். இரணியனோடு உடன் பிறந்த தம்பி ஒருவன் இருந்தான், அவனுக்கு இரணியாட்சன் என்று பேர். பொன் நிறமான கண்களை யுடையவன் ஆதலால் இங்ஙனம் பெயர் பெற்று நின்றான். இரணியம் = பொன். அட்சம் = கண். பொற்கண்ணன் என்ப புகழ்பெற்று நின்ற அவனுடைய அண்ணன் ஆதலால் முன்னவன் என்று இரணியன் இங்கே முதன்மை எய்தி வந்தான்.

அயனிடமிருந்து அதிசயமான வரபலங்களையடைந்து எவ்வழியும் தலைமையுடையனாய் நிலவியிருந்த இவனுக்கு ஒரு குலமகன் பிறந்திருந்தான். அந்தப் புதல்வனுக்குப் பிரகலாதன் என்று பெயர்.

ஆயவன் தனக்கு அருமகன் அறிஞரின் அறிஞன்,
தூயர் என்பவர் யாரினும் மறையினும் தூயன்,
நாயகன் தனி ஞானநல் லறத்துக்கு நாதன்;
தாயின் மன்னுயிர்க்கு அன்பினன் உளன்ஒருத் தக்கோன் (1)

வாழியான் அவன் தன்னைக்கண்டு மனம்உவந் துருகி
ஆழி ஐய நீ அறிதியால் மறைஎன அறைந்தான்
ஊழியும் கடந்து உயர்கின்ற ஆயுளான் உலகம்
ஏழும் ஏழும்வந் தடிதொழ அரசுவீற் றிருந்தான் (2)

தன்னுடைய அருமை மகனைக் கண்டு பெருமகிழ்ச்சி கொண்டு அரிய பல இன்ப நலங்களை மருவி ஈரேழ் பதினாலு உலகங்களும் ஒரு முகமாய அடிதொழுது ஒழுக இரணியன் முடிசூடி வாழ்ந்திருந்த அதிசய மாட்சிகளை இதனால் இனிது அறிந்து கொள்ளுகின்றோம்.

இவ்வாறு திவ்விய மகிமைகளில் செழித்து எவ்வழியும் சுக போகங்களை அனுபவித்துத் திளைத்து வந்தவன் தனது அருமை மகனுக்கு வேதம்முதலிய கலைஞானங்களைக் கற்பிக்கநினைந்தான்.

அறிஞரின் அறிஞன், யாரினும் தூயன்; அறத்துக்கு நாதன்; மன்னுயிர்க்கு அன்பன், எனப் பிரகலாதனைக் குறித்திருக்கும் குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. அரிய குண சீலங்கள் இனிய உவகை நிலையமாய் ஈண்டு ஒளி மிகுந்து வந்துள்ளன. எதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாமோ அந்த மெய்யறிவினை இயல்பாக மேவியிருந்ததலால் அறிவுடைமை தலைமையாய் வந்தது.

இத்தகைய உத்தம சற்புத்திரனைப் பார்த்துப் பார்த்து உள்ளம் களித்து உவந்து வந்த தந்தை நல்ல நாள் ஒன்றை நயந்து நோக்கிப் பள்ளிக்கு வைக்க நேர்ந்தான். வேதங்களையெல்லாம் நன்கு தெளிந்த வேதியன் ஒருவனை அழைத்துத் தனது அருமை மகனுக்கு அரிய மறைகளைக் கற்பிக்கும்படி பணித்தான். அந்த வேத வித்தகன் பெரிய பாக்கியம் பெற்றவன்போல் பெருமகிழ்ச்சி அடைந்து சக்கரவர்த்தி மகனைத் தனியிடத்துக்கு அழைத்துச் சென்றான். அருமையோடு ஆதரித்து உரிமையுடன் அருகிருத்தி ஓதி வைக்கத் தொடங்கினான். முதலில் இரணியாய நம என்று சொல் என்றான். அந்த வார்த்தையைக் கேட்டதும் இக் குலமகன் கைகளால் தன் காதுகளைப் பொத்தினான். அக் கலைஞன் கலங்கி விழித்து வியந்து நோக்கி "என்னை இது?" என்றான். "கலைஞானத்தைப் போதிக்க வந்த நீர் புலையினத்தைப் புகல நேர்ந்தீரே!" என்று இப் புதல்வன் புலந்து கூறினான். "ஐயோ! உலகமெல்லாம் தலைமேல் கொண்டு ஓதிவருகிற உந்தை பெயரை முந்துறச் சொல்லுவதே எந்த வகையிலும் மங்கலமாம்; அதனை உவந்து சொல்லியருளுக" என்று அவன் மீண்டும் பரிந்து வேண்டினான். இவன் அதனை மறுத்துவிட்டு "ஓம் நமோ நாராயணாய நம" என்று சொல்லினான். சொல்லவே உள்ளம்

உருகியது; கண்ணீர மல்கியது; உடல் சிலிர்த்தது; உயிர் பரவச மாயது, யாதும் அசையாமல் சிறிதுபோது மவுனமாயிருந்தான

இந்த நிலையைக் கண்டதும அந்த அநதணன் சிந்தை நடுங்கினன், தனக்கு அழிவு நேர்ந்தது என்று அஞ்சி அலமந்தான். "அந்தோ! என்னைக் கெடுத்தாயே! என்குடி கெட்டதே, நான அழிந்து ஒழியும படி இப்படி மொழிந்தாயே!" என்று இவ வாறு அவவேதியன பதறிக கதறி அலறிப புலம்பினன்.

கெடுத்து ஒழித்தனை என்னையும உன்னையும கெடுவாய!
படுத்து ஒழிந்தனை பாவி! அதற்தேவரும பகாதறகு
அடுத்த தன்றியே அயலஒன்று பகர்ந்ன அறிவில
எடுத்தது என்னிது? எனசெய்த வண்ணம நீ என்றுன

"பிரகலாதனுககு ஓதிவைககவந்த வேதியன பட்டுள்ள பாட்டையும மோதிமூண்டுள்ள நிலையையும இங்கே பார்த்து நாம் வியந்து நிற்கிறோம. அச்சமும திகிலும் அவனுடைய உள்ளத்தைப பெரிதும கலககி யிருககின்றன. தனக்குச சிரசசேதம நேர்ந்து விடும; தன்னை இரணிய வேந்தன விரைந்து கொன்று விடுவான என்று குலைநடுங்கி யிருந்ததலால இவவாறு அவன நிலைகுலைந்து பேச நேர்ந்தான.

பாவி என்னையும உன்னையும கெடுத்தாய!

என்றது அடுத்துள்ள கேடுகளை எடுத்துக காட்டினன

நானும செத்தேன, நீயும செத்தாய! இப்படி இருவரும சாகும்படி ஒருவரும கூறாத பொல்லாத பேரைச சொல்லி விட்டாயே! என்று துள்ளித துடித்திருககிறன. பிள்ளை என்றும பாராமல அரசாபிரான உன்னையும கொன்று தொலைப்பான எனககன்றிக கடுத்துள்ளான கல்வியை உனககு நான போதிக்க வந்தேன; என உயிரகறு அழிவை நீ சாதிகக கின்றயே என்று சாவுக்கு அஞ்சித தவித்திருககிறன. கேடுவாய! என்றது நீ நாசமாய்ப போக இந்த நீசச செயலைச செய்யாதருள் என நெஞ்சம குலைந்து பேசிய படியாம.

இரணியன பெயரையே யாண்டும் யாவரும தெய்வமந்திரமாகத துதித்து வருகின்றனர்; அதறகு மாறுக ஈண்டு இன்று அவனுடைய மகன திருமால் நாமத்தைப் பேரன்போடு சொல்

லவே அந்த ஆசிரியன் நாசம் வந்து மூண்டது என்று நடுங்கி நின்றான். உள்ளத் திகில் எள்ளி இகழச் செய்தது.

சொல்லாத சொல்லைச் சொல்லிப் பொல்லாத கேட்டை விளைத்தாயே! என்று அவன் வெகுண்டு புலம்பவே பிரகலாதன் மருண்டு திகைத்தான். பிறவித் துன்பத்தை நீக்கிப் பேரின்பத்தைத் தரவல்ல கடவுள் பெயரைச் சொன்னேன்; இப்பெரியவர் ஏன் இப்படிக் கடுத்து வைகிறார்? என்று கருதி யுளைந்த மைந்தன் குருவை நோக்கி உறுதி மொழியை உரிமையோடு கூறினான்

என்னை உய்வித்தேன், எந்தையை உய்வித்தேன் இனைய
உன்னை உய்வித்திவ் வுலகையும் உய்விப்பான் அமைந்து
முன்னை மூலத்தின் முற்பெயர் மொழிவது மொழிந்தேன்
என்னை குற்றம்நான் இயம்பியது? இயம்புதி என்றான்

“பாவி! என்னையும் உன்னையும் கெடுத்தாய்!” என்று தன்னைக் கடுத்துவைத்த ஆசிரியனை எதிர்நோக்கி இச்சிறுவன் இவ்வாறு வினயமாய் வினவியிருக்கிறான். அவ்வேதியன் போக்கும் இவ்வித்தகன் நோக்கும் உய்த்துணர வந்தன.

கொடிய கேடு செய்து விட்டதாகத் தன்னைக் கடிந்து கூறினமையால் தான் செய்துள்ளது அரிய பெரிய நன்மையே என அவன் அறியும்படி இவன் பரிந்து மொழிந்தான்.

உய்வு என்னும் சொல் உயர் பொருளுடையது.

துன்பத் தொடர்புகள் நீங்கி இன்ப நிலையை எய்துவது உய்தி என வந்தது. இழிந்த துயரங்களைக் கடந்து உயர்ந்த பதவியை அடைந்தவனே உய்ந்தான் என்னும் உரைக்கு உரிமையாயினான்.

என்னை உய்வித்தேன் எனத் தன்னை முதலில் குறித்தது உன்னி யுணர வுரியது. பரம்பொருளினுடைய திருநாமத்தைத் தன் வாயால் சொன்னமையால் தனது பிறவி தீர்ந்தது; பிறவா இன்பம் சேர்ந்தது என்று பெருமகிழ்ச்சி யடைந்துள்ளான். சிந்தை மகிழ்ந்துள்ள அந்த உண்மை முந்துற வந்தது.

உய்தி பெற்றவனே பிறரை உய்விக்க முடியும்.

பெற்ற தந்தையையும் பிறந்த குலத்தையும் மாசு நீக்கித் தேசு மிகச் செய்ய வந்துள்ளான்; ஈசன் அருளை எய்தி எழில்

பெற்று நிற்கின்ருன். அந்த விழுமிய நிலை அவனுடைய இனிய வாயமொழியால் இஙகே எளிது வெளியாயது.

எநதையை உயவித்தேன

என்றது இந்த மைந்தனைப் பெறறுள்ள தந்தையின பாக்கியத்தை நாம் நோக்கி யுணர வநதது. அகில வுலகங்களையும் ஆளுகிற அதிகார மமதையால் எவரையும் மதியாமல் தெய்வ நிநதனைகளைச் செய்து எவவழியும இரணியன் வெவவினைகளையே விளைதது வருகிருன, அநதப பழிபாவஙகள நீஙகி உயர்ந்த பத முததியை அவன அடைய நேரநதுள்ளமையால் அநநிலைமையை இக குலமகன வாயமொழி உலகம அறிய இஙஙனம் உணாததியருளியது: விரைந்து அவன மாண்டுபட மூணடிருந்தல் விழி தெரிய வநதது தன பிள்ளையைப பளளிககு வைதத அன்றே அவன கொளளிககு வைததான என அசுர குருவாகிய வெளளியும் மொழிந்தான. அமமொழியைக கேட்டு தேவா யாவரும் உளளி யுவநதார.

உனனை உயவிதது எனறது ஆசிரியனைக கருதி வநதது.

தனனையும தநதையையும் சொன்ன பினனாத தனககு ஓதி வைக்க வநத குருவை நோக்கி இனனவாறு உரைததான. எனனைக் கெடுத்தாய! என்று முனனம கடுதது அவன் துடிததுக் கூவினை ஆதலால் இனனவாறு எடுதது உரைததான. "உனனை யான யாதும கெடுககவிலலையே, நீ பேரினப நலனை அடையுமபடியான பெரிய நனமையை அல்லவா உனக்கு நான உரிமையோடு செய்திருககிறேன; உணமையை உணராமல் உளறுகினருயே!" என இதமாகப் பதில் மொழிநதபடியாய இப்பதம் ஈண்டு எழுந்து வநதுள்ளது. பிளளைமொழி பெரிய ஒளியாயது.

இனைய எனனும சுடடு போதிகக வநத அவ வேதியனைத் திட்டி நின்றது. மறையவனை மறைமுகமாய இறைமகன் வைதிருப்பது நிறைபெருஞ சுவையாய் நிலவி யுள்ளது. உளளததிலே நல்ல உணர்வில்லாமல் உலகததிலே பெரிய பண்டிதனைப் போல் உலாவி வருகினற அப் போதகனுககு இச் சாதகன் இங்கே உறுதி நலஙகளைப போதிததிருக்கிருன.

நிததிய அநிததியங்களின் நிலை தெரியாமல் பித்த மயக்கில்

பெருகிச் செல்வக்களிப்போடு செருக்கியுள்ள அரசரைச்சார்ந்து நின்று அவர் சொன்னபடியெல்லாம் தொழுது கேட்டு யாண்டும் இச்சகம் பேசி எவ்வழியும் கொச்சையா யிழிந்து வயிறு வளர்த்து வருகிற இத்தகைய உனக்கும் நன்மையைச் செய்திருக்கிறேன் என்பான இனைய உன்னை உய்வித்தேன் என்றான.

நாராயணு எனனுமம நாமம இவன நாவில் ஓதினன்; இது அவன காதில படடது, படடவே பாவம நீங்கியது; புண்ணியம் ஓங்கியது, அதனுல அவன துன்பம தீரநது இனபம மிகப பெற றான என எய்தியுளள பேறறை இனிது உணாததினன.

இதுகாறும மையல் மீதூாநது மறுகிக கிடநத வையம் இன்று தெய்வ நீாமை தெரிநதது; இனிமேல மெய்யறிவு தோய்நது உயதி பெறும எனபான இவவுலகமும் உயாநதது என றான. மருண்டுகிடநதது தெருண்டு தெளிநதமை தெரிய வநதது.

மருளும மயககமும மருவி நீணட காலமாக இருளடைநதிருநத உலகம அருள மொழியான ஞான ஒளியை இனறு பெறறது; அதனுல அவலக கவலைகள நீஙகி உவகை யினபங்கள இனி ஓஙகி விளஙகும என உவநது குறிததுளளான.

“நான உய்நதேன, என தநதை உயநதான, நீயும உயநதாய! இவவுலகமும உயநதது, இஙஙனம எல்லாரும யாவும ஈடேறுமபடி எமபெருமான பேரை இயமபியுளளேன, இதில என்ன பிழை? நான கேடு செயததாக அஞசி அலமநது நெஞசம கனனறு நீா பழி கூறுகினறீா! உணமையைத தெளிவாகச சொலலும” எனறு இமமதிமான கேடடான

ஞானசீல முடையனுய இபபாலகன் இவவாறு கேடகவே அமமறையவன உறுதியோடு எதிா பேச நோநதான.

முநதை வானவா யாவாக்கும முதலவாககும முதலோன்
உநதை மறறவன திருபபெயா உரைசெயறகு உரிய;
அநத ணளனேன் என்னினும அறிதியோ ஐயா!
இநத இப்பெயா உரைததெனைக் கெடுததிடல என்றான்.

அநத ஆசிரியன் இந்தவாறு இரநது வேண்டியிருக்கிறான்.

“தலைமைத தேவர்களான மூவருக்கும் உன் தந்தை முதல்வன், யாவருக்கும் தலைவன. இந்த மன்னர்பிரான் திருநாமம்

எந்த வகையிலும் பெருமகிமையுடையது. மங்கல காரியங்களைத் தொடங்கும்பொழுது எங்கும் அவன் பெயரே முன்னதாக ஓதி வருவது ஆதிமுதல தொடர்ந்த வழக்காய் நடந்து வருகிறது. இரணியாய நம என்றவாக்கே இரணம் கிடைக்கும் என்பது பழமொழி. பொன்னை, விரும்பாதவர் உலகில் எவரும் இலர். பொன்னவன, கனகன, இரணியன என்னும் இத் திருநாமங்கள் பெருமாண்புடையன இப் பெயர்களை ஓதினர் எவரும் உயர் பயனக்களை அடைந்துள்ளனர். வேதங்களை யெல்லாம் நன்கு தெளிந்த அந்தணாளனுன நான பேதமான மொழிகளை யாதும பேசமாட்டேன். அறிவிலும வயதிலும அனுபவததிலும முதியவரான பெரியவாகளுடைய பேச்சைக் கேட்டு நடப்பதே சிறுவாகளுக்கு நன்மையாம. மேலோரும நூலோரும் சென்ற வழி செலலுதலே என்றும நன்றும. முதிர்ந்த அனுபவசாலியான நான சொன்னபடியே சொலலுக. பின்னமாக யாதும பேசிவிடாதே" என இவவாறு பேசிவந்தவன இறுதியில் அறுதியிட்டு உறுதியாக உரைததான. அவவுரை அவனுடைய உள்ளப பதைபபை உணாததியுள்ளது.

இந்த இபபெயா உரைதது எனைக கெடுததிடல் ஐயா!

அந்த வேதியன இங்ஙனம வெருவி வேண்டியுள்ளமையால அவனது நெஞ்சத திகில்களை நேரே உணாந்து கொள்ளுகிறேம. ஐயா என்று பையனை உரிமையுடன ஐயா அழைததது தனபால அனபால இரங்கி அருளபுரிய வேண்டி. அபபனே! எனனைக் காததருள என்று மறுகி யுள்ளமையை விளி வெளியாககி நின்றது. அரசனுடைய ஆககினை கொடுமையாக நேர்ந்துவிடும என்ற பயம அவன உள்ளத்தைக் கலககியுள்ளது.

'தனபெயரைச சொல்லிக கொடாமல தனது அருமை மகனுடைய மனதை மாறறி நாராயணன பெயரைப போதிதது இந்தப பாரபபான தநதிரமாகப பேதிததிருக்கிறுன" எனத் தனனை இரணியன மாறுக எண்ணி நேரே கொன்று விடுவானே! என்றுநெஞ்சம கலங்கி நெடுந் துயரடைந்திருக்கிறுன்.

பள்ளிப் பிள்ளை பிழை செய்தால் அதற்கு உபாத்தியாயரே காரணம் என்று பெறறோர் எண்ணும் இயறகை இங்கே உற்றுணரவந்தது. ஓதிவிக்க வந்தவன் பீதியுற்று உள்ளம் தடுமாறி ஊசலாடி யிருக்கிறுன். நாச நிலை நடுங்கச் செய்துள்ளது.

வானவர்பால் சார்புடையனுய்த் தானவர்க்குக் கேடு சூழ்ந்து நெஞ்சக் கரவோடு வஞ்சகமாய் விரகு புரிந்து தன் மகனை மாறுபடுத்தி யிருக்கிருன் என்று அசுர சக்கரவர்த்தி கருதிக் கனன்ருல் தன் வாழ்வு முழுதும் பாழாமே! என்ற பயம் மறையவன் உள்ளத்தை இறுகப் பிணித்து, எவ்வழியும் வெவ் விய கொலைக் காட்சிகளை விளைத்து நிற்கிறது. அச்சத்தால் அல மந்திருத்தலால் பலபடியாயப் பரிதபித்து உழனறுன.

இப்பெயர் என்று சுட்டியது அதனைத் தன் வாயினல் சொல் லவும் அஞ்சியேயாம். முன்னம் சொன்னதுபோல் இன்னமும் சொல்லிவிடாதே; சொன்னுல் எனகுடி நாசமாய் நானும் செத்து ஒழிந்தேன் என்று பையன் எதிரே அவன பதறி யிருக் கிருன். மரண பயம் கரணங்களைக் கலக்கி யுள்ளது.

என்னைக் கெடுத்திடல் என்றதனுல் அடுத்துள்ள கேடுகளை அவன கருதிக் கலங்கி யுள்ளமை தெரிய வந்தது. தனனுடைய வாழ்வும் சாவும் இப்பாலன் கையில் இருப்பதாக அவன பரித பித்திருக்கிருன. உயிரப்பிச்சை பெற ஊசலாடி யுள்ளான.

மறுபடியும் மறுகி இரணியாய நம என்று சொல்லும்படி மன்னன் மகனிடம் மறையவன இதமாயச் சொன்னுன பை யன் அறவே மறுத்தான "பொய்யான புலைகளை என வாயால சொல்லேன், மெய்யான நிலைகளையே என உள்ளம உறுதி செய துள்ளது; என்னை யாதும அல்லல செய்யாமல அகன்று போ யருள்" என்று அவ வேதியனை நோக்கித் துணிந்து கூறினுன. அவன் மறுகி வேண்டியதை யெல்லாம மறுத்து இவன உறுதி கூறி விடுத்தான

தன உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தி இப பிள்ளை பேசிய அறிவுரைகள பேரதிசயங்களாயப பெருகி வந்துள்ளன. ஆசிரியன் கூறியதை வாத முறையில மறுத்து நீதி நெறிகளை நேரே தெரியச செயதிருக்கிருன். பேசாச சொல்லாதே! என்று அவ்வேதியன் பேதித்தமையால் அப் பேராளனுடைய பெரு மகிமைகளை யெல்லாம இவன தாராளமாயப பேச நேர்ந்தான. அவனுடைய மறுப்புகளும இவனுடைய விருப்புகளும, நெருப் பும் நீரும் போல் நேர்மாருய்ப் போர மாறி நின்றன.

வேத பாரகன அவவுரை செயதலும விமலன
ஆதி நாயகன பெயா அனறி யானபிறிது அறியேன,
ஓத வேணடுவது இலலைஎன உணாவினுககு ஒனறும
போதி யாததும இலலைஎனறு இவையிவை புகலும (1)

தொலலை நானமறை யாவையும துணிபொருட கெலலாம
எலலை கொணடவன அகமபுகுந திடஙகொணடது எனனுள
இலலை வேறினிப பெருமபதம யான அறியாத
வலலை யேலினி ஓதுவி நீதியின வழாத (2)

ஆரைச சொலலுவது அநதணா அருமறை? அறிநதோா
ஓரச சொலலுவது எபபொருள? உபநிட தஙகள
தீரச சொலலுவ தேவரும முனிவரும செபபும
பேரைச சொலலுவது அலலது பிறிதும ஒனறுளதோ?

வேதத தானுமநல வேளவியி னானுமெய யுணாநத
போதத தானுமஅப புறததுள எபபொரு ளானும
சாதிப பாாபெறுமபெருமபதமதலைககொணடுசமைநதேன
ஓதிக கேடபன பரமபொருள இனனுமஒன றுணடோ? (4)

காடு பறறியும காவரை பறறியும கலைததோல
மூடு பறறியும முணடிததும நீடியும முறையால
வீடு பெறறவா பெறறதின விழுமிதென றுரைககும
மாடு பெறறஒன மறறினி எனபெற வருநதி, (5)

செவிகளால பல கேடகில ராயினும தேவாககு
அவிகொள நானமறைஅகபபொருளபுறபபொருஅறிவாா.
கவிக ளாகுவாா காணகுவாா மெயபபொருள காலால
புவிகொள நாயகறகு அடியவாககு அடிமையிற புககாா (6)

எனககும நானமுகததது ஒருவறகும யாரினும உயாநத
தனககும தனனிலை அறிவரும ஒருதனித தலைவன
மனககு வநதனன வநதன யாவையும மறையோய!
உனககும இனனதின நலலதொன றிலலெனவுரைததான

தனக்கு ஓதிவைக்க வந்த ஆசிரியனை நோக்கிப் பிரகலாதன் இவ்வாறு பேசியிருக்கிறான். இந்தப் பாசுரங்களில் பதிந்துள்ள பொருள் வளங்களையும் அறிவு நிலைகளையும் கருதி யுணர்பவர் அரிய பல உறுதி நலங்களைத் தெளிந்து பெரிதும் மகிழ்ந்துகொள்வர். உரைகள் தோறும் தெய்வமணம் கமழ்ந்து திவ்விய ஒளிகள் வீசிக்கொண்டிருக்கின்றன. திருமாலிடம் பெருமானுடை

யனும் இந்த மகனை சிந்தையுருகித் தந்தைக்கு மாறுய்த் தழைத்திருப்பது அதிசய விந்தையாய் மதி தெளிய வந்தது. உருவலனபும் உள்ளப் பண்பும் உணர்ச்சி வேகமும் உயர்தகைகளை விளக்கி நிற்கின்றன. தத்துவ ஞானிகளும் பேசமுடியாத வித்தக வசனங்கள் இப்புத்திரன் வாயிலிருந்து புத்தொளி வீசி மதிநிலையும் தெளிய எதிரொலி செய்து எழுந்திருக்கின்றன.

யாதும் படியாமலே எல்லாம் உணர்ந்துள்ளமையால் இப்பிள்ளையின் வாய்மொழி பெரிய ஞான வெள்ளமாய்ப் பெருகி வந்துள்ளது. ஓதாதுணர்ந்த மேதாவி என்று மாதவர் யாவரும் வியந்து புகழ இவனது மேதை இங்கே விளங்கியுள்ளது.

தன்னுடைய சித்த சுத்தியால் எல்லாத் தத்துவ ஞானங்களும் இவ்வுத்தமனிடம் தெளிவாய் ஒளி செய்திருக்கின்றன. பத்திப் பரவசத்தால் பரஞான வெளியில் களித்துத் திளைத்துள்ளான். அந்த உண்மை அனுபவங்கள் உரைகள் எங்கணும் பொங்கி ஒளிர்கின்றன. உள்ளே அழுந்தி நுகர்ந்த அனுபவம் தெளிந்து மகிழ்ந்த ஞானக் காட்சியாய் வெளியே தேசு வீசி நின்றது, தூய மனம் மாயனை மருவி மகிழ்ந்துருகியுள்ளது.

இம் மேதைக்கும் போதிக்க வந்த வேதியனை வேதபாரகன் என்றது அவனது ஏத நிலை தெரிய. வேதங்களை யெல்லாம் ஓதியுணர்ந்து கரைகண்டவன் என்பது அப்பேருக்குப் பொருள்.

பாரகம்=தோணி, சுமக்கை. அலை கடலைத் தோணியால் கடந்ததுபோல கலையின் கடலைக் கல்வியால் கடந்தவன் என்பதாம். உண்மை நெறியை உணராத கல்வி புன்மையடைகின்றது.

அரிய கலையறிவாகிய அந்தப் பெரிய சுமையைச் சுமந்துள்ளானேயன்றி அதன் பயனை அடைந்து கொள்ளாதவன் என்பது இப் பெயரால் உணர்ந்து கொள்ள வந்தது.

குங்குமம் சுமந்த மிருகம் என உள்ளக் குறிப்போடு சொல்ல வந்தவர் சுமையை அமைதியாகச் சுட்டி வேதபாரகன் என வியமாய் உரைத்தருளினர். உள்ளத் தூய்மையும் உண்மையுணர்வும் இல்லையானால் அங்கே கல்வி வெள்ளம் என விரிந்திருந்தாலும் அது வீணேயாம் என்பது இங்கே விளங்கி நின்றது, ஞானம் இல்லாத கல்வி ஊனமுள்ளதாய் ஈனமுறுகின்றது.

இயல்பாகவே ஆன்ம ஞானமுடையவன் ஆதலால் எல்லா மேன்மைகளும் இக் குலமகனிடம் நிலையாய் நிலவியுள்ளன, மருவுசகுணம் போல் பிறவியிலேயே இவன்பால் தரும சீலங்கள் மருவியிருக்கின்றன. பூர்வ வாசனையும் புண்ணிய பரிபாகமும் இப் புனிதனிடம் பொங்கி மிளிர்கின்றன.

ஆன்மபோதம் பரிபூரணமாய் அமைந்திருந்ததலால் பரமாத்மாவினுபால் பதிந்த அன்பும் உயர்ந்த பண்பும் சிறந்த சன்மார்க்க நீர்மைகளும் பிள்ளை பருவத்திலேயே இப் பேராளன்கண் நேரே பெருகி நிறைந்து நிற்கின்றன.

"The intuition of the moral sentiment is an insight of the perfection of the laws of the soul" (Emerson)

"பரிபூரணமான ஆன்மக் காட்சி இயற்கையான தரும வுணர்ச்சியாயுள்ளது" என்னும் இது ஈண்டு ஊன்றி உணரவுரியது. அமெரிக்க ஞானியான எமாசன் பேலான ஆன்ம நீர்மையைக் கூர்மையாக ஓர்ந்து இங்ஙனம் உரைத்திருக்கிறார்.

உண்மை நெறியில் தோய்ந்து சன்மார்க்க சீலங்கள் வாய்ந்து இயல்பாகவே நன்மார்க்கத்தில் ஆழ்ந்திருந்ததலால் அந்த வேதபாரகன் சொன்ன புன்மார்க்கத்தை இகழ்ந்து பிரகலாதன் இங்கே தன்மார்க்கத்தைத் துணிந்து சாதிக்க நேர்ந்தான்.

"நீ போதித்தது போதும்; உன் வாயை மூடு" என அந்த ஆசிரியனை வாயடக்கி நிறுத்தி இந்த மாணவன் அவனுக்கு ஞானபோதனைகளைச் செய்திருப்பது கலையின் சுவைகளாய்க் கனிந்து திகழ்கின்றது.

விமலன் என இக்குமரனை இங்கே குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. மலம் = அழுக்கு, பாவம். அவை யாதும் இலாதவன் விமலன் என வந்தான. அமலன், விமலன், நின்மலன் என்னும் பெயர்கள் பரமனைக் குறித்து வருவன. அந்த உயர்ந்த பெயரால் இந்த மகனை ஈண்டுச் சுட்டிச் சொன்னது மீண்டும் பிறவாமல் அந்தமில்லாத ஆனந்த நிலையை அடையவுள்ள தன்மை கருதி. சித்த சுத்தியே முத்திக்கு வித்து. அந்தப் பரிசுத்த நிலையைப் பரி பூரணமாய் எய்தியுள்ளமை உள்ளியுணர வந்தது. தூயரின் தூயன என இச் சேயினை வியந்து முன்னம் சொன்னதையும் ஈண்டு எண்ணிக் கொள்ளுக.

மனம் தூயனான இம்மதிமான் இனம் தீயனான அம்மறையவனுக்கு உறுதி நலங்களை முறையே கூறநேர்ந்தான்: "வேதங்களையெல்லாம் ஓதி அறிந்தும் நீர் உள்ளம் தெளியாமல் இருப்பது எனக்கு எள்ளல் இளிவாய்த் தோன்றுகிறது. ஆதிமூல நாயகனான அந்தப் பரம்பொருளின் பெயரையன்றி வேறு எவர் பெயரையும் நான் கூறேன். இனி ஓதி உணரவேண்டிய பொருள் எனக்கு யாதும் இல்லை, நீர் ஒன்றும் போதிக்க வேண்டாம். உமது போதனைகள் பேதைமைகளாய்ப் பெருகியுள்ளன. பிழைபாடுகளை என்பால் பேசாதிருப்பது நன்று. பழமையான வேதங்கள் எவனைக் கிழமையாகப் போற்றி வருகின்றனவோ அந்த விழுமிய முழுமுதல் பரமன் என் உள்ளத்தில் குடிபுகுந்திருக்கின்றான். தரும நீதிகளே என் செவிகளில் நுழைய உரியன. வேதங்களை உண்மையாக உணர்ந்த மாதவர்கள் யாரைத் துதி செய்கிறார்கள்? உபநிடதங்கள் எந்தப் பொருளை உறுதியாகத் துணிந்துள்ளது? தேவரும் முனிவரும் தெளிந்து மகிழ்ந்து புகழ்ந்து போற்றுவது யாரை? அந்த ஆதிமூலப்பொருளின் பேரை உருகிச் சொல்லுவது அல்லது வேறு மறுகிப் பேசுவது இல்லை. வேத வேதாந்தங்களாலும் தத்துவ ஞானங்களாலும் மெய்ப் பொருள் என்று துணிந்துள்ள பரமபதியையே நினைந்து மகிழ்ந்து வனைந்து புகழ்ந்து புனைந்து தொழுது என் பொழுதைப் போக்குவேன். வேறு எதையும் நான் விழைந்து நோக்கேன். வனங்களில் இருந்தும் மலைகளில் உறைந்தும் ஊண் உறக்கங்களைத் துறந்து நெடுங்காலம் கடுந்தவங்கள் செய்த பெரிய அருந்தவர்களாலும் பெறமுடியாத அந்தப் பேரின்பப் பெருந் திருவை யாதொரு தவமும் செய்யாமல் இளமையிலேயே எளிதாக நான் இனிது பெற்றுள்ளேன். வேறு பெற வேண்டியது இனி யாது உளது? திருமாலுடைய அடியவர்க்கு ஏவல் புரிகிற அடியார்க்கு அடியாரும் யாதும் படியாமலே எல்லாக் கலைகளையும் தெளிந்து கொள்ளுவர்; சிறந்த கவிஞராய் விளங்குவர்; உயர்ந்த தத்துவ ஞானிகளுக்கும் உறுதி யுண்மைகளை உபதேசம் செய்வர். உலகங்களையெல்லாம் ஓரடியில் அளந்த எம்பெருமானுடைய பெருமகிமைகள் அளவிடலரியன. அந்த அற்புத மூர்த்தியின் அருள் சிறிது அடைந்தவர் பிறவிப் பெருங்கடல் நீந்திப் பேரின்பம் பெறுவர். ஆதிபகவனாகிய அவனது பெருமையை

இதுவரையும் நீர் அறியாது போயினும் இன்று முதலாவது தெளிந்து கொள்ளும்; அந்த தெளிவு உமக்கு எழுமையும் இன்பமாம்." என் இவ்வாறு கெழுதகைமையோடு கூறினன்.

தனக்குக் கல்வி கற்பிக்க வந்தவனுக்கு இப்பாலன் போதித்துள்ள நல்லுபதேசங்கள் எல்லாருக்கும் இனிய ஞானபோதனைகளாய் இன்பம் சுரந்திருக்கின்றன. தனது அனுபவ நிலைகளை எவ்வழியும் செவ்வையாகத் தெளிவுறுத்தி யிருக்கிறான்.

ஆதிநாயகன் பெயர் அன்றி யான் பிறிது அறியேன்.

தனது உறுதி யுண்மையை அறுதியிட்டுப் பிரகலாதன் இங்ஙனம் உரைத்திருக்கிறான். பிறிது அறியேன் என்றது தான் உரிமையாக அறிந்துள்ளதைத் தெளிவாக வலியுறுத்த வந்தது.

இந்த இப்பெயா உரைத்து எனைக் கெடுத்திடேல் என்று அந்த வேதியன் கெஞ்சி வேண்டியதற்கு இந்த நீதிமானிடமிருந்து இவ்வாறு பதில் மொழி வந்துள்ளது. அவன் மறுகி வேண்டுவதும், இவன் உறுதி கூறுவதும அரிய காட்சிகளாய்ப் பெருகி நிற்கின்றன.

ஆதிநாயகன் பெயரைச்சொன்னால் தனக்கு அழிவு நேர்ந்து விடும என்று அவன் கலங்கித் துடிக்கிறான்; அதனால் உலகமெல்லாம உயர்ந்து வாழும் என்று இவன் உவந்து களிக்கின்றான்.

நாராயணன் ஒருவனே பரமபதி; அவன் நாமமே யாவரும் ஓத வுரியது; சீவ கோடிகளுக்கெல்லாம அது சேமமானது, பேரின்ப நிலையமான அதனை மறந்து வேறு பேசுவது பெரும பிழையாம்; கொடும் பழியாம் என நேரே விளம்பினன்.

தான் உழுவலன்புடன் விரும்பியுள்ளதை உலகம் அறியத் தெளிவுபடுத்தி இக்குலமகன் வெளியிட்டிருப்பது உயர்ந்த நீர்மையாய ஒளி மிகுந்துள்ளது.

காடு பற்றியும் கனவரை பற்றியும்.

என்றது வீடு பெற விழைந்த மேலோர்கள் பாடுபட்டு வந்துள்ள பான்மைகள் தெரிய வந்தது. "உலக நிலையை மறந்து பொறிகளை அடக்கித் தனி ஒதுங்கியிருந்து அகமுகமாய்த் திரும்பி ஆன்ம நோக்கில் அழுந்தியுள்ளவர் (பரமான்மா) இன்பத்தைப்

பருக அரியராய் மருவி வருகின்றனர். அந்த வரவு நிலையை உரிமையுடன் இது உணர்த்தி நின்றது. பேரின்ப சாதனமான அரிய தவக் காட்சிகள் இங்கே தெரிய வந்தன.

“காயஇலை உதிர்ந்தகனி சருகுபுனல் மண்டிய
   கடும்பசி தனக்கு அடைத்தும்
காரவரையின் முழையில் கருங்கல்போல் அசையாது
   கண்மூடி நெடிதிருந்தும்
தீயினிடை வைகியும் தோயமதில் மூழ்கியும்
   தேகங்கள் என்பு எலும்பாய்த்
தெரியினும் இன்னுசென்னி மயிர்கள் கூடாக் குருவி
   தெற்ற வெயில் மூடிருந்தும்
வாயுவை அடக்கியும் மனதினை அடக்கியும்
   மௌனத்திலே யிருந்தும்
மதிமண்டலத்திலே கனல்செல்ல அமுதுண்டு
   வனமூடிருந்தும் அறிஞர்
ஆயுமறை முடிவான அருள்நாடினார், அடிமை
   அகிலத்தை நாடல் முறையோ?
அண்டபகிரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
   ஆனந்தமான பரமே” (தாயுமானவர்)

இந்தப் பாடலைக் கண்ணூன்றிக் காணுங்கள். கருத்துக் களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுங்கள். வேதமுடிவான வீடு பேற்றை அடைய விரும்பினவர் எவ்வளவு கடுந்தவங்கள் புரிந்து எத்துணை அரும்பாடுகள் பட்டிருக்கின்றனர்! தன் தலையில் குருவிகள் கூடு கட்டி வாழும்படி உடல்நிலையை மறந்து உயிர் உருகி உயர்நிலையை நாடி யோகத்தில் இருந்தவர் துயர் பிறவி நீங்கிப் பரபோகத்தை அடைந்துள்ளார் என்றமையால் அந்தப் பேற்றின் அருமையும் அதனைப் பெறுபவரது மகிமையும் ஒருங்கே அறியலாகும்.

இவ்வாறு நெடுங்காலம் அருந்தவங்கள் புரிந்து பெரிய மகான்கள் அரிதில் பெறுகின்ற பேற்றைக் காட்டிலும் உயர்ந்த பேரின்ப நிலையை நான் எளிதே பெற்றுள்ளேன் என்பதைப் பிரகலாதன் இங்கே வெளியிட்டிருக்கிறான்.

வீடு பெற்றவர் பெற்றதின் விழுமிது என்றுரைக்கும்
மாறு இல் பெற்றியினன்,

தான் பெற்றிருக்கிற பேரின்பப் பேற்றைத் தன் குருவினிடம் இகுலமகன் இங்ஙனம் கூறியிருக்கிறான். மாடு=செல்வம்.

விழுமிது என்று உரைக்கும் மாடு என்றது மேலான முத்திநிலை. நித்திய நீர்மையின் நிலை தெரிய வந்தது.

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. (குறள், 400)

இந்த அருமைத் திருக்குறளை நினைந்து பாடியதுபோல் அது விளைந்து வந்துள்ளது. தேவர் வாய்மொழி நம் கவிக்குத் தாய்மொழியாய் எவ்வழியும் நேயம் தழுவி நீர்மை சுரந்துள்ளமையை நிலைகள் தோறும் உணர்ந்து வருகிறோம்.

முண்டித்தும், நீட்டியும் என்றது தலைமயிரை மழுங்கச் சிரைத்தும் சடை முடிகளை வளர்த்தும் என அவர் வகை தெரிய அமைந்தது. "மழித்தலும் நீட்டலும்" (குறள், 280) என்பதை இது அடியொற்றி வந்தது.

துறவிகள், சந்நியாசிகள், தவசிகள், யோகிகள், ஞானிகள் என்ப பலவகை நிலைகளிலும் நின்று நெடுங்காலம் கடுந் தவங்கள் செய்து மகான்கள் வைகுண்ட பதவியை அடைந்துள்ளனர்; அந்த வைகுண்ட நாதனே இந்தமகன் உள்ளத்தில் சொந்தமாக வந்து குடிபுகுந்து கொண்டான்; ஆகவே அவர் பெற்ற பேற்றினும் இவன் பேறு பெருமகிமையாய் நின்றது.

அவர் வருந்தி அடைந்ததினும் பெரியபாக்கியத்தை இவன் யாதும் வருந்தாமலே எளிதில் அடைந்துகொண்டான் ஆதலால் தன் பேற்றின் ஏற்றத்தைப் பெருமையாக வுரைத்தான்.

கலவி ஞானங்களாலும் கடுந் தவங்களாலும் அடையமுடியாத அரிய பேரின்ப நலனை அன்பினால் எளிதே அடைந்து கொள்ளலாம் என்பது இங்கே நன்கு தெளிவாகி நின்றது.

தவசிகள் ஈசனை அருமை நாடி ஏங்கி நிற்கின்றார்.
பத்திமான்களை நாடி ஈசன் ஓடி வருகின்றான்.
அவர் இன்ப வுலகில் ஓர்பால் இருந்து களிக்கின்றார்.
இவர் இன்பமயமான ஈசனை மருவித் திளைக்கின்றார்.

அவர் கண்டு மகிழ்கின்றார்.
இவர் கலந்து சுகிக்கின்றார்.

யாவர்க்கும் அரிய பரமன் அன்பர்க்கு எளியனாய் வந்து இன்பம் சுரந்தருளும் மான்பைக் கண்டு இந்த உழுவலன்பன் வாய்மொழியால் உணர்ந்து கொள்ள வந்தது. தன் உள்ளம் புகுந்து தனக்கு இறைவன் அருள் புரிந்திருப்பது பேரின்ப வெள்ளமாய்ப் பெருகியுள்ளது என இக் குலமகன் உலகமறிய ஓலமிட்டுள்ளான்.

ஊனில்வாழ் உயிரே! நல்லைபோ உன்னைப்பெற்று
வானுளார் பெருமான் மதுசூதனன் என்னம்மான்
தானும் யானும் எல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்
தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும் ஒத்தே.
(திருவாய்மொழி)

தேனைப் பாலைக் கன்னலின் தெளியை ஒளியைத் தெளிந்தார்தம்
ஊனை யுருக்கும் உடையானை உம்பரானை வம்பனேன்
நானின் அடியேன் நீ என்னை ஆண்டாய் என்றால் அடியேற்குத்
தானும் சிரித்தே யருளலாம் தன்மை யாமென் தன்மையே.
(திருவாசகம்)

அன்புடைய என் அறிவே! அருளுடைய பொருளே!
அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே!
துன்புடைய உலகரெலாம் சுகமுடைய ராகத்
துன்மார்க்கந் தவிர்த்தருளிச் சன்மார்க்கம் வழங்க
இன்புடைய பேரருளால் எனைப்பொருள்செய் தளித்த
என்னமுதே! என்னுறவே! எனக்கினிய துணையே!
என்புடைநீ இருக்கின்றாய் அன்புடைநான் மகிழ்ந்தே
இருக்கின்றேன் இவ்வொருமை யார்பெறுவார் ஈண்டே.
(அருட்பா)

நம்மாழ்வார், மாணிக்கவாசகர், இராமலிங்க அடிகள் இறைவனோடு கலந்து மகிழ்ந்துள்ள பரவச நிலைகளை இவ்வுரைகள் உணர்த்தியுள்ளன. பேரன்புடைய பத்திமான்களிடம் ஈசன் பேரின்பப் பெருக்காய்ப் பெருகி யருளுகிறான்.

அவனுடைய கலியாண குணங்களையும் அதிசய மகிமைகளையும் இவர் எவ்வழியும் துதி செய்து மகிழுகின்றார்.

காலால் புலிகோன் நாயகன்.

என்றது மாவலி மன்னனிடம் மூன்றடி மண் கேட்டு ஓரடியால் உலக முழுவதையும் அளந்து கொண்ட அந்த நிலைமையையும் தலைமையையும் நினைந்து வந்தது.

உலகளந்த பெருமாள் ஆகிய அந்த நெடிய திருமாலே உரிமையோடு வந்து தன் உள்ளம் புகுந்து உவந்துள்ளான் என்பான் மனக்கு வந்தனன் என்றான்.

அவனது அடியவர்க்கு ஊழியம் புரிகிற அடியவரும் அதிசயக் காட்சிகளையும் அற்புத மாட்சிகளையும் அடைவார் என்றது தனது பேற்றையும் மகிமையையும் பெருக்கிக் காண.

கல்வி கேள்விகள் யாதும் இல்லாமலே எல்லாம் தெரிவார் பண்டிதர்களும் அறிய முடியாத அரிய கலை ஞானங்கள் யாவும் அவர்க்கு எளிதே விளங்கும், வேதங்களின் அதிரகசியங்களையும் அவர் தெளிவாக உணர்ந்து கொள்வார்.

நான்மறை அகப்பொருள் புறப்பொருள் அறிவார்.

திருமாலின் திருவருளை அணுஅளவு பெற்றவரும் எல்லாம் அறிய வல்ல பெரிய தெய்வீக நிலையைப் பெறுவார் என்பதை இவ்வாறு தெரிய வுரைத்தான். புறப் பொருளினும் அகப்பொருள் அறிதற்கரிய நுட்பம் மிகவுடையது ஆதலால் அதனை முதலில் குறித்தான். வேத உபநிடதங்களின் நுண்பொருள்களை யெல்லாம் அவர் ஓதாமலே உணர்ந்து கொள்ளுவார் என அவரது அதிசய மேதா விலாசத்தை விளக்கியருளினன்.

கவிகள் ஆகுவார், மெய்ப்பொருள் காணுகுவார்.

மாலின் அடியவர் யாதும் கல்லாமலே உத்தமக் கவிஞராய் உயர்ந்து விளங்குவார், சத்தியமான நித்தியப் பொருளை நேரே தெரிந்து கொள்ளுவார் என்பதை இங்ஙனம் தெளிவுறுத்தினன்.

கவிகள் ஆய் வருவது அரிய தெய்வீகநிலை என்பது இங்கே தெரிய நேர்ந்தது. தெய்வ சம்பத்தான திவ்விய மகிமைகளைத் தெளிவாகச் சொல்லி வருபவன் இவ்வழி இதனைச் செவ்வையாகத் தெளியச் செய்தான்.

பிறந்த மனிதனைச் சிறந்த மனிதன் ஆக்குவது கல்வி; அக் கல்வியை நன்கு கற்றுத் தெளிந்தவர் புலவர், பண்டிதர் என உலகில் நிலவி வருகின்றனர். அந்தக் கலைஞர் குழுவிலிருந்து

உயர்ந்த கவிஞர் ஆய் எழுபவர் மிகவும் அரியர். அந்த அருமையும் பெருமையும் கண்டு உரிமையாய அறிய வந்தன.

சீவர்களைப் படைத்தருளும் பிரமாவைப் போல காவியங்களையும் கருத்துக்களையும சிருட்டித்துத் தரும நீதிகளைப் போதித்து உயிரினங்களைத் திருத்தி உயர்ந்த அறிவுலகத்தை ஒளி செய்து வருதலால் கவிஞர் அரிய சிருட்டி கருத்தராயப் பெருமை பெற்றுள்ளனர். நித்தியமான அறிவு நலங்களை அருளி வருதலால அவர் எல்லாருக்கும் என்றும் இனியராய் நின்று யாண்டும் மகிமையுடன் நிலவுகின்றனர்.

"The Poet is a heroic figure belonging to all ages."

(Carlyle)

"கவிஞன் எல்லாக் காலத்துக்கும உரிய ஒரு பெரிய வீர அவதாரம" எனக் கார்லைல் என்னும ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறியுள்ளார். பான்மை உயர மேன்மை உயர்ந்தது.

புதிய உணர்வு நலங்களை ஊட்டி மனித சாதியை மாண்புறுத்தி வருதலால் கவிஞர் அதிசய மகானகளாய எங்கும் துதி செய்ய நின்றனர்.

"The Poet has a new thought he has a whole new experience to unfold, and all men will be the richer in his fortune"

(Emerson)

"கவிஞர் அதிசய சிந்தனையாளர்; அரிய புதிய அனுபவங்களையுடையவர்; அவரது உணர்வொளியால் எல்லா மனிதரும உயர் நலங்களை அடைந்து கொள்ளுகின்றனர்" என எமர்சன் என்னும் அமெரிக்க மேதை இவ்வாறு கூறியுள்ளார்.

கவிகளுடைய சொல்லும செயலும் யாவருக்கும உவகையை விளைத்து வருதலால் எல்லாரும உரிமையோடு அவரை உவந்து போற்றி வருகின்றனர்.

"The poet is darling" (Wordsworth)

"கவிஞன் எல்லாருக்கும் செல்லப் பிள்ளை" என இது சொல்லியுள்ளது. அருமைச் செல்லம் பெருமையில் விளைந்தது.

முன்னாளில் இந் நாட்டிலிருந்த அரசர் கவிஞரைக் கண் எனக் கருதிப் பேணி உரிமை பாராட்டி வந்துள்ளனர்; அந்த

அருமைப் பாடுகளைச் சங்க நூல்களில் எங்கணும் காணலாம். இந் நாளில் அந் நிலை பரிதாப நிலையில் பழிபடர்ந்துள்ளது. வரிசை தெரிந்து மதிப்பார் இல்லாமையால் கலை நிலை பரிசு குலைந்து போயது. உண்மையான கலையின் சுவையைத் தலைமையாளர் உணராமையால் புன்மைகள் பொங்கி புலைகள் மண்டி நிறகின்றன.

கலைஞரையும் கவிஞரையும் எந்த நாடு தரந் தெரிந்து பேணுகின்றதோ அந்த நாடுதான் அறிவும் நெறியும் உடையதாய்த் தலை சிறந்து விளங்கும். மதி நலம் வளர மாண்புகள் வளர்கின்றன.

கவிகளைக் குறித்து நம் கவிச்சக்கரவாத்தி கருதியிருப்பது பிரகலாதன் வாயமொழியாய்ப் பெருகி வந்துள்ளது. தெய்வீக நிலையில் உயர்ந்துள்ள திவ்விய கவி ஆதலால் அந்த இனவுரிமைகளை உலகம் அறிய உணர்த்தியருளினார். உண்மை நிலைகளையும் உறுதி நலங்களையும் கருதி யுணரும்படி காட்டி வருகின்றார்.

தன்கரும் தனிநிலை அறிவரும் ஒருதனித் தலைவன்.

திருமாலின் தலைமைத் தனமையின் அதிசய நிலையை இது 'அதி விநோதப் பாயக குறித்துள்ளது. அவனது பரமரமை அளவிடலரியது, யாராலும் எலலை காண முடியாதது என முடிவு கூறியபடியிது.

"எமக்கு நல அரணை, எனது ஆருயிரை,
இமையவர் தநதைதாய தனனை,
தனக்குமதன தனமை அறிவரி யானை" (திருவாயமொழி)

என நம்மாழ்வார் துதித்துள்ளது இங்கே அறிய வுரியது.

"தன்மை பிறரால அறியாத தலைவா!"

என்று மாணிக்கவாசகர் இறைவனை நினைந்து உருகினார்.

தன்மை தனக்கும் அறிவரியான்

என்று நம்மாழ்வார் இவவாறு உருகி யுள்ளார்.

மனசுக்கும் வாக்குக்கும் எட்டாத பொருளைப் பத்திமான்கள் தத்தமக்கு இயன்ற நிலையில் நினைந்து புகழ்ந்து நெஞ்சம் கரைந்து வனைந்து பாடி மகிழ்ந்து வருகின்றனர்.

"இத்தகைய அதிசயமான அற்புத நிலையிலுள்ள அப் பரமன் தனது நிலைமைகளை யெல்லாம் மறந்து எனது இதயத்துள்

வந்து நிலையாய்க் குடி புகுந்துள்ளான். அதனால் நான் அடைந்துள்ள இன்ப நலங்களை என் என்று சொல்லுவேன்? நான் பெற்ற பேற்றை நீரும் பெற்று மகிழலாம்; கொஞ்சம் உள்ளம் திருந்தி நாராயணாயநம! என்று சொல்லும்!" எனத் தன் குருவை நோக்கிப் பிரகலாதன் இங்ஙனம் சொல்லியருளினான். போதனை செய்ய வந்த வேதியன் போதிக்கப்பட்டான்.

## ஆசிரியன் அகன்றது.

திருமாலடிக்கே பெருமாலுடையனாய மன்னன் மகன் இன்னவாறு சொல்லவே அம் மறையவன் மறுகி வெருவினான். கடுகி எழுந்தான். அரண்மனையை நோக்கி விரைந்து போனான். அரியணையில் அமர்ந்திருந்த இரணியன் எதிரே வந்து வணங்கினான். அவ்வேதியனை விழைந்து நோக்கிக் "குழந்தைக்கு ஓதிவைத்தீரா?" என்று அவன் உவந்து கேட்டான். மன்னன் வினவிய இக் கேள்விக்கு அம் மறையவன் பதில் சொன்னது அதிசய விநோதமாயிருந்தது. அஞ்சி ஓடி வந்த அவன் நெஞ்சம் துணிந்து நிலைமைகளை நேரே சொன்னான்.

மறையவன் அரசர் பெரும! இளவரசின் நிலை சரியில்லை.

இரணியன் என்ன அது?

மறையவன் நான் சொன்னபடி சொல்லாமல் என்னதையோ சொல்லி எதிராவாதம் செய்கிறது.

இரணியன் நீர் என்ன சொன்னீர்?

மறையவன் தேவா முதல் யாவரும் யாண்டும் வேதமந்திரமாக ஓதி வருகிற மங்கல மொழியை முன்னதாகச் சொன்னேன்.

இரணியன் அந்த மந்திரம் என்ன?

மறையவன் அகில வுலகங்களுக்கும் ஆண்டவனான உங்கள் அருமைத் திருநாமமே அது.

இரணியன் அதனை எவ்வாறு மொழிந்தீர்?

மறையவன் இரணியாயநம என்னும் இந்த மூல மந்திரத்தையே வேதம் ஓது முன் மங்கலமாக யாவரும் முதலில் சொல்லுவது வழக்கம்; அம் முறைப்படி மொழிந்

தேன்; பிள்ளைப் பெருமான் இப் பெயரைச் சொல்லமாட்டேன் என்று மறுத்து மாறுபாடாய் வேறு ஒன்றைச் சொல்லுகிறது.

இரணியன்: வேறு?

மறையவன்: ஆம் அரசே!

இரணியன்: அது யாருடைய பேர்?

மறையவன். அதனை நெஞ்சால நினைநதாலும பாவம; அப்பெயரை என் வாயால் நான எபபடிச் சொலலுவேன?

எநதைகேள்! எனககு இமமைககும மறுமைககும இயமபச
சிநதையால இறை நினைததறகும அடாதன செபபி
முநதையே நினைநது எனபொருள முறறும எனறுரைததான
மைநதன ஓதிலன வேதம என றுரைததனன வணஙகி

அநத வேதியனுடைய மன நிலைகளையும சாதுரிய சாகசங்களையும இநதப் பாசுரததில் பாாதது வியநது நிறகிறோம். அரசனுடைய தயவை எதிா பாாதது எவவகையிலும அவன உள்ளம உவநது கொளளும வழிகளிலேயே மொழிகள பேசி யாண்டும இவன நீண்டு பழகி வநதுளளான எனபதை இடஙகள்தோறும் உணாநது வருகிறோம.

உஙகள அருமைத திருமகன் அஙகே கூறியபேரை இஙகே எனவாயால கூறலாகாது. கூறினால இம்மையும மறுமையும இழநது இழி துயரஙகளையே நெடுஙகாலம அடைநது வருந்த நேரும். அவவளவு கொடிய பழி மொழி அது.

சிநதையால் இறை நினைததறகும அடாதன.

இநதவாறு அவன இயமபி யுளளான. பிளளை உளளம் உருகி யுரைதத அநதத திவவிய நாமததை இவவாறு எளளி இகழநதது அரசனுடைய பிரியததையும அபிமானததையும் பெற விரும்பியே. அவனது வினய நடிப்பு வியபபு மிக வுடையது.

தனது அருமை மகனுக்கு உரிமையுடன ஓதிவைக்கப போன வேதியன மீண்டுவநது இப்படிச்சொல்லவே இரணியன் திகைததான். சொலலத தகாதது; எண்ணத் தகாதது; சிந்தையால் சிறிது நினைததாலும் பெரிய நிந்தையாம்; கொடிய பாவ

மாம் என மறையவன் மறைமுகமாய்க் கூறியதைத் தெளிவாக அறிய விரும்பி "அதனை ஒளியாமல் வெளியே சொல்லுங்க" என்று மன்னன் மறுபடியும் விரும்பிக் கேட்டான்.

அன்ன கேட்டவன் அந்தண! நந்தமக்கு அடாத
முன்னர் யாவரும் மொழிதரு முறைமையிற் படாத
தன்ன துள்ளுறும் உணர்ச்சியால் புதுவது தந்தது
என்ன சொல்? அவன் இயம்பியது இயம்புதி என்றான்

இரணிய மன்னன் இன்னவாறு அவ் வேதியனை வினவி யிருக்கிறான். அம் மறையவன் சொன்ன மொழிகளைக் கேட்டு இம் மன்னவன் மறுகி யுள்ளமை இவ் வுரைகளால் உணர வந்தது. தனக்கு விரோதமாக இது வரையும் யாரும் கூறாத பேரைத் தனது அருமை மகன் கூறினன் எனவே இவ் வீர வேந்தன் வியந்து சிந்திக்க நேர்ந்தான். சொன்ன சொல் இன்னது என்று தெளிவாகத் தெரியாமையால் உளைவுற்று உணர விழைந்தான்.

தன்னது உள் உணர்ச்சியால் புதுவது தந்தது
என்ன சொல் அவன் இயம்பியது?

வெளியிலிருந்து யாரும் சொல்லிக் கொடாமலே இயல்பாக வே தனது உள் உணர்ச்சியால் உணர்ந்து பிரகலாதன் உவந்து சொன்ன அந்தச் சொல் என்ன? என மன்னன் எண்ணி மயங்கி யிருக்கிறான். உரிமையான தனது அருமை மகன் பிரிய மாய் விழைந்து கூறிய அந்தப் புதுமையான அதிசய மொழியை அறிந்து கொள்ளக் காவலன் உள்ளத்தில் ஆவல் மூண்டு நீண் டது. நீளவே மீளவும் அவ் வேதியனை நோக்கி அம் மறை மொழியை விரைந்து சொல்லும்படி விழைந்து கேட்டான்.

அரசன் அன்னவை உரைசெய மறையவன் அஞ்சிச்
சிரதலம் கரம் சேர்த்திரு செவிதனைச் சேர்த்த
உரகம் அன்னசொல் யான் உனக்கு உரைசெயின் உரவோய்!
நரகம் எய்துவன் நாவும் வெந்துகுமென நவின்றான்

பிரகலாதன் சொன்னது எப்படிப்பட்ட கொடிய சொல் என்பதை அவ் வேதியன் இப்படி வடித்துக் கூறி நடித்துக் காட்டி யிருக்கிறான். அந்த நாடகக் காட்சியை இந்தப் பாடல் ஓவிய உருவமாத் தீட்டிக் காவியச் சுவையுடன் காட்டியுள்ளது.

ஒலிகளில் உள்ளதனைச் செலுத்திக் காண்பவர் கலையின் அழகு களையும் உலக நிலைகளையும் ஓர்ந்து வியந்து கொள்ளுவர்.' சித்த சுபாவங்கள் வித்தக விநோதமாய் வெளி வந்துள்ளன.

அந்த வேதியன் பல நூல்களைப் பயின்று தெளிந்தவன். வேதங்களை நன்கு ஓதியுணர்ந்தவன். இறைவன் ஒருவன் உள்ளன் அவன் எல்லாம் வல்லவன்; என்றும் உள்ளவன். அவனாலே தான் உலகம் இயங்கி வருகிறது என்னும் உண்மையைச் சுருதி கள் மூலம் அவன் அறிந்திருக்கிறான். இருந்தும் இரணியனுக்கு இனியனாய் எவ்வழியும் இச்சகம் பேசியே வாழ்ந்து வந்துள் ளான். "மகாராஜா! உங்களுடைய ஆணை அகில வுலகங்களிலும் செல்லுகிறது. உங்களுக்கு மேலான தலைவர் யாரும் இலர்; தேவர் முதல் யாவரும் உங்கள் பெயரையே வேத மந்திரமாக ஓதி வருகின்றனர். தங்கள் புகழ் ஒளி எங்கும் பரவி எழிலொளி வீசியுள்ளது" என இன்னவாறு முகத் துதிகளையே பனவிப் பேசி மன்னனிடம் பழகி வந்திருக்கிறான்

பேச்சு வன்மையும் காரிய சாகசமும் மிகுதியாக உடைய வன் என்று தெரிகின்றது. தனது அருமை மகன் சொன்ன சொல் என்ன? என்று மன்னன் வினவியபோது அம் மறையவன் இரண்டு காதுகளையும் விரைந்து பொத்தினான். அந்தப் பேரைக் கேட்டால் மகா பாவம் என்பதை அறிவிக்கும்படி அச் செயலைச் செய்திருக்கிறான். பகடியாக நடித்திருப்பது அகட விகடமா யுள்ளது. நெஞ்சம் கலங்கி நெடிது பயந்தவன் போல் அவன் அவ் வாறு செய்தும் வேந்தன் விடவில்லை. "பையன் என்ன சொன் னான்? அதைச் சும்மா சொல்லும்" என ஐயரை அரசன் வற் புறுத்தினான். அதற்கு அவன் என்ன பதில் உரைத்தான்.

அச்சொல் உரைசெயின் நரகம் எய்துவன்; நாவும் வெந்து உகும்.

"உங்கள் மைந்தன் சொன்ன அந்தச் சொல்லை என் வாயால் சொன்னால் நான் நெடுங்காலம் கொடிய நரக துன்பத் தை அடைந்து வருந்துவேன்; எனது நாவும் வெந்து அழுகிப் போம்" என அவன் இங்ஙனம் மொழிந்திருக்கிறான்.

இந்த உரை எவ்வளவு சிந்தனைகளைச் செய்ய வல்லது!

"பிள்ளை ஏதோ பழியான சொல்லைப் பிழையாகச் சொல்லி யிருக்கிறான்; அந்த வார்த்தையை வாயால் சொல்லவும் கூசி

இந்த வேதியன் இவ்வாறு அஞ்சி நடுங்குகிறான்” என இரணியன் நெஞ்சம் உளைந்து நிலைமைகளைச் சிந்தித்தான்.

பேரின்ப நிலையமான மோட்சத்தை அருளுவது' என அம் மைந்தன் உவந்து கூறிய மந்திரத்தை இம் மறையவன் நரகம் தரும் என்று இந்தவாறு நிந்தனை செய்து கூறியது உலக நிலைகளை உணர்ந்துகொள்ளச் செய்கின்றது.

அரசனை அடுத்துப் பிழைப்பவர் அவனுடைய மனப்போக்கின்படியே யாண்டும் நடித்து வாழ்வார் என்பதற்கு அப் பார்ப்பான் ஈங்கு ஓர் எடுத்துக் காட்டாய் நின்றான். மன்னன் மகன் அமுதம் என மகிழ்ந்துகொண்டதை அவன் நஞ்சம் என நடுங்கி மொழிந்தான். அவனது நடுக்கம் நாடக நடிப்பாயப் பாடமைந்திருந்தது. தணிந்த நெஞ்சன் பணிந்து பாடு படுகிறான்

கடவுள் இல்லை என்று நாத்திக நிலையில் தலை நிமிர்ந்து இரணியன் போராட்சி செய்து வருகிறான். அந்த ஆட்சிக்கு அவ் கேடு நேர்ந்துள்ளது. கடவுள் உண்டு என்று உறுதியான ஆத்திக நிலையில் பிரகலாதன் பேரானந்தம் கொண்டு நிற்கின்றான்

தந்தைக்கும் மைந்தனுக்கும் நேரே நேர்ந்துள்ள இந்தப் போராட்டத்தில் அந்தவேதியன் தந்திரமாக மன்னவன் பக்கமே மருவி நிற்கின்றான். அந் நிலையில் இவ்வாறு உரைகள் ஆடினான்.

இளவரசன் கூறியதை என்வாயால் கூறலாகாது, கூறினால் நரகம் எய்துவேன், நாவும் வெந்துபோம் என்று அம் மறையவன் கூறவே நிலைமையை நேரே தெரிய விரும்பித் தன் மகனை அழைத்து வரும்படி அருகே நின்றவர்களை இரணியன் அனுப்பினான். ஏவலர் நால்வர் ஆவலோடு ஓடினர். காவலன் காலனைக் காப்புக் கடவுளையே கருதியமர்ந்து உருகி யுவந்துள்ள மாளிகையுள் உறுதி நாடி மறுகி நுழைந்தார்.

## மைந்தனும் தந்தையும்

போதிக்கவந்த ஆசிரியன் பேதமாயப் போனபின் பிரகலாதன் அங்கேயே அந்நாமத்தைச் செபித்துக்கொண்டு திருமாலைத் தியானித் திருந்தான். மாலடிக்கே மால் படிந்து மனமுருகி யிருந்த இளவரசனை அணுகி “அரசர்பிரான் அழைத்து வரும்படி பணித்தார்” என ஏவலர் உரைத்தார். அவ் வுரையைக் கேட்ட

வுடனே இக் குலமகன் விரைந்து எழுந்தான்; தந்தையை வந்து கண்டு தாள் தொழுது நின்றான். தொழுத மைந்தனை உழுவலனபோடு தழுவி மகிழ்ந்து அருகிருத்தி உரிமையுடன் உரைகள் ஆடினன

கொணாக மைநதனை வலவிரைநது எனறனன கொடியோன
உணாவில நெஞசினன ஏவலா கடிதினின ஓடிக
கணணின எயதினா பணிஎனத தாதையைக கணடான
துணையிலான தனைத துணைஎன வுடையவன தொழுதான (1)

தொழுத மைநதனைச சூடாமணி மாாபிடைச சுணணம
எழுத அனபினோடு இறுகுறத தழுவிமா டிருததி
முழுதும நோககினீ வேதியன கேடகலின முனியப
பழுது சொனனசொல என? அது பகருதி எனறான. (2)

(இரணியனவதை,38 39)

பிதா அழைததும, பிள்ளை வநததும, அவனை ஆவலோடு அளளி அணைதது அருகில் இருத்தி உள்ளம் உவந்து உரையாடியுள்ளதும் ஓவியக் காட்சிகளாய் இங்கே ஒளி செய்துள்ளன.

பிள்ளைப பாசம் இரணியனிடம் பெருகியுளளதையும், பிதாவினபால் பேரன்பும பெருமதிபபும பிரகலாதனிடம மருவியிருததலையும் ஈண்டு நேரே கணடு நெஞசுவநது நிற்கின்றோம்.

தந்தை வரச சொன்னா என்ற அந்த உததரவைக் கேட்டதும மைநதன விரைநது வநதிருக்கிறான. கண் எதிரே கண்டதும் தலை வணஙகித தொழுது நின்றுள்ளான். பெற்ற தந்தையிடம பெரும பணிவுடையனாய இவவாறு தொழுதிருததலால் இக குலமகனுடைய நிலைமையும சீரமையும் நிலை தெரிய வநதன.

கடமை அறிவும் உண்மை யுணர்வும் கருமக் காட்சியும் தரும சீலமும ஒருஙகே பெருகியுளளமையை உணாந்து மகிழ்கின்றோம். இனிய சீாமைகள் எவவழியும் இன்பம் தருகின்றன.

தாதையைக் கண்டான் தொழுதான்

என்றது அக் காட்சியும் மாட்சியும் காண வந்தது.

கெழுதகைமையோடு அவவாறு தொழுதவன் யார்? என்பதை இறுதியடியில் அறுதியிட்டு உறுதியாய் உரைத்திருப்பது உணர்வின் ஒளியாய் மிளிர்ந்து உவகை சுரந்துள்ளது.

துணை இலான்தனைத் துணை என உடையவன்.

பிரகலாதனைக் கவி இங்கே இவ்வாறு நமக்குக் காட்டியிருக்கிறார். தனக்கு உறுதித் துணையாக அவன் கருதிப் பற்றியிருக்கும் பற்றுக் கோட்டை உற்று நோக்கும்படி உரைகள் வந்துள்ளன. சார்ந்துள்ள சார்பு ஓர்ந்து கொள்ள நேர்ந்தது.

துணை இலான் என்றது திருமாலை. தனக்கு இணையாக யாரும் இல்லாமல் தனி முதல் தலைவனாயுள்ளமையால் "துணையிலான்" என நின்றான. "தனக்கு உவமை யிலலாதான" (குறள், 7) எனக கடவுளைக் குறிதது நாயனார் கூறியுள்ளது ஈண்டு அறிய வுரியது.

"ஈடும எடுப்பும இல ஈசன
மாடு விடாது என மனனே" (திருவாய்மொழி)

என நமமாழவார் இஙஙனம் பாடியுள்ளார.

எந்தக் காலததிலும யாண்டும தனக்கு யாதொரு துணையும் இல்லாதவனை இநதப பையன ஈண்டு ஒரு துணையா என்று கொணடான எனறது அவனது ஏறறம தெரிய வநதது.

இல்லாதவனை உடையவன் என உல்லாச விநோதமாய்ச் சொல்லியருளினா. துணையுடையவனைத துணையாகப் பறறினல் அந்தத் துணை அவவளவு வலியுடையதாயிராது ஆதலால் இணையற்ற துணைமையின இயல உணர வநதது.

உறற துணையாய வாயநதுளள பெற்ற தநதையே பிழையாய மாறுபட்டுப பேரிடர் செய்ய நேர்நதுள்ளான் ஆதலால அந்த அல்லல நிலைகளையெல்லாம கடந்து உய்ய நல்ல துணையை அவன் நாடிக கொண்டான. பிணை புகுநதுள்ள அவனது துணை வலி இணையில்லாததாயது.

கடவுளை நம்பினோர் கைவிடப் படார.

என்னும் பழமொழியை உலகம் அறிய அவன் உணர்தத வந்துள்ளமையால் துணைமையின் நிலைமை ஈண்டு உணர வந்தது. உற்ற துணைகள் போல் சுற்றியுள்ள சுற்றங்கள் முற்றும் துணையாக மாட்டார்; உயிர்க்கு உண்மையான நல்ல உறுதித் துணை இறைவனே என்பது இங்கே நன்கு தெரிய நின்றது.

கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லால் காதல்மற்று யாதும் இல்லை
எண்திசையும் கீழும் மேலும் முற்றவும் உண்டபிரான்
தொண்டரோமாய் உய்யில் அல்லால் இல்லை கண்டீர் துணையே.

துணையும் சார்வும் ஆகுவார்போல் சுற்றத் தவர் பிறரும்
அணைய வந்த ஆக்கம் உண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர்
கணைஒன் றாலே ஏழ் மரமும் எய்த எம் கார்முகிலை
புணைஎன்று உய்யப் போகல் அல்லால் இல்லை கண்டீர் பொருளே.

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில் போற்றிஎன்று ஏற்றெழுவர்
இருள்கொள் துன்பத்து இன்மைகாணில் என்னே என்பாருமில்லை,
மருள்கொள் செய்கை அசுரர்மங்க வடமதுரைப் பிறந்தாற்கு
அருள்கொள் ஆளாய் உய்யல் அல்லால் இல்லை கண்டீர் அரணே.
(திருவாய்மொழி 9-1)

சீவ கோடிகளுக்கு உறுதியான உண்மைத் துணை திருமாலே என்பதை நம்மாழ்வார் இவ்வாறு உணர்த்தி யிருக்கிறார்.

இத்தகைய தெய்வத் துணையைக் கைக் கொண்டு உய்தி பெற ஊக்கி யுள்ளமையால் அந்தப் பாகவதர் இப்படி நோக்கச் செய்தார். பற்றிய துணை பார்வைக்கு வந்தது.

சரித்திர நிகழ்ச்சிகளை உரைத்து வரும் பொழுதே உயிர்க்கு உறுதியான உய்தி நலங்களைக் கவி யுணர்த்தி யருளுகின்றார்.

வந்து தொழுத மைந்தனைத் தந்தை உழுவலன்போடு தழுவி யெடுத்து அருகில் வைத்திருக்கிறான். ஆகவே அவனது புதல்வனின் வாஞ்சையும் இவனுடைய பிதாபத்தியும் அதுவரையும் யாதொரு மாறுபாடுமில்லாமல் உத்தம நிலையில் ஒளி வீசியுள்ளமை யுணரலாகும். இயல்பான பிறவிப் பாசங்கள் இருபாலும் உயர்வாக ஓங்கி யிருக்கின்றன.

தன்னுடைய செல்வ மகன் நல்ல கல்விமானாய் உயர்ந்து வர வேண்டும் என்றே தந்தை விழைந்து தக்கவனிடம் ஒக்குவமாக ஒப்புவித்தான். பள்ளிக்கு வைத்த பொழுது பிள்ளையின் உள்ளமும் உணர்வும் புதிய ஒளி வீசி அதிசய நிலையில் வெளியாயின. ஆகவே ஆசிரியனுக்கு அச்சம் தோன்றியது. அரசனிடம் ஓடி நிலைமையை உரைத்தான். தன்மையோடு தனித்திருந்த அவன் விசாரிக்க நேர்ந்தான். விசாரணை தொடங்கியது.

## இரணியன் வினவியது.

அழகுநலம் கனிய அருகில் அமர்ந்துள்ள தனது அருமை மகனை உழுவலன்புடன் விழிகளிப்ப நோக்கி இரணியன் இனிது உசாவினன்: "குழந்தாய்! உனக்குப போதிக்க வந்த வேதியனு டைய உள்ளம் வருந்தும்படி நீ ஏதோ சொல்லியிருப்பதாகத் தெரிகிறது; அந்த உபாத்தியாயரைப் பார்த்து என்ன சொன னாய்?" என்று முன்னதாக மன்னன் கேட்டான்.

வேதியன் முனிய நீ சொன்ன சொல் என்?

தன்பிள்ளையை நோக்கி இரணியன் இவவாறு வினவியிருக்கிறான்

ஓதுவிக்கப் போன ஆசிரியனை நோக்கி ஏதோ பிள்ளை பிழையாகப் பேசியுள்ளான் என்றே அவன் உள்ளம் கருதி யுள்ளமையை இவ்வுரையால் உணர்நது கொள்ளுகிறோம.

தன் வாயால் சொல்ல முடியாத கொடிய சொல் என்று பொல்லாத நிலையில் ஓடிவநது அமமறையவன் முறையிட்டான் ஆதலால் அவனையே குறைசொல்லியிருப்பதாகக கருதநோநதது.

பெரிய சக்கரவர்த்தி மகன் ஆதலால் அநதப் பெருமித நிலை யில் பேச்சு நிகழ்ந்திருக்கும் என்று எண்ண இடம் தந்தது.

ஐயரையே பையன் அவமானப் படுத்தியிருப்பதாக ஐயம நிகழ்ந்தமையால் மெய்யைத் தெளிவாக அறிய வெளியே அளி யோடு உசாவினன்.

பழுது என்னும் சொல் பெயா உரி இருவகையிலும் மருவி வரும். பெயர்ச் சொல்லாய் நின்று பிழையையும, உரிச சொல் லாய் நின்று பயனின்மையையும் உணர்ததும.

"பழுது பயமின்றே" என்றது தொல்காப்பியம்..

பிழையாகவோ, வீணாகவோ ஏதோ பேசியிருக்கின்றான் என்று எண்ணினமையால் பழுது சொன்ன சொல் என்? என்று மன்னன் இன்னவாறு எதிர் வினவினன்.

## மைந்தன் மொழிந்தது

தன்னை நோக்கித் தனது தந்தை வினவியதைக் கேட்டதும் இம்மைந்தன் பணிவோடு பதில் சொல்ல நேர்ந்தான். "எந்தாய்! யான் யாதொரு பழுதும் யாரையும் கூறவில்லை: வேதங்கள் முத

வில் விளைந்து சொல்லுவதையே நான உவந்து சொன்னேன். ஆதிமூலமானது; ஓதினவருடைய துயரங்களை நீக்கி உயர் பதம் தருவது; நெஞ்சால் நினைத்தாலும் வாயால் சொன்னாலும் காதால் கேட்டாலும் பிறவித்துன்பங்களை அடியோடு ஒழித்துப் பேரின் பங்களை யருளுவது; சிறிய அமுதமான அந்தத் திவ்விய நாமத் தையே மங்கலமாக நான முன்னுற ஓதினேன்" என இங்ஙனம் கூறவே இரணியன நிகைததான. வந்து முறையிட்ட மறைய வன மீது குறையில்லை என்று சிந்தை தெளிந்து கொண்டான். மகனுடைய மதுர மொழிகளைக் கேட்டு மகிழ்நதாலும் மாறுபட் டுள்ளதை யுணாநது மனம் வேறுபட்டது. சுருதிகள உண்மை யோடு சொலவதையே நான் கருதிச் சொன்னேன் எனறு மகன சொல்லவே "அவவுரை யாது? அதனைத்தெளிவாகச சொல் லுக" எனத தாதை கேட்டான். தநதை அவவாறு கேட்கவே மைநதன அதன மகிமைகளை விளக்கி மொழிந்தான்.

## நாம மகிமை.

காமம யாவையும தருவதும அபபதம கடநதால
சேம வீடுறச செயவதும செநதழல் முகநத
ஓம வேளவியின உறுபதம உயபபதும ஒருவன
நாமம அனனது கேளநமோ நாராய ணாய (1)

மணணில நினறுமேல மலரயன உலகுற வாழும
எணணில் பூதஙகள நிறபன திரிவன இவறறின
உணணி றைநதுறை கரணததின ஊஙகுள உணாவின
எணணு கினறதுஇவ எடடெழுத தேபிறி தில்லை. (2)

முககட டேவனும நானமுகததது ஒருவனும முதலா
மககட காறுமிம மநதிரம மறநதவா மறநதாா,
புக்குக காடடுவது அரிதிது பொதுவுறக காண்பாா
ஒகக நோககினா அலலவா இதனிலை யுணராா (3)

தோறறம எனனுமத தொல்வினைத தொடுகடற சுழிநினறு
ஏறறும நனகலன் அருஙகலன யாவாககும •இனிய
மாறறம மஙகலம மாதவ வேதததின வரமபின •
தேற்ற மெய்ப்பொருள தெரிநதமற றிதினில் சிறந்த (4)

உன்னுயிர்ககும என உயிாக்குமிவ் வுலகத்தி னுள்ள
மன்னுயிர்க்கு மீ துறுதிஎன றுணாவுற மதித்துச்.

சொன்னது இப்பெயர் என்றனன் அறிஞரில் தூயான
மின்னு யிரகக்குழவேல இரணியன தழலெழ விழித்தான.(5)

பிதாவை நோக்கிப் பிள்ளை பேசியுள்ள மொழிகளை இங்கே நாம் உள்ளம் உவந்து நோக்குகின்றோம். பள்ளியில் தான் படிக்கத் தொடங்கிய பொழுது ஆசிரியன் முன்னிலையில் முத லில் ஓதிய பேரின் சீர்மை நீர்மைகளை இவ்வாறு கூறியருளினன். வேதியன முனிய நீ சொன்ன சொல் என்ன? என்று மன்னன் முன்னம் வினவினமையால் அதற்கு விடையாக இன்ன வண் ணம் மகன் விளக்கிக் கூறினன்.

தான் சொன்ன சொல இன்னது என்பதைச சொல்ல நேர்ந்தவன் அதிசய பரவசமாய்ப் பேசி யிருக்கிறான்.

"தந்தையே! நான அங்கே சொன்னது ஈசனுடைய திரு நாமம்! அளவிடலரிய மகிமைகளை யுடையது; கருதிய உறுதி நலங்களை உரிமையுடன தருவது! இம்மை மறுமை வீடு என்னும மும்மையும் அருள்வது எம்மையும் இனியது; பூலோகம் முதல் பிரமலோகம வரையும் உள்ள சீவகோடிகள யாவும ஆவலோடு எண்ணி ஆனந்தமடைந்து வருவது, அரியபேரின்ப நிலைகளை யெல லாம் எளிதே கொண்டு வந்து எதிரே ஈவது; எட்டு எழுத்துக களால் ஆனது, வேத மந்திரமாய விளங்கி யுள்ளது. தேவாயா வரும் நாளும உவந்து ஓதிவருவது, சிவனும அயனும புகழ்ந்து பேசுவது, பிறவிக கடலைககடந்தச் சீவாகளைப் பேரின்ப முத்தி யில் உய்ப்பது; உன உயிாக்கும என உயிாக்கும் உலகத்தில் உள்ள எல்லா உயிாகளுக்கும நன்மை யுண்டாகும படி உயதி யை நாடி உரிமையுடன நான் சொன்ன அந்த அருமைத திரு நாமம் இன்னது என்பதை இங்கே தெளிவாகச சொல்கிறேன். அது ஓம் நமோ நாராயணய என்பதே" என இவ்வாறு அன்பு கனிந்து அதிசய நிலையில துதி செய்து கூறினன்.

ஓதப் புகுந்த பொழுது குருவின் எதிரே முன்னம் மொழி ந்த மூலமந்திரத்தை இங்கே தந்தை எதிரே இம்மைந்தன் இங்ங னம் விரித்து விளக்கி யிருக்கிறான். இறைவனுடைய திருநாமம் ஆதலால் அதன் பெருமகிமைகளைப் பேராவலோடு பேசநேர்ந் தான். பேச்சில் ஆராமை மீதூர்ந்துள்ளது.

எண்ணிய யாவும் ஈந்தருளுகிற புண்ணிய மந்திரம் என

முதலில் உதவி நலங்களை உணர்த்தி யருளினன். மனிதர் விரும்புகிற இன்ப நலங்கள் எல்லாம் இனிது தரும் என்பான் காமம் யாவையும் தருவது என்றான். காமம்=விருப்பம்.

இம்மையிலே அரிய பல சுக போகங்களையும், மறுமையிலே சுவர்க்க இன்பங்களையும் அதன்பின் என்றும் அழியாத நித்தியமான பேரின்ப முத்தியையும் தந்தருளும் என அந்த மந்திரத்தின் அதிசய மகிமைகளைத் துதிசெய்து சொல்லினன்.

ஓம் நமோ நாராயணாய

என்பது எட்டு எழுத்துக்களால் அமைந்துள்ளமையால் அஷ்டாட்சர மகா மந்திரம் என்று சொல்லப்படும். திருமாலின் திருநாமமாய் அமைந்துள்ளமையால் இதனை உரிமையுடன் உள் நினைந்து ஓதி வருபவர் அரியபல மகிமைகளை அடைந்து வருகின்றனர். எட்டு எழுத்தே என்றதில் ஏகாரம் தேற்றம்.

பேரின்ப வழியே அந்த மூர்த்தியின் சிந்தனை வருகிறது, அதனால் அந்தமில்லாத இன்பங்கள் உளவாகின்றன. "நாராயணா என்னும் நாமம் குலம்தரும்; செல்வம் தந்திடும்; விசும்பு அருளும், பெருநிலம் அளிக்கும்; வலம் தரும்; பெற்ற தாயினும் ஆயின செய்யும்" என்று திருமங்கை ஆழ்வார் * கூறியுள்ளமை ஈண்டு அறிய வுரியது.

இந்த ஆழ்வார் பாசுரத்தை ஆழ்ந்து பயின்று அடியொற்றியே "காமம் யாவையும் தருவது, சேம வீடுறச் செய்வது" என்னும் பாடல் இங்கே வந்துள்ளது. இழிந்த துயரங்களை யெல்லாம் நீக்கித் தனக்கு உயர்ந்த பேரின்ப நலங்களை நாராயண மந்திரம் அருளியுள்ளதாக மங்கை மன்னன் மனம் மகிழ்ந்து பாடியிருக்கிறார். சில பாடல்கள் அயலே வருகின்றன.

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு
அவர்தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து

* இந் நூல் பக்கம் 2457, வரி 7 பார்க்க.

நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம். (1)

ஆவியே! அமுதே! எனநினைந் துருகி
அவரவர் பணைமுலை துணையா
பாவியேன் உணராது எத்தனை பகலும்
பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்
தூவிசேர் அன்னம் துணையொடும் புணரும்
சூழ்புனற் குடந்தையே தொழுதஎன்
நாவினால் உய்ய நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம். (2)

கள்வனே னானேன் படிறுசெய் திருப்பேன்
கண்டவா திரிதந்தே னேலும்
தெள்ளியேன் ஆனேன்; செல்கதிக்கு அமைந்தேன்;
சிக்கெனத் திருவருள் பெற்றேன்;
உள்ளெலாம் உருகிக் குரல்தழுத் தொழிந்தேன்
உடம்பெலாம் கண்ணநீர் சோர
நள்ளிருள் அளவும் பகலுமநான் அழைப்பன்
நாராயணா என்னும் நாமம். (3)

எம்பிரான் எந்தை என்னுடைச் சுற்றம்
எனக்குஅரசு என்னுடை வாணாள்
அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி
அவருயிர் செகுத்தஎம் அண்ணல்
வம்புலாம் சோலை மாமதிள் தஞ்சை
மாமணிக் கோயிலே வணங்கி
நம்பிகாள்! உய்ய நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம். (4)

கற்றிலேன் கலைகள் ஐம்புலன் கருதும்
கருத்துளே திருத்தினேன் மனத்தைப்
பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை
பெருநிலத் தாருயிர்க் கெல்லாம்

செற்றமே வேண்டித் திரிதர்வேன் தவிர்த்தேன்
செல்கதிக்கு உய்யுமா றெண்ணி
நற்றுணை யாகப் பற்றினேன அடியேன்
நாராயணா என்னும் நாமம். (5)

(பெரிய திருமொழி)

நாராயண மநதிரததைத துணைக்கொண்டே நான் உய்தி பெறறேன் என ஆழவாா இவ்வாறு கூறியுள்ளாா. உலக மருள நீங்கி உணாவொளி ஓங்கிய பின்பே அந் நாம மகிமை நன்கு தெரிய வநதது என்று அன்பு கனிநது பரவசமாய உரையாடியுளள அனுபவ மொழிகள ஆழ்நது சிந்திக்கத் தக்கன. உள்ளம் உருகி, உடல் அயாந்து, குரல் தழுதது, கண்ணீா சொரிந்து இரவும் பகலும் எண்ணியிருந்தேன் எனறதனல் அவரது புண்ணிய பரிபாக நிலை உணர வந்தது.

இநத மநதிர மூாததியான அநத ஆதிமூலப் பொருளின் சிந்தனையால் எல்லா இனப நலஙகளும எளிதே உளவாம். அறம் பொருள் இனபம் வீடு எனனும சீவ பாக்கியஙகள் யாவும் ஒருங்கே தந்தருளும எனபது உணாந்து கொளளவந்தது. பெரிய அரச பதவியும், அரிய பல சுக போகங்களும், தேவ கந்தருவ வாழவுகளும முடிவில் முடிவிலின்பமான முத்திப் பேறும் அந் நாமம்ஓதினா் பெறுவா எனபதை உறுதியாகஉணாத்தியருளினா.

ஆதிஅரி ஓமநம நாராயணா் திருக்கதை
அறிநது அனுதினம் பரவுவோா
நீதியனு போகநெறி நின்றுநெடு நாளதி
னிறநது செகதண்ட முழுதுக்கு
ஆதிப்ாக ளாயஅரசு செய்துளம் நினைததது
கிடைத்தருள் பொறுதது முடிவில்
சோதிவடி வாயஅழிவில் முத்திபெறு வாரென
உரைத்த சுருதித் தொகைகளே.

என நமது காவியத்தின் முதலில் பயன் கூறி யுள்ளதும் கண்டு அறிய வுரியது. இராம காதையை ஓதியுணர்வதால் உளவாகும் உறுதி நலங்களை இது உணர்த்தியருளியது. எட்டு எழுத்து நசனே இரண்டு எழுத்து மனிதனாய் வந்து

இன்னுகையை நாசம் செய்து வேண்டிய நன்மைகளை விளைத்தரு ளிருக்கின்றனக் கவிஞா வியந்து புகழ்ந்துள்ளனர்.

*தோற்றம் எனனும் அத் தொல்லினைத் தொடுகடற் சுழின்று ஏற்றும் நன்கலன.*

பிறவிப் பெருங்கடலிலிருந்து கடத்திச் சீவர்களை முதநிக் கரையில் சேமமாச் சேர்க்கின்ற நல்ல மரக்கலம் என அந நாமத்தை இங்ஙனம் குறிததருளினா. தோற்றம=பிறபபு. கலன்=கப்பல. நாமம் சேமக் கலமாயுள்ளது.

**யாவர்க்கும் அருங்கலன்.**

என்றது எல்லார்க்கும் அரிய அணிகலமாய் நின்று எழில் தருவது என அதன் இனிய நீர்மை தெரிய வந்தது.

இநத நாம மந்திரத்தைச் சிந்திதது ஓதி வருபவா அறிவு அழகு திரு முதலிய உயா நலங்களெல்லாம ஒருங்கே பெற்றுச் சிறந்த நிலையில் விளங்கி நிறபா எனபதை இங்ஙனம் விளககி யருளினர். தெய்வத் தோயவு திவ்விய மகிமை ஆகிறது.

செபமும் தபமும் ஆன்ம சோதிகளாய் மேன்மை சுரந தருகின்றன. தன உளளததிலும உரையிலும் இறைவனுடைய உருவநாமங்கள் மருவி வரின அவன உலகத்தில உயாநத தேசு டையனாய் ஒளி மிகுநது நிறகினறுன.

உருவேறத திருவேறும் என்னும பழமொழி மநதிரசெபங் களையே இந்தவாறு குறிதது வநதுளளது. புனித் நாமததை மனிதன சிநதிக்கும பொழுது அவனும் புனிதனாய இனிது வளாகிறுன. இதய வெளியில ஈசனை எய்தியவன உதய ஒளி யாய் ஓங்கி மிளிாகினறுன.

எல்லா இடர்களையும் நீககி இனிமை தருவது ஆதலால் ஈசன் நாமம சீவர்களுக்கு நல்ல துணையாய் வநதது.

> "கற்றுணைப் பூட்டிஓர் கடலில் பாய்ச்சினும
> நற்றுணை யாவது நமச்சி வாயவே."

பஞ்சாட்சர மந்திரத்தைத் திருநாவுக்கரசா இங்ஙனம் நெஞ் சம் கொண்டு நினைந்து மகிழ்ந்துள்ளார். இந்த மந்திர மகிமை களைக் குறித்து ஒரு பதிகம் பாடித் துதித்திருக்கிறுர்.

பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை,
ஆவினுக்கு அருங்கலம் அரனஞ்சு ஆடுதல்,
கோவினுக்கு அருங்கலம் கோட்டம் இல்லது,
நாவினுக்கு அருங்கலம் நமச்சி வாயவே (1)

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகில்அவை ஒன்றும் இல்லையாம்,
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. (2)

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்குவான் நலன்
குலமில ராகிலும் குலத்துக்கு ஏற்பதோர்
நலமிக்க கொடுப்பது நமச்சி வாயவே (3)

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே (4)

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசரண் ஆதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே (5)

(தேவாரம்)

சிவ பெருமானுடைய திருநாமம் இவ்வாறு உயர்பெரு மந்திரங்களாய் ஒளி மிகுந்துள்ளது ஓதி யுணர்ந்து உறுதி நலங்களை அடைந்த அனுபவிகள் அதன் அருமை பெருமைகளை உளம் உருகி உவந்து போதித்திருக்கின்றனர்.

"ஓடினேன் ஓடிச் சென்று உருவம் காண்டலும்
நாடினேன் நீடிற்று நமச்சி வாயவே"

என அப்பர் இப்படிப் பாடியிருக்கிறார்.

"ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்"

என்று திருமங்கையாழ்வார் இங்ஙனம் கூறியுள்ளார்.

"நற்றுணை யாவது நமச்சிவாயவே" என்றார் நாயனார்.

"நற்றுணையாகப் பற்றினேன் நாராயணநாமம்" என்றார் ஆழ்வார்.

இந்தப் பாசுரங்களில் படிந்துள்ள ஒப்புரைகளை ஊன்றி நோக்கி உறுதியுண்மைகளைக் கூர்ந்து ஓர்ந்துகொள்ள வேண்டும்.

நன்கலன், அருங்கலன் என வந்துள்ள நம் கவியின் உரைகளும், நாவினுக்கு அருங்கலம் என்னும் நாவரசர் மொழியும் இணைந்து பிணைந்துள்ளமை உணர்ந்துகொள்ள வுரியது.

சீவர்களுக்கு எவ்வழியும் உறுதி நலங்களை அருளுகிற திவ்விய நாமத்தையே நான் உரிமையுடன் உரைத்தேன் என்று பிரகலாதன் இரணியனிடம் இனிமையாக இசைத்தான்.

உன்உயிர்க்கும், என்உயிர்க்கும், மன்உயிர்க்கும் உறுதிஎன்று சொன்னது இப்பெயர் என்றனன்

மன்னன் மகனுடைய மனநலமும் மதிநிலையும் அருள் நீர்மையும் இதனால் அறிய வந்தன. எல்லாரும் இன்ப நிலைகளை அடையும்படி இவன் அன்பு நலங்கனிந்து அறிவு சுரந்துள்ளான். மன்னுயிர் இன்புற எண்ணுகின்றவன் மகான் ஆகின்றான்.

உன் உயிர்க்கும் என இரணியனை முன்னுறக் குறித்திருத்தலால் பெற்ற தந்தை உயர்கதி அடைய வேண்டும் என்று இம்மைந்தன் உள்ளன்புடன் உரிமை பூண்டுள்ளமை உணரலாகும்.

"எல்லா உயிர்களுக்கும் இனிய இதங்களையே நாடிப் புனித நாமத்தை நான் என்வாயால் சொன்னேன்; நாராயணா என்னும் இப்பேரை வேதங்கள் பாராயணம் பண்ணி வருகின்றன. அரிய புண்ணிய மந்திரம், கருதினார் எவர்க்கும் கதிநலங்களைத் தருவது, அளவிடலரிய மகிமைகளையுடையது, எந்தையே! இதன் மகிமையை அந்த வேதியன் யாதும் உணர்ந்துகொள்ளாமையால் ஏதமுடையனாய் மதிமருண்டு ஓடிவந்து உங்களிடம் மாறுபாடுகளைக் கூறியிருக்கிறான், உண்மையை நீங்கள் தேறியருளுங்கள்" என்று பிரகலாதன் பிதாவை நோக்கிப் பேசி நின்றான்.

அறிஞரின் தூயான் என்றது இச்சேயின் ஞானத் தெளிவும் சித்த சுத்தியும் உய்த்துணர. உள்ளத் தூய்மையால் எல்லாவுணர்வு நலங்களும் இவனிடம் ஒளி பெற்றுள்ளன. அறிஞரும் தூயரும் அதிசயமுறும்படி இளமையிலேயே விழுமிய நிலையில் இவன் மேலோங்கி நிற்கின்றான். மாசிலா மனமும் தேசுறு மதியும் ஞான சீலமும் ஈசன் அருளால் இனிதமைந்துள்ளன.

மாயவன் பேரை இத தூயவன் கூறவே அத தீயவன் தீ யெனக் கனன்று பேயென நோக்கினன். இனிய சேயைக் கொடிய பேய போல் கொதிதது நோககியது அவனது கோபக் கொதிப்பை வெளிப் படுதகி நின்றது.

மின உயிாககும்வேல இரணியன தழல எழ விழித்தான.

நாராயணு எனனும் பேரை இப் பாலன சொனனவுடனே இரணியன இவவாறு சீறிச சினந்து செயிாததுப் பாாததிருககி ருன். தழல எழ எனறதனல கோபததால அவன் கண்கள் சிவந்து நினற நிலை தெரிய வநதது. நெருபபுப பொறிகள சிநதும் படி பிளளையைக கொதிததுப பாாததுள்ள அநதக கோரநிலையை இஙகே நேரே காணகினறேம. மினனல போனற ஒளியை வெளி வீசுகிற வேலாயுததகைத யுடையவன எனறது அவனது வீரபராககிரமததையும வெறறித திறலையும விளக்கி நினறது.

வேல மினனலை உயிாததது, விழிகள் தழலை உயிாததது; வாய மொழிகளை உயிாததது, அவ வுரைகள பழிகளை உயிாததது, அக கொடிய நிலைகளை அயலே காண வருகினேறம.

## இரணியன் எதிா மொழிநதது

தானே தனிமுதல் தலைவன என உலகம புகழ்நதுவர அவன் உவந்து வாழநது வநதுள்ளான. அவவாழவுககுத தாழவு வரவே அவன உளளம் கொதிதது உருதது நினருன. தனககு மேலாக மால ஒருவன் உளன் எனறு அவனுடைய பெயரைப் பெருமை யாகத தன் பாலன கூறவே அவவேலன காலனபோல கனனறு சினநது தனது வெறறிப பிரதாபஙகளையும, வியததகு நிலைகளையும விரிதது விளக்க நோநதான.

அறறை நாளமுதல யானுள நாளவரை அபபோ
சொறற வாயையும கருதிய மனததையும சுடுமஎன
ஒறறை ஆணைமறறு யாருனககு இபபெயா உரைததாா?
கறறது ஆரொடு சொலலுதி விரைநதெனக கூனருன் (1)

முனைவா வானவா முதலினா மூனறுல கததும
எனையா உளளவா யாவரும என்னிரு கழலே.
நினைவது ஏததுவது எனபெயா நிணககிது நோ.
அனையா அஞசுவா மைநதநீ யாரிடை அறிநதாய? (2)

மறஙகொள வெஞசெரு மலைகுவான பனமுறை வநதான
கறஙகு வெஞசிறைக கலுழன தன கடுமையிற கரநதான
பிறஙகு தெணடிரைப பெருஙகடல புககினம பெயராது
உறஙகுவானபெயா உறறிலனறு ஆருனககுரைததாா (3)

பரவை நுணமணல எணணினும எணணரும பரபபின
குரவா நஙகுலததுளளவா அவனகொலக குறைநதாா,
அரவின நாமததை எலியிருநது ஓதிலைஅதறகு
விரவு நனமைஎன? துனமதி விளமபென வெகுணடான (4)

வயிறறி னுளளுலகு ஏழினோடு ஏழையும வைககும
அயிாபபில ஆறறலென அநுசனை ஏனமஒன றாகி
எயிறறி னிலஎறிநது இனனுயிா உணடவன நாமம
பயிறற வோாகினைப பயநதது நானஎனப பகாநதான (5)

ஒருவன யாவாககும எவறறிறகும உலகிறகு முதலவன
தருதல காததவை தவிாததலென றிவைசெயத தககான
கருமத தாலனறிக காரணத தாலுளள காடசி
திருவிலீ மறறிது எமமறைபபொருளெனத தெரிநதாய?(6)

ஆதி அநதஙகள இதனின மறறிலலை பேருலகின
வேதம எஙஙனம அஙஙனம அவைசொனன விதியால
கோதில நலவினை செயதவா உயாகுவா குறிததுத
தீது செயதவா தாழகுவா இதுமெயமமை தெரியின (7)

செயத மாதவம உடைமையின அரிஅயன சிவனென்று
எயதி னாபதம இழநதனா, யானதவம இயறறிப
பொயயில நாயகம பூணடலின இனியிது புரிதல
நொயய தாகுமெனறுஆருமென காவலின நுழைநதாா (8)

வேளவி யாகிய புணணியம தவததொடும விலககிக
கேளவி யாவையும தவிாததனன இவைஒளா பகையைத
தாழவி யாதன செயயுமென றனையவா தமபால
வாழவி யாதயல எவவழிப புறஙகொணடு வாழவாா (9)

பேதைப்பிளளைாநீபிழைததது பொறுததனெனபெயாததும
ஏதில வாாததைகள இனையன விளமபலை முனிவன
யாது சொலலினன அவையவை இதமஎன எணணி
ஓதிபோதிஎனறுரைததனன உலகெலாமுயாநதோன.(10)

(இரணியனவதை 47-56)

தன் மகனை நோக்கி அந்தப் பிதா இப்படிப் பேசியிருக்கிறான். பேச்சில் அரிய பல உண்மைகள் வெளிவந்துள்ளன. உள்ளச் செருக்கும் உணர்ச்சித் துடிப்பும் உக்கிரவீரங்களும் உரைகள் தோறும் பெருகி நிறைகின்றன. எவரையும் மதியாத இறுமாப்பு நிலைகளை அவ்வழியும் செவ்வையாக எதிரே காண்கின்றோம். தேவர்களிடமும் திருமால் மீதும் அவன் கொண்டுள்ள வெறுப்பும் இகழ்ச்சியும் வீறு மண்டி யாண்டும் நீண்டு நிமிர்ந்திருக்கின்றன. பிள்ளை எதிரே உள்ளம் திறந்து அவன் உரையாடியுள்ளதில் உணர்ச்சிப் பெருக்குகள் வெள்ளமாய் விரிந்து வியப்புகளை விளைத்திருக்கின்றன.

தந்தை என்று தன்னைச் சார்ந்து பழகியுள்ள காரணத்தால் தனது பெருமித நிலைகளை மைந்தன் யாதும் அறிந்து கொள்ளவில்லை என்று இரங்கி அறிவு நலங்களை உறுதியாக ஊட்டவிரைந்தான். "குழந்தாய்! உனது குலமகிமையையும் தலைமைநிலைமையையும் உணராமல் இளிவுற நொந்துள்ளாய், தெளிவு கொண்டு உய்க. மூன்று உலகங்களிலுமுள்ள முனிவர் தேவர் முதலிய அனைவரும் எனது அடிதொழுது வாழுகிறார், என் பெயரையே வேத மந்திரமாக யாண்டும் யாவரும் ஓதி வருகின்றார். ஆதி முதல் இது நிகழ்ந்து வருகிறது. அந்தக் கள்ளமாயன் பேரை யாரும் சொல்லார். அதனைச் சொன்ன வாயையும் எண்ணிய மனத்தையும் என் வெற்றி ஆணை சுட்டெரித்து விடும். அன்று முதல் இன்றுவரை இந்த நீதிமுறை எங்கும் நடந்துவருகிறது. எவரும் சொல்ல அஞ்சுகின்ற அந்தப் பொல்லாத சொல்லை உனக்கு யார் சொல்லிக் கொடுத்தார்? கபடவஞ்சகங்களையுடைய அம்மாயன் நமகுலத்திற்குக் கொடிய விரோதி. கோளை மூட்டியும் வாளை நீட்டியும் வஞ்சப் போர்புரிந்தும் நமகுலத்தவர் பலரை அவன் கொன்று தொலைத்திருக்கிறான். அவன் செய்துள்ள கொலைகள் அளவிடலரியன. என்னோடும் பலமுறை போராட வந்தான். மூண்டு பொருத போதெல்லாம் புறங்காட்டி மீண்டு ஓடிப்போனான். தன் பதியாகிய வைகுண்டத்தில் இருந்தால் நான்புகுந்து கொன்றுவிடுவேன் என்று பயந்து கடலுள்ளே போய் மறைந்து ஒளிந்து கொண்டான். அன்று ஓடி ஒளிந்தவன் மறுபடியும் திரும்பி வெளிவரவேயில்லை. இப்படிப்பட்ட பேடியின் பெயரை நீ பேச நேர்ந்தாயே! இது நமகுலத்துக்கு எவ்

வளவு இழிவு? மன்னர்பிரானாய் அகிலவுலகங்களையும் ஆளுகின்ற மகா வீரனுடையமகன் போரில் புறங்காட்டி ஓடிப் போனஒரு பேடிப் பேரைப் பெருமையாக் கூறினான் எனனும பழி நமவழி முழுவதையும இழிவு படுத்த நேர்நததே! என் அருமைத தமபி யைக் கொனற கொடிய பாதகன்; பரமபரையாகப் பகைமை பூண்டுள்ள கொடுமையாளன் பேரை நீ இனிமையாகஎண்ணிச் சொன்னது எனககுப் பெரிய அதிசயமாயத தோனறுகினறது. உன் மடமையால் அவனை ஏதோ நீ கடவுளாக கருதி யிருககி றாய. கண்ணுக்குத தெரியாத ஒனறு பிரமமாய் உளளது என எண்ணிக்கொளவது பெரிய பிரமை. தர்ம செய்கினற நலல கருமஙகள புணணியமாய நினறு சீவாகளுககு இனப நலஙகளை அருளுகின்றன; தீய வினைகள பாவமாய் நினறு துனபஙகளைக கொடுககினறன. வினையினபடியே யாவும நடை பெறுகினறன. இதறகு வேறாகக் கடவுள ஒருவா உணடு என்று வீணே கருதி மறுகுவதால் எனன பயன்? நான பண்ணிய புணணியததால உலகம் முழுவதையும் உரிமையாகப பெறறுத தலைமையோடு நினறு ஆளுகினறேன். அந்தப் புண்ணிய நலங்களை இழநதுள ளமையால தேவ தேவாகளும் இழிநதவாகளாய எனக்கு ஏவல செய்து வாழுகினறாா. எனது நிலைமை தலைமைகளை உணாநது கொளளாமல உனது இளமைப் புததியால மயஙகி இழிநதுள் ளாய்; அருமை மகனே! நம் பெருமையைத தெளிநது சிறுமை நீங்கி வாழுக, ஆசிரியனை வேதியன எனன சொலலுகிறானே அனனவாறே நீ ஓதி உயாக; உடனே போய் ஒழுங்காயபபடி" என இன்னவாறு தன மகனை நோககி இரணியன உறுதிமொழி கள் கூறியுள்ளான.

பிளளை உளளம திருநதி உயாவு காணுமபடி தன்னுடைய உயர் நிலைகளை யெலலாம எடுததுச சொல்லி உணர்வு போதித து தந்தை உரிமை காட்டி யிருக்கிறான்.

திருமால் தனது கொடிய குலவிரோதி என்பதைப பலவ கையிலும் தெளிவுறுத்தி மகனுடைய மனத்தை மாற்ற முயன் றுள்ளான். இனத்தின் அபிமானத்தை ஏற்றி யிருக்கிறான்.

நம் குலத்து உள்ளவர் அவன் கொலக் குறைந்தார்.

நம்முடைய குலத்தில்தோன்றிய அரசர்களையும் பெரியோர் களையும் அந்த மாயன் படுமோசமாய அழித்திருக்கிறான். அவன் செய்துள்ள கொலைகளும பழிகளும அழிவுகளும் அளவிடலரி யன. அலைகடலருகே யுள்ள மணல்களை எண்ணினாலும் அவன் பண்ணியிருக்கிற கொலைகளை எண்ண முடியா.

பரவை நுண்மணல எணணினும் எண் அரும் பரப்பின
குர்வா நம்குலததுளளவா அவன கோலக குறைநதாா.

அசுரகுலத தலைவாகள மாயனால் அழிநதுள்ள அழிவு நிலை களை இவவாறு விழி தெரிய விளககினான்.

நமகுலம அடியோடு அழிந்து ஒழியுமபடி அநநெடியோன் குடிகேடு செயதிருக்கிறான். படு வஞசகனான அநதக கொடி யவன பேரை நீ உவநது சொலல நோ்நதது எனக்கு மிகுந்த வருததததை விளைததுளளது. யாரோ உட்பகையாயப புகுநது உன உளளததைப பேதிததுளளாா எனறு கருதுகினறேன. என் ஆட்சியுள எவவழியும் எவரும கூற அஞசுகிற அவ வெவ விய பேரை நீ யாரிடமிருநது அறிநதாய? பொலலாத சனம விரோதியின பெயரை நல்ல குலமகனான நீ சொல்லலாமா? எனன நனமையை நாடி அப் புனமையையப புகனறாய?

அரவின நாமததை எலியிருநது ஓதினால அதறகு
விரவு நனமைஎன? துனமதி விளமபு!

மாயன பெயராத தனமகன வாயால் சொனனது பெரிய மடததனம் எனபதை உணாததறகு இவவுவமையைப புணாத திக கூறினான். உளளக் கடுப்புகள் எளளல்களில் எழுநதன.

பகைமைக காட்சியைத் தெளிவாக விளக்க உவமையைக காட்டினான், அதில் ஓா உண்மையும காணபபட்டது. எவவளவு எலிகள் கூடினாலும பாம்பைக கண்டால் ஓடி ஒழியுப, திருமா லைக காணின அசுரா குலமும் அழிந்து தொலையும என்பது தெளிந்து கொள்ள வந்தது.

"எலிப்பகை நாகம் உயிாப்பக் கெடும்" (குறள், 763)

என்ற தேவர் வாய்மொழியும ஈண்டு அறிய வுரியது. அரவு திருமாலுக்கும், எலிகள் அசுரர்க்கும் ஒப்பாம்.

எலிகளைப் போல் உலகத்தவர்க்கு அசுரர்கள் இடையூறுக ளையே செய்பவர்; தேவகோபத்தால் ஒருங்கே அழிந்துபடுபவர் என்பதும் இங்கே நன்கு உணர்ந்து கொள்ள நேர்ந்தது.

அசுரகுலகாலன் என்று திருமாலுக்கு ஒருபெயரும் அமைந் திருக்கிறது. ஆதி முதலே தன் சாதிக்கு அழிவு செய்து வரு கிற பழிகாரன் என்று பழித்து வந்தவன் முடிவில் தனது குடி யுள் செய்த ஓர் இழவையும் எடுத்துச் சொல்லினன்

அயிர்ப்பில் ஆற்றலன் அநுசனை ஏனம் ஒன்றாகி
எயிற்றினால் எறிந்து இன்உயிர் உண்டவன்

எவரையும் எளிதே வெல்லவல்ல பேராற்றலுடைய என் தம்பியை ஒரு மாயப் பன்றி வடிவமாய் வந்து அந்தக் கொலை காரமாயன் கொன்று தொலைத்தான் எனக் கன்றிக் கனன்று தன் மகனிடம் இங்ஙனம் எடுத்துக் கூறினன்.

திருமால் மீது இரணியனுக்கு நேர்ந்துள்ள கோபமும் கொதிப்பும் பல வகை நிலைகளிலும் வயிரம் பாய்ந்திருக்கின்றன. தன் குலத்துக்கும் குடிக்கும் எவ்வழியும் அவன் கொடிய கேடு களையே செய்து வந்திருக்கிறான் எனச் சினந்து சீறி யாண்டும் செயிர்த்து நிற்கின்றான். செற்றம் நெடுங்காலமாய் வளர்ந்து வந்துள்ளமையால் அவன் பேரைக் கேட்டவுடனே சீற்றம் பொங்கி எழுந்தது. பழம் பகை உளம் படிந்து வளம் பெற்று நின்றது. நீண்டிருந்த நெடுஞ்சினம் ஈண்டு மூண்டு பொங்கியது.

## இரணியாக்கன்.

இரணியனுடைய தம்பி இரணியாக்கன். உடல் வலியில் அதிசயமான அடலாண்மைகள் அமைந்தவன். தரணிமுழுவதும் தனக்கே உரியது என்று மனச்செருக்கு மிகுந்தவன். இவனது அழிவுக்கு வழிகோலி ஒரு முறை பூமிதேவி எழில்மிகுந்த பருவ மங்கையாய் எதிரே தோன்றினாள். அந்த அழகியைக் கண்ட தும் இவன் விழைவு மீக் கூர்ந்தான். கடுங் காதலுடையனாய்க் கவர்ந்து கொண்டு போய்க் கடலுள் ஒளிந்தான். திருமால் விரைந்து ஓர் பன்றியாய்த் தொடர்ந்து பின் சென்று இவனைக் கொன்று தொலைத்தான். பூமிதேவி உள்ளம் களித்து விரைந்து மீண்டு வெளியே வந்தாள். இந்த அசுரனை வதைக்கும்படி தோன்றியது வராகவதாரம் என நேர்ந்தது. வராகம்=பன்றி.

ஏனம் ஆகி எயிற்றினால் எறிந்து இன்னுயிர் உண்டவனை.

என்றது தன் தம்பியைத் திருமால் கொன்று தீர்த்த அந்தக் கோலத்தையும் கொலை நிலையையும் குறித்துணர. ஏனம்=பன்றி. குலப் பகையின் கொடுமை தெரிய வந்தது.

உடன்பிறந்த துணைவனைக் கொன்ற இந்தக் கொலையிலிருந்து தான் திருமால் மீது இரணியனுக்குக் கொடிய கோபம் மூண்டது. யாண்டும் இகழ்ந்து பழித்து எவ்வழியும் இடர்கள் செய்துவரும்படி தன் இனத்தவரை ஏவி விட்டான். விடவே பொல்லாத அசுரர்கள் எங்கும் அல்லல்களை ஆற்ற நேர்ந்தார்.

கேழல் ஆகிமால் கேழ்கிளர் பொற்கணன் அகலம்
போழ் படுத்தது கேட்டலும் இரணியன் புழுங்கிச்
சூழ்ந் தானவர் முதலியோர் சுடுமுகம் நோக்கி
ஊழி வெங்கனல் கட்கடை உமிழ்நின் றுரைப்பான் [1]

ஊனம் நீங்குமால் உயிரெலாம் சமனென நினையான்,
வான நாட்டர்தம் குழுவொடு மரீஇயினன், அதனால்
ஈன மாமதி எய்தினன் இனி அவன் உயிர்வேல்
தானருந்துவான் வருந்துவன், நீர் தனித் தனியே, [2]

தரையின் மீதுபோய் மாயவன் உருவெலாஞ் சாற்றும்
அரிய வேள்வியே முதலிய அறங்களை அழித்துப்
புரியும் அந்தணர்ப் பொன்றுறப் புரிமினோ புரியின்
கரியவன் வலி கெடும்உலப் பார்கட் வுளரே [3]

(பாகவதம்,7-2)

தன் தம்பியை மாயவன் கொன்றதிலிருந்து இரணியன் வெகுண்டு மூண்டு யாண்டும் இடர் செய்துள்ளமையை இதனால் உணர்ந்து கொள்கிறோம். வானவர்க்குத் துணையாய் நின்று தானவர்க்குத் துயர்செய்கிற ஈனமதியனுக்கு எங்கும் இடையூறுகளே புரிந்து வாருங்கள் என்று தன் மரபினருக்குக் கட்டளையிட்டிருந்தமையால் தேவர்களைத் துன்புறுத்தி யாகம் முதலிய நல்ல கருமங்களைக் கெடுத்து எவ்வழியும் அசுரர்கள் அல்லல்களே செய்து வந்தனர்.

இவ்வாறு பண்டு தொட்டே பகைமை மண்டியுள்ள அசுர வேந்தன், அன்று தன் பிள்ளையின் நிலைமையைக் கண்டதும் உள்ளம் கொதித்து உருத்து இகழ்ந்தான்.

**அவன நாமம் பயிற்றவோ நினை நான் பயநதது?**

என் தமபியைக் கொன்று என் குலததுககெல்லாம கொடிய கேடுகளைச் செயது வநதுளள அநதப் பகைவன் பேரைப் புகழ்நது சொல்லவோ உனனை நான தவஞ செய்து பெறறது! என மகனை இகழ்நது இனனவாறு சினநது வினவியிருததலால அவனது செறறமும் சீறறமும் நினைநது கொளள வநதன.

மாயமும வஞசமு முடைய அமமாயனைக கடவுள் என்று எணணுவது மடமை. கடவுள் எல்லாம வல்லவா, தருமமும் கருணையும சததியமும் உடையவா. நிததிய நிலையினா. இதத கைய ஈசுரததனமைகள அநத நாசகாலனிடம யாதும இல்லையே. பேசுவதெல்லாம பொய், எணணுவதெலலாம வஞசம், பண்ணுவதெலலாம மாயம், இவவாறு தீய நிலைகளில் உழலுகினற மாயனைத தூய பரமன என்று தொழுது வணங்குவது தீயசெயலாம. பகுததறிவிலலாத மூடாகள செயகிற தெய்வ வழிபாடுகள இழிவான மூடப பழக்கஙகளாம. பழிபடிநத அநத இழி கேடுகளை விழுமிய குலமகனான நீ ஒருபோதும தழுவலாகாது.

அகில வுலகஙகளையும நான தனி நினறு ஆளுகினறேன; படைததல காததல அழிததல என்னும தொழிலகள யாணடும இயல்பாய இயஙகி வருகினறன. சீவாகள பிறககினறனா; இருககினறனா, இறககினறனா. கண எதிரே தெரிகிற இக காடசிகளைச சிருட்டி, திதி, சஙகாரம் என அதிசயமாடசிகளாக்கி இம மூனறும் மும்மூாததிகளால் செயயப படுகினறன என்று மையல் மயக்கததால வையததார் துதி செயது வருகினறனா.

உருவம பேர யாதும இல்லாத அருவமான பொருள அதிசயமாய் உண்டு. அதனைப பிரமம் எனபா. மனம மொழிகளால அது அறியபபடாதது. எவவாறறுனும் உணரமுடியாத ஒனறைப பனனிப் பேசிப் பொழுதைப் பழுதாக்கலாகாது.

நல்ல கருமஙகளைச் செய்து வரின் அவற்றால் எல்லா நனமைகளும் உளவாம. கருதிய இனப நலங்கள் எல்லாம் கருமமே தருதலால் அதுவே தெய்வமாம. அதனை உரிமையோடு கருதிச செயயின் அதுதான் கடவுள் வழிபாடு. தனக்குரிய கடமைகளைச் செயயாமல கடவுளே! கடவுளே! என்று சொல்லி இழி விழைவுடன் ஏஙகித் திரிவது கழிமடமையே.

கருமங்களைக் கருதிச் செய்தவன் திருவும் தேசும உடைய வனாய உயர்ந்து விளங்குகிறான். அது செயயாதவன் வறுமை யுமம இழிவும் மருவி இழிந்து படுகிறான.

நல்வினை செய்தவர் உயர்குவர;
தீதுசெய்தவர் தாழுகுவர, இதுமெயம்மை.

இரணியன இவவாறு தன மகனுக்கு உறுதிமொழி கூறி யுள்ளான். எவவளவு தரும நீதிகள இதில மருவி மிளிரகின றன. கருதி யுணர வுரியன

செபம தபம் என்று கடவுள் பேரைச் சொல்லிககொணடு மடமையாயச் சோமபி யிராதே; எவவழியும தொழில்களைச் செய, அந்தக் கருமஙகளே எல்லா மேனமைகளையும் இன்ப நலங்களையும் ஈநதருளும என வினையாண்மைகளை ஓாநதுணரும் படி உரைததருளினன. அவனது கரும சிததாநதம இஙகே மருமமாய வெளிவநதுளளது.

தாம கருதிச செயகிற கருமஙகளினபடியே சீவாகள பலன்களை அனுபவிககின்றனா. நலலு வினைகளைச் செயதவா நல்லவராய உயாநது சிறநத இன்பங்களை அடைகின்றனா. தீமைகளைச் செய்தவா தீயவரா யிழிநது துனபங்களில் உழலு கின்றனா. உரிய கருமஙகள அரிய பெருமைகளாய வருகின்றன.

உயாவும தாழவும இனபமும துனபமும செயல்களாலே யே உளவாகின்றன. நலலவா தீயவா பெரியவா சிறியவா என வெளியே பேசப படுவன எல்லாம கருமஙகளால விளைநத காட்சிகளேயாம்.

செயத மாதவம உடைமையின் அரிஅயன சிவன என்று
எயதினா பதம, இழந்தனர்.

தேவ தேவரான மூவருடைய நிலைமைகளை இவவாறு எடுத துக் கூறினன. திருமால் பிரமன சிவபெருமான் என்னும் அவ ரும் அரிய மாதவஙகளைச் செய்தே பெரிய பதவிகளை அடைந்த னர்; பின்பு உளளம் செருககி உரிய கடமைகளைச் செய்யமறந தமையால் எய்தி யிருந்த பதவிகளை இழந்து என்னுடைய அதி காரததுக்குள் அடஙகி யுள்ளனா.

நான் அரிய பெரிய தவங்களைச் செய்து அதிசய நிலையில் உயர்ந்திருக்கிறேன். உலகம் முழுவதும் எனது ஆணையில் ஒழுகி வருகின்றது. தேவரும் ஏவல் புரிகின்றனர். என் கட்டளையைத் தட்டமாட்டாமல் தேவதேவரான மூவரும் தாழ்ந்து வாழ்ந்து வருகின்றனர். வஞ்சகமிகவுடைய கபட நெஞ்சினராதலால் பகையினமான அந்த அமரர் குழுவை எவ்வழியும் நிலைகுலைத்துத் தலையடக்கி யிருக்கிறேன். காய்ந்து உலர்ந்த வித்து மழைத்துளி வீழ்ந்தவுடன் முளைத்து எழுதல் போல உள்ளே காய்ந்துள்ள பகையினம் வெளியே மெலிந்திருந்தாலும் தக்க சமையம் வாய்த்தால் மிக்க செருக்கோடு நீண்டு வெந்துயர் செய்ய நேர்வர் ஆதலால் அந்த நேரலரை ஆர்வலர் என்று தேறலாகாது. உற்ற பகையை ஒடுக்கி வாழ்வதே கொற்ற வேந்தனுக்கு வெற்றி நிலையமான குல மேன்மையாம்.

மந்திர முறையோடு செய்கிற வேள்விகளையும், வேத நூல் கேள்விகளையும் அவர் மேவாதபடி காப்பு விதித்துக் கடுமையாகத் தடை செய்திருக்கிறேன். வேத மந்திரங்களில் என் நாமமே சேமமாய் யாண்டும் ஓதப்பட்டு வருகிறது. தேவரும் ஆவலோடு தலைவணங்கி நாளும் ஓதிவருகிற உன் தாதை பெயரை நீ ஓத மறுத்தது எனக்கு மிகவும் வியப்பாய்த் தோன்றுகிறது. உரிமையான இனிய பேரை ஓதாமையோடு அயலான கொடியவன் பெயரை நீ உவந்து புகழ்ந்து விழைந்தது அதிசய விந்தையாயுள்ளது. யாரோ உன் சித்தத்தைப் பேதித்து உனக்கு இந்தப் பித்தத்தைப் போதித்திருக்கின்றார் என்று கருதுகின்றேன்.

வானவர் எவரும் தலை வணங்கி வழிபட அண்டங்களை முழுதும் ஆணை செலுத்தி ஆளுகின்ற தானவர் பதியின் குலமகனை நீ உன் நிலைமையை மறந்து புலைமொழி புகல நேர்ந்தாய்! சிறு பிள்ளைத் தனமாய் அறியாமை மீதூர்ந்து பேசியிருக்கிறாய்! என்று அருள் செய்து பொறுத்துள்ளேன், நீ விரைந்து திருந்தி என் உள்ளம் உவந்து மகிழ நல்ல வழியில் நடந்து கொள்க.

பேதைப் பிள்ளை நீ பிழைத்தது பொறுத்தனென்; பெயர்த்தும்
ஏதில் வார்த்தைகள் இனையன விளம்பலை.

இறுதியில் தனது மகனிடம் கூறிய உறுதி மொழி இது.

"குழந்தாய்! நீ அறியாமையால் செய்துள்ள பிழையை மன்னித்து இப்பொழுது நான் பொறுத்துக்கொண்டேன்; இனி மேல் வீண்வாதங்களைப் பேசாதே, விவேகமாய் நடந்துகொள்!" என்று அன்போடு தந்தை புத்திமதி கூறியுள்ளமையால் அவனுடைய புத்திரவாஞ்சை உய்த்துணர வந்தது. பிள்ளைமேல் பிரியம் உள்ளம் புகுந்து உரிமை கூர்ந்துள்ளது, மாலின்பால் கோபம் மேலோங்கி வீறு கொண்டு நிற்கின்றது.

இரணியனுடைய வாய்மொழிகளில் பல உண்மைகள் வெளியாயுள்ளன. திருமால் மேல் மூண்டுள்ள வெறுப்புக்கும் வெகுளிக்கும் தெளிவான சில காரணங்கள் இங்கே தெரிய நின்றன. நெஞ்சக் கடுப்பு நீண்ட காலமாய் நிமிர்ந்துள்ளது.

தன் தமபியைக் கொடுமையாய்க் கொன்று தொலைத்ததும், எதிரிகளான தேவர்களுக்கு உதவியாய் நின்று உறுதி புரிந்ததும் பகைமைக்குத் தலைமையான காரணங்கள் ஆயின. இங்ஙனம் கொடிய குலவிரோதியா எண்ணி நெடுங்காலம் எள்ளி இகழ்ந்து வந்த மாயன் பெயரை இன்று தன் பிள்ளை உள்ளம் உருகிச் சொல்லியது பழியான பிழை என்றுவேந்தன் வெறுத்திருத்தலால் நீ பிழைத்தது என்றான் தன் மேன்மைக்குத் தாழ்வு நேருமபடி பிழை பேசியுள்ளமையை உள்ளம் அறிய வுரைத்தான்.

பேதைப் பிள்ளை என்றதில் உரிமை கனிந்த பிள்ளைப் பாசம் ஊடுருவியுள்ளது. பிள்ளை செய்த பிழையைப் பெற்ற தந்தை பொறுத்தருளி மேலும் அவனுக்கு நல்ல புத்தியை நன்கு போதித்தான். உள்ளப் பரிவு உரைகளில் ஒளிர்கின்றது.

"அப்பா! இனி அப்படித் தப்பான வார்த்தையைச் சொல்லாதே, ஆசிரியர் சொல்லியருளுகிறபடியே சொல்லிவா; பள்ளிக்குப்போ!" என்று பிள்ளைக்கு இதமா இனிது மொழிந்தான்.

உலகு எலாம் உயர்ந்தோன் என இரணியனை இங்ஙனம் குறித்தது அவனது தலைமை நிலை கருதி. அண்டங்கள் எங்கும் ஆணை செலுத்தி அமரரும் தொழ வாழுகின்றான் ஆதலால் அம் மாட்சி மகிமைகள் காட்சிக்கு வந்தன. இவ்வாறு உன்னத நிலையில் உயர்ந்துள்ள அவன் தனது அருமை மகனுக்குப் புத்தி சொல்லி உரிமையுடன் பள்ளிக்குப் போகும்படி பணித்தான்.

## பிரகலாதன் பேசியது

வேதியன் போதிக்கிறபடியே ஓதி வருக; மாறாக வேறு கூறாதே; போய்ப்படி என்று மன்னன் இவ்வாறு கூறவே மகன் பணிவுடன் நின்று அவன் முகத்தை இனிது நோக்கி உறுதிமொழிகளைத் துணிவாகப் பேசினான். "தந்தையே! உங்கள் பிள்ளை சில உண்மைகளைச் சொல்லுகின்றேன்; உரிமையோடு செவி சாய்த்து அருளுங்கள்" என்று கைகுவித்துக் கூறினான். இப் புத்திரன் உரைத்த வித்தக வசனங்கள் அரிய பல தத்துவ நிலைகளை உணர்த்தி யுள்ளன. உய்த்துணரவுரியன, சில அயலே வருகின்றன.

வித்தின்றி விளைவதொன்று இல்லை, வேந்த நின்
பித்தின்றி உணர்தியேல் அளவை பெய்குவன்
உய்த்தொன்றும் ஒழிவின்றி உணர்தற் பாற்றன்றேல்
கைத்தொன்று நெல்லியங் கனியிற் காண்டியால் [1]

தன்னுளே உலகங்கள் எவையும் தந்தவை
தன்னுளே நின்றுதான் அவற்றுள் தங்குவான்,
பின்னிலன் முன்னிலன் ஒருவன் போகிலன்
தொன்னிலை ஒருவரால் துணியற் பாலனோ? [2]

சித்தெனும் அருமறைச் சிரத்தில் தேறிய
தத்துவம் அவனது தம்மைத் தாமுணார்
வித்தகர் அறிகுவர் வேறு வேறுணார்
பித்தரும் உளர்சிலர் வீடு பேறிலார் [3]

அளவையான் அளப்பரிது அறிவின் அப்புறத்து
உளவையா உபநிடதங்கள் ஓதுவ
கிளவியால் பொருள்களால் கிளக்குறு தவன்
களவை யாரறிகுவார் மெய்ம்மை கண்டிலார் [4]

கருமமும் கருமத்தின் பயனும் கண்ணிய
தருமுதல் தலைவனும் தானு மானவன்
அருமையும் பெருமையும் அறிவ ரேலவர்
இருமையென் றுரைசெயும் கடலின் றேறுவார் [5]

கண்ணினும் கரந்துளன் கண்டு காட்டுவான்
உண்ணிறைந் திடுமுணர் வாகி யுண்மையால்
மண்ணினும் வானினும் மற்றை மூன்றினும்
எண்ணினும் நெடியவன் ஒருவன் எண்ணிலான் [6]

சிநதையில செயகையில சொலலில் சோநதுளள
இநதியங தொறுமுளள உறறது எணணிஞல்
முநதையோா எழுததென வநது மும்முறைச
சநதியும பதமுமாயத தழைதத தனமையான [7]

காலமும கருவியும இடனுமாயக கடைப
பானமை பயனுமாயப பயனதுயப பானுமாயச
சீலமும அவைதரும திருவு மாயுளளன
ஆலமும விததுமஒததது அடஙகும ஆணமையான [8]

உளளுற உணாவினிது உணாநத ஒசைஒா
தெளவிளி யாழிடைத தெரியும செயகையான,
உளளுளள புறததுளள ஒனறும நணணலான
தளளரு மறைகளும மருளும தனமையான [9]

ஓமெனும ஓரெழுத ததனின உளளுயிா
ஆமவன அறிவினுககு அறிவும ஆயினன
தாமமு வுலகமும தழுவிச சாாதலால
தூமமும கனலுமபோல தொடாநத தோறறததான. (10)

இனனதோா தனமையன இகழவுற றெயதிய
நனனெடும செலவமும நாளும நாமற
மனனுயிா இழநதினனறு இறைஞசி வாழததினேன
சொனனவன நாமம எனறு உணரச சொலலினன. (11)

பனனனமகன கூறிய மதி நலஙகள இனனவாறு வெளி வநதுளளன. உறுநிலஙகளைக கருதி யுணரும்படி உண்மை நிலையைத தெளிவுறுததி யிருககிறன. "கடவுள இல்லை என்பது மடமை, விதது இலலாமல விளைவது ஒனறு இல்லை; வெளியே தோனறுகினற விளைவுகளுககெலலாம மூல காரணமான விதது கள உளளே உளளன. இநத அனுபவ அறிவைக் கொண்டு கடவுள உணமையையும நாம் கருதி யுணாநது கொளளவேண டும. உலகம தோனறி யுளளது, அதில் பலவகையான உயிரி னஙகளைப் பாாக்கின்றேம். பாாவைகள் அளவிடலரியன.

வான, கதிா, மதி, மீன முதலிய வான மண்டலஙகளையும் காண்கினறேம. இவவாறன தோறறஙகளுக கெல்லாம் மூல காரணமான ஓர் ஆதி மூலப்பொருள அநாதியாய் அமைந்துள் ளது. கடவுள், ஈசன, பிரமம் என அம, மூல முதலை வேதங் கள ஓதியுள்ளன. உருவமும் நாமமும் இல்லாத அந்தப் பரம்

பொருளுக்குப் பலவகையான பெயர்களைச் சொல்லி மனிதர் வழிபட நேர்ந்தனர். அவரவரது அறிவு அனுபவங்களுக்குத் தோன்றிய படியெல்லாம் மேலோர் உறுதி செய்து கொண்டமையால் அக் கொள்கைகள் மதங்கள் என வந்தன. எந்த அறிவுக்கும் யாருக்கும் எட்டாத பேரின்ப நிலையமாய் இறைவன் பெருகி நிற்கின்றான். எங்கும் நிறைந்திருந்தும் யாண்டும் யாதும் காண முடியாமையால் அவன் அதிசயமான ஒரு மாயாவிநோதன் என்று துதி செய்யப் பெற்றான். அகில உலகங்களையும் படைத்து விரித்து மீண்டும் தன்னுள்ளேயே ஒடுக்கி மறைக்கின்றான். ஆதியும் அந்தமும் யாதும் இல்லாதவன். வேதம் அறியாத வித்தக நிலையினன். என்றும் உள்ளவன், எங்கும் நிறைந்தவன்; எல்லாம் அறிந்தவன், இன்பமயன் ஆதலால் சத்து, சித்து, ஆனந்தம் என அவனைத் தத்துவ ஞானிகள் துதித்து வருகின்றனர். பாலுள் நெய்போல் யாண்டும் எல்லா உயிர்களிலும் அவன் பரந்திருக்கிறான். அவன் இல்லாத இடமும் காலமும் யாதும் இல்லை. அருள் வெள்ளமாய் ஆனந்தம் பெருகியிருத்தலால் பேரானந்தக் கடல் என்று பேச நின்றான். அகில அண்ட கோடிகளும் அவனால் இயங்கி வருகின்றன. அவன் ஊட்ட உண்கின்றோம்; காட்டக் காண்கின்றோம், பூட்டப் பூண்கின்றோம், கூட்டக் கூடுகின்றோம், ஓட்ட ஓடுகின்றோம், நாட்ட நாடுகின்றோம். அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது என அவன் என்றும் இசை பெற்றுள்ளான். போகமாய் விரிந்தும், போகியாயிருந்தும் சீவகோடிகளுக்கெல்லாம் ஏகமான ஒரு தேகமாயமர்ந்தும் அவன் தேசு மிகுந்து திகழுகின்றான். சராசரங்கள் யாவும் அவனுடைய மாயா லீலைகளில் ஓயாது உலாவி வருகின்றன. இத்தகைய அற்புத நிலைகளில் உயர்ந்து எப்பொழுதும் இயற்கையாகவே தலைமையுடன் இருந்து வருகிற அந்தப் பரம்பொருளை மறந்து நின்றாய்; அவ்வளவோடு அமையாமல் இகழ்ந்து பேசவும் துணிந்தாய்; ஈசனை இகழ்ந்துள்ள இந்த நீசத் துணிவால் அரசு திரு முதலிய யாவும் இழந்து குலமும் அழிந்து குடியும் ஒழிந்து அடியோடு நீ நாசமடைந்து போவாய் என்று என் நெஞ்சம் அஞ்சியது; நெடிது வருந்தியது; அமையம் நாடியிருந்தேன்; இன்று சமையம் வாய்த்தது; வாய்க்கவே அந்தப் பரம்பொருளின் பேறைப் பரிந்து கூறினேன். தனது நாமத்தை

உரிமையோடு ஓதி வருவாரது சேமத்தை எவ்வழியும் செவ்வையாக அவன் கருதிவருவான் ஆதலால் அவ்வுறுதி நலனையுணர்ந்து உள்ளம் உருகி உன் பிள்ளை உரைத்தேன். பெற்ற தந்தை பிழையாய் அழிந்துபடலாகாதே என்ற அளியால் என்றும் அழிவில்லாத ஆனந்தமயமான அந்தப் பேரை நேரே சொன்னேன். பேரும் கீர்த்தியும் பெற்றுச் சீரும் சிறப்பும் நிறைந்து தேவர் யாவரும் ஏவல் புரிய யாண்டும் காவல் புரிந்து கோமுறையோடு உயர்ந்து வாழ்ந்து வருகிற தந்தையே! உனது மைந்தனுடைய சிந்தனைகளை ஓர்ந்து தெளிந்து உய்தி கண்டு வாழ வேண்டும் என்று வாழ்த்தி நிற்கின்றேன். என் உள்ளத்தைப் பார்த்தருள்; இவ்வளவில் என் வார்த்தையை நிறுத்துகின்றேன்" என்று இரணியன் எதிரே இவ்வாறு பிரகலாதன் கூறி நின்றான்.

## கடவுள் உண்மை

ஞான சீலனான இந்தப் பாலன் பேசியுள்ள மொழிகளில் பேருணர்ச்சிகள் பெருகியிருக்கின்றன. சுருதி யுத்தி அனுபவங்களைக் கொண்டு உறுதி நலன்களைக் கருதி யுணரும்படி செய்திருக்கிறான். தத்துவ நிலைகளை வித்தக விநோதமா விளக்கினான்.

வித்து இன்றி விளைவது ஒன்று இல்லை.

கடவுள் உண்மையை எளிதே உணர்ந்து கொள்ளும் பொருட்டு இந்த உவமை வாசகம் வந்தது. காணமுடியாத பொருளைக் கருதி யுணரும்படி உணர்த்த நேர்ந்துள்ளமையால் தெளிவான உலக அனுபவத்தை விழி எதிரே எடுத்துக் காட்டினான். உள்ளம் தெளிந்து நல்ல பலன் காணப் பிள்ளை விழைந்து பேசியுள்ளான். உணர்வொளிகள் உரைகளில் மிளிர்கின்றன.

மரம் கொடி செடி பயிர்கள் முதலிய விளைவுகள் எல்லாம் விதையிலிருந்து கிளர்ந்து வளர்ந்துள்ளன; அதுபோல அகில சராசரங்கள் யாவும் இறைவனிடமிருந்து பிறந்து விரிந்திருக்கின்றன. மூல காரணம் முதன்மையா யுள்ளது.

வெளியே காணப்படுகிற விளைவுகள் யாவும் [illegible] தோன்றியுள்ளன; அவை வித்திலிருந்து விளைவதில்லை என்று ஒருவன் சொன்னால் அவன் எவ்வளவு மடையனாவான்? அதனினும் காட்டிலும் பெரிய மடையன் கடவுள் இல்லை என்று சொல்லுகின்றவன். கருதி [illegible] கடையனாகின்றான்.

விரிந்து பரந்துள்ள உலகத்தையும் உயிரினங்களையும் நேரே கண்டும் இவற்றிற்கெல்லாம் ஒரு மூல முதல் உண்டு என்று உணர்ந்து கொள்ளாதவன் உணர்வுகெட்ட மூடனே யாவான் எனக் கூடமாக குறித்தருளினன்.

எல்லாம் இயற்கையே என்று செயற்கை மதம் மீறிச் சொல்லுகின்றவன் நல்ல முட்டாளே என வெளிப்படையாகத் திட்டாமல் உவமச் சுட்டால் விநயமாய்த் திட்டி யிருக்கிறான்.

வேந்த! நின்பித்து இன்றி உணர்தியேல் அள்ளைவப் பெய்குவன்

தந்தையை நோக்கி மைந்தன் இவ்வாறு கூறியுள்ளான்.

எந்தை! என்று உரிமையோடு அழைத்திருக்கலாம், அங்ஙனம் விளியாமல் வேந்த! என்று விளித்திருக்கிறான். அந்த விளி இவன் உள்ளத்தை வெளிப்படுத்தி யுள்ளது.

உயிர்க்கு உயிரான பரமன் என்று தான் உள்ளம் உருகித் துதித்த அந்தத் திருமாலை அவன் எள்ளி இகழ்ந்து பழித்தான்; ஆதலால் தெய்வ நிந்தகனான அப் பழியாளனைத் தன் தந்தை என்று சொல்ல இம் மைந்தன் நாணினான். இயல் திரியவே அயல் ஒதுங்கினான்.

என்றும் உரிமையான ஆண்டவனை வேண்டாதவனை உறவு முறையால் தீண்டவும் கூசி அன்னிய வாசகத்தால் எட்டநின்று சுட்டியுள்ளமையால் ஈசன்பால் பதிந்த பாசம் தெரிய வந்தது.

உடலளவில் இப் பிறவியில் தந்தை என நேர்ந்தவனைப் பிதா என்று பிரியமுடன் இப் பிள்ளை உரிமை பூண்டு வந்தான், பள்ளிக்கு வைத்த பொழுது அவன் உள்ளம் தெரிந்தது, தெரியவே நேரே ஆருயிர்த் தந்தையைத் தஞ்சம் என்று தழுவிக் கொண்டான்; கொள்ளவே இது வரையும் வழுவாய்க் கொண்டிருந்த உறவுரிமையை நழுவி நீங்கினான்.

தன்னைப் பெற்ற தந்தையை உற்ற உரிமையில் உரையாமல் வேந்த! என்று மற்றொரு முறையில் அழைத்தது' விளைய நோக்குள்ள விளைவுகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தது. அதிலும் 'ஆளுகின்றோம் என்ற பெரிய மமதையில் செருக்கி வரிசை தெரியாமல் பேசுகின்றாய்! ' இந்த அரச திருவை இழந்து அழிந்து படுவாய்! இதனை உணர்ந்து கொள் என உணர்த்திய படியாம்.

வேந்தா வேந்தனாய நீ மேவியிருக்கும் மேன்மை அரிய பெரிய புண்ணியத்தால் எய்தியது, பெறலரிய இப் பெரும்பேற்றைப் பழி மொழிகளால் பாழாக்கி வீணே இழந்து ஒழியாதே என உளம் தெளிய உரைத்தான்.

நினைப்பிறந்து கடவுள் இல்லை என்று அவன் சொன்னது புத்தி பேதகமான பைத்தியம் என்பதை உய்த்துணர். தெய்வம் ஒன்று இல்லை என்று சாதித்து நீ வாதாடுவது சிரிப்பை விளைக்கிறது என்று தன் வெறுப்பை இங்ஙனம் விளக்கியிருக்கிறான். எல்லாம் உதவியிராசனை இகழ்ந்தது இழி பழி ஆயது.

தெய்வம் இல்லை என்னும் பித்து இல்லையானால் உனக்கு நல்லுறுதி உண்டு என்று சொல்லி உணர்வு போதிக்க நேர்ந்தான்.

பித்து என்னும் சொல் மயக்கம் கிறுக்கு பைத்தியம் முதலிய மதிகேடுகளைக் குறித்து வரும். அரிய பல கலைகளைப் படித்திருந்தும் அறிவு கெட்டு அகங்காரம் மண்டி ஆணவம் மீதூர்ந்து நிற்கின்றான் ஆதலால் விபரீதமான அவ் வெறிநிலை நீங்கிச் சிறிது செவி சாய்த்துக் கேட்பாயானால் இறைவன் உண்மையை உரிய பிரமாணங்களால் எளிதே தெளியச் செய்வேன் என்பான் உணர்த்தியேல் பெய்குவன் என்றான். பெய்தல் என்னும் சொல் பெருநலம் காண வந்தது. வெயிலால் வாடி வதங்கிய பயிர்க்கு மழை பொழிதல் போல் கொடுமையால் மறுகி மயங்கி யுள்ள உன் உயிர்க்கு உறுதி நலம் பொழிகின்றேன் என்று தனது உணர்வுரைகளின் இனிய நீர்மையும் விழுமிய சீர்மையும் விழி தெரிய வுரைத்தான்.

தோன்றி விளங்குகின்ற தோற்றங்களுக்கெல்லாம் தோன்றாத ஒரு மூலமுதல் உண்டு என்று மொழிந்தவன் அதன் கோலம் குணம் குறிகளைக் கூற நேர்ந்தான்.

காண்டல், கருதல், யூகித்தல் என்னும் நிலைகளால் பொருள்கள் அறியப்படுகின்றன. இறைவன் அந்தமில்லாத அதிசய நிலையினன் ஆதலால் அவனை எந்த வகையிலும் அறியமுடியாது. அனுமானம் முதலிய அளவைகளால் ஓரளவு உறுதி செய்து கொள்ளலாமே அன்றி வேறு தெளிவாய்த் தெரிய இயலாது.

தன்னுளே உலகங்கள் எவையும் தந்து அவை
தன்னுளே நின்று தான் அவற்றுள் தங்குவான்.

பரமனுடைய அற்புத நிலையை இங்ஙனம் அறிவுறுத்தினன்.

கடலில் இருந்து அலை திரை நுரை எனத் திரண்டு எழுந்து நீண்டு புரண்டு மீண்டும் அதனுள்ளேயே மடங்கி அடங்குதல் போல் உலகம் உயிர் முதலியன யாவும் கடவுளிடமிருந்தே தோன்றி நின்று மறுபடியும் அவனிடமே அடங்கி ஒடுங்கும் ஆதலால் எவையும் தன்னுளே தந்து தான் அவற்றுள் தங்குவான் என்றான்.

“தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந்து அடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்துஇறந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளே அடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே [1]

உலகுதன்னை நீபடைத்தி உள்ஒடுக்கி வைத்திமீண்டு
உலகுதன்னுளே பிறத்தி ஓரிடத்தை அல்லையால்
உலகுநின்னொடு ஒன்றிநிற்க வேறுநிற்றி ஆதலால்
உலகில்நின்னை யுள்ளசூழல் யாவர்உள்ள வல்லரே? [2]

ஆதியாதி ஆதிநீஓர் அண்டமாதி ஆதலால்
சோதியாத சோதிநீ அதுண்மையில் விளங்கினாய்
வேதமாகி வேள்வியாகி விண்ணினோடு மண்ணுமாய
ஆதியாகி ஆயனாய மாயம் என்ன மாயமே!” [3]

திருமழிசை ஆழ்வார் திருமாலை நினைந்து இவ்வாறு பாடியுள்ளார்.

இந்த ஆழ்வார் பாசுரங்களில் வந்துள்ள சொல்லும் பொருளும் நம் கவியின் வாக்கில் கலந்து வந்திருக்கின்றன.

மாலடிக்கே மனம் கரைந்து உருகித் துதித்துள்ள உரைகள் அவனது அற்புத நிலைகளை விளக்கி நிற்கின்றன. எல்லா உயிர்களிலும் பரந்து எங்கும் வியாபித்திருத்தலால் அவன் விபு என நின்றான்.

“இடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவைஅவைதொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்துஎங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே.”

சடகோபர் இங்ஙனம் இறைவனைத் துதித்திருக்கிறார்.

எவ்வழியும் யாதும் நிலை காண முடியாத அவனைப் பல வழிகளிலும் கண்டு காணும்படி மேலோர் புகழ்ந்து பாடி வருகின்றனர்.

பின இலன்; முனை இலனை; போகிலனை,

என்றது ஆதியும் அந்தமும இன்றி என்றும் நிலைத்திருப்ப வன் என அவனது அநாதி நிததியததனமை உய்ததுணர வந்தது.

நிலம் நீர முதலிய ஐநது பூதஙகளும அகில சராசரஙகளும் அவனிடம மேவி மிளிரகினறன, யாவும அவன அருளால் இயங்கி வருகினறன.

"ஒன்றனில் போறறிய விசும்பும நீயே,
இரணடின உணரும வளியும நீயே,
மூனறின உணரும தீயும நீயே,
நானகின உணரும நீரும நீயே,
ஐநதுடன முறறிய நிலனும நீயே,
அதனால, நினமருஙகினறு மூவேழுலகமும"

(பரிபாடல, 13)

நல்லெழுநியாா எனனும சஙகபபுலவா இஙஙனம பாடியுள் ளாா. எலலாம அவன உருவமே என நலலாா பலரும யாண்டும் இவவாறு துதிததிருககினறனா.

"மாநிலம சேவடி ஆகத தூநீா
வளைநரல பெளவம உடுககை யாக
விசும்பு மெயயாகத திசை கையாக
பசுஙகதிா மதியமொடு சுடா கணணாக
இயனற வெலலாம பயினறகத தடககிய
வேத முதலவன எனப
தீதற விளஙகிய திகிரி யோனே" (நறறிணை)

திருமாலின விசுவரூபம இபபடித துதிககப படடுளளது.

தததுவ நிலைகளை ஓா்ந்து சிததம தெளிநது உத்தமமான ஞானக காட்சியில் காணபவா பாாதத இடம் எல்லாம் பரமனை எனறபடி பாா்தது மகிழ்வா் ஆதலால் அவா இவவாறு இறை வனை உருவகிததுத துதிதது வருகினறனா.

கருமமும கருமததின பயனும கணணிய
தருமுதல தலைவனும தானும ஆனவன.

இவாகள் செய்கிற கருமங்களும், அவ்வினைகளுக் குரிய பலன்களும் அவனுகவே வுள்ளன என்றது எல்லாவற்றிற்கும் சாட்சியாயுள்ள அந்தக் காட்சியும் மாட்சியும் கருத வந்தது.

"கருமமும கரும பலனுமாகிய காரணன தனனை
திருமணி வணணனைச செஙகணமாலினைத தேவபிரானை
ஒருமை மனததினுள வைதது உளளம குழைநது எழுநதாடி
பெருமையுமநாணுமதவிாநது பிதறறுமினபேதைமைதீாநதே"

[திருவாயமொழி]

இந்தப பாசுரததை அடியொறறி நம கவி வநதுள்ளமை இங்கே அறியலாகும. எலலா இனப நலஙகளுககும மூலகாரண னுயுளளவன திருமால, அநதப பெருமானை உரிமையுடனநினைநது உருகிப் புகழ்நது போறறுஙகள என நம்மாழவாா இஙஙனம உறுதி நலஙகளைப் போதிததிருககிறாா

அனபால் இறைவனை நினைநது எதிவருவது பிறவி தீாநது பேரின்பம அடைதறகு எதுவாம் ஆதலால அநத ஆனப வூதியத தை மேலோா மேன்மையாகப போறறிவருகினறாா.

கண்ணால காணமுடியாத பரமனைப பலவகை நிலைகளிலும கவி காடடியருளுகினறாா· பிரகலாதன வாய மொழியால அவ னது அதிசய நிலைகளைத துதி செயது வருவதில விதிமுறைகள் நிறைநது மதிநலஙகள சுரநதுளளன திவவிய மகிமைகளை எவ வழியும செவவையாகத தெளிவுறுததி யருளுகினறார்.

எஙகும நிறைநது எலலாம அறிநது யாவும புரிநது வருகிற தேவாபிரானை பெருமைகளைச சீவாகள தெரிய ஓவிய வுருவங களா உணாததி உறுதி நலஙகளை விளககி யிருக்கிறாா.

கண்ணினும் கரநது உளன, கணடு காடடுவான.

காணுகின்ற நம கண்கள உளளும இறைவன் ஒளிந்திருநது ஒளி புரிந்து வருகிறான என இது உணர்ததியுளளது. விழியின விழி என்றது அவனது அளியும் ஒளியும அறிய.

கண் ஒளி தெளிவாக காணக கதிா ஒளி துணை புரிநது வரு கிறது. விண் ஒளியான அவவொளிககும ஒளி யுதவி ஆதிமூல சோதியாய மாயன மருவி யுளளமை தெரிய வநதது.

கண்ணினும் உயிரினும் அருமையாக் கருதியுணர்ந்து உரிமையுடன் போறற வுரிய உயர்தனிப பொருள என்பது உணர்கின்றது. [illegible] இனியவனைப் பாவித்து மகிழ்கின்றார்.

கண்ணுள்ளும் எண்ணுள்ளும் உணர்வுள்ளும் உயிருள்ளும் கலந்துள்ள பரம் பொருளை உணராது பேணாமல் மறந்து வாழ்வது மதிகேடான இழிந்த பழியாம் ஆதலால் அங்ஙனம் இழிந்து ஒழிந்து போகாமல் தெளிந்து வாழ உயர்ந்தோர் பரிவு கூர்ந்து உறுதி யுண்மைகளை யுணர்த்தி யருளகினார்.

*கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில்*
*எண்ணிலும் வரும் என் இனி வேண்டுவம்*
*மண்ணும் நீரும் எரியும்நல் வாயுவும்*
*விண்ணுமாய் விரியும் எம்பி ரானையே* [1]

*கண்ணுள் நின்று அகலான் கருத்தின்கண் பெரியான்*
*எண்ணில் நுண்பொருள் ஏழிசையின் சுவைதானே*
*வண்ண நன்மணி மாடங்கள் சூழ்திருப் பேரான்*
*திண்ணம் என்மனத்துப் புகுந்தான் செறிந்து இன்றே* [2]
[திருவாய்மொழி]

முன்னே வந்துள்ள கண்ணினும் என்னும் நம்கவி இந்த ஆழ்வார் பாசுரங்களை நினைந்து வந்துள்ளது போல தோன்றுகின்றது. மருங்கே வைத்து ஒருங்கே எண்ணிப் பொருள் நிலைகளை ஓர்ந்து கூர்ந்து உணர்ந்து கொள்ளுக.

"காலமும் கருவியும் இடனுமாய்" என்றது எல்லாம் அவனாய் நின்று இயங்கிவரும் இயல்பு தெரிய வந்தது. காலமும் கணக்கும் நீத்த காரணன் ஆதலால் பரமனுடைய பரிபூரண நிலைமையை இவ்வாறு பாராட்டி நின்றார்.

"எக்காலத்து எந்தையாய் என்னுள் மன்னில்மற்று
எக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்"

சடகோபர் இவ்வாறு உறுதிபூண்டுள்ளார்.

எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் நின்று நிலவுகின்ற அந்நிலை தெரிய வந்தது. நித்திய பரிபூரணன் எனச் சுத்த சத்துவ நாதனைச் சத்திய வேதங்கள் துதித்து வருகின்றன.

சீலமும் அவைதரும் திருவுமாய் உள்ள

திருமாலின் உருவ நிலைகளை இவ்வாறு பலவகையிலும் உணர்த்திப் பரிவும் பண்பும் பெருகி உருகி வருகிறார்.

சீலம் என்றது நல்ல ஒழுக்கங்களை. சான்பு நிறைந்த மேலான புனித நீர்மைகள் எல்லாம் சீலம் என்னும் ஒரு சொல் லில் அடங்கியுள்ளன. சீலம் எல்லையிலான் என்த திருமாலை நம்மாழ்வார் இவ்வாறு சொல்லியுள்ளார்.

உயர்ந்த மகிமைகள் எல்லாம் ஒழுக்கத்தால் உளவாகின்றன.

இத்தகைய சீலத்தால் விளையும் பாக்கியங்கள் யாவும் திரு மாலின் உருவங்களாகவே உள்ளன என்றது அவற்றின் இன்ப நிலைகளை எண்ணி யுணர. திருவின போகங்கள யாவும் அவனது இனிய நீர்மைகளாய் இனபம சுரநதிருக்கின்றன. அவனுடைய கோலமும் சீலமும் குணநலங்களும் அதிசய நிலையின.

ஆலமும வித்தும ஒதது அடஙகும ஆணமையான்

அகில உலகங்களும் தன்னுள்ளே யிருந்து தோன்றி விரிந்து பரந்து விளங்க அவன மூலகாரணமாயிருநது வருதலை இவ்வுவ மைகள் உணர்த்தி நின்றன. ஆலம் என்றது ஆலமரததை. ஞால நிலைக்கு ஆலமும் மூல நிலைக்கு விததும் ஒப்பாய நின்றன.

"சீலம இலலவாககு உணர ஒணணாத சிறபரனைப
பாலன எனறனை அவனிடததில பலபொருளும
மேலை நாளவநது தோனறிய சிறியதோா விததின
ஆலம் யாவையும ஒடுஙகியே அவதரித ததுபோல"

[கநதபுராணம]

இந்தப பாடல் இங்கே நனகு சிந்திக்கததக்கது. தன்மேல் போராட வந்துள்ள வேலாயுதக் கடவுளைச் சிறுபாலகன் என்று சூரபன்மன் இகழ்ந்து பேசினன். அப்பொழுது அவன் தமபி யாகிய சிங்கமுகன் அபபிள்ளைப் பெருமான் மகிமையைக் குறித்து அண்ணன எதிரே இவவண்ணம சொல்லியருளினன்.

சிறிய விததில் நின்று பெரிய ஆல மரம் பெருகியுள்ளது போல் அகில அண்டகோடிகளும் இப் பாலனிடமிருநது தோன் றியுள்ளன என்னும் இது ஈண்டு ஊன்றி யுணர வுரியது.

"ஆலமர் வித்தின் அருங்குறள் ஆனான"

என இவ்வுவமை முன்னமும் * வந்துள்ளது.

* இந் நூல் பக்கம் 912, வரி 29 பாாக்க.

இறைவனுடைய அதிசய நிலைகள் எல்லையில்லாதன; யாரும் சொல்ல முடியாதன. எல்லா வுலகங்களுக்கும் எல்லா வுயிர்களுக்கும் என்றும் அவன் ஆதாரமாய் நின்றுள்ளான்.

இத்தகைய அந்த ஆதி முதல்வனை நன்றி யறிவோடு கருதி யுணர்ந்து உருகி யுவந்து உறுதி நலங்களை யடையாமல் வறிதே இகழ்ந்து வீணே அழிந்து போக நேர்ந்திருப்பதை நினைந்து நினைந்து தன் தந்தையின் நிலைமைக்கு வருந்தி இம் மைந்தன் மதி நலம் கூறி இறுதியில் தனது இயல் செயல்களைத் தெளிவாக உரைத்தான். உணர்வும் உரிமையும் உரைகளுள் ஒளிர்கின்றன.

தந்தையே! உங்கள் நன்மையை நாடியே அந்தப் புனித நாமத்தை நான் இனிது கூறினேன். உள்ளம் செருக்கி நெடுங் காலமாய் எள்ளி இகழ்ந்து வந்துள்ளமையால் உங்களுக்கு உண்மைநிலை தெரியாது போயது.

திருவின நாயகனைப் பழித்ததுத திருவினை இழந்து அநியாய மாய அழிந்து போக நேர்ந்துள்ள உங்களது அவலநிலையை எண்ணி எண்ணி என உள்ளம கவலைமிக அடைகின்றது.

நன்னெடும செலவமும நாளும நாமற
மனனுயிர இழததி எனறு இறைஞசி வாழ்த்தினேன்.

நாராயணா எனனும நாமததை உரிமையுடன தான உவந்து சொன்னதறகுக காரணததை இஙஙனம காட்டியிருக்கிறான். அரசதிருவை இழநது தநதை அடியோடு மாண்டுபட நேர்ந்துள் ளானே என்று இமமைநதன மறுகி இரஙகியுளளமை இதனால் அறிய வநதது. பெறற தகபபனுடைய பிழைபாடுகளை நீக்கி உறுதி நலஙகளை உணாததவே இவன கருதி முயனறிருககிறான். அன்பும் அறிவும தெய்வமணம கமழநது செவவிய நீதிகள் சுரந்து திவவிய நிலையில சிறநது மிளிாகினறன.

பரமபத்தியில் திளைததுப் புத்தி போதித்த இப் புத்திர னுடைய தததுவவுரைகளும் சாதனைகளும் பிதாவுக்குப் பெருஞ் சீற்றத்தை விளைத்தன. மாறறான் என மறுகிக் கொதித்தான்.

அன்புரிமையுடன அழைதது அருகு இருத்தி ஆதரவு புரிந்து
"அரியின் பேரைச் சொல்லாதே!" என்று அறிவு கூறியும் கேளா

மல். இப்பிள்ளை மாறுபட்டமையால் அத்தக்தை [illegible] தீயென உருத்து வெறுத்தான். அவன் சீறி எழுந்த பொழுது அண்டங்கள் நடுங்கின; [illegible]ணைடலமும் சுழன்றது; வானவர் தானவர் முதலிய யாவரும் அஞ்சி அலமந்தனர். யாண்டும் யாதும் அஞ்சாத நெஞ்சனை அந்த அசுர வேந்தன் உள்ளம் கொதித்து உருத்துச் சீறியது யுகமுடிவில் உருத்திர மூர்த்திபோல் உக்கிர வீரமாய்த் தோன்றியது.

கனகன்கண் உதிரம கானறன;தோனறின புகைக் கொடி; உமிழ்ந்தது கொடுந தீயே!

இரணியன் அன்று கொண்ட கோபததை இதில் கணடு கலங்குகின்றோம. பிள்ளை மீது சினந்து தன உள்ளம் கொதிதது உருத்து மூண்டுளள உக்கிர வீரநிலை அவனது அதிசய ஆற்றல்களை வெளிப்படுததி விதி விளைவுகளை விளககி யுளளது.

## கொல்லத் துணிந்தது.

தன் குலப்பகைவனை திருமாலிடமபெருமாலுடையனையப் பெருகியுள்ளமையால் இமமகனைக் கொடிய உட்பகைவன் எனறு அவன் கொதித்து மூணடான இனிமேல் இவனைப பிள்ளை என்று எண்ணுவது பெருமபிழையாம என அவன உளளம் துணிந்து அடுதது நினற அசுர வீரரகளைக் கடுதது நோககி "ஒல்லையில இவனைக கொனறு தொலையுங்கள்!" எனறு உருதது மொழிநதான. அரசன அஙஙனம ஆணையிடவே சேனைததலைவர் சீறிப்பறறி அரண்மனைககு வெளியே இழுதது வநதார, நடுவே நிறுத்தினார்;கொடிய கூரிய கொலைவாளகளைக கடுதது எடுததார. அடுத்து யாதொரு வாரதததையும பேசாமல் இவன கழுததில் ஓங்கி வீசினார். வீசிய வாள்கள யாவும நாசமாய ஒடிநது வீழ்ந்தன. கீழே தலை துளளி விழும எனறு கொலை நோககோடு குறியாய் வீசி எறிநதவர வியநது திகைததார். வயிரம பாய்ந்த மரத்தையும் ஒரு நொடியில ஊடுருவிப பிளநது போகின்ற வடிவாள்கள் பொடிகளாய் உதிர்ந்து படவே அவர நெடிது வியந்து நெஞ்சம் திகைததார. "வாளால் சாகாதபடி வரம் பெற்று வந்துள்ளானோ?" என்று அவர உரம் பற்றி யூகிததார். அதன பின் வேறு ஆயுதங்களால் கொல்ல விரைந்தார். நானகு பக்கங்களிலும் சூழ்ந்து நின்று கொண்டு வேல்களால் வெகுண்டு குத்தினர். அவையும் முரிந்து விழுந்தன. பெரிய இருப்புலக்கை[illegible]யும்

கொடிய தண்டங்களையும் கொண்டு மண்டையில் ஓங்கி அடித்தனர். அவையாவும் துண்டங்களாய் உதிர்ந்தன. பின்பு சக்கரம் மழு எழு பிண்டிபாலம் கண்டகோடாலி முதலிய கொலைக் கருவிகளை யெல்லாம் பெய்து கொன்று பார்த்தனர். எல்லாம் பாழாய் ஒழிந்தன. பிள்ளை யாதொரு ஊறுபாடும் நேராமல் அமைதியாயிருந்தான். கொல்ல முயன்ற கொடியவர் எல்லாரும் உள்ளம் திகில் கொண்டு உளைந்து நின்றார். பொல்லாத கருவிகள் எல்லாம் பெய்து அதீயவர் சூழ்ந்து கொல்லுந் தோறும் இத்தூயவன் யாதும் கலங்காமல் ஆழ்ந்த அன்போடு உடையவனையே நாடி உள்ளம் துணிந்து உறுதி பூண்டிருந்தான்.

தாயின்மன்னுயிர்க்கு அன்பினன் தன்னை அத்தவமெனும் தகவில்லோர்
ஏயெனுந்துணை மாத்திரத்து எய்தினர் எறிந்தனர் எறிதோறும்
தூயவன்தனைத் துன்னலன் வுடைய அவ் வொருவனைத் துன்னுதார்
வீரியன்வைத்தன ஒத்தன அத்துணை மழுவொடு கொலைவாளும் (1)

எறிந்த எய்தன எற்றின குத்தின ஈர்த்தன படையாவும்
முறிந்து நுண்பொடி யாயின முடிந்தன முனிவிலான் முழுமேனி
செறிந்த தன்மையும் செய்தில வாயின தூயவன் துணிவொன்று
அறிந்த நாயகன் சேவடி மறந்திலன் அயர்த்திலன் அவன்நாமம் (2)

சிறிய பாலனைப் பெரிய அசுரர்கள் வளைத்துக் கொண்டு கொடிய ஆயுதங்களால் கொல்ல மூண்டு கொதித்துச் செய்துள்ள கொடுமைகளை இவை குறித்துக் காட்டி யிருக்கின்றன. எல்லா உயிர்களிடத்தும் பேரன்புடைய இந்தப் பிள்ளையை அந்தப் பொல்லாத கொடியவர் கொலை செய்யத் துணிந்துள்ள நிலைகள் குலைநடுங்கச் செய்கின்றன. மேலே எறிந்த வேல் வாள் ஈட்டி எழு மழு முதலிய கொலைக் கருவிகள் எல்லாம் யாதொரு பலனும் காணமல் பாழாய் அழிந்து போயுள்ளன.

என்றும் காணாத அதிசய நிலையை இன்று நேரே கண்டமையால் கொன்று தொலைக்க மூண்டு வந்த அந்த அசுரர் யாவரும் நீண்ட திகைப்புடன் மதி மயங்கி மருண்டு நின்றார். கொடிய கொலைக்கருவிகள் எல்லாம் கூர்மழுங்கி ஒழிந்தது அவர்க்கு நெடிய திகைப்பாய் நேர்ந்து நின்றது.

வைத்தன ஒத்தன என்றது அவர் செய்தனவெல்லாம் செத்தனவாய்ப் பயனற்ற உய்த்துணர வந்தது. உள்ளம் தூய்மையான நல்லவனைப் பொல்லாத தீயவர் பகைமையால் எண்ணி இகழ்ந்து

வைதால் அந்த வசவுகள் எப்படி ஈனமாயிழிந்து போமோ அப்படியே அவர் அன்று எய்தன எறிந்தன யாவும் பாழாய் அழிந்து போயின. செயலழிவு தெளியச் சொல்லழிவு வெளி வந்தது.

வீணே பழி கூறுவோர் வாய்சலித்து வசை யுறுதல் போல் அவர் கைகள் சலித்து இழிந்து நின்றார் என்பதை இவ் வுவமை தெளிந்து கொள்ளச் செய்தது.

கொடிய கொலைக் கருவிகள் பலவாறு பாய்ந்தும் உடலில் ஒரு ஊறும் தோன்றாமையால் இக் குலமகன் அமைதியாயிருந்தான். நெஞ்சம் அஞ்சன வண்ணனையே அணைந்து நின்றது.

அறிந்த நாயகன் சேவடி மறந்திலன்,
அயர்த்திலன் அவன் நாமம்.

தன்னைச் சூழ்ந்து நின்று கொலை முயன்று அசுரர் துன்புறுத்திய பொழுது பிரகலாதன் அன்புற்றிருந்த நிலையை இது விளக்கியுள்ளது. நாராயணாயநம என்ற இந்த மந்திரத்தை நா செபித்துக் கொண்டிருந்தது, உள்ளம் திருமாலின் திருவடியையே நினைந்து உருகி நிலைத்து நின்றது.

தன்னைக் கொலை மூண்டு அசுரர்கள் கொடிய துயரங்களைச் செய்து கொண்டிருந்த பொழுது இவனுடைய மனமும் வாக்கும் மருவியிருந்த நிலைகளை இதனால் அறிந்துகொள்ளுகிறோம்.

நாம செபமும் தெய்வத தியானமும் செய்து கொண்டிருந்தமையால் அவர் செய்த தீமைகள் யாவும் இச் சேயினபால் சேராது ஒழிந்தன.

தீய அசுரர்களுக்கு இது ஒரு பெரிய மாய அதிசயமாய்த் தோன்றியது. இவன் தலையை வெட்டி வீழ்த்துங்கள் என்று மன்னன் இட்ட கட்டளையை நிறைவேற்ற முடியாமையால் அவர் நிலை குலைந்து மறுகினர். அதன் பின் வேந்தனிடம் போய் வணங்கி நின்று "அரசர் பெரும! வேல் வாள் முதலிய எல்லா ஆயுதங்களையும் கொண்டு வீசினோம், யாதும் பயனில்லை" என்று அஞ்சி மொழிந்தார். அஞ்சாத கொடிய நெஞ்சனான அவன் "அந்தத் தீய பையனைத் தீயுள் வீழ்த்தி மாய்த்து விடுங்கள்" என்று ஆர்த்து நின்றான். அசுரர் மீண்டு வந்து நெருப்பை வளர்த்தார். அகன்ற ஆழமான குழி ஒன்று தோண்டி அதில்

விறகுகளை அடுக்கி எண்ணெயும் வெண்ணெயும் வார்த்து நெருப்பை மூட்டினார். மூண்ட நெருப்புக் கொழுந்துவிட்டு நீண்டு எழுந்தது. பையனைப் பற்றித் தூக்கினார். அயலே பார்த்து நின்ற நகர மக்கள் அனைவரும் ஐயோ! என்று அலறிக் கூவினார். மேலே தூக்கிய பாலனைக் கொதித்து எரிகின்ற தீயின் நடுவே வீசினார். கொடிய நெருப்புக் குண்டத்தின் இடையே விழுந்த பிள்ளை குளிர்ந்த தண்ணீர்த் தடாகத்துள் பாய்ந்ததுபோல உள்ளம் களித்து உவந்து இருந்தான். படர்ந்து எரிந்த தீ முழுதும் அணைந்து போயது. குழியிலிருந்து குளிர் காற்று வெளியே வந்தது. உடம்பெல்லாம் குளிர மாயனையே நினைந்து இத் தூயவன் மகிழ்ந்திருந்தான்.

கால் வெங்கனல் கதுவிய காலையில் கற்புடையவள் சொற்ற
சீல நல்லுரை சீதமிக்கு அடுத்தலின் கிழியொடு நெய்தீற்றி
ஞாலம் அன்னவர் கரங்களால் வயங்கெரி மடுத்தலின் அனுமன்தன்
கூலம் ஆமென எனப்புறக் குளிர்ந்ததக் குருமணித் திருமேனி.

மண்டி எரிந்த தீயுள் பிரகலாதன் மருவியிருந்த நிலைக்குக் கவி இவ்வாறு உவமை கூறியுள்ளார். அரக்கர்கள் சூழ்ந்து நின்று அனுமான் வாலில் தீயைக் கொளுத்தியபொழுது அக்கினி தேவன் அவனை யாதும் சுடாமல் வருணனைப்போலக் குளிர்ந்து காத்தருளினன், அவ்வாறே இப்பாலனையும் தீக் கடவுள் அன்று காத்தருளியது எனக.

குருமணித் திருமேனி என்றது பிரகலாதனுடைய உருவ நிலையும் இளமை எழிலும் விழி தெரிய வந்தது. இந்த அழகிய மகனைத் தீய அசுரர் தீயுள் வீசினார், அங்கே யாதொரு நோயுமின்றி மாயனையே நினைந்து அன்புடன் இன்பமடைந்திருந்தான்.

### அனுமன் தன் கூலம் ஆம் என எனப்புறக் குளிர்ந்தது

நெருப்பில் தள்ளப்பட்ட பிள்ளை நீரில் அமர்ந்தவனாயிருந்திருக்கிறான். குளிர்ச்சியின் அளவை அளந்து காண உவமானம் வந்தது. கூலம் = வால்.

அனுமான் வாலில் வைத்த தீ சீதை கற்பால் வெம்மை நீங்கித் தண்மை ஓங்கியது. பிரகலாதனை உய்த்த தீ திருமால் அருளால் அடங்கிப் பெரு நீர்மை புரிந்தது. தீயவர்கள் துன்பம் செய்தபொழுது நல்லவர்களுக்கு உண்மையான தாயும் தந்தையு

மாயமர்ந்து உரிமையோடு ஆதரித்தருளுகிறவர் இன்னார் என்பது கண்டு இனிது அறிய வந்தது.

இச் சேனைத் தீயும் சுடவில்லை என்று அசுரர் போய்ச் சொன்னபோது இரணியன் கோதித்தான், அக்கினி தேவனைச் சிறையில் இடுங்கள் என்று சீறி மொழிந்தான், அதன் பின் அந்தத் துட்டப் பயலை அட்டமா நாகங்களை ஏவிக் கடித்துக் கொல்லும்படி படுத்து விடுங்கள் என்று கடுத்து நின்றான். பாம்புகளும் வந்தன. காள கூட விடங்களைக் கக்கிக் கொண்டு ஒக்கச் சூழ்ந்து உருத்துக் கடித்தன. பற்கள் ஒடிந்தன. விடம் பொருந்திய எயிறுகளிலிருந்து அமுதம் பெருகியது. நஞ்சுடைய நாகங்கள் அஞ்சி நடுங்கி அயல் ஒதுங்கி நின்றன.

பாம்புகள் கடித்தும் பயனில்லையே! என்று வேந்தன் முன் போய் வெய்யவர் மொழிந்தார். அவன் வெகுண்டு சீறித் திக்கு யானைகளை விட்டுக் கொல்லுங்கள் என்றான். இந்திரன் வாகனமான ஐராவதம் வந்தது. மைந்தனைக் கண்டது, மறுகி நின்றது. அசுரர்கள் அதனை அடித்து மூட்டினார். அது கடுத்துப் பாய்ந்தது, தந்தங்கள் ஒடிந்து தளர்ந்து நின்றது. மைந்தன் நிலையை மன்னன் அறிந்தான், சிந்தை திகைத்துச் சீறி யுருத்தான். பெரிய கல்லில் பிணைத்துப் பிணித்துக் கடலிடையே தள்ளிவிடும்படி பணித்தான். தானவர் அவ்வாறே விரைந்து கட்டி அலைகடல் நடுவே மலையோடு கொண்டுபோய் எறிந்தார். கடலில் தள்ளிய அந்தக் கல்மலை பரக்கலமாய் மிதந்தது. பாலன் அதன்மேல் அமைதியாய் அமர்ந்திருந்தான். தலைமேல் கூப்பிய கையனாய் மாயனை நினைந்து மனமிக வுருகினான், கண்ணீர் பெருகி மார்பில் வழிந்தோடியது. உழுவலன்பால் உள்ளம் கரைந்து இப் பிள்ளை துதித்த தெய்வத் துதிகள் உய்வைத் தர வல்லனவாய் உணர்வு நலங்கள் சுரந்துள்ளன.

ஆதிப் பரம் ஆமெனில் அன்றெனலாம்
ஓதப் பெருநூல்கள் உலப்பிலவால்
பேதிப்பன நீ யவை போகிலையால்
வேதப் பொருளே விளையாடுதியோ? (1)

அம்போருகனார் அரனார் அறியா
எம்போலியர் எண்ணிடின் என்பலவாக்

கொம்போ டடைபூக் கனிகாய் எனினும்
வமபோ மரம ஒனறெனும வாசகமே. (2)

கினனிற பிறிதாய நிலேயில் திரியா
தனனிற பிறிவாயின தாமெ னினும்
உனனிற பிறிதாக யினவோ உலகம?
பொனனிற பிறிதாகில பொற கலனே. (3)

தாய்தநதை எனுநதகை வநதனே தான
நீதநதனே நீயுறு நெஞசினன நான
நோய தநதவனே நுவலதீாவு மெனு
வாய தநதன சொலலி வணஙகினனால (4)

அலே கடலில் மலேயாகிய தோணிமேல இருந்துகொண்டு திருமாலே நினைநது நெஞசம கரைநது பிரகலாதன இவவாறு துதிததிருககிறுன். "கிளே தழை இலே அரும்பு பூ பிஞ்சு காய் கனி எனப் பலவாறு பிரிநதுதோனறினும மரம ஒன்றே; அதுபோல் அயன அரன, அரி அமரா எனப பல போகள் விளங்கினும் அவறறிற கெலலாம மூல முதலாய நீ நிலவி நிறகிருய. பணி கள பலவாயினும பொன ஒனறே. உலகம உயிாகள யாவும் உன்னிடமிருநதே உதயமாயிருக்கினறன நீயே எல்லாவறறிற கும ஆதாரமாயும ஆதேயமாயும அமாநதிருககிருய. உன மகி மைகள் அளவிடலரியன, வேதஙகளாலும ஓதி யுணர முடியா தன. வேதாநத நாயகனுய விளஙகியுள்ள நீயே ஆதி மூலப் பொருள, சீவகோடிகளுககுத தாயும தநதையுமாய வநது தண் ணளி புரிநது எண்ணிய இன்ப நலஙகளே இனிது அருளி வரு கின்ருய. கொலே புரிய விழைநது மலேயோடு வரிநது அலே கட லில் எறிநதும நான நிலேகுலேயாமல இநத நிலேயில இருநது வரு வதைக் கண்டு அந்தர வாசிகளும அதிசயமடைநது உன்னேத துதி செயது தொழுகினறனா. ஏழைபஙகாளன, பகதவதச லன், அநாதரடசகன, ஆபததுசகாயன என வழங்கி வரும் போகள உனது கருணைப் பிரவாகஙகளே விளக்கி நிறகினறன. எனது பிறவித துனபததை நீக்கிப் பேரினபம் தந்தருள் என்று உன்னே நான வாய திறந்து வேண்டுவது வசையாம், நான் எந்த நிலேயை அடைநதாலும உன திருவடியை மறவாத சிநதை ஒன் றே என்க்கு அந்தமில் இன்பமாம்" என் இநதவாறு உள்ளம் உருகி உரிமை சுரநது இப் பிள்ளே துதிததுளளான்.

இவனது அன்பு நிலையும் ஞானசீலமும் அதிசயமுடையன. கல்லோடு கட்டிக் கடலில் தள்ளியும் அல்லல் யாதும் இன்றி இவன் உள்ளம் உவந்திருந்தது ஆண்டவனுடைய அற்புத நிலையை வெளிப் படுத்தியுள்ளது.

எவ்வளவு துன்பங்கள் நேர்ந்தாலும் இறைவன் அருளைப் பெற்றவரை அவை யாதொரு தீதும் செய்யா என்பதை இந்தச் சேயின் சரிதம் இங்கே தெளிவுறுத்தி நின்றது.

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை யில." (குறள்,-4)

இறைவன் அடியைச் சேர்ந்தவர்க்கு எவ்வழியும் துன்பங்கள் இல்லாம என்னும் இப்பொய்யா மொழிக்கு இப்பையன் ஓர் மெய்யான சான்றாய் வையம் தெளிய வந்துள்ளான். இடும்பை=துன்பம். இதில் வந்துள்ள யாண்டும் என்னும் சொல் ஈண்டு ஊன்றி உணர வுரியது. காலம் இடம் கருவி முதலியவைகளை வரையறுத்து வலியுறுத்தி யுள்ளது. எக்காலத்தும், எவ்விடத்தும், எவரானும் எவற்றானும், எவ்வகையானும் துன்பங்கள் அணுகா என்பார் யாண்டும் இடும்பை இல என்றார்.

பொல்லாத அசுரர் கொல்ல முயன்று கல்லைக் கட்டிக் கடலில் இட்டும் அல்லல் யாதும் இன்றி இவன் அமர்ந்திருந்தது எல்லை யில்லாத வியப்பை யாவர்க்கும் எதிர் விளைத்து நின்றது.

## அப்பரும் பிள்ளையும்.

திருநாவுக்கரசரைக் கொல்லத் துணிந்து கல்லோடு பிணித்துச் சமணர்கள் கடலில் வீழ்த்தினர். "கல்லைப் பூட்டிக் கடலில் ஆழ்த்தினும் நல்லதுணை நமச்சிவாயவே" என்று அவர் சொல்லிக் கொண்டு சுகமாயிருந்தார். கொல்ல அணைத்த கல்லே துணையாய் அவர் கரையேறி யுய்ந்தார். பிறவிக் கடலை நீந்திப் பேரின்பம் அடையவுரியவர் என்பதை அக்கரையேற்றம் உலகறிய உணர்த்தி நின்றது.

பொய்யுரை நூலசில புகலும் தீஅமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகல் தோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் அரசர்தாள் தொழுதுபோற்றுவாம். (கந்தபுராணம்)

அறபபெரும செலவி பாகத்து அண்ணல அஞ்செழுத்தால் அஞ்சா
மறபபெரும செய்கை மாறு வஞசகா இட்ட கல
நிறப்பெரும் கடலும யாாக்கும நீநதுதற்கு அரிய ஏழு
பிறப்பெனும் கடலும நீதத பிரானடி வணக்கம் செய்வாம்.

(திருவிளையாடறபுராணம)

திருநீறறைமெயயழுததிஅஞசெழுத்தைநெஞ்சழுததிசிலைக்கைமாரன
உருநீறறும பெருமானை யுறவழுததிச சமணாளனும ஒன்றா மூடும
பொருநீறறுக் குடவரையுங் கடகரியும விடவரவும புறஙகண்டாழிக
கருநீதத்மகடபபஒரு கலதோணி யுகைத்தானைக் கருத்துளவைபபாம.

(திருககுறருலத்தல புராணம)

அருகக கடலகடநது ஏறியதோசிலை அமபிளனப
பெருகக கடலகடநது ஏறியதோசொல பெருமிடறு
கருகக கடலவிடம உணடோன அடியிற கசிநது மனம
உருகக கடலஅனபு பெறறசொல வேநத உனககரிதே?

(நாலவாநானமணிமாலை)

அமணா கொலல விழுததிய கலலே தோணியாக அப்பா கடல்நீநதி வநததை இநதவாறு மேலோா வியநது போறறி யுள்ளாா. அதிசய சரிதம துதி செய்ய வநதது.

அசுரர் கட்டிவிடட கலலையே மிதவையாக் கொண்டு மேலமாநதிருநது இறைவனைத துதிதத பிரகலாதன போல் நாவர சரும் தெயவததிருவருளால இடுமபைகள நீஙகி இன்பம் மிக்ப பெறறுளளமையால ஈணடு இணைதது எண்ண கோநதாா.

தெயவம் துணைசெயய கோநதால வெயய துயரஙகள யாவும விலகிப் போம என்பது இஙகே வெளியாய் நினறது.

ஆல்காண்டா (Alcander) எனனும் ஓா வாலிபன் ரோமா புரியில் இருந்தான். நலல தெய்வ பததி யுளளவன். அவனுக்கு அலலல்கள் பல கோநதன. எல்லா இடாகளும நீங்கி முடிவில் நல்ல நிலையை அடைநதான. இறைவன அருளை நினைந்து உள் ளம் உவநதான். தான் இறந்த பின்பு தனது கல்லறை மீது எழுதி வைக்கும்படி ஓர் சாசனத்தைச் செயது வைத்தான். அது அயலே வருகிறது.

"No circumstances are so desperate which Providence may not relieve"

"கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்னும் முதுமொழியின் பொருளை அவனது மொழியில் இவ்வாறு எழுதி வைத்துள்ளான். எந்த நாட்டிலும் எக்காலத்திலும் தெய்வ பத்தியுடையவர் உய்தி பெற்றுள்ளனர். உறுதியுண்மைகள் உய்வைத் தருகின்றன.

## நஞ்சு ஊட்டியது.

கல்லைக்கட்டிக் கடலில் போட்டும் இவன் சாகவில்லை என்பதை அறிந்ததும் இரணியன் சாகநேர்ந்தவன் போல் வேகமாய்க் கொதித்து மூண்டான். அந்தக் கொடிய பயலை வெளியில் எடுத்து நஞ்சை ஊட்டிக் கொல்லுங்கள் என்று வெஞ்சினம் மூட்டி விடுத்தான். தீய அசுரர் அவ்வாறே இச்சேயின் வாயில் விடத்தை ஊட்டினர். இவன் யாவும் உண்டான்; யாதொரு கேடு மின்றி முகமலர்ந்திருந்தான். கொடிய விடத்தைக் குடித்தவன் இனிய அமுதத்தைப் பருகினவன் போல் இன்பம் மீதூர்ந்து இருப்பதைக் கண்டதும் கொல்ல மூண்டு நின்ற கொலைகாரர் எல்லாரும் உள்ளம் கலங்கி உறுதிகுலைந்து மறுகி ஓடி மன்னனிடம் உரைத்தார். அவனும் கருதியுளைந்தான். "உடம்பை விட்டு உயிர் நீங்காத ஓர் அரிய உபாயத்தைக் கைக்கொண்டிருக்கின்றான்; இவனை நானே நேரில் கொல்ல வேண்டும்" என்று அவன் சீறி மூண்டு செயிர்த்து வந்தான்.

ஊனோடு உயிர் வேறுபடா உபயம்
தானே யுடையான் தனிமாயையினால்
யானே உயிர்உண்பல் எனக் கனலா
வானோரும் நடுங்கிட வந்தனனால்

இரணியனுடைய மானக் கொதிப்பும் ஆங்காரமும் இங்ஙனம் ஓங்கியிருக்கின்றன. பிள்ளை என்ற பாசம் யாதும் இல்லாமல் கொல்லத்துடித்துக் கொடுமை மண்டி நிற்கின்றான். அவனது உள்ளக் கடுப்பு எல்லை மீறி யுள்ளது. கொடிய குலவிரோதி என்று நெடுங்காலம் கடுங் கோபமாய்த் தான் இகழ்ந்து வந்த மாயனை மகன் புகழ்ந்து போற்றவே அவனுக்குக் கொடுஞ்சினம் மூண்டது. அவனது ஆணைக்கு அணு அளவும் மாறுபடாமல் யாவரும் அஞ்சி ஒடுங்கி அடங்கி வணங்கி நடந்து வருகின்றனர். அந்தத் தலைமை நிலையிலேயே நெஞ்சம் களித்து நெடுந்தருக்கோடு அவன் வாழ்ந்து வந்துள்ளான். எல்லை கடந்த பெருமித

நிலையில் இறுமாந்துள்ளவன் பிள்ளை மாறுபடவே பெரியமானக் கேடு நேர்ந்ததென அவன உள்ளம் கொதித்தது; அந்தக்கொதிப் பையும் அடக்கிக் கொண்டு உரிமையுடன் புத்தி சொல்லிப்பார்த தான்; புதல்வன் கேட்கவில்லை; உன்னினும் முதல்வன் ஒருவன் உளன்எனறு தன் எதிரே மீறிக்கூறவே அவன் மனம் சினமாய மாறுபட்டது. கொடிய பகையாகிய அந்த நெடிய மாயனினும் இந்தப்பையன் கடிய பகைவன என்று கருதது மூண்டான். உரியமகன் என்னும் பிரியம அடியோடு மாறியது; இவன பெரிய குடிகேடனஎனறே கோபம் மூண்டது. உள்ளே நேர்ந்த பகையை உடனே களைய வேண்டும் என்று உருததுமூண்டான. கொலைகள் பல சூழநதான. ஒன்றிலும் பலன் இல்லை. முடிவில் தன கையால் தானே கொலல வேண்டும என்று வாளும் கையு மாயக கோளரி போல கொதிதது வநதான.

யானே உயிர உணபல.

என்னும இதனால அவன உளளே உறுதி பூணடு உருதது வநதுளளமை உணரலாகும. ஏகாரம பிரிநிலை. பிறர எவரும எவவகையாலும இவனை யாதும செயய முடியாது என்று தெரிநது கொண்டமையால் இவவகையில அவன விரைநது வந தான. கொலவேன் எனனுமல உயிர உணபேன எனறே அவன கொதிதது வந்திருககிறுன. இவன உயிரை ஒழிப்பதில் அவனது உவகை ஓஙகி நிறகிறது. பிளளை எனற எண்ணம அவன் உள் ளததில எள அளவும இல்லை. கொடிய சததுரு என்ற கடுபபே கொதிபபேறி யுள்ளது. தன குடிககும், குலததுககும, ஆட்சிக் கும, மாடசிக்கும அவகேடாயத தோனறி யிருககினறுன என றே கோபம மூண்டுளளமையால கொலை நோககம கடுமை யாய நீண்டு நினறது.

## இருவரும் நேர்ந்தது.

தன்னைக் கொன்று தொலைக்க மூண்டு வாளோடு கொதித்து வந்த இரணியனைக் கண்டதும் பிரகலாதன் தொழுது வணங்கி ஞன். தன் உயிருக்கு உலை வைத்துச் சிததிரவதைச் செய்வித்த அந்த விசித்திரத் தநதையை இந்தப் புததிரன் அன்பு கூர்ந்து தொழுதிருப்பது இங்கே அதிசயக் காட்சியாய்க் கெழுமி நிறகி றது. உயர்ந்த பெருநதகைமைகள் ஒளி மிகுந்துள்ளன.

அவன் கொல்ல வந்ததும் இவன் கும்பிட்டு நின்றதும் உள்ள நிலைகளை உலகறியச் செய்தன. அவனது கொடிய தன்மையும் இவனது இனிய நீர்மையும் எதிர் தெரிய நின்றன.

கொடும் பகையாளனாய அவன் அடுந்துயர் செய்தும் இக் குலமகன் நெடும் பொறையாளனாய்ப் பெருந்தகைமை புரிந்துள்ளான். அரிய சால்பு இங்கே தெரிய நின்றது.

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. (குறள், 987)

இந்தத் தரும நீதிக்கு இம்மைந்தன் இங்கே உரிமையாய் நிற்கின்றான். உயிர் வதை செய்தவனையும் உவந்து தொழுதது உயர் பெருஞ் சால்பாய் வியந்து புகழ வந்தது.

இவனது குண நீர்மைகள் உயர் மணங்களை வீசியுள்ளன ஆன்று அவிந்து அடங்கிய சான்றோனாய் இவன் தோன்றியிருக்கிறான். உற்ற துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு ஊறு செய்தவரையும் சீறி வையாமலிருப்பது உயர்ந்த பெருந்தகைமை ஆதலால் அது ஈண்டு வியந்து பாராட்ட வந்தது.

"We bear it calmly, though a ponderous woe,
And still adore the hand that gives the blow" (Pomfret)

"அதிக துன்பத்தையும் அமைதியாய்ப் பொறுப்போம், அடித்த கையையும் அணைத்து வணங்குவோம்" என ஜான் பாம்ரெட் என்பவர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

"Bless the hand that gave the blow." (Dryden)

"அடித்த கையை ஆசீர்வதி" என டிரைடன் என்பவர் இவ்வாறு கூறியுள்ளார். பொறுத்தருளுவது அரிய தன்மை ஆதலால் அதனை மேலோர் இங்ஙனம் பெருமையாக உரைத்திருக்கின்றனர். பொறுமை அருமை மிக வுடையது.

அரிய பண்பாடுடைய பெரியோர்கள்பால் அரிதாய் மருவியுள்ள நீர்மை இப் பிள்ளையிடம் இயல்பாகவே பெருகியுள்ளது.

கொல்ல மூண்டு கொதித்து வந்த தந்தையை இம்மைந்தன் ஒல்லையில் உவந்து தொழுது மேலும் உறுதி நலங்களைச் சொல்ல நேர்ந்தான். உரைகள் பரிவு கூர்ந்து வந்தன.

வந்தானை வணங்கினன் மனனுயிர் தான
எந்தாயகொள எண்ணினையேல இதுதான
உநதாரிய தனறு உலகு யாவுமுடன
தந்தார கொள நிறைநது தானெனலும.

கையில் பிடிதத வாளோடு கடுததுக்கொல்லவநததந்தையை நோககி இநதப பிள்ளை இப்படிப் பேசியிருக்கிறான். என் அரு மைத் தநதையே! எனறு உரிமையுடன் விளித்துள்ளமையால் இன்னமும உள்ளததில வெறுபபு ஏறவில்லை எனறு தெரிகிறது.

நலல உறுதி யுண்மைகளை யுரைததுப் பிதாவின உள்ளத தைத திருததி விடலாம எனறே மறுததும் முயன்றிருக்கிறான.

எப்படியாவது உண்மை தெளிநது தகப்பன் உய்தி பெற வேணடும என இம் மகன உரிமை பூண்டுளளான. பிழையான வழியில் அவன மூண்டு முனைநதுளளதை எடுததுக காட்டி இடிதது அறிவுறுததினன. எநதையே! எனனைக் கொனறு உயி ரைத தினறு விடுவதாகக் கனறிக கடுதது நிறகிறீாகள, இது முடியாத காரியம் உடல அழிநதுபடுப; உயிா எனறும அழி யாது, இதனை அழிதது விடுவேன எனறு தெளிதது நிறபது சிரிப்பை விளைககிறது, உடல பொருள உயிா யாவும இறைவன உடைமைகள். எல்லாம் உடைய அவன அருளால அகிலமும இயங்கி வருகினறன.

உலகஙகளை யெலலாம படைததுக காதது வருகிற அநதப பரமனை மறநது பழிவழியில் புகுந்து கழி செருககோடு களிதது நிறபது அழி துயரமேயாம என இவன அறிவு கூறவே அவன ஆஙகாரமாய ஆாதது அடஙகொண்டு மொழிநதான.

## கனகன் வினவியது

ஏவரே உலகம தநதாா? எனபெயா ஏததி வாழும
மூவரே யலல ராகின முனிவரே முழுதும தோறற
தேவரே பிறரே யாரே செயபுதி தெரிய எனறன
கோவமுணடு எழுநதும கொலலான காடடுமேல காட்டிகொள [வான.

அகில உலகங்களையும் படைததுள்ள ஒருவனே உயிர்களை யெல்லாம் உரிமையாக வுடையவன்; அவனே கடவுள்; அவன்

அன்றி யாதும் அசையாது என்று இம்மைந்தன் மொழியவே அத் தந்தை இந்தவாறு எதிர்வாதமாய் இனிது வினவினன்.

"உலகங்களைத் தந்தவர் யாவர்? தேவ தேவரான மூவரும் என் பெயரையே ஏத்தி வாழுகின்றனர், யாவரும் என் ஆணைக்கு அடங்கி ஏவல்செய்து வருகின்றனர்; எனக்கு மேலான வல்லமை யுடையவர் யார்? அப்படி யாராவது இருந்தால் அவரை எனக்குத் தெளிவாக விளக்கிச்சொல்" என்று மன்னன் இன்னவாறு மகனைக் கேட்டிருக்கிறான்.

கோவம் மூண்டு எழுந்தும் கொலலான;
காட்டுமேல காட்சி கொளவான.

இரணியனை இங்கே கவி இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார். இந்தக் காட்சி கருதிக் காணத் தக்கது.

நிதான புத்தி யுடையவன்; எதிரி சொல்லுகிற வாதமுறைகளைக் கூர்ந்து கேட்டு உறுதி யுண்மைகளை ஓர்ந்து கொள்ள இசைந்துள்ளவன் என்பதை இறுதியடியில் தேர்ந்து கொள்ளுகிறோம். ஆர்ந்த அறிவு அமைதியில் ஆய்ந்தது.

தலைமையான நிலைமையில் தனனை என்றும் உயர்வாகவே கருதி வந்துள்ளான் என்பதை உரைகள்தோறும் உணர்ந்து வருகிறோம். அரிய வரபலங்களால் அண்டங்கள் முழுவதையும் ஏகபோகமாய் ஆளுகின்றான் ஆதலால் தனக்கு மேலாக யாரும் யாண்டும் இல்லை என உண்மையாகவே அவன் உறுதி பூண்டுள்ளான். தேவர் முதல யாவரும் அடங்கி யிருந்ததனால் அவனது நெஞ்சத்துணிவு நிலை மீறி நின்றது. முடிவில் கடவுளும் இல்லை என்ற எல்லைக்கு வந்தது. அந்த முடிவுக்கு முடிவாய் அன்று ஈண்டு நீண்ட சோதனை மூண்டுள்ளது.

ஒருவனுடைய புண்ணிய பலன் உள்ள அளவும் அவன் எண்ணிய படியெல்லாம் செய்யலாம்; இசைந்த வாறெல்லாம் பேசலாம், இடையே யாதும் தடை நேராது; இறைவனும் எதிர் செய்யமாட்டான்; இது விதி முறையான நியமம். அந்த நியமத்தால் நெடிது நிலைத்துள்ள இரணியன் கடவுளும் இல்லை என்ற எல்லையில் இறுமாந்து வந்தான். மடமையான அம்மனச் செருக்கு அவனுடைய மகனால் மடிய நேர்ந்துள்ளது. அயலே

எவரும் அவன் எதிரே மாறு பேசமாட்டார் ஆதலால் உள்ளே யே பிள்ளை மூலம் அப் பிணி தீர வாயந்திருப்பது மாயனுடைய அரிய மாய் வேலையா ஆய்ந்து கொள்ள வந்தது.

காட்டுமேல் காட்சி கோளவான.

ஞானவா பதி கர்ண விருமபியுள்ள நிலையை இது காட்டி நின்றது. நிலைமையும தலைமையும் நேரே தெரிய வந்தன.

கடவுள் இல்லை என்ற காட்சியில நெடுங்காலம கண ஊன்றி நிற்கின்றான் ஆதலால் உண்டு என்று காட்டுவார் யாரேனும் உளராயின அதனை உவந்து காண அவன உறுதி பூண்டிருந்தமை இதனால உணார்ந்து கொள்ள வந்தது. இது வரை ஒருவரும் நோ வந்து காட்டுவார் இன்மையால தான கண்டதே காட்சியாக கருதி நின்றான். வயிரம பாயந்த அவ வுறுதி நிலையை எவரும் அசைக்கமுடியாது என்ற திடம அவன் நெஞ்சில் இடம பெற்றுள்ளது. அவ வுண்மையை அவனுடைய வாய் மொழி கள யாண்டும் திண்மையாக காட்டியுள்ளன.

உள்ளம கொதித்துச சீறிச சினந்து வந்தவன எதிரே நின்ற சிறுவனை வாளால விரைந்து வீசியிருக்க வேண்டும, அங் ஙனம கொன்று முடிக்காமல உண்மை நிலையை ஓர்ந்து காண நேர்ந்து நின்றான் ஆதலால கோவம் மூண்டு எழுந்தும கொலலான என்றார். வெகுளி மூண்டும விவேகம நீண்டுள்ளது.

கொலலான என்றது புறநிலையைக் குறித்தது.

கோளவான என்றது அகநிலையை உணர்த்தியது.

தனகையால் விரைந்து செய்ய நேர்ந்த கொலையை நிறுத்தி உள்ளத்தால மெய்யை ஓர்ந்துணர உறுதி பூண்டு நின்றான்.

இந்த நிலையில் நின்ற அந்தத் தந்தையைப் பார்த்து இம மைந்தன பேச நேர்ந்தான. ஈசன நிலையை மறந்து பிதா மோசம போயுள்ளாரே! என்று பரிவு கொண்டு உள்ளம மறுகியுள்ள மையால பரமன் நிலையை விளக்கி உரைகள் பெருகி வந்தன.

உலகு தந்தானும பலவே றுயிர்கள்தந் தானும உள்ளுற்று
உலைவிலா உயிர்கள தோறும அங்கங்கே உறைகின்றானும
மலரினில் மணமும எள்ளில் எண்ணெயும போல எங்கும
அலகில பல் பொருளும் பற்றி முற்றிய அரிகாண் அத்தா! (1)

எனகணல் நோக்கிக் காண்டறகு எஙகணும உளன்காண் எநதை
உன்கண் நான் அன் பிறசொன்னலஉறுதியெனறுஒன்றுமகொள்ளாய்
நின்கணல் நோக்கிக் காண்டறகு எளியனே நினக்குப பின்னேன்
பொன்கணன் ஆவி யுண்ட புண்டரீ கக்கண் அமமான். (2)

மூனறு அவன் குணஙகள, செயகை மூன்று, அவன் உருவம மூன்று,
மூன்றுகண் சுடர்கள சோதி மூன்றுதன் உலகம் மூன்று
தோன்றலும இடையும் ஈறும தொடஙகிய பொருளகட் கெலலாம
சானறவன் இதுவே வேத முடிவிது சரதம எனறன (3)

"உலகங்களைப படைததவன் யாவன்? அவன் எப்படிப் பட்டவன்? அவன் எஙகே இருக்கிறன?" என இங்ஙனம இரணியன் கேட்ட கேள்விக்குப பதில் விடைகளாகப பிரகலாதன இவவாறு கூறியிருககிறன.

கடவுள உண்மையைத தெளிவாக உணாததப பலவகை நிலைகளைக் குறிததுக காட்டி விரிதது விளககியுளளான். அவன உளளம தெளிநது உறுதிகாண வேணடும எனனும ஆவலால உரைகள் நீணடு வநதன.

"அகில அணடகோடிகளையும சகல சீவகோடிகளையும படைதது எல்லா உயிரகளுளளும எஙகும இறைவன் நிறைநதிருககிறன. மலரின மணம போலவும எள்ளுள எணணெய எனவும் யாணடும பரிபூரணனய நிலவி நிறகிறன. சூரியன சநதிரன அக்கினி என்னும மூனறு ஒளிகளும அவனுடைய கண்களா யுள்ளன. சததுவம இராசதம் தாமதம் எனபன அவன குணஙகள. படைததல காததல அழிததல எனனும இவை அவன தொழில்கள. அயன அரி அரன் என மருவி மூனறு உருவஙக ளாய நினறு முததொழில்களைச செய்து உததம நிலையில ஒளி செயது உலாவுகினறன. எதறகும எனறும சானறயுள்ள அவனே யாவருக்கும தோன்றத துணை. என கண்ணுக்கு எதிரே எளியனயத தோனறியுளளான், உன கணணுக்கு முன்னே ஒனறும தோன்றமல் ஒளிநது நிறகிறன். அவனது அதிசய மாயைகள் அளவிடலரியன. நீ துதி செயது தொழு; விதிமுறையே உன் மதியில் விளங்கித தோன்றுவான்; ஓர்நது தேர்ந்து கொள்!" என இங்ஙனம் இத் தோன்றல் கூறி நின்றன்.

உலகு உயிர் எங்கணும் இறைவன் நிறைந்துள்ளான் என்பதைத் தெளிவாக உணர்த்தற்கு இரண்டு உவமைகளை எடுத்துக் காட்டினுன். தத்துவ நிலைகள் உய்த்துணர வந்தன.

மலரினில் மணம் என்றது என்றும் பிரியாத அருவ நிலை கருதி. பூவும வாசனையும் போல பூவுலகுளங்கும் ஈசன பொருந்தியுள்ளான். மலாக்கு மணம எபபடி இயல்பாய் வாய்நதுள்ளதோ அப்படியே சீவ கோடிகளுக்கும இறைவனுக்கும் உறவுரிமை அநாதியாகவே அமைநதுள்ளது. மலர்ககுமணம, உடறகு உயிர் எவவாறு மகிமையாய மருவியுளளனவோ அவவாறே உலகு உயிர்களுக்குப பரமன உறுதியாய உறைந்திருக்கிறுன்.

பூவணணம பூவினமணம போலமெயப போத இனப
மாவணண மெய கொணடவன வலியானை தாஙகி
மூவணணல தன சநநிதி முதலதொழில செயய வாளா
மேவணணல அனனை விளையாடடின விளையை வெலவாம

ஈசன எங்கும நிறைந்து யாவும இயக்கி வரும நிலைமையைக் குறிததுப பரஞ்சோதி முனிவா இவவாறு பாடியிருக்கிறுா. பாட்டின கருததுக்களும் குறிபபுகளுமகூாநது சிநதிககததக்கன

அருவமும் உருவுமாகி அநாதியாயப் பலவாய ஒனருய என்றும நினறு நிலவுகின்ற பிரமததின நிலைமையைச சீவ போததால் அறிய இயலாது. உருகிய அனபின வழியே அந்த் இனப ஒளி வெளியாம.

என கண்ணுக்கு எளிதாயத தோனறுகினுனே! உன் கண்ணுக்குத தெரியவிலலையா? எனறு இம மகன் பரிவோடு மறுகி யிருககிறுன. உருகிய அனபுடையவன ஆதலால் தெயவக்காட்சியை நேரே கணடு இன்புறறுளளான.

"எளிதாயின வாறெனறு எனகணகள களிபப
களிதாகிய சிநதையனுயக களிககினறேன"

(திருவாயமொழி)

என நம்மாழ்வார் பரமனைக் கண்டு களிததுள்ள உணமையை இங்ஙனம் விண்டு விளக்கியிருக்கிறுர். அன்பால உருகியுள்ளவரை இறைவன் அருகே வந்து அணைத்துக் கொளளுகிறுன்; கொள்ளவே அவர் பேரின்ப நிலையில் பெருகி நிற்கின்றுர்.

"அன்பருக்கு எளியனாய் அருளபுரிந்துளான்,
வன்பருக்கு அரியனாய் மருள விரிந்துளான்."

என்றபடி இறைவன் இயைந்திருத்தலால் இங்கே பிரகலாதனுக்கு அருள் புரிந்தான்; இரணியனுக்கு இருள் விரிந்து நின்றான். அவனது அருளும் மாயமும் அதிசயமுடையன.

## வாதம் வளர்ந்தது.

எல்லாப் பொருள்களிலும எள்ளுள் எண்ணெய் போல் பரமன் பரந்துள்ளான என்று இப்பாலகன் கூறவே காலனை போல் கனன்று நின்ற அவன் இகழ்ந்து சிரித்தான். என்ன துணிவினால் இந்தச் சின்னப்பயல இன்னவாறு கூறுகின்றான்? என்று உன்னி யுளைந்து உள்ளம் கடுத்து எள்ளி நகைத்து, "அடேl நீ சொன்ன அப்பரமன இந்தத் தூணில் இருக்கிறானா?" எனச் சுளித்துக் கேட்டான.

அரண்மனையின் முன்வெளியிலிருந்த மண்டபத்தில் இந்த வாக்கு வாதம நடந்தது ஆதலால அங்கே நின்ற ஒரு பெரிய தூணைச் சுட்டிக் காட்டி இங்ஙனம கேட்க நேர்ந்தான.

இறைவன எங்கும் நிறைந்துள்ளான என்று பிரகலாதன சொன்னமையால் எதிரே நின்ற கம்பத்தைக் குறித்துக கை நீட்டிச் சுட்டி இரணியன இவவாறு கேட்டான.

நீ கூறுகின்ற அந்த ஒருவன இந்தத் தூணில உளனா? இருந்தால் காட்டு! என்று அவ வேந்தன் கடுத்துக் கேட்கவே சாந்த சீலனான இந்தப பாலன விரைந்து பதில் சொன்னான

## பிரகலாதன் சொன்னது.

சாணினும உளன,ஓா தன்மை அணுவினைச சதகூறிட்ட
கோணினும உளன, மாமேருக குன்றினும உளன, இந்நின்ற
தூணினும உளன, நீ சொன்ன சொல்லினும உளன, இத்தன்மை
காணுதி விரைவின என்றான்,நன்றுஎனக் கனகன சொன்னான

"மலருள் மணம் போல் ஒருவன் உலகம் எங்கும் உறைந்துள்ளான் என்று சொல்லுகின்றாயே! அவன் இந்தத் தூணில் இருக்கின்றானா?" எனத் தந்தை கேட்டகேள்விக்கு மைந்தன் இப்படி விரைந்து எதிர் விடை தந்துள்ளான்.

இவனுடைய உள்ளத் துணிவையும் உறுதி நிலையையும் இதில் கருதிக் காணுகின்றோம்; பெரிதும் வியந்து நிற்கின்றோம்.

"நீ கை நீட்டிச் சுட்டிக் காட்டிய இந்தத் தூணில் மட்டுமா இருக்கிறான்? அவன் எங்கும் நிறைந்துள்ளான" என்பான் இங்ஙனம் விரித்துக் கூறினான்.

கையை நேரே நீட்டித் தூணைச்சுட்டிக் காட்டினன் ஆதலால் அந்தக் காட்சியில் முன்கை அளவு முன்னே தோன்றியது; தோன்றவே சாணினும் உளன் என்று முதலில் தொடங்கினன்.

எட்டுமுழம் உயர்ந்து நிற்கிற இந்தத் தூணில் மாத்திரமா இருக்கிறான்? உன்கைச் சாணினும் உளன் என்று தன்கையை விரித்துக் காட்டி மெய்யை விளக்கியுள்ளான.

அணு மிகவும் நுணுகியது. ஓர் அணுவை நூறு கூறு செய்து அந்தப் பகுதியில பார்த்தாலும இறைவன அங்கே தங்கியிருக்கிறான. சதம = நூறு. கோண் = துண்டம, பகுதி.

நுண்ணிய தன்மைக்கு அணுவை உரைத்தவன் உடனே எண்ணிய பெருமைக்கு மலையைக் குறித்தான. மாமேருக்குன்றினும் உளன என்றது அவனது மேலான நிலைமை தெரிய வந்தது.

அணுவினுள அணுவாயும மலையினுள மலை ஆயும பரமன் நிலவியுள்ள நிலைமையை இக்குலமகன இங்ஙனம் குறித்துக் கூறினன உள்ளும புறமும் உலாவியுளள வகை சொல்லிய படியாம்.

அவனது நிலை காணவும கருதவும முடியாது ஆதலால கண்டபடி யெல்லாம காட்டநோந்தான். பரமாணுவினும பரமாணுவாயப் பகிரண்டத்தினும் பகிரண்டமாய அவன் மருவியுள்ள மாட்சி காட்சிக்கு வந்தது.

"அணடஙகள எலலாம அணுவாக,அணுககள எல்லாம
அணடஙகள ஆகப பெரிதாயச சிறிதாயி னனும
அணடஙகள உளளும புறமபும கரியாயி னனும
அண்டஙகள ஈனறாள துணைஎனபா அறிநதநலலோா"
(திருவிளையாடல்)

ஈசனது அதிசய மகிமையைத் துதி செய்துள்ள இந்தப் பாசுரம் இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது. அணு அண்டம் ஆகும்படி நுணுகியும், அண்டங்கள் அணு என்னும்படி பெருகி

ரம் உள்ள பரமன் என்றது அவனது நிலைமை தலைமைகளை ஓர்ந்து தேர்ந்து கொள்ள வந்தது.

எங்கும் நிறைந்து எல்லா உயிர்கட்கும் உயிராய் இறைவன் உறைகின்றான் என்ற உரைகளைக் கேட்டவன் எதிரியின் உரைகளைத் தழுவி உணர்வு நலங்களை உரைத்தான.

இதோ நிற்கின்ற இந்தத் தூணிலும் இருக்கிறான் என்றது அவன் குறித்துக் கேட்ட குறிப்பை ஒட்டி வந்தது. இங்கின்ற வனனும் அணைமைச் சுட்டு இருவருக்கும் இடையே அருகே நிற்கிற அதன நிலைமை தெரிய நேர்ந்தது.

நெடிய தூண் ஒன்று நடுவே நின்றுள்ளது என்றதனால் அவர் நின்று வாதாடிய இடமும் இயல்பும் நன்று தெரிந்தன.

சாண் அணு மலை தூண் முதலாகச் சொல்லி வந்தவன் இறுதியில் சொன்னது பெரிய வியப்பாயது.

நீ சொன்ன சொல்லினும் உளன்

என்னும் இது உளளி யுணரவுரியது.

இதுவரை அயலே உள்ள பொருள்களை எல்லை செய்து கூறிவந்தவன் முடிவில அவனிடமே கடவுள் உண்மையை நய மாக நவின்றான். "அவன் எங்கே இருக்கிறான்? இந்தத தூணில் உளனா?" என்று இரணியன் கேட்ட அந்தக் கேள்வியிலேயே இறைவன் இருக்கிறான் என வினயமாய உரை செய்தருளினான். அவன் இல்லையானால நீ யாதும பேசமுடியாது; உள்ளே இருந தவனாலேதான் இப்படிப பேச நேர்ந்தாய்! என்று பேசி யிருப்பது உணர்வின் சுவையாய ஒளிபுரிந்துள்ளது.

கடவுள் இலலை என்று நாததிகர் சொல்லுகிற அந்தச் சொல் லிலேயே அவன் இருக்கிறான; இருந்து கொண்டே தன்னை அவ் வாறு அவர் சொல்லிவரும்படி அவன் புல்லிவருகிறான்.

"சொல்லானைப் பொருளானைச் சுருதியானை"

என்றபடி இறைவன் உரையுணர்வுகளில் ஊடுருவியுள்ள மையால் நீ சொன்ன சொல்லினும் உளன் என அவனது உண் மை நிலையை உறுதியாய்க் கருதி யுணர உரைத்தான்.

காணுதி விரைவின்!

என இவ்வாறு இறுதியில் துரிதப்படுத்தி யிருக்கிறான்.

இந்தப் பிள்ளையின் உள்ளத்தையும் உறுதி நிலையையும் இவ்வுரை தெளிவாக்கியுள்ளது.

யாரும் யாண்டும காணமுடியாத கடவுளை இரணியன் ஈணடு நேரே காணலாம் என்று பிரகலாதன் உறுதி பூண்டு ஊக்கி நிற்கும் நிலை நமக்கு அதிசய வியப்பாயுள்ளது.

கடவுள நம்பிக்கையில் எவவளவு உறுதியான திடமிருந்தால இவவளவு துணிவான வாாதைத இச சேயின் வாயிலிருந்து வெளி வரும்! என்பதை இங்கே உளவு கூர்ந்து நாம் ஓர்ந்து கொள்ளுகிறோம்

காணுதி! எனத தநதையை விரைவு படுததியது கடவுட் காடசியில இவனுககுளள தெளிவை வெளிப்படுததியது.

யாதொரு ஐயமும கொளளாமல் இப் பையன் இவவாறு துணிநது சொலலவே அவன முதலில் வியந்தான்; பின்பு வெகுண்டு விரைநதான். குறிததபடி காட்டவில்லை யானல் உனனைக் கொனறு உயிா குடிபபேன என்று அவன் கனறி மொழிநதான. காரிய சோதனையில் மூளுமுன வீரிய மொழிகளை வீசி ஆரவாரமாய அடஙகொணடு பேசினன.

## இரணியன் உரைத்தது.

உமபாகரும உனககும ஒததுஇவ வுலகெஙகும பாநதுளானைக்
கமபததின் வழியே காணக் காடடுதி காடடி டாயேல
குமபததின் கரியைக் கோண்மாக் கொன்றெனை நினனைக கொன்றுன்
செமபு ஒதத குருதி தேககி உடலையும தினபேன என்றான்.

அசுர வேநதனுடைய ஆங்காரமும கோபாவேசமும் கொடுமையான கொலைநோக்கோடு இங்கே ஓங்கி நிற்கின்றன.

காணுதி என்று முன்னா இவன் கூறினமையால் காட்டுதி! என்று பின்னர் அவன் கடுத்து விரைந்தான். உண்மையைக் கண்டு தெளிய ஊக்கிமூண்டு அவன் உருதது எழுந்தது உக்கிர வீரமாயக் கதிதது நின்றது.

கம்பத்தின் வழியே காணக் காட்டுதி!

தான் குறித்துக் காட்டிய தூணில் அந்த மாயனைக் காட்டுக என்று தன் சேயினை இங்ஙனம் அதட்டிக் கேட்டுள்ளான்.

கம்பம் = தூண். உலகம் எங்கும் பரந்துள்ளான் என்று நீ சொல்லுகின்ற அவன் இந்தக் கம்பத்திலும் உறைந்திருக்க வேண்டும். அப்படி இருந்தால் எனக்கு நேரே காட்டுக; காட்டாயேல் உன் உயிரை நீ காணமுடியாது; உன்னை நான் உடனே கொன்று தொலைப்பேன் என்று உருத்துக் கொதித்தான்.

உயிரை எடுத்து இரத்தத்தைக் குடித்து உடலையும் தின்பேன் என்றது தான் செய்ய மூண்டுள்ள கொலையின் கொடிய நிலை தெரிய. உள்ளம் நடுங்க உரைகள் துள்ளி வந்துள்ளன.

மதயானையைச் சிங்கம் பாய்ந்து கொல்லுவது போல் கொல்வேன் என்றது பகைமைக் காய்ச்சலின் கொடுமையும் பாய்ச்சலின் கடுமையும் தெரிய. கோண்மா = சிங்கம். மிருகங்களுள் மிக்க வலியுடையது ஆதலால் சிங்கத்துக்கு இப்பெயர் வந்தது. கோள் = வலி. எதையும் எளிதே பாய்ந்து கொல்லவல்லது என்னும் அவ்வன்மை ஆய்ந்து கொள்ளவந்தது.

நரசிங்கத்தால் விரைவில் நாசம் அடைய நேர்ந்துள்ளவன் தன்னை ஒரு வலிய சிங்கம் என்று பேச நேர்ந்தான். தான் கொல்லப்படுவதை எண்ணாமல் பிள்ளையைக் கொன்று தொலைப்பேன் என்றது விதியின் விளையாட்டாய் விளைந்து நின்றது. யாரும் அஞ்சும்படி இவ்வாறு அவன் ஆரவாரமாய் ஆர்த்துச் சொல்லவே இவன் அமைதியாய்ப் பதில் சொன்னான்.

என்னுயிர் நின்னால் கோறற்கு
எளிய தொன்றன்று, யான்முன்
சொன்னவன் தொட்ட தொட்ட
இடந்தொறும் தோன்றான் ஆயின்
என்னுயிர் யானே மாய்ப்பல்
பின்னும் வாழ்வு உகப்பல் என்னின்
அன்னவற்கு அடியேன் அல்லேன்
என்றனன் அறிவின் மிக்கான்

தன்னைக் கொன்று விடுவதாகக் கொதித்து நின்ற தந்தையை நோக்கிப் பிரகலாதன் இவ்வாறு பேசியிருக்கிறான். பேச்சில் அமைதியும் வேகமும் உறுதியும் பெருகியிருக்கின்றன.

“என்னுயிரை உன்னால் மாய்க்க முடியாது; நான் சொன்ன அவன் நீ தொட்ட இடங்களில் எல்லாம் நேரே தோன்றுவான்;

அவ்வாறு தோன்றான் ஆயின் என் உயிரை நானே மாய்த்துக் கொள்வேன். உடனே மாண்டு ஒழியாமல் மீண்டும், ஈண்டு வாழ்வை விரும்பி நிற்பேனாயின் அவனுக்கு நான் அடிமையல்லேன்; கொடிய ஒரு பாவியே ஆவேன்” என இவன் முடிவு கூறியுள்ளது நெடிது சிந்திக்க வுரியது.

பிள்ளைக்கும் பிதாவுக்கும் வாகரு வாதப மூண்டது; வாாதைகள நீண்டன; எங்கும் நிறைநதுள்ளான் என்று நீ சொலலுகின்ற அந்தக் கள்ள மாயன் இந்தத தூணில் இருக்கிறானு? என்று இரணியன கேட்டான். தூணில மாததிரம அன்று யாணடும உளளான எனறு பிரகலாதன எதிா மொழி தந்தான. அபபடியானுல் அவனை இத தூணில் காட்டு! இல்லையேல் உனனைக கொலவேன் எனறு கொதிததான. தநதை அவ்வாறு கொதிககவே மைநதன் மாறு கூறினுன்: எனனை உன்னுல் கொல்ல முடியாது; நான சொனனபடி அனனவன தோனறவில்லையானுல், யானே மாண்டு போவேன எனறு மைநதன் மூண்டு நினறுன்.

வாதப் போர் வளாந்திருக்கிற நிலை உயிாக கொலையில் கிளாநது நிறகிறது. மான வுணாசசியும ஞான வளர்ச்சியும இரணடு பக்கமும எதிாநது நிறகினறன. உறுதி மொழிகள பெரிதும் வீறிட்டு வெளி வநதுளளன.

உலகு எங்கும பரநதுளள அவனை இநதக கமபததுள காட்டு என்று வேந்தன வெகுண்டு கேடகவே இவன யாதும தாழாமல பதில் உரைததது அதிசய வியபபை விளைததது.

தூணில் மட்டுமல்ல; நீ தொட்ட தொடட இடந்தோறும் அவன தோனறுவான் என்றது ஆன்ற அதிசயமாய்த தோன்றியுளது. எவவளவு துணிவு! எவவளவு தெளிவு! இம மொழியுள் ஒளி வீசி நிறகின்றன. உளளத திண்மையையும் உண்மை நிலையையும் உரையுள் கண்டு உவகை மீக் கூாகின்றோம. தெய்வத திருவருளின் ஆவேசம இப் பிளளை மொழியில் பெருகிப் பேரொளி செயதுள்ளது.

நீ தொட்ட இடமெல்லாம் அவன் தோன்றுவான்; அவ்வாறு தோன்றுனாயின், நான் தோன்றியிருப்பது வீண்; உடனே

மாய்ந்து போவேன்; என்னை யாரும் மாய்க்க வேண்டியதில்லை என்று வாக்களித் திருக்கிறான்.

தொட்ட தொட்ட என்றது அடுக்கு தொடுகின்ற இடங்களை யெல்லாம் எல்லை காண எடுத்துக் காட்டியது. நீ எங்கே கை வைக்கின்றாயோ அங்கே யெல்லாம் அவன் பொங்கி எழுவான என இங்கே இவன் உறுதி மொழி கூறியுள்ளான்.

மானமும் வீரமும் மண்டி மாறுபாடு மீறி அவன் சீறி நிற கின்றான்; ஞான தீரங்களோடு நேரே இவன் வீறுகொண்டு பேசு கின்றான். இருவர் நிலையும் பொருவரு வகையில் பொங்கியுளளது.

யாரும் நேரே காண முடியாத கடவுளைக் கண் எதிரே எவ வழியும் காட்டுவேன் என்று உறுதி கூறி இவன ஊக்கி நிறபது நமக்குப் பெரிய ஆச்சரியமாயத தோனறுகிறது.

எல்லாம் வல்ல இறைவனையே கருதி உருகி உருப பெறறி ருத்தலால் இவனுடைய உளளம எல்லை யில்லாத ஆறறலை எயதி ஏறறம் மிகப் பெறறுள்ளது. மனிதன புனிதனுப்ப பரமனை மருவிய பொழுது அவன கருதியன யாவும கைவரப பெறுகி றான். புண்ணியமான அநத எண்ணஙகள அரிய அறபுதஙகளை விளைததருளுகினறன.

"The will is almighty." (Vivekananda)

"நலல உள்ளம் சருவ வல்லமை யுள்ளது" எனனுமீ இது இங்கே உனனி உணரத தககது. மனோ சததியால அரிய சிததி கள் உளவாகின்றன. மனம உயரின் அம மனிதன மகானுய மாட்சி மிகப் பெறுகிறான.

உள்ளம் தூயமையான பததன் எண்ணியபடியே பரமனும நண்ணி நிறகின்றான்; ஆகவே பததி அதிசய சிததியாய நிலவி யுள்ளது. அவவுண்மை இஙகே உதயமாய ஒளிாகினறது.

அனன்வற்கு அடியேன அல்லேன.

முடிவில் பிரகலாதன் இன்னவாறு சொல்லி முடித்திருக்கி றான். "நான் சொன்னபடி நீ தொட்ட இடம் எல்லாம் எம் பெருமான் தோன்றுவான்; அவ்வாறு தோன்றானாயின் அவன் மீது பழி சொல்லாதே; பிழை என்னிடமே யுள்ளது. அவனுக்கு நான் உண்மையான அடியவன் அல்லன் என்று நீ முடிவு

செய்து கொள்ளுக. நான் சரியான அடிமையாயிருந்தால் ஆண்டவன் என் வேண்டுகோளின்படி தோன்றியிருப்பான்; தோன்றவில்லையானால் எனது அடிமைத் தன்மையில் ஏதோ பிழைபாடுடையதாகக் கருதிக் கொள்வதே அறிவுடைமையாம். மேலும் தெய்வம் இல்லை என்று நிந்தை செய்து நீசம் அடையாதே!" என்று தந்தையை இம்மைந்தன வேண்டியிருக்கிறான. இவனுடைய அன்புரிமையும் பண்பாடுகளும அதிசய நிலையில் பெருகியுள்ளன. கொல்ல மூண்டு கொதிததாலும் தநதைபால் நல்லதையே நாடி உள்ளதையே உணர்த்தி உறுதி பூண்டுள்ளான்.

எவ்வழியும் பழி நீங்கி அவன் வாழ வேண்டும் என்றே இவன் வழி கோலியிருககிறான். "நாததிகம் பேசி நாசம் அடையாதே; ஆததிகனாய் நின்று அரசு புரிந்தருள்" என்பதே இவனது ஆர்வமா யமைந்திருக்கிறது. தன்னைப் பழிதது அழிததாலும் தான் வழிபடு கடவுளைப் பிழை கூறலாகாதென உழுவலன்போடு இவன் உருகி மறுகி யிருப்பது கருதி யுணர வுரியது.

ஆண்டவன் தோன்றவில்லையானால் உடனே மாண்டுபோக வேண்டும் என்று உறுதிபூண்டு உள்ளம் துணிநது இவன் மூண்டுள்ளமை உரையில் தோன்றி யுள்ளது. என உயிர் யானே மாய்ப்பல் என்றதனால் இவன் சாகத துணிந்துள்ள வேகம் விளங்கி நிற்கிறது. அதிசய பரவசம் குதி கொண்டுள்ளது.

## நரசிங்க மூர்த்தி தோன்றியது.

நீ தொட்ட இடம் எல்லாம தோன்றுவான எனப் பிரகலாதன் துணிந்து கூறிய உரைகளைக் கேட்டதும இரணியன் உள்ளம் கனன்று உருத்து மூண்டு எதிரே நின்ற தூணில ஓங்கி அறைநதான். நெடிய மலைமேல் கொடிய ஒரு இடி வீழ்ந்தது போல் அடி வீழவே அந்தத் தூணிலிருநது ஓர் அதிசயமான சிரிப்பு ஒலி எழுந்தது. திசைகள் எஙகும் செவிடு படும்படி அவ்வோசை விசையாய் ஓங்கி விரிந்தது.

நசைதிறந திலஙகப் பொஙகி நன்றுநன் றென்ன நக்கு
விசைதிறநது உருமு வீழ்ந்த தெனனவே தூணின் வென்றி
இசைதிறந்துயர்ந்த கையால் எற்றினன் எற்றலோடும்
திசைதிறந்து அண்டம் கீறிச் சிரித்தது செங்கட் சீயம். (1)

444

நாடினான் தருவென் என்ற நல்லறி வாளன் நாளும்
தேடினான் முகனும் காணுச் சேயவன் சிரித்த லோடும்
ஆடினான் அழுதான் பாடி அரற்றினான் சிரதசிற் செங்கை
சூடினான் தொழுதான் ஓடி உலகெலாம் துகைத்தான் துள்ளி. (2)

ஆரடா சிரித்தாய் சொன்ன அரிகொலோ அஞ்சிப்புக்க
நீரடா போதா தென்று நெடுந்தறி நேடி னுயோ
போரடா பொருதி ஆயின் புறப்படு புறப்ப டென்றான்
பேரடா நின்ற தானோடு உலகெலாம் பெயரப் போவான. (3)

பிளந்தது தூணும் ஆங்கே பிறந்தது சீயம் பின்னை
வளர்ந்தது திசைகள் எட்டும் பகிரண்டம் முதல மற்றும்
அளந்ததப் புறத்துச் செய்கை யாரறிந்து அறைய கிற்பார்
கிளர்ந்தது ககனமுட்டை கிழிந்தது கீழும் மேலும் (4)

மன்றலந் துளப மாலை மானுட மடங்கல வானில
சென்றது தெரிதல தேற்றும சேவடி படியில் தீண்டி
நின்றதோர் பொழுதின் அண்ட நெடுமுக டிருந்த முன்றோன்,
அன்றவன் உந்தி வந்தான் ஆமெனத் தோன்றி னுல். (5)

முடங்குவா ருளை அவ அண்டம் முழுவதும் முடிவின் உண்ணும்
கடங்கொள வெங் காலச் செந்தீ யதனைவந் தழிக்கும,கால
மடங்கலின உயிர்ப்பு மற்றக் காற்றினை மாற்றும் ஆனல
அடங்கலும பகுவாய யாக்கை அப்புறத் தகத்ததம்மா! (6)

பேருடை அவுணர் தம்மைப் பிறைஎயிற்று அடக்கும பேராப்
பாரிடைத் தேயக்கும மீளப் பகிரண்டத் தடிக்கும பற்றி
மேருவில புடைக்கும மாள விரல்களில பிசையும வேலை
நீரிடைக் குமிழி யூட்டும நெருப்பிடைச் சுரிக்க நீட்டும (7)

யானையும தேரும மாவும யாவையும உயிர் இராமை
ஊனொடும தின்னும, பின்னை ஒலிதிரைப் பரவை ஏழும
மீனொடும் குடிக்கும; மேகத்து உருமொடு விழுங்கும, விண்ணில்
தானொடுங் காதென் றஞ்சித் தருமமும் சலித்த தம்மா! (8)

ஆழிமால வரையோடு எற்றும சிலவரை அண்ட கோளச்
சூழிரும் சுவரில தேய்க்கும் சிலவரைத் துளக்கில குன்றம
ஏழினோடு எற்றிக் கொல்லும சிலவரை எட்டுத் திக்கும்
தாழிருட் பிழம்பில தேய்க்கும சிலவரைத் தடக்கை தாக்கி. (9)

மலைகளில் புரண்டு வீழ வளருகிர் நுதியால வாங்கித
தலைகளைக் கிள்ளும; அளளித் தழலெழப் பிசையும; தக்க
கொலைகளில் கொல்லும்; வாங்கி உயிர்களைக் குடிக்கும்; வான
நிலைகளில் பரக்க வேலை நீர்களை நிரம்பத் தூர்க்கும். (10)

முப்புறத் துலகத் துள்ளு மொழிவற முற்றும் பற்றித்
தப்புதல் இன்றிக் கொன்று தையலார் கருவும் தள்ளி
இப்புறத்து அண்டத்து யாரும் அவுணர் இல்லாமை எற்றி
அப்புறத்து அண்டந் தோறும் தடவின சிலகை அம்மா! (11)

நன்மையில் தொடர்ந்தார்க்குண்டோ கேடு? நான்முகத் தோன்றி
தொன்மையில் தொடர்ந்த வாய்மை அறத்தொடும் தொடர்ந்திலோரை
அன்வயித் தோறும் தீய அவுணரல் லாரை அந்நாள்
தன்வயிற்று அகத்து வைத்துத் தந்தது அச்சியம் தாயின். (12)

இந்தப் பகுதியில் நேர்ந்துள்ள நிகழ்ச்சிகள் அதிக பயங்கரமுடையன. தூணை பிளந்து கொண்டு நரசிங்கம் தோன்றி உக்கிர வீரபராக்கிரமங்களோடு விசுவரூபம் எடுத்து அண்ட கோளங்களும் நடுங்க ஆரவாரம் செய்து அசுரர்களை வாரி அடித்துக் கோரக் கொலைகள் புரிந்து எங்கும் பிணங்களாக வீசி எறிந்து வீரகர்ச்சனை விரிந்து வீறு மண்டிச் சீறியுலாவும் வெறறி நிலைகளை நோக்கி வெருண்டு வியந்து மருண்டு நிற்கிறோம்.

அதிசய விளைவுகள் அற்புதக் காட்சிகளா யுள்ளன.

எதிரே நின்ற தூணில் இரணியன் ஓங்கி அடித்தவுடனே அதனுள்ளிருந்து ஒரு பெரிய சிரிப்பு அரிய நிலையில் அதிர்ந்து முழங்கியது. அந்தப் பேரோசையைக் கேட்டதும் ஈசன் அருள்புரிந்தான் என்று பிரகலாதன் பேரானந்தம் அடைந்து உள்ளம் களித்துத் துள்ளிக் குதித்து ஆடிப்பாடி அழுதுதொழுது உழுவலன்போடு உருகி உலாவிப் பரவசத்தால் அவசமாய் நிலவினான். இரணியன் மானத்தால் கொதித்து வீரத்தால் துடித்தான். "யாரடா! உள்ளே யிருந்து சிரித்தது? முன்னம் கடலில் ஓடி மறைந்து ஒளித்திருந்த கள்ளமாயனோ? வெளியே புறப்பட்டு வாடா! கண்ட துண்டமாய் வெட்டி வீழ்த்துவேன்; விரைவில் வெளியேறு; பழியேறும்படி பதுங்கியிராதே" என்று அசுரவேந்தன் வீரகர்ச்சனையுடன் போருக்கு அறை கூவி ஆரவாரம் செய்யவே தூணைப் பிளந்து கொண்டு நரசிங்கம் விரைந்து வெளியே பாய்ந்து உக்கிரவீரமாயுருத்து அண்டமுகடு வரையும் நீண்டு உத்தண்ட வேகமாய் ஓங்கி நின்றது. பல்லாயிரம் கைகளும் தலைகளும் ஒல்லையில் எழுந்தன. அசுரர்கள் எல்லாரையும் வாரி எடுத்து வையத்தில் அறைந்தன; மலைகளில் அடித்தன; கடல்களில் வீசின; கண்டகண்ட இடங்களில் எல்லாம் அசுரர்

களுடைய தலைகளும் உடல்களும் முண்டங்களும் உருண்டன. யானை குதிரை தேர் காலாள் முதலிய சேனைத்திரள்கள் எல்லாம் நாசமாயின. தானவர் இனமெனத் தழைத்திருந்தவர் யாவரும் ஒரு நாழிகைப் பொழுதுள் ஊழித்தீவாய்ப் பட்ட செத்தைகளைப் போல் எரிந்து உருமாய்ந்து ஒழிந்தனர். கருவுற்றிருந்த சிசுக்களும் கழிந்து அழிந்தன. அண்டங்கள் எங்கணும் இருந்த அசுரகுலங்களெல்லாம் அடியோடு பாழாய் ஒழியவே மீண்டு நரசிங்கத்தின் கைகள் யாண்டும் தடவி நீண்ட கோபங்களோடு மீண்டு உலாவின. அந்த இனத்தைச் சார்ந்திருந்த எவரும் அஞ்சி நடுங்கி அலமந்தழிந்தனர். எங்கும் கொலைகள், யாண்டும் அழிவுகள்; எவ்வழியும் இழவுகளே பொங்கி நின்றன. யுகமுடிவு போல் அசுரகுலம் மடிந்து படவே நரசிங்கம் இரணியனை நோக்கி நேரே திரும்பியது. அவனும் யாதும் கலங்காமல் வீறோடு போராட நேர்ந்தான். உக்கிர வீரமாய்த் தோன்றியுள்ள இந்த அவதாரம் அடலாண்மைகளோடு மூண்டு அதிசய வியப்புகளை விளைத்து எவரும் துதி செய்ய நின்றது.

திசைதிறந்து அண்டம் கீறிச் சிரித்தது செங்கட் சீயம்.

தூணிலிருந்து கிளர்ந்து எழுந்துள்ள நரசிங்கத்தின் காட்சியைக் கவி இங்ஙனம் காட்டியிருக்கிறார். சீயம் = சிங்கம். அண்டமுகடு கிழிந்து திசைகள் எதிரொலி செய்யும்படி சிரித்துள்ளது என்றது அதன் உக்கிர வீர பராக்கிரம நிலை உணர வந்தது. இங்கே சிரித்தது ஏன்?

கோபச் சிரிப்பா?
இகழ்ச்சிச் சிரிப்பா?
மகிழ்ச்சிச் சிரிப்பா?
வீரச் சிரிப்பா?

நேர்ந்துள்ள சிரிப்பைக் கூர்ந்து நோக்குக.

கோரமாய்க் கொல்ல வந்தவன் ஆரவாரமாய்ச் சிரித்துள்ளது அதிசய விநோதமாய் விரிந்து நின்றது. நகையின் குறிப்பு பலவகை நிலைகளில் படிந்திருக்கின்றது.

இத் தூணினும் உளன்; காணுதி விரைவின்!

என்று இரணியனை நோக்கிப் பிரகலாதன் துணிந்து சொன்ன சொல் திருமாலுக்குப் பெருமகிழ்ச்சியை விளைத்துள்ளது.

யாதும் ஐயுறாமல் இந்தப் பையன் கூறியவாறே அந்த மெய்யன் மேவியிருக்கிறான். "அப்பா! நீ உரைத்தபடியே இதோ இங்கே உறைந்திருக்கிறேன்" என்று உவகைமீதூர்ந்து சொல்லியபடியாய்த் தன்னுடைய இருப்பை முன்னதாகச் சிரித்துக் காட்டியுள்ளான். தன்னை கருதி உருகி வந்த அன்பன் பெரிதும் மகிழ்ந்து கொள்ளும்படி உறுதிகூறி உள்ளம் தேற்றியபடியாய் இவ்வுரிமைச் சிரிப்புப் பெருகி வந்துள்ளது.

"எங்கும் உள்ளான் என்று நீ சொன்ன அவனை இந்தக் கம்பத்தில் காட்டுக! இல்லையானால் உன்னைக் கொல்வேன்" என இரணியன் சீறி மொழிந்ததை நினைந்தும் இச்சிரிப்பு எழுந்தது. அவன் சாக நேர்ந்துள்ள நிலை தெரியாமல் தருக்கி உரைத்தது சிரிப்பை விளைத்தது.

உரிய அன்பனை உவந்தும், கொடிய வம்பனை இகழ்ந்தும் நாயகன் மாயச் சிரிப்புச் சிரித்தான். தூணுள் இருந்து இந்தச் சிரிப்பு வந்ததைக் கேட்டதும் பிரகலாதன் அடைந்த மகிழ்ச்சி நிலைகள் அளவிடலரியன.

ஆடினன், அழுதான், அரற்றினன், சிரத்தில் செங்கை
சூடினன், தொழுதான், ஓடி உலகெலாம் துகைத்தான் துள்ளி.

என்றதனால் இந்தப் பிள்ளையின் உள்ளத்தில் எழுந்த பேரானந்த அலைகளை ஓரளவு ஓர்ந்து கொள்ளலாம். ஆடிப்பாடி அழுது அரற்றி ஓடித் துள்ளிச் சூடித் தொழுதது பத்தியின் பரவச நிலைகளை உய்த்துணரச் செய்தது.

தான் உறுதி மொழி கூறியபடியே பெருமான் நேரே தோன்றிப் பேரருள் புரிந்தது இப் பிள்ளைக்குப் பேரின்ப வெள்ளமாய்ப் பெருகி எழுந்தது. அங்கும் இங்கும் துள்ளிக் குதித்துக் கூத்தாடி அழுது தூணை நோக்கித் தொழுது விழுந்து உழுவலன்பால் உருகியிருக்கிறான். அரிய பத்தி பெரிய பரவசங்களாய்ப் பரவியுள்ளது. ஆன்ம அன்பு பரமான்மாவை நோக்கிப் பாய்ந்திருக்கிறது; பாயவே பேரின்பங்கள் பெருகிவந்துள்ளன. அரியது எளியதாய் இறங்கி இன்பம் பொழிந்திருக்கிறது.

தேடி நான்முகனும் காணாச் சேயவன்.
என்ன மாயவனை இங்கே இங்ஙனம் காட்டியிருக்கிறான்.

கள்ளும் பிரமாவும் தேடிக் காணமுடியாத திருமால் பிரகலாதனைத் தேடி வந்திருக்கிறான். அவன் குறித்தபடியே விரைந்து வந்து தூணுள் மறைந்துள்ள உண்மையைச் சிரித்துக் காட்டினான்.

அமரர்களும் அறிவரிய அவன் அடியவர்க்கு எளியனாய் வந்து அருள் புரிந்துள்ளமை அதிசய சிந்தனையாயது. அவனது சீர்மைக்கு எல்லை காணமுடியாதது போல் நீர்மையும் நெடிது நிலவியுள்ளது. அருமையும் எளிமையும் அளவிடலரிய பெருமை கலையுடையன. உள்ளம் உருகியுள்ள அன்பனுக்குக் கருணை வெள்ளமாயும், எள்ளி நின்ற பகைவனுக்குக் கொலலும் சிங்கமாயும் கோலம் கொண்டு வந்தவன் காலம் கண்டு சிரிக்கவே அவன் காலன்போல் கனன்று நேரே சீறினன்.

ஆரடா சிரித்தாய்? சொன்ன அரிகொலோ? அஞ்சிப்புக்க
நீரடா போதாது என்று நெடுந்தறி நேடி னாயோ?

இரணியன் இவ்வாறு ஆங்காரமாய் மூண்டு கேட்டான்.

"சிரித்த நீ யாரடா? இந்தச் சின்னப்பயல் பன்னிப் பன்னிச் சொன்ன மாயன் அடா நீ? முன்னம் எனக்குப் பயந்து ஓடிப்போய்க் கடலுள் மறைந்திருந்தாய்; அந்த இடம் போதாது என்று இன்று இந்தத் தூணில் வந்து ஒளிந்துள்ளாயோ? மறு படியும் என்னோடு போராடலாம் என்று துணிந்து நீ போந்திருந்தால் ஏன் தறியுள் மறைந்து நிற்கிறாய்! நேரே போர் புரிய வெளியே விரைந்து வாடா!" என்று வாளேந்திய கையனாய் நாள் ஏந்தி யுள்ள அவ் வெய்யவன் அறைகூவி அழைத்தான்.

புறப்படு புறப்படு என்ற அடுக்கு போருக்கு அவன் விரைந்து நிற்கும் வேகத்தை விளக்கி நின்றது. அடா என்னும் இளி விளி ஆங்காரமான இகழ்ச்சிக் குறிப்பில் எழுந்தது.

தேவர் யாவரும் ஏவல் புரிய நெடுங்காலம் தலைமையாய் ஆண்டு வருகின்றான் ஆதலால் அந்த அதிகார மமதையால் அரியை எளிதாக எண்ணி அவன் இகழ்ந்து கூறினான். அடா அரியே! வாடா! என்று கூறவே தூண் திடீர் என்று பிளந்தது; உள்ளே இருந்து நரசிங்கம் வெளியே பாய்ந்தது.

பிளந்தது தூணும் ஆங்கே பிறந்தது சீயம்;
வளர்ந்தது திசைகள் எட்டும்.

தூணிலிருந்து சிங்கம் வெளியே வந்ததும், அண்ட முகடுவரையும் வளர்ந்து அது ஆங்காரம் கொண்டு ஆர்த்து நின்ற நிலை யாவரும் அஞ்சி நடுங்கி அலமர நேர்ந்தது. பல்லாயிரம் கைகளோடு நெடிய வடிவம் கொண்டு உக்கிர வீரமாய உருத்துக் கொதித்து அசுரர் குலத்தை யாண்டும் மூண்டு அழித்தது.

சருவ சங்கார கருத்தாவைப் போல தானவர் இனங்களை அதிவிரைவில் பாழாக்கி ஒழித்து வீர காச்சனை செய்து தனது விசுவ ரூபத்தைச் சுருக்கி அந்தச் சிங்க ஏறு அசுர வேந்தன் எதிரே ஆர்த்து நின்றது. வீர நிலை வெற்றி வீறோடு விளங்கியது.

## நரசிங்கம் நின்றது

கனகனும் அவனில் வந்த வானவர் களைக ணானை
அனகனும் ஒழியப் பலவேறு அவுண ரானவரை எல்லாம்
நினைவதன் முன்னம் கொன்று நின்றது நெடுங்கட் சீயம்
வினைகழ லவனும் மற்றும் மடங்கலின் வரவு நோக்கி (1)

வயிரவாள் உறையின் வாங்கி வானகம் மறைக்கும் வட்டச்
செயிரறு கிடுகும் பற்றி வானவர் உள்ளம் தீய
அயில்படர் வேலை ஏழும் மலைகளும் அஞ்ச ஆர்த்து
உயிருடை மேரு என்ன வாய்மடித்து உருத்து நின்றான்.

நின்றவன் தன்னை நோக்கி நிலையிது கண்டு நீயும்
ஒன்றும்உன் உள்ளத்து யாதும் உணர்ந்திலை போலும் மன்றே
வன்றொழி லாழி வேந்தை வணங்குதி வணங்க வேயுன்
புன்றொழில் பொறுக்கும் என்றான் உலகெலாம் புகழ நின்றான்.

இரணியனும் அவனுடைய மகனும் தவிர அசுரரனைவரையும் ஒரு நொடியில் அடியோடு அழித்து விட்டு வீர கம்பீரமாய் ஆளரி உறுமி எதிர் வந்தது. வரவே நெடிய வாளை வலது கையில் வாங்கி இடது கையில் கேடகம் ஏந்தி அசுர வேந்தன் அமராட நேர்ந்தான். அப்பொழுது பிரகலாதன் அருகே சென்று மறுகி வேண்டினான்: "தந்தையே! இந்த வீர மூர்த்தியின் நிலையை நேரில்கண்டும் யாதும் உணராமல் மேலும்போராட முயல்வது பெரியகேடாம்; விரைந்து இறந்து படுவாய்! என்று பரிந்து வருந்துகிறேன்; சிங்கப் பெருமானை உடனே பணிந்து கொள்ளுக; இவ்வாறு வணங்கினால் நீ செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தருளும்" என்று உரிமையோடு உரைத்து நின்றான்.

[illegible] இந்த நிலையிலும் தன் தந்தையிடம் இம் மைந்தன் கொண் [illegible] அன்புரிமையும் அறிவுரையும் நம் உள்ளங்களில் உருக்கு கின்றன; உணர்ச்சிகளைப் பெருக்குகின்றன; உவகைகளை [illegible]கின்றன. கருணைப் பண்பும் தரும நீதியும் பரிவும் பாச மும் இவனுடைய உரைகள் தோறும் மருவி வருகின்றன.

வானவர் களைகணுன அனகன் எனப் பிரகலாதனை இங்கே குறித்திருக்கிறார். தானவர் குலத்தில் பிறந்தும் வானவர் 'குலங் களை யெல்லாம் வாழ்விக்க வந்துள்ளான் ஆதலால் இவன் இங் ஙனம் வாழ்த்த நேர்ந்தான். களைகண் = துணை, ஆதரவு. பொல் லாத அசுரர் அழிந்து ஒழியவும், நல்ல அமரர்கள் உவந்து வாழ வும் இச் செல்வமகன் பிறந்துள்ளமையை எல்லாரும் சிந்தனை செய்து கொள்ள இப் பேரை இவ்வாறு தந்தருளினர்.

பாபங்கள் நீங்கி ஒழியப் புண்ணியங்கள் ஓங்கி வளர்த் தோன்றி யிருக்கும் தோன்றல் ஆதலால் அனகன என நின்றான். அரிய புண்ணிய சீலன் என்பதை இந் நாமம் எண்ணி யுணர வந்தது. வீணே அழிந்து போகாதே; உணர்ந்து உய்க எனத் தன் தந்தைக்கு இம் மைந்தன் உய்தி கூறி இறுதியில் வேண்டி யிருக்கிறான்.

## இரணியனது தீரம்

அண்டங்கள் யாவும் நடுங்கும்படி ஆரவாரம் செய்து கோர வடிவம் கொண்டு அசுரர் யாவரையும் கொன்று உக்கிர வீரமாய் உருத்து நிற்கிற நரசிங்கத்தைக் கண்டும் இரணியன் யாதும் அஞ்சாமல் வாளும் கையுமாய் நேரே போராட மூண்டு நின்ற இந் நிலையை வீர உலகங்கள் எங்கும் வியந்து கொண் டாடி யுள்ளன. வீரத் திறல்கள் வியத்தகு நிலையின.

மலைகளும் கடல்களும் அஞ்ச ஆர்த்து என்றதனுல் அஞ் சாத அவனது ஆண்மைகளும் அதிசய மேன்மைகளும் அறிய [illegible]ன. பெரீய ஆரத்தனம் இங்கே பேரொலி செய்துள்ளது.

போர்புரிய மூண்டு வீர கம்பீரமாய் அவன் நின்ற நிலையைக் கவி காட்டியிருக்கும் காட்சி கண்டு அதிசய மாட்சியாயுள்ளது.

வில்லுடை மேரு என்ன உருத்து வாய் மடித்து நின்றான்.

இரணியனைக் குறித்திருக்கும் இந்தக் குறிப்பு மொழியைக் கூர்ந்து பாருங்கள். உயிருடை மேரு என்னும் இவ்வுயிர் மொழியை உணர்வு விழியால் கண்டு களிக்கலாமே யன்றி உரைகளால் விண்டு விளக்க இயலா. உணர்வுக் காட்சி உன்னத நிலையது.

மேருமலை அதிசய மகிமையுடையது; யாவரும் துதிசெய்து தொழுவது. அதன் உருவத்தோற்றம் அளவிடலரிய பெருமைகள் வாய்ந்தது. அந்த மகாமேருகிரி உயிர்பெற்று நின்றது போல் இரணியன் அன்று வெற்றி வீறோடு நின்று நிலவினான்.

சிறந்த திண்மையும் உயர்ந்த வன்மையும் எவ்வழியும் சலியாத தன்மையும் யாண்டும் நிலைகுலையாது நிற்கும் தலைமையும் பிறவும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள மேருமலை உவமையாய் வந்தது. இமயக் காட்சி இமையா நாட்டமுடையது.

அரிய பல மகிமைகளோடு மேரு எவ்வளவு பெருமையாயிருந்தாலும் அது இரணியனுக்கு நேர் ஆகாது; அது ஒருகால் உயிர் பெற்று நின்றால் ஓரளவு அவனுக்கு நேராம் என்பார் உயிருடை மேரு என்றார். அடல் நிலை கடல் மலை என நேர்ந்தது.

வாய் மடித்து உருத்து எழுந்து போர்மேல் மூண்டு அவன் கொதித்து நின்ற நிலை தெரிய வந்தது. உள்ளத்தில் பொங்கியுள்ள வெகுளி புறத்தே தோன்றி நின்றது.

"வெகுண்டோன் அவிநயம் விளம்புங் காலை
மடித்த வாயும் மலர்ந்த மார்பும்
துடித்த புருவமும் சுட்டிய விரலும்
கன்றின உள்ளமொடு கைபுடைத் திடுதலும்
அன்ன நோக்கமொடு ஆய்ந்தனர் கொளலே."

(அவிநயம்)

கோபம் மூண்ட பொழுது மனிதனிடம் தோன்றுகின்ற மெய்ப்பாடுகளை இது உணர்த்தியுள்ளது. சினத்தின் குறிப்புகளுள் வாய் இதழை மடித்துக் கடித்தல் இதில் முன்னுற வந்திருப்பது இங்கே சிந்திக்கத்தக்கது.

ஆளரியை வெட்டி வீழ்த்த விரைந்து இரணியன் வெகுண்டு மூண்டு வாளோடு தான் பெயர்ந்த பொழுது வீரர்கள் பரிந்து வந்து வணங்கி நின்று சமாதானமாய் இவ்வினை

கொள்ளும்படி இரங்கி வேண்டினன். மைந்தன் இங்ஙனம் வேண்டிய பொழுது அத்தந்தை என்ன பதில் சொன்னன்?

கேளிது நீயும் காணக் கிளர்ந்த கோளரியின் கேழில்
தோளொடு தாளும் நீக்கி நின்னையும் துணித்துப் பின்என்
வாளினைத் தொழுவ தல்லால் வணங்குதல் மகளி ரூடல்
நாளினும் உளதோ? என்னு அண்டங்கள் நடுங்க நக்கான்.

சிங்கப் பெருமானை வணங்கிவாழ்! என்று பிரகலாதன் சொன்னபோது அவனை நோக்கி இரணியன் இவ்வாறு கூறியிருக்கிறன். அந்த மன்னனுடைய உள்ளத் துணிவையும் உறுதிப் பாட்டையும் உக்கிரவீர நிலையையும் இந்த மொழிகள் தெளிவாக விளக்கியுள்ளன. "அடே! இந்த நரசிங்கத்தைக் கண்டதுண்டமா வெட்டி வீழ்த்தி உன்னையும் துணித்து ஒழித்து அதன் பின் வெற்றிக் களிப்போடு எனது வீரவாளினைத் தொழுவேன்; வணங்குதல் என்பது மகளிர் ஊடலிலும் நான் அறியேன்; யாண்டும் வணங்காமுடியனுய் வாழ்ந்து வந்துள்ள என்னையே யாரும் வணங்கி வாழவேண்டும்; பிணங்கி நின்ருல் அவர் பிணமாய் வீழும்படி நீறுசெய்வேன்" என்று வீரவாதம் கூறி வீறு மண்டி நின்றுன. அவனது மனநிலை யாண்டும் மாருமல் மூண்ட நிலையிலேயே நீண்டு நிற்கின்றது.

யாருக்கும் பணியாமல் எவ்வழியும் சலியாமல் யாதும் அஞ்சாமல் யாண்டும் அடலாண்மையோடு அவன் நீண்டு வாழ்ந்து வந்துள்ள நிலை ஈண்டு வெளியாய் நின்றது.

வாளினைத் தொழுவது அல்லால் வணங்குதல் மகளிர் ஊடல்
நாளினும் உளதோ?

வீரவாழ்வைத் தவிர வேறு வாழ்வு தனக்குத் தெரியாது என்பதை இரணியன் இங்ஙனம் விளக்கியிருக்கிறன. எதிரிகளை வென்று தொலைத்து அந்த வெற்றி வாளைத் தொழுவனே அன்றி வேறு எவரையும் வணங்கேன் என்றதில் அவனது வீரத்திறமும் விறலும் விழி தெரிய வந்தன.

எவ்வளவு பெரிய வீரரும் காதலில் தலை வணங்கி நிற்பர்; அந்த நிலையிலும் வணங்கி அறியேன் என்பான் அதனை இங்கே எடுத்துக் காட்டினன். கலவி நிலையில் காதலி பிணங்கி நின்ருல் அவள் இணங்கி வருரும்படி காதலன் வணங்கி வேண்டுவன்;

எந்த அதிசய வீரனும் இந்த நிலையில் தலைவணங்க நேர்வன். அத்தகைய நிலையிலும் வணங்காமல் தலைமையுடன் தழைத்து வந்துள்ள தனது நிலைமையை உணராதநின்றான்.

மகளிர் ஊடல நாளினும் வணங்காதவன் எனத் தனது பெருமித நிலையை இரணியன இங்ஙனம குறித்து உரைத்தான்.

"மாதா புலவியினும் வணங்காத மகுடநிரை"

என இராவணனை முன்னம * குறித்துள்ளதும ஈண்டு எண்ணத்தக்கது. இணையான துணைகள் பிணையாய நின்றன.

வணங்கா முடியா என இராவணனையும, இரணியனையும் நம் கவிஞர்பிரான எடுத்துக காட்டுபபொழுது காவியத்தில் குறித்துக் காட்டியிருக்கும காட்சிகள் கூர்ந்து சிந்திக்கவுரியன. காதலும வீரமும களி கூர்ந்து காண நேர்ந்தன.

காமககலவி நிகழும புலவியினும தலை வணஙகாதவன என அவனது வீரத்தலைமையை விளககியிருபபது வித்தக நிலையமாய் விளஙகி நிற்கிறது. "அபளித்தலத்தில அருமை மனைவியிடமும் உரிமையாய வணஙகாத நான அமர முகத்தில கொடிய பகைவனிடம சிறுமையாய வணஙக இணஙகுவேனோ?" என்று வீராவேசமாய அவன கொதித்து நகைத்தான். அந்த நகை அண்ட கோளஙகளையும எண திசைகளையும நடுங்கச் செய்தது.

பொருது மாணடது.

அகில வுலகஙகளும நடுஙக வீர காசசனை செய்து அகோர மாயக கொதித்து நின்ற நரசிஙகத்தை எதிர்த்து இரணியன் மூரமொடு போர புரிய மூண்டான. கூரிய வாளைச் சுழற்றி வெட்டி வீழ்த்த விரைந்து அவன் வெகுண்டு வரவே சிங்கப் பெருமான சீறிப் பாய்ந்து அவனைப் பீறி எறிந்தது. தலை கீழாய் நிலை குலைந்து வீழ்ந்த அவன் மாறி எழுந்து மீறி மேல் வந்தான். வரவே வாரி எடுத்துத் தரையில் வீழ்த்தித் தாளை மடுத்துக் கூரிய நகங்களால் மார்பைப பீறிப் பிளந்து பேரொலி செய்தது. உதிர வெள்ளம் பெருகிப பொங்கி அருகெஙகும் ஓடியது.

ஆயவன் தன்னை மாயன் அந்தியின் அவன்பொற் கோயில்
வாயிலின் மணிக்கவான் மேல வயிரவாள் உகிரின் வாயின்

* இந் நூல பக்கம் 3235, வரி 7 பார்க்க.

தீயெழு குருதி பொங்க வெயிலவிர் வயிர மார்பு
தீயெழப் பிளந்து நீக்கித் தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்.

நரசிங்கப் பெருமான் இரணியனைக் கொன்றிருக்கும் நிலையை இக் கவிப்படம் நமக்குக் காட்டியுள்ளது. மாலைப்பொழுதில் அரண்மனை வாசல் படியில் தன் தொடைமேல் கிடத்தி அவனுடைய மார்பைப் பிளந்திருக்கும் வீரக்காட்சியை இதில் வியந்து காண்கின்றோம். கொன்ற நிலை வென்றி வீறோடு விளங்கியது.

பகலிலும் இரவிலும் சாகாதபடி வரம் பெற்றிருந்தான் ஆதலால் அந்த இரண்டும் அல்லாத அந்திப் பொழுதில் சிங்கப்பெருமான் அவனைக் கொன்றான். மண் விண் உள் புறம் முதலிய எந்த இடத்திலும் இறப்பில்லை என்று எய்தியிருந்தமையால் அரண்மனை வாசலின் இடையே தன் தொடையில் கிடத்தி அழித்தான். வேல் வாள் முதலிய ஆயுத வகைகளால் அழிவு நேராதபடி அமைந்து நின்றமையால் கூரிய விரல் நகங்களால் மார்பைப் பிளந்து மாய்த்தான்.

எவ்வழியும் சாவு நேராமல் சூழ்ந்து இரணியன் மேவியிருந்த வரபலங்களை யெல்லாம் கடந்து அதிசயமாக அவனை மாய்த்திருத்தலால் சீய நிலையை மறைத்து மாயன் என்கு குறித்தார். யாண்டும் மாயாதவனை ஈண்டு மாய்த்திருப்பது மாயா வல்லபம் நீண்டு நின்றது. மாயன் புரிந்தது மாய வேலையாயது.

வயிர வாள உகிர் என்றது அந்த நகங்களின் வலி நிலைகளை உணர்ந்து கொள்ள. உகிர் = நகம். வச்சிரமலைபோல் வயிரம் பாய்ந்திருந்த அவன் மார்பைப் பத்தலாகப் பிளந்து கீறிக் கிளர்ந்து எறிந்திருக்கிறான்.

அமரரும் அடிதொழ அகிலமும் ஆண்டு வந்தவன் மாண்டு முடிந்தபோது வையமும் வானமும் உய்தி பெற்றனவாய் உவந்து நின்றன. துன்பம் நீங்கிய படியை இன்ப உவகைகள் எடுத்துக் காட்டின.

மனிதர் தேவர் மிருகம் பறவை முதலிய எந்த இனங்களாலும் தனக்கு அழிவு நேரலாகாதென அவன் வரம் பெற்றிருந்தான் ஆதலால் அந்த வர நிலைக்கு இழிவு நேராதபடி அரிய ஒரு உருவத்தை எடுத்து உரிய கருமத்தை ஒல்லையில் முடித்தான்.

மனித உருவமும் சிங்க முகமும் மருவி நின்றமையால்

நரசிங்கம் என வந்தான். ஆளரி, மானுட மடங்கல் என்னும் பேர்கள் வந்தன. அரிய அவதாரப் பேரா யாண்டும் மருவி புள்ளது.

யாராலும் வெல்ல முடியாத பெரிய அதிசய வீரனை இரணியனை மார்பைப் பிளந்து மாயத்துக் குடலைப் பிடுங்கி மாலையிட்டுக் கொண்டு வெற்றி வெறியோடு நரசிங்கம் வீற்றிட்டு நின்றது. கோரக கொலையோடு மருவிய வீரக் காட்சி யாரையும் வெருவச் செய்தது.

அந்த அகோர நிலையைக் கண்டு அமரர் முதலிய யாவரும் அஞ்சி நடுங்கினர். பிரமதேவர் நேரே வந்து தொழுது துதித்தார். "அகில லோக நாயக! உலகங்களைப் படைக்கும்படி என்னை முன்னம் படைத்தாய்; உன்னுடைய திருவருளால் யாவும் இயங்கி வருகின்றன. தீயோரை அழித்து நல்லோரைப் பாதுகாத்து எல்லா வழிகளிலும் தரும நீதிகளைப் பரிபாலனம் செய்தருளுகிற புண்ணிய மூர்த்தி! நீ எண்ணியபடி எய்திய இந்த வீர விக்கிரம் வடிவத்தை ஒடுக்கிச் சீற்றத்தை அடக்கியருள்", என இவ்வாறு போற்றிப் புகழ்ந்தார். அதன்பின் இலட்சுமிதேவியை ஏவினர்.

## திரு மருவியது.

உக்கிரவேகமாய் உருத்து நின்ற பெருமானருகே திருமகள் வரவே சீற்றம் தணிந்தது. ஆதரவோடு வந்த காந்தையைக் காதலோடு கனிந்து நோக்கி அவன் சாந்தசீலனாய் நின்றது அதிசய விந்தையாயிருந்தது.

பூவின் திருவை அழகின் புனைகலத்தை
யாவர்க்கும் செல்வத்தை வீடென்னும் இன்பத்தை
ஆவித் துணையை அமுதில் பிறந்தாளைத்
தேவர்க்கும் தம்மோயை ஏவினார் பாற்செல்ல (1)

செந்தாமரையப்பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை நறுந்தாழ் இளங்கொழுந்தை
மூந்தா வுலகும் உயிரும் முறைமுறையே
தந்தாளை நோக்கினான் தன்ஒப்பு ஒன்றுஇல்லாதான் (2)

தீதிலா வாக உலகீன்ற தெய்வத்தைக்
காதலால் நோக்கினன் கண்ட முனிக்கணங்கள்,
ஓதினார் சீர்த்தி உயர்ந்த பரஞ்சுடரும்
கோதிலா இல்லாத அன்பினையே நோக்கினான்

சிங்கப் பிரான் எதிரே பங்கயச் செல்வி வந்ததும்; அந்த வீரகேசரி ஆங்கார ஆரவாரங்கள் நீங்கி அமைதியாய் நின்றதும் ஈங்கு அதிசயக் காட்சிகளாய் விளங்கியுள்ளன.

மானச தத்துவங்கள் மதிநலம் சுரந்து மகிழ்ச்சிகளை விளைத்திருக்கின்றன. ஆண்மை வீறுகள் எல்லாம் பெண்மை நீர்மையில் அடங்கித் தண்மை சுரந்தருளும் என்பது இங்கே உண்மையாக ஓர்ந்து கொள்ளவந்தது.

நெருப்பின் வேகமும் நீரின்பாகமும் நேரோதெரிய நேர்ந்தன. கோபச் சிரிப்போடு கொதித்தெழுந்து அசுரவேந்தனை அழித்து ஒழித்து வீரவெறி மண்டி அகோரமாய் ஆர்த்து நின்ற சிங்கம் இந்தப் பெண் அன்னத்தைக் கண்டதும் சினமும் சீற்றமும் தீர்ந்து மனமகிழ்ச்சியுடன் அடங்கி யிருக்கிறது.

தேவர் யாவரும் அஞ்சி நின்ற அந்த அலமரல் தீரத் தேவி ஈண்டு நாயகன் பால் மேவி யிருந்ததனால் தாய்மையின் தூய்மை அன்பு துலங்கி நின்றது. தத்துவ நிலையும் உய்த்துணர வந்தது.

தாயின் துணைகொண்டு தந்தையின் அருளைப் பெற்று உலக மக்கள் உயர் நலங்களை அடைந்து வரும் அனுபவக் காட்சி இங்கே இனிது புலனுய இன்பம் தருகின்றது. சீவகோடிகளுக் கெல்லாம் தாயும் தந்தையுமா யுள்ள தேவியும் தேவனும் சிந்தனைக்கு வந்தனர். அந்த நிலையைக் கவி வந்தனை புரிந்துள்ளார்.

இராம சரிதத்துள் சீதாலட்சுமியை இடங்கள் தோறும் உவந்து புகழ்ந்து வந்துள்ள நம கவிஞர்பிரான் ஈண்டு மகாலட்சுமியை வியந்து துதித்துள்ளார். துதிமொழிகள் அழகு சுரந்து அன்பு கனிந்து அறிவுமணங்கள் நிறைந்திருக்கின்றன.

பூவின்திரு, அழகின் புனைகலம், யாவர்க்கும் செல்வம், வீடு என்னும் இன்பம், ஆவித்துணை, அமுதில் பிறந்தாள், தேவர்க்கும் தாய், நந்தாவிளக்கு, நறுந்தாழ் இளங்கொழுந்து, உலகு உயிர் ஈந்தாள் என் உளமிக உவந்து இலக்குமியை இங்ஙனம் குறித்திருக்கும் சிறப்புரைகள் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வுரியன.

செல்வத் திருவைப் புகழ்ந்து கூறக் கவித் திரு உவந்து இசைத்துள்ளது. அழகு மொழிகள் விழுமிய நிலைகளில் செழுமின.

அருமைத் தேவியைக் காணவே கொடிய கோபாவேசம் முழுதும் நீங்கியது; இனிய சீர்மை ஓங்கி யாவர்க்கும் எளியனாய் அளி சுரந்து நின்றான்.

உலகு ஈன்ற தெய்வத்தைக் காதலால் நோக்கினான்.

சிங்கப் பெருமான் தேவியைப் பார்த்திருக்கும் பார்வையை இது காட்டியுள்ளது. உரிய நோக்கில் பிரியம் மீதூர்ந்துளது.

தன் காதலியை இக் காதலன் காதலால் நோக்கவே உலகமெல்லாம் நோதல் நீங்கி உவந்து நின்றது. அன்பு நோக்கு இருவருக்கும் இன்பம் சுரந்துள்ளமையால் எங்கும் மகிழ்ச்சி பொங்கி எழுந்தது.

## பிரகலாதனுக்கு அருள் புரிந்தது

அரிய உருவம் கொண்டு அதிசய வெற்றியைக் கண்ட சிங்கப் பெருமான் அங்கே பரிவு கூர்ந்து நின்ற பிரகலாதனை உரிமையோடு நோக்கி அருகு அணைத்து முதுகு தடவி அருள் சுரந்து ஆதரவுகள் புரிந்தான்.

தன் தந்தையைக் கொன்றதை நேரே கண்டிருந்தும் யாதும் சிந்தை கலங்காமல் திருவருளை நாடி நின்ற இவனது ஞான வைராக்கியங்களையும் பத்தி நிலைகளையும் வியந்து உவந்து பரமன் பெரு மகிழ்ச்சி யடைந்தான்.

"இரணியன் தேவகோடிகளுக்கு அல்லல் பல செய்திருந்தாலும் உன்னைப் பெற்றருளிய பாக்கியத்தால் அவன் நல்ல கதியை அடைந்தான். இனிமேல் உன் வழியில் வருகின்றவர் எவராயினும் அவர்க்கு யான் யாதொரு அழிவும் செய்யேன். உன்னால் அசுரகுலம் உயர் நிலை அடைந்தது. அமரருக்கும் நீ அதிபதியாய் நிலவினை. உனது மகிமை அளவிடலரியது. உன்னை வணங்கி வாழ்கின்றவர் என்னை வணங்கி வாழ்ந்திய பயனை எய்துவர். உனக்கு வேண்டிய நலங்கள் யாவை? அவற்றை இப்பொழுதே கண்டே தருகின்றேன்; அப்பனே கேள்!" என்று பரமன் இப்படி அருள் கூர்ந்து கூறவே இப் பாலன் அன்பு மீதூர்ந்து உருகி உரையாடினான். உள்ளம் கரைந்து இவன் வேண்டியுள்ளது உயர் பேரின்பமாய் ஓங்கி நின்றது. அரிய அன்புரைகள் இனிய பண்புகள் படிந்துள்ளன.

*முன்பு பெறப்பெற்ற பேறே முடிவில்லை*
*பின்பு பெறும்பேறும் உண்டோ? பெறுகுவெனேல்*
*என்பு பெறாத இழிபிறவி எய்தினும் நின்*
*அன்பு பெறுகை அரும்பேறு எனக்கென்றான்.*

உனக்கு என்ன வேண்டும்! தேவையான வரங்களை வேண்டிக் கொள் என்று சிங்கப் பிரான் அருளுரிமையோடு வேண்டிய பொழுது பிரகலாதன் இவ்வாறு வரம் வேண்டியிருக்கிறான். ஈசன் எதிரே பேசியுள்ளது தேசு நிறைந்து மிளிர்கிறது.

"நான் இனிமேல் பெறவேண்டியது யாதும் இல்லை; எல்லா மகிமைகளையும் உன் திருவருளினால் முன்னமே அடைந்திருக்கிறேன். மேலும் ஏதேனும் அருள வேண்டும்' என்று ஆண்டவனுக்கு ஆவல் இருந்தால் நான் எந்த இழிந்த பிறவியை யடைந்து எடுத்தாலும் உன்பால் அழுந்திய பத்தி மாத்திரம் வழுவாமல் இருக்கவேண்டும், அதுவே எனக்கு அரிய பெரிய பேறும்" என இக் குலமகன் கூறியிருக்கிறான்.

என்பு பெறாத இழி பிறவி என்றது புழுவினை.

எலும்பு இல்லாத உடலை யுடைய கிருமி கீடங்கள் மிகவும் தாழ்ந்த பிராணிகள் ஆதலால் அவை இழிபிறவி என நேர்ந்தன. சிறகு கால்களையுடைய பறவை விலங்குகள் பறந்து விரைந்து செல்வன. புழு ஊர்ந்து செல்வது. புற உதவி இல்லாதது. வெயிலில் அகப்பட்டால் காய்ந்து துடித்துக் கடிதுசாம்; எறும்புகளும் கடித்துக் கொல்லும். இவ்வாறு எவ்வழியும் பரிதாப நிலையில் உள்ளது ஆதலால் புழு இழி பிறவி என வந்தது.

அந்த இழி பிறவியை அடைந்தாலும் ஈசன்பால் அன்பு இருந்தால் அதுவே தனக்குப் பேரின்ப முத்தி என்று பிரகலாதன் ஈண்டு வேண்டியிருக்கிறான்.

*"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே*
*வழுவா திருக்க வரம்தர வேண்டும்இவ் வையகத்தே*
*தொழுவார்க்கு இரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்*
*செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே."*

(தேவாரம்)

அப்பர் இவ்வாறு ஈசனை நோக்கி வேண்டியிருக்கிறார்.

"மலாதலை உலகத்துப புலமை சானற
பதினமரும பணித்த பாடல் ஓதையொடு
முதுமறை கறஙக முரசம ஆர்பப
வலமபுரி பிளிறும் பொலமபுரி கோயில
ஆழியஞ் செல்வ! ஆதியம பரம!
வாழி வாழி மாயோய வாழி
நெடியோய வாழி நினமாட்டு ஒனறை
அடியேன வேணடுவது அஃது நீ மறுககேல
பூவரும அயனமுதல யாவரும அறியா
மூவுல களநதனை சேவடி வாழததித
தொழுதகைத தொணடாதம தொணடருள சோககரது
எழுவகைத தோறறததது இனறுப பிறபபின
எனபுஒழி யாக்கையுள சேரபபினும அவாபால்
அனபுஒழி யாமை அருளமதி எனககே"
(திருவரஙககலமபகம)

நான புழுவாயப் பிறந்தாலும் உன அடியாாபால் அன்பு நீங்கா திருக்குமபடி எனக்கு அருளபுரிக என மணவாளதாசா இவ்வாறு அரங்கநாதனை வேண்டியுள்ளாா.

"எனபு பெருத இழிபிறவி எயதினும் நின அனபு பெறுகை அரும்பேறு" எனறு பெரும பரிவோடு பிரகலாதன வேண்டியுளளதை அடியொறறி இது வநதுள்ளது.

உனக்கு என்னவரம வேன்டுமோ அதனை வேண்டிக் கொள என்று காரைககால் அம்மையாரை நோக்கி இறைவன் வேண்டினை அப்பொழுது அந்த அமமை வேண்டிக் கொண் டது ஈண்டு அறிய வுரியது; அயலே வருகின்றது:

"பிறவாமை வேணடும, மீணடும பிறபபுஉண்டேல உனனைஎன மறவாமை வேணடும" [றும

என இங்ஙனம் அவர் வேண்டியிருக்கிருர்.

ஒன்றிய பிறவிக்குப் பயன் என்றும் பிறவாதவனை மறவா மையே யாம்; அவனை நினைந்தவர் நித்தராய் உயர்கின்ருர்; மறந்தவர் மத்தராய் இழிகின்ருர்.

"ஒழியாப பிறவி எடுத்தெடுத்து ஏங்கி உழன்றநெஞ்சே!
அழியாப் பதவிக்கு அவுடதம கேட்டி அருணையின் •
மழுமான் கரத்தனை மால்விடை யானை மனத்தில் உன்னி
விழியால் புனலசிந்தி விம்மிஅழுநன்மை வேண்டும் என்றே;

ஈசனை நினைந்து உருகிவரின் பாசம் கழிந்து பரமானந்தம் வரும் எனத் தம் நெஞ்சை நோக்கிப் பட்டினத்தார் இப்படிப் பாடியிருக்கிறார். உண்மையான உய்தி நிலை உணர வந்தது.

பரமன் பால் அன்பு படிந்து வரின் அதுவே பேரின்ப மூத லியாம் ' எனப் பத்தர்கள் எல்லாரும் பரவசமாய்த் துதித் துள்ளனர். உயிர் உருகிவரின் உயர்பரமாய்ப் பெருகி வருகிறது.

எந்த இழிபிறவி நேர்ந்தாலும் உன்பால அன்பே எனக்கு வேண்டும்; வேறுயாதொன்றும் வேண்டாம் எனப் பிரகலாதன் கூறவே பெருமான் பேரருள் கூர்ந்து அவனை ஆரத்தழுவி என்றும் நித்திய ஆனந்தனய் என்போல் இருந்தருளுக என மகிழ்ந்தருளினன். ஆண்டவன் அருளியது அதிசய இன்பமாயது.

## முடி சூடியது.

"அசுரர் அமரர் யாவரும் உன்னைத் துதிசெய்து வருவர். எல்லா மேன்மைகளும் நீ கருதியபடியே இனிது நடைபெறும்; யாண்டும் பெருமகிழ் வுடையனய் வாழ்ந்து வருவாய்!" என வாழ்த்தியருளி மூவுலகங்களுக்கும் அதிபதியா அரசுரிமை நல்கி அமரர் கணங்கள் புடைசூழத் தன் கையாலேயே முடி சூட்டிப் பிரகலாதனைப் பேரரசாக்கிப் பெருமான் பெருமகிழ்வடைந்தான்.

தேவா முதல் யாவரும் உவநது புகழ்நது உரிமை கூர்ந்து வர அரிய பல பெருமைகளோடு இவன் சிறந்து விளங்கினன்.

நல்லறமும மெயமமையும நானமறையும நலலருளும
எல்லையில ஞானமும ஈறிலா எபபொருளும
தொல்லைசால எணகுணனும நினசொல தொழிலசெயக,
வல்லஉரு ஒளியாய நாள வளாகநீ. (1)

என்று வரமஅருளி எவவுலகும கைகூபப
முன்றில் முரசம முழங்க முடிசூட்ட
நின்ற அமரா அனைவீரும நோநதிவனுககு
ஒன்று பெருமை உரிமை புரிகெனறுன. (2)

தேமன் உரிமை புரியத் திசைமுகததோன
ஓமம இயறற உடையான முடிசூடடக
கோமன் ஊவனுகி மூவுலகும கைக்கொணடான
நாம மறைநூதாது ஓதி நனி யுயாநதான. (3)

(இரணியன்வதை, 173-175)

திருமால் பிரகலாதனுக்குப் பேரருள் செய்துள்ள நிலைமைகளை இவை உணர்த்தியுள்ளன. பொருள் நலங்களை ஊன்றி யுணர்ந்து கொள்க. இவ்வாறு திவ்விய மகிமைகளை அடைந்து எவ்வுலகும் புகழ இக் குலமகன் உயர் நிலையில் ஒளி மிகுந்து வாழ்ந்து வந்தான். பெரிய கீர்த்திகள் யாண்டும் பெருகி நின்றன.

தெளிந்த ஞானமும் தோய்ந்த பத்தியுமுடைய இவ்வுத்தமன் சரிதத்தில் அரிய பல தத்துவங்கள் மருவி யிருக்கின்றன. இவன் பொருட்டுப் பகவான் நேரே தோன்றி அருள் புரிந்துள்ள காட்சி அதிசய மாட்சியாயுள்ளது.

தசாவதாரம் என ஒருதொகையாய் இசைந்து பிரசித்தி பெற்றுள்ள திருமாலின் கருணைத் தோற்றங்களுள் இந்த நரசிங்க அவதாரம் நான்காவதாய் வந்தது.

"மீனம் ஆகியும் கமடம் ஆகியும் மேருவை எடுக்குந்தாள்
ஏனம் ஆகியும் நரவரி ஆகியும் எண்ணருங் குறளாயும்
கூனல் வாய்மழுத் தரித்தகோ வாகியும்அரக்கரைக்கொலைசெய்த
வான நாயகன் ஆகியும் நின்றமால் மலரடி மறவேனே."

(பாரதம்)

அவதார நிலைகளை இவ்வாறு வரிசைப் படுத்தித் துதிசெய்துள்ளனர். இத் துதியுள் ஏழு வந்துள்ளன.

| | |
|---|---|
| மீனப் பெருமாள் | (1) |
| கூர்மப் பெருமாள் | (2) |
| வராகப் பெருமாள் | (3) |
| நரசிங்கப் பெருமாள் | (4) |
| குள்ளப் பெருமாள் | (5) |
| பரசுப் பெருமாள் | (6) |
| வீரப் பெருமாள் | (7) |
| வெள்ளைப் பெருமாள் | (8) |
| கள்ளப் பெருமாள் | (9) |
| கலிப் பெருமாள் | (10) |

என இப்படிச் செல்லமாக அவதாரமூர்த்திகள் சொல்லப் பட்டுள்ளனர். இங்கே தோன்றியுள்ள இந்த நரசிங்க மூர்த்தி

னேக் குறித்து மேலோர் பலரும் நூல்களில் புகழ்ந்திருக்கின் றனர். சில நிலைகளை அயலே காண வருகிறோம்.

"செயிர்தீர் செஙகட் செலவ! நிறபுகழப
புகைந்த நெஞசிற புலாநத சாநதிற
பிருஙகலாதன பலபல பிணிபட
வலாந்துழி, மலாநத நோயகூா கூமபியநடுககதது
அலாநத புகழோன தாதை ஆகலின
இகழவோன, இகழா நெஞசினன ஆகநீ இகழா
நனறு நடடவன நனமாாபு முயஙகி
ஒனறு நடடவன உறுவரை மாாபில
படி மதம சாமப ஒதுஙகி
இனனல இனனரொடு இடிமுரசு இயமப
வெடி படா ஒடிதூண தடியொடு
தடிதடி பலபட வகிாவாயதத உகிரினை" (பரிபாடல், 4)

இளவெயினனாா எனனும சஙகபபுலவா இஙஙனம பாடி யிருக்கிறாா. பிருங்கலாதன் எனறது பிரகலாதனை.

பெற்ற மகனைப பெருநதுயர் செயத இரணியனை வதைக்கத தூணிலிருநது தோனறி எழுநது அவனுடைய மார்பைப்பிளநது மன்னுயிா புரநத மாட்சியை இது காட்சியாக் காடடியுள்ளது.

"இரணடுஉடல ஒனறுயக கரைநது கணபடாமல
அளவியல மணநிலை பரபபும காலம
தனைகரை கடநத காமக கடலுள
புலநுணிப பனிஎன மனனுதல இனறிப
பீரம் மலாநத வயாவுநோய நிலையாது
வனைகாய விடட புளி அருநதாது
செவவாய திரிநது வெளவாய பயவாது,
மனைபுகை யுணட கருமண இடநது
பவள வாயிற சுவை காணுது,
பொற்குட் முகடடுக கருமணி அமைத்தெனக
குஙகுமக கொஙகையும தலைககண கறுது,
மலா அவிழந்த தாமரைக கயல்என
வரிகொடு மதாதத கணகுழி யாது,
குறிப்டு திஙகள ஒருபதும புகாது,
பொன்பெயர் உடையோன தன்பெயர் கடுப்பத்
தூணம் பயந்த மாணமர் குழவி." (கல்லாடம், 5)

பிள்ளைப் பேற்றுக்கு உரிய குறிகள் ஒன்றும் இல்லாமல், பத்து மாதமும் செல்லாமல் தூண் பெறப்பெற்றெடுத்த மாண்மிகு ஆண்குழந்தை என நரசிங்கத்தைக் குறித்துக் கல்லாடர் இவ்வாறு சொல்லியுள்ளார். உரைகளின் அழகுகளைக் கூர்ந்து நோக்கிப் பொருள் நிலைகளை ஓர்ந்து கொள்க. இலக்கிய உணர்வில் எவ்வளவு சுவைகள் சுரந்து வருகின்றன!

மாதம்பத்துக் கொங்கையும் அல்குலுந்தேரும் வயிறும் இல்லை
மாதம் பத்துக் குறியும் கண்டிலேம் வந்து தோன்றினையே
மாதம்பத்துக்கு எந்திரமாரப்பா! அரங்கத்து வாழ் பரந்தா
மா! தம் பத்துக் கருத்திலலார் பிறப்பு என்பார் வையகத்தே.

(திருவரங்கத்தந்தாதி)

இது போலே குறித்த கல்லாடச் செய்யுளை அடியொற்றி வந்துள்ளது. பத்துமாதம் சுமந்து சூல் உளைந்து வயாவும் வருத்தமும் மருவி உன்னை ஒருத்தியும் பெறவில்லை, தூணிலிருந்து அதிவிசித்திரமாய்த் தோன்றினாய்! உனது அவதார மகிமை அறிய அரியது என இங்ஙனம் பரிவு கூர்ந்து பாடியுள்ளார்.

இடித்தசைத்து ஓர் அசனி என்ன எற்றுழுவலிக் கனகன் சீறி
அடித்த தூண் தந்து நின்றும் ஆடகப் பசும்பொன் அண்டம்
வெடிப்பமால் வரைப்பனிப்ப வெடிபட நகைத்து வெய்தின்
வடித்தபூந் துளவ மாலை வாளரி முளைத்த தம்மா (1)

மருப்பிளம் திங்களன்ன வாளுகிர் நுதியின் மாயன்
சிரிப்பினமா மலர்க்கண் சேந்து தீப்பட நோக்கும் நோக்கின்
நெருப்புவாய் உமிழ்ந்த மின்னின் நிழன்று நெய்ம்முகம் மணிந்த
அரத்தவேல் அவுணர் எல்லாம் ஆருயிர் தொலைந்து சாய்ந்தார்.

கழைசுளி களிறனைனை கவானிடைக் கிடத்தி மாலைக்
குழவிவெண் திங்கள் அன்ன கூருகிர் நுதியிற் பைந்தேன்
பொழிமலர் அலங்கல் மார்பம் போழ்ந்து செங்குருதி பூசி
வழிபசுங் குடர்மென் கண்ணி ஆளரி வனைந்த தன்றே. (3)

(பாகவதம்)

இரணியனுடைய நெஞ்சைப் பிளந்து குடலை மாலையாகச் சூடிய கோலத்தை இது காட்டியுள்ளது. ஆள் அரி = நரசிங்கம்.

பளளியில் ஓதி வந்ததன் சிறுவன்
வாயில் ஓராயிர நாமம்
ஒள்ளிய வாகிப் போதஆங்கு அதனுக்கு

ஒன்றுமோர் பொறுப்பில ணுகிப்
பின்னையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்பப்
பிறையெயிற் றனல்விழிப் பேழவாய்த்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவைத்
திருவல்லிக் கேணிக் கண்டேனே.
(பெரிய திருமொழி)

தன பெயரை ஒதிய பிளளையைக காககத் தூணில தோன றிய பெருமாள் எனத திருமாலின அருள் நிலையைத திருமஙகை யாழ்வாா இங்ஙனம் துதிததிருககிறுா.

"ஒணகதிா பரபபும செஙகதிாக கடவுள
வெயில்கணடு அறியா வீஙகிருட பிழமபிற
புயலகண படுககும பூநதண பொதுமபில
காவலாப பயநது பாதபதது ஒதுஙகிய
இருவேறு உருவிற கருவிரல மநதி
பொனனிறம பழுதத பூஞசுளை வருககை
முனனுறக காணடலும முளைஎயிறு இலஙக
மடிததலதது இருததி வகிாநது வளஉகிரால
தொடுததபொற சுளைபல எடுததுவாய மடுபபது
மானிட மடஙகல தூணிடைத தோனறி
ஆடகப பெயரின் அவுணனமாாபு இடநது
நீடுபைங குடரின நிணஙகவாநது உணடென
இறும்பூது பயக்கும நறுமபணை மருததது."
(திருவாரூா நானமணிமாலை, 5)

மநதி பலாபபழததைப் பிளநது அதன சுளைகளை எடுதது வாய் மடுததது, நரசிஙகம இரணியன மாாபைக கிழிததுப் பசிய தசை குடர்களைக் கவாந்தது போலிருந்தது எனக் குமர குருபரர் இதில் குறித்திருக்கிறார்.

ஒரு சோலையுள் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சி கவியின கற்பனைக் காட்சியோடு கலந்து அற்புத அழகு பொலிநது அதிசய இன் பம் சுரந்து இங்ஙனம் மதி நலம் விளைந்துள்ளது. கவிகளுடைய மொழிகள் வழியே அறிவின் சுவைகள் பெருகி வருகின்றன. ஓர்ந்து நுகர்ந்து வருபவர் உயர்ந்த அறிவும் சிறந்த பண்பாடு மும் சேர்ந்து திகழுகின்றனர். ஓராதார் வேறுகின்றனர்.

வலிமி லன்று தந்தை செற்ற மைந்தனுக்கு வந்தபோர்
கலியெலாம் அகற்று நாமம நாலிரண்டு எழுத்துடன்
பொலியு நாம மறைகள சொன்ன பொருள விளக்கு நாமமுன்
கலியன் எங்கள மஙகை யாதி கண்டு கொண்ட நாமமே.

(பாரதம)

நமபெருமாள எழுத்து எட்டின் பெருமை நவிலுமதோ
சமபரன் மாயப புரோகிதா சூழவினை தாரணிவாள
ஒவமபடை மாசுணம மாமத வேழம விடமதழலகால
அமபர மேழுத லானவை பாலனுககு அஞசினவே.

(திருவரஙகத்து மாலை)

நாராயணு என்னும் நாமததை உச்சரித்து எல்லா இடும்பைகளும் நீங்கிப் பிரகலாதன இனபம அடைநதுள்ள நிலையை இவை வியநது புகழநது உவநது கூறியுளளன.

ஞானம் பததிகளில் தலை சிறந்து அதிசய நிலையில் ஒளி மிகுந்திருநத இக் குலமகன சரிதம தெய்வக காடசியை நினைவுறுத்தி உலக மக்களுககு உயா நலஙகளை உதவி வருகின்றது.

## இறுதியில் இசைததது.

இரணியனுடைய பான்மை மேனமை ஆடசி மாட்சி ஆண்மை வீரம முதலிய நிலைகளையெல்லாம் எடுத்துக் காட்டி அததகைய பெரிய சககரவாததியும வேத விதி கடந்து நீதி முறை வழுவி நெடிது செருக்கி நினறமையால அடியோடு அழிந்து போனன, இதனைக கருதி யுணாநது உளளம திருந்தி நீங்கள் நலல நெறியில் நடநது கொளள வேண்டும என இராவணனை எதிரே நினறு வீடணன இவவாறு விநயமாய வேண்டி மொழிந்தான்.

ஈதாகும முனநிகழநதது எமபெருமான! எனமாறறம
யாதானும ஆக நினையாது இகழதியேல
தீதாய விளைதல நனி திணணமெனச செபபினன
மேதாவிகட கெலலாம மேலாய மேனமையான

அண்ணனை நோக்கித் தமபி மறுகி மொழிநதுள்ள மறுக்கங்களை இநத இறுதி மொழிகளில் கண்டு இரங்கி நிற்கிறோம்.

ஈது ஆகும் முன நிகழ்ந்தது என்றது இதுவரை தான் கூறி வந்த சரித விரிவுரைகளை எல்லாம் பொறுதியோடு கருதியுணர.

"உன்னைக் காட்டிலும் எல்லா வழிகளிலும் எவ்வளவோ உன்னத நிலையில் உயர்ந்திருந்த இரணியன் நெஞ்சம் செருக்கி நெறி கடந்து நின்றதால் அவமே அழிந்து ஒழிந்தான். நிலைமை களை நன்முகச் சிந்தனை செய்து நோக்கி உடனே இராமபிரானோடு சமாதானமாய் இசைந்து நடந்து கொள்ளுவது நல்லது. இல்லையேல், அல்லலும் அழிவும் எல்லையில்லாதனவாய் விளைந்து விடும். விளைவுகளை நினைந்து என் உள்ளம் உளைந்து படுகிறது; உடன் பிறப்பின் பாசம் உயிரை உருக்குகிறது; நம் குடியும் குலமும் துயரம் அடையாதிருக்கும்படி உறுதியான உபாயத்தை ஒல்லையில் செய்தருளுக!" என உரிமையுடன் வேண்டினான்.

எம்பெருமான்! என இராவணனை இங்கே தம்பி அன்புரிமையோடு விளித்திருக்கிறான். தெய்வ மரியாதை இந்த மொழியில் ஒளிபுரிகின்றது. தாயும் தந்தையும் தெய்வமும் நீயே என முதலில் மொழிந்து தொடங்கினான், முடிவில் இங்ஙனம் குழைந்து கூறினான். தமையன் பால் கொண்டுள்ள அன்பும் பணிவும் உரைகள் தோறும் வெளிவந்துள்ளன. உரிய ஆர்வமும் உறு அவலமும் உள்ளத்தை வருத்தி வருகின்றன. திவ்விய மகிமைகளோடு வாழ்ந்து வருகிறவனுடைய வாழ்வு பாழாய் அழிந்து போக நேர்ந்துள்ளதே! எனனும் கவலை நெடிது பாய்ந்திருக்கிறது. அழிவு நேராவகை அறிவு போதித்து வருகிறான். போதனையில் சாதனைகளோடு வேதனைகளும் விரவி நிற்கின்றன.

தீதாய் விளைதல் நனி திண்ணம்

நிலைமைகளை ஓர்ந்து நெஞ்சம் திருந்தி உடனே சீதையை விட்டு விடுவதே நலம்; விடாமல் செருக்கி மீண்டும் பகைமையை வளர்த்து நின்றால் அடியோடு அழிந்து போவது உறுதி என்பதை இங்ஙனம் உணர்த்தியிருக்கின்றான்.

எதிர்கால விளைவுகளை எண்ணி வருந்தி அண்ணன் உய்தி பெறும்படி ஆர்வம் மீதூர்ந்து ஆதரத்தோடு பேசியுள்ளமையால் இத் தம்பியின் பரிவும் பண்பும் அறிவும் அயலறியவந்தன

மேதாவிகட்கு எல்லாம் மேலான மேன்மையான்.

வீடணனை இவ்வாறு இங்கே குறித்துக் காட்டியிருக்கிறார்.

அரிய ஒரு இதிகாசத்தை எடுத்துக்காட்டி இதமாய் உரையாடி வந்தவன் பெரிய ஒரு அறிவாளி என்பதை உரிமையோடு கவி உணர்த்தி யிருப்பது உவகை தருகின்றது.

மேதை = பேரறிவு. அதனை யுடையவன் மேதாவி.

அரிய கலைகளைக் கற்றுள்ள பெரிய மேதாவிகளும் வியந்து போற்றத்தக்க பேரறிவாளன் என வீடணனை இங்கே பாராட்டியருளியது இவனது ஞான சீலங்களை நனகு கருதி.

பேதையாய்க் காமம் பிடிததுப பிழையாய இழிந்து போகாதே என அரசனுக்கு உழையிருநது உறுதி கூறினவன் உயர்ந்த மேதை என்பது ஈண்டு உணர வநதது.

தனக்கும் தன் குலததுககும் அல்லலை விளைத்துப் பழி பாவங்களைவளாதது இழிநது அழிநதுபோவது பேதைமையாம் என அண்ணனுக்கு இடித்து அறிவு கூறி யிருநதலால் இத் தம்பி பெரிய மேதையாய மேன்மை பெறறு நின்முன்.

இரணியன் சரிதம வால்மீகததில இல்லை. நம் கவியின் அதிசய சிருட்டியாய்க் காவியததில் ஓர் சீவிய ஓவியமாய இது துதிகொண்டுள்ளது. அசுரவேநதன அகம செருக்கி அழிந்து போனதை அரக்கர் வேநதனுக்கு இம மேதை இதமாய் எடுத்துக் கூறியும அவன யாதும தேராமல் மதம மீறி மாறாய் மறுத்து வெறுததான. ஞானமுடையவனது நலல உறுதி மொழிகள் ஊனமுடையவனுக்கு உதவாமல போயின.

## இராவணன் இகழ்ந்தது.

இரணியனுடைய பெருமைகளையும, அகம்பாவத்தால் அவன அழிந்து போயுளள நிலைகளையும் குறித்துக் காட்டி வீடணன தரும நீதிகளைப போதிததும இராவணன் போதம் படியாமல் எதம்படிந்து இகழ்ந்து கனன்றான்; அன்புரிமையோடு அறிவு கூறிய தம்பியை அவமதிதது வைதான். உண்மையை உணராநது தெளிவான என்று இவன் பரிநது மொழிந்த உரைகள் அவனுக்கு விபரீதமாய் விரிநது தோனறின.

இரணியன் என்பவன எமம ஞேரினும
மரணியன அவன்தனை முறுக்கி முற்றினன்

ஆரணியன் என்றவற்கு அன்பு பூண்டனை
மூரணும்என்று ஒருபொருள் மாற்றும் வன்மையோய்! (1)

ஆயவன் வளர்த்ததன் தாதை ஆகத்தை
மாயவுன் கல்விய முகிழ்ந்த மைந்தனும்
ஏயுநம் பகைஞனுக்கு இனிய நண்புசெய்
நீயுமே நிகர்பிறர் நிகர்க்க வல்லரோ? (2)

பாழிசால் இரணியன் புதல்வன் பண்பெனச்
சூழ்வினை முற்றியான் அவர்க்குத் தோற்றபின்
ஏழைநீ எனபெரும் செல்வம் எய்தியபின்
வாழ்வோ கருத்து! அது வரவற் றுருமோ? (3)

நண்ணினர் மனிசரால் நண்பு பூண்டனை
எண்ணினை செய்வினை என்னை வெல்லுமாறு
உன்னினை அரசின்மேல் ஆசை ஊன்றினை
திண்ணிதுன் செயல்பிறர் செற்றார் வேண்டுமோ? (4)

அன்று வானரம் வந்தும் சோலையை அழிப்பக்
கொன்று தின்றிடு மின்னென்ற தூதரைக் கோறல்
வென்றி அன்றென விலக்கினை மேல்விளைவு எண்ணித்
அன்று தாரவன் துணையெனக் கோடலே துணிந்தாய்! (5)

அஞ்சினை ஆதலின் அமரக்கும் ஆளலை
துஞ்சென மனிசரால் வைத்த சாரபின்
வஞ்சனை மனத்தினை பிறப்பு மாற்றினை
நஞ்சினை யுடன்கொடு வாழ்தல் நன்றரோ? (6)

பழியினை உணர்ந்துயான் படுக்கிலேன் உனை
ஒழிசில புகலுதல் ஒல்லை நீங்குதி
விழிஎதிர் நிற்றியேல் விளிதி என்றனன்
அழிவினை எய்துவான் அறிவு நீங்கினன். (7)

(விபீடணன் அடைக்கலப் படலம்)

உள்ளம் இரங்கித் தனக்கு மதிநலம் கூறிய தம்பியை எள்ளி இகழ்ந்து இராவணன் இங்ஙனம் இழிமொழி பாடியிருக்கிறான்! அவனுடைய செருக்கும் சினமும் எதையும் மதியாதபடி மதமேறி மாறுபாடு மண்டித் தீது மீறியுள்ளன.

# 7. இராமன்

நெஞ்சம் தெளிந்து நேராய் வருவான் என்று எடுத்துக் காட்டிய இதிகாசம் அவனுக்கு மாறாய்க் கடுப்பை மூட்டியது. "இரணியனை என்னினும் வலியவன்; அதிசய வீரனை அந்த அசுரர் வேந்தனைத் திருமால் கொன்று தொலைத்தான். அம் மாயனே இராமனாய் ஈண்டு வந்துள்ளான். அவன் என்னைக் கொல்லுவான்; நான் இறந்து போவேன்; அதன் பின் என் அரசினை நீ ஆளலாம்; பெற்ற தகப்பனைக் கொன்று பேரரசைக் கவர்ந்து கொண்ட அந்தப் பொல்லாத பையனை நீ ஒத்திருத்தலால் அவன்பால் பற்று மீக்கொண்டாய்; உற்ற அண்ணனை ஒழித்து விட்டு உரிய அரசை ஆளலாம் என்று நீ பேராசை பூண்டிருக்கிறாய்; ஆ! உன் எண்ணம் எவ்வளவு கொடியது! வஞ்ச நெஞ்சனே! நீ மிகவும் தீயவன், உன்னைவிடக் கொடிய சத்துரு எனக்கு யாரும் இலர். என் குல விரோதியான இராமன்பால் பேரன்பு கொண்டு பிதற்றி வருவதற்கெல்லாம் காரணம் கண்டு கொண்டேன். முன்னே இங்கு வந்து அரக்கர் பலரைக் கொன்று ஊரில் தீயை வைத்துத் தீமைகள் பல செய்த அந்தத் தீய குரங்கைக் கொன்று தொலைக்கும்படி நான் சொன்ன பொழுது இடையே நீ புகுந்து தடை செய்து நீக்கினாய். தூதரைக் கொல்லுதல் பாவம் என்று பெரிய நீதிமான் போல் வாதாடி அந்த வானரத்தை வெளியே விட்டு விடும்படி செய்த உன் கள்ளச் சூழ்ச்சி இப்பொழுது தான் தெரிய வந்தது. எதிரிக்கு இதமாய் இருந்து இங்கே கரவாய்க் கேடு புரிந்து வருகிறாய்! நீ கொடிய ஒரு உட்பகைவன். வஞ்சகனே உன்னோடு கூடி வாழ்வது நஞ்சைக் குடிப்பது போலாம். உன்னைக் கொன்று தொலையாமல் பழி என்று கழிய விட்டுள்ளேன். இனிமேல் என் முகத்தில் விழியாதே; விரைந்து ஒழிந்து போய் விடு!" என இங்ஙனம் ஆவேசமாய்ச் சினந்து பேசினான்.

நல்ல அறிவு நலங்களை அருளும் என்று தம்பி எடுத்துக் காட்டிய இதிகாச வரலாறு இராவணனுக்குப் பெரிதும் மாறான எண்ணங்களையே விளைத்தது. அவனுடைய உள்ளக் கருத்தையும் உணர்வுறுதிகளையும் ஒரு சிறிதும் உணராமல் எள்ளல் வழிகளிலேயே இழிந்து நின்றான். அருமைத் தம்பியை இகழ்ந்து சிறுமை பல பேசிச் சீறி வைது செயிர்த்து வெறுத்தான்.

*பாழிசால் இரணியன புதலவன பணபுள்ள*
*வாழுவோ கருதது!*

தன தமபியை நோககி இராவணன இவவாறு உறுமியிருக கிறுன. "மாயனே வலித தன தநதையைக கொன்று அரசைக கவாநதுகொணட அநதப பிரகலாதனைப போல இராமனைத துணைகொணடு எனனைக கொனறுவிடடு எனது அரசாடசியைப பெறறு வரிசையோடு வாழலாம எனறு பேராசை உன உளளே பெருகி யிருககிறது. கள்ள ஆசை மணடிய அநத உளளககருதது ஒருபோதும நிறைவேருது, இதனை உறுதியாகக கருதிக கொள" எனறு உருதது உரைததுளளான. அது வர வறுருகுமோ? எனறது நீ கருதியபடி அவ வாழவு வராது என பதை வலியுறுததவநதது

ஏழை நீ எனறது அறிவு இலலாதவன, அரச திரு இலலா தவன என இழிவா இகழநதபடியாம மகா மேதையைப பேதை எனறு பிழையாயப பேசியது அவனது இழிநிலையையும பழி விழைவையும கழி செருககையும வெளியறியச செயதது

அரிய பெரிய செலவன, அதிசய மதிமான எனத தனனை எணணித தருககி இறுமாநதிருததலால அநத அணணன இநதத தமபியை இனனவாறு இளிததுப பேசினுன.

பாழிசால என இரணியனை மதிததுப போறறி யிருககிறுன. பாழி=வலிமை பேராறறலுடைய அசுரேசனை ஓராறறலும இலலாத பிளளை மாருயக கள்ள மாயனைத தூணடிக கொலலச செயதது போல எனனை நீ அழிககமூணடுளளாய! உனனை அழிதது ஒழிககாமல ஈணடு நான பொறுமையோடு வைததுக கொணடுளளேன, மேலும பொறுததிரேன, அயலே போயத தொலை! எனறு வெறுததிருககிறுன.

உயதி தரும எனறு நலல நோககததோடு வீடணன எடுத துககூறிய இரணியன சரிதம இராவணனுககு முரணாய மூணடு மேலும கோபததையே மூடடி ஆபததை நீடடியுளளது.

இரணியனபால பிரியமும, பிரகலாதன மேல வெறுபபும பெருகியுள்ளன. உரிய மகனுயிருநதும் அரிய தநதையைக கொல லச்செய்தானே! அவன் பெரியபாதகன என இராவணன் கடு மையாக அம்மகனை இகழநதிருககிறுன.

மைநதனும நீயுமே நிகா

பிரகலாதனையும வீடணனையும இவவாறு ஒரு நிலையில நிறுததிச சோடி சேரததிருககிறுன. ஏகாரம பிரிநிலை. பிறா எவரும அவனுககு நிகராகாா, நீ ஒருவனே எவவகையிலும நோ ஆவாய என[ச] சீரீக நிநதனை செயதுளளான. இகழசசிக குறிபபோடு இலஙகை வேநதன நிநதிததிருபபது சிநதிககவநதது. தனககுக கொடிய பகையாளி எனறே தமபியை அவன முடிவு செயது கொணடான.

"அவன பெறறீ தநதையைக கொனறு அரசைபபெறறுன. நீ உறற அணணனைக கொனறு உரிமையைப பறிததுககொளள உளவு பாாததிருககிருய!" என அளவு பாாததவனுய ஆாததுநினறுன. அநத மைநதரை இநதத தமபியும எநத வழியும ஒபபாய இசைநதிருககினறனா என இஙஙனம இகழநதிருககிருன.

இபபடிக கொளளைககாரப பயலகள நலல நீதிமானகள என வெளியே சொலலபபடுகினறனா. கொலையும கொளளையும புலையும புனமையும உலகில தலைவிரிததாடுகினறன எனறு தனது நிலைமைய விரிதது நேரே வெறுததுச சீறிச சினநது செருககியுரைததான.

சிநதை திரிநதமையால நிநதை மொழிகள நெடிது வளாநதன. உளளக கடுபபுகள உரைகள தோறும ஒலிதது வநதன.

அரசின மேல ஆசை ஊனறினை

தனது அரசுரிமையைக கவாநது கொளள ஆசை மணடி வீடணன வஞசகமாய மோசம செயது வருகிறுன எனறு இராவணன இவவாறு பழி கூறியிருககிறுன. தன தமபியை நல்லவன். எனத தான நமபியிருநதது தவறு எனறு அவன வெமபியுளளான்.

இரணியன நிலையை எடுததுக கூறியதும, பிரகலாதனைப் புகழநது பேசியதும அவனுககுப பிழைபாடுகளைப பெருககி விடடன. நலலவனைத தீயவனுக எணணவே பொலலாத பழிகளை யெலலாம நேரே சொலல நோநதான.

தன பகைவனுககு இனியவனுயத தனககு இன்னுதவனுயப பினனவன உளளான எனறு முன்னவன் உறுதிசெய்து

கொண்டமையால் வெறுப்பும் கோபமும் விரிந்து நின்றன. இவனுடைய செயல் உரைகள் எல்லாம் வஞ்சனை சூழ்ந்தே வந்துள்ளன என்று நெஞ்சம் துணிந்தான். சென்ற கால நிகழ்ச்சிகளையெல்லாம் சிந்தனை செய்து நிந்தனை செய்தான்.

தூதரைக் கோறல் வென்றி அன்று என விலக்கினை!

முன்பு அனுமானைக் கொன்று தொலையுங்கள் என்று இராவணன் கொதித்துச் சொன்ன பொழுது வீடணன் * தடுத்து நிறுத்தினன் ஆதலால் அதனை இங்ஙனம் எடுத்துக் காட்டினன்.

உள்ளே இருந்து கொண்டு எதிரிக்கு அனுகூலமாய வஞ்சக சிந்தனையுடன் இவன் வேலை செய்து வருகிறான் என அவன் சந்தேகித்துக் கொதித்துள்ளான்.

தூதனைக் கொல்லுதல் பாவம் என்று அப்பொழுது சொல்லி விலக்கி அவனை மெல்ல வெளியே விட்டதற்குத் தெரிவான காரணம் இப்பொழுதுதான் தெரிந்தது என வெப்பமோடு பேசியிருக்கிறான். தனக்குக் கொடிய பகையாய் மூண்டுள்ள இராமனை நெடிது புகழ்கின்றான், அவன்பால் பேரன்பு பூண்டு நிற்கின்றான் என வீடணன் மீது வெறுப்பு மூண்டுள்ளான்.

“வன்பகை மனிசரின் வைத்த அன்பினை
என்புற உருகுதி! அழுதி! ஏத்துதி!”

இராமலக்குவர்கள்பால் வீடணன் கொண்டுள்ள அன்புரிமைகளை இவ்வாறு குறித்துக் காட்டி வெறுத்து இகழ்ந்திருக்கிறான்.

என் குல விரோதிகள்பால் இப்படி உள்ளன்புடையனாய் உருகி வருகிற உன்னை எப்படி நான் தம்பி என்று நம்பி அன்பு செய்ய முடியும்? நீயே என் குலத்திற்கும் குடிக்கும் கொடிய கேடனாய் நெடிது நேர்ந்து நிற்கிறாய்.

அரக்கர் குலத்திற்குரிய வீரமும் மானமும் உன்னிடம் யாதும் இல்லை. போர் எங்கே மூண்டு விடுமோ? என்ற பெரிய பயம் உன் உள்ளத்தைக் கலக்கியிருக்கிறது, அதனால் சமாதான முறைகளைக் குறித்துத் தாராளமாய்ப் பேசுகின்றாய்.

* இந் நூல் பக்கம் 3283, வரி 8 பார்க்க.

**அஞ்சினை ஆதலின் அமர்க்கும் ஆள் அலை**
**வஞ்சனை மனத்தினை பிறப்பு மாறினை.**

தன்னுடைய சாதி வீரம் மிகவுடையது. அந்தக் குலத்திற் குரிய தன்மை வீடணனிடம் இல்லை என்று இராவணன் இப்படி எள்ளி வெறுத்து இகழ்ந்து பழித்துள்ளான்

போரில் எனக்குத் துணை செய்ய மாட்டாய்! கேடு செய்யவே கூடியிருக்கிறாய், வஞ்சகனை உன்னோடு கூடி வாழ்வது நஞ்சை நாவில் வைத்தது போல நாசமேயாம் என நெஞ்சம் கொதித்து நிட்டூரமாய்த் திட்டினான்

புறப் பகையினும் உட்பகை கொடியது ஆதலால் அதனை ஓட்ட விட்டிருப்பது கெட்டது எனச் சுட்டி மொழிந்தான்.

**நஞ்சினை உடன் கொடு வாழ்தல் நன்று.**

வீடணனோடு கூடி வாழ்வது எவ்வழியும் பெருங் கேடாம் என்பதை இவ்வளவு கடுமையாக எடுத்துக் காட்டினான். உயிர்க் கேடு செய்கின்ற நஞ்சைக் காட்டிலும் உட் பகைவனை தம்பி அஞ்சி நீக்கத் தக்கவன் என்று நெஞ்சம் துணிந்து நின்றான். நஞ்சு கொல்லும் என்று நன்கு தெரிந்து கொண்டமையால் அதனைப் புறக்தே வைத்து எச்சரிக்கையாய்ப் பழகி வாழலாம், நெஞ்சம் தீய உட் பகைவனை அவ்வாறு தெரியாமல் நல்லவன் என்று நம்பியிருத்தலால் நாசம் விரைந்து நேர்ந்து விடும், ஆகவே நஞ்சினும் கொடியவன் என அவன் அஞ்ச நேர்ந்தான்.

நெஞ்சம் பொருந்தாதவரோடு சேர்ந்து வாழும் வாழ்க்கை ஞசினும் தீயது என்றது தம்பி இனிமேல் தன்னோடு கூடியிருக்கக் கூடாது என்பதைக் குறித்து வந்தது

உட்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறைந் தற்று (குறள், 890)

மனப் பொருத்தம் இல்லாதவரோடு மருவி வாழும் வாழ்வு எவ்வளவு துயரமுடையது என்பதைத் தேவர் இவ்வளவு அழகாக எடுத்துக் காட்டியிருக்கிறார் குடங்கர் = குடில். ஒரு சிறு குடிசை; அதில் கொடிய விடமுடைய நாகப்பாம்பு அடைகிடக்கிறது, அதனோடு ஒருமனிதன் குடியிருக்க நேர்ந்தால் எவ

வளவு திகிலும் பயமும் தோன்றும்! உள்ளம் கரவான கொடிய உட்பகைவரோடு கூடி வாழ்வது அவ்வளவு அவலமாம்.

பகைவரோடு நண்பு பாராட்டி வருதலால், தன் தம்பியைக் கொடிய உட்பகை என்றே இராவணன் முடிவுசெய்து கொண்டான், கொள்ளவே அவனை உடன் வைத்து வாழ்வது நஞ்சினை உடன்கொண்டு வாழ்வதினும் தீயது என்று நெஞ்சம் துணிந்தான்; அத்துணிவினை நேரே கூறினன்.

பழியினை உணர்ந்து யான் படுக்கிலேன்.

வீடணனை உடனே கொல்லாமல் உயிரோடு விட்டுவைத்திருத்தற்குக் காரணத்தை இராவணன் இவ்வாறு குறித்துக்காட்டியிருக்கிறான். உடன்பிறந்த தம்பியை இலங்காதிபதி கொன்றான் என்னும் ஓர் வசை வந்து விடுமே என்று அஞ்சி நான் அடங்கியிருக்கிறேன்; இந்த நிலைமையை உணர்ந்து விரைந்து நீ ஒதுங்கிப் போய்விடு என்று உருத்து நின்றான்.

விழி எதிர் நிற்றியேல் விளிதி!

என் கண்ணுக்கு எதிரே மேலும் நின்றால் நீ செத்தாய்! என்று கடுத்து இங்ஙனம் எச்சரிக்கை செய்திருக்கிறான். விளிதல் = சாதல். எங்கேயாவது ஒல்லையில் ஓடிப் போய்விடு, இனி இங்கே நில்லாதே, நின்றால் அழிந்துபடுவாய்! என ஆங்காரமாய் ஆர்த்து மொழிந்தான்.

அவனுடைய கோபதாபங்கள் கடுமை மண்டிக் கொடுமை பொங்கி நிற்கின்றன. நெஞ்சச் செருக்கு நெடுந் தீமையில் நிமிர்ந்து அடங் கொண்டு ஆர்த்து நிற்றலால் தம்பி கூறிய நீதி மொழிகள் யாதும் அவன் காதில் ஏறவில்லை. எவ்வளவு உணர்வு நலங்களை இளையவன் உளம் உருகி உரிமையோடு உரைத்துள்ளான்! அவ்வளவு அறிவுரைகளையும் அவமே இகழ்ந்து அகம் தருக்கி அருமைத் தம்பியைச் சிறுமை பல கூறிச் சீறி வெறுத்தது அவ்வினது நீச்சத் துணிவையும் நாசத் தொடர்பையும் நேரே நிலை தெரியச் செய்தது. கொடிய கேடு மூண்டு நிற்றலால் இனிய நீதி ஒன்றும் ஏறாமல் போயது.

அழிவினை எய்துவான் அறிவு நீங்கினன்.